# TOLKĀPPIYA-C COLLATIKĀRA-K-KUṞIPPU.

(A critical Study of Collatikāram
with all the available Commentaries.)

BY

P. S. SUBRAHMANYA SASTRI, M.A., Ph.D.,
Professor of Oriental Studies, Bishop Heber College, Trichinopoly
(on leave)
Now Assistant Editor, Tamil Lexicon, University of Madras.

WITH A FOREWORD

BY

MAHĀVIDVĀN R. RAGHAVA AIYANGAR, AVL.,
Samsthānam Pandit, Ramnad.



1930

Six shillings] [Price Rs. 3—2—0

PRINTED AT

THE MADRAS LAW JOURNAL PRESS
MYLAPORE, MADRAS

# தொல்காப்பியச்
# சொல்லதிகாரக் குறிப்பு.

டாக்டர்
P. S. சுப்பிரமணிய சாஸ்திரி, M.A., Ph. D.
எழுதியது

ஸேதுஸம்ஸ்தானம் மகாவித்வான்
ரா. இராகவையங்கார், அவர்கள்
எழுதிய
பாயிரத்துடன் கூடியது

பிரமோத௵

 [விலை ரூ [illegible]—[illegible]—0.

PUBLISHED BY
P. S. GANESA SASTRI, M.A., L.T.,
38, PANDIAN LANE,
TEPPAKULAM, TRICHINOPOLY.



## பொருளடக்கம்

பக்கம்.

அ. = அத்தியாயம்

அகத்திய. = அகத்தியப் படலம்

அ. ப்ரா. = அதர்வவேத ப்ராதி சாக்கியம்

அஷ். = அஷ்டாத்தியாயீ

இல. = இலக்கண விளக்கம்

இ. = இளம் பூரணம்

நம. = கா. நமச்சிவாய முதலியார் பதிப்பு

உ. = உரையாசிரியர்

உயிர். = உயிர் மயங்கியல்

எச். = எச்சவியல்

எழுத். = எழுத்ததிகாரம்

எ. று. = என்றவாறு

எ. 56 ரெ. எட்டுரை (எட்டுரைநார்)

ஓ. = ஓரியண்டல் லைப்ரரி கையெழுத்துப் பிரதி

கம்பரா. = கம்பராமாயணம்

கா. = காண்டம்

கீ. கு. = கீழ்க்குறிப்பு

குற். று. = குற்றியலுகரப் புணரி

பல

குறள். = திருக்குறள்

குறுந். = குறுந்தொகை

கையடை. = கையடைப்படலம்

சு. ய. ப்ரா. = சுக்ல யஜுர்வேத ப்ராதிசாக்கியம்

சூ. = சூத்திரம்

சே. = சேனவரையர்

சொல். = சொல்லதிகாரம்

சை. = சைவ சித்தாந்தக்கழகப் பதிப்பு

தா. = தாமோதரம் பிள்ளைப் பதிப்பு

தாதுப். = தாதுப்படலம்

திருக்கோ. = திருக்கோவையார்

தெ. = தெய்வச்சிலையார்

தை. ப்ரா. = தைத்திரீய ப்ராதிசாக்கியம்

ந. = நச்சினார்க்கினியர்

நன். = நன்னூல்

பா. சி. = பாணினி சிக்ஷை

பா-டம். = பாடபேதம்

பி-ம். = பிழைதிருத்தம்

பிற. = பிறப்பியல்

புண. = புணரியல்

புள்ளி. = புள்ளிமயங்கியல்

புறநா. = புறநானூறு

மொழி. = மொழிமரபு

யா. ஸ்ரீ. = யாஸ்கநிருக்தம்

ரா. = ராஜகோபாலப் பிள்ளை

பதிப்பு

ருக். ப்ரா. = ருக்வேத ப்ராதி

சாக்கியம்

வாங்ய. = பர்த்திருஹரி வாக்கிய
பதீயம்

வினை. = வினையியல்

வீரசோ = வீரசோழியம்

ஹேலா. ஹேலாராஜீயம்



## இந்நூலுள் எடுத்தாண்ட மேற்கோணூல்கள்.

### 1. இலக்கண நூல்கள் (தமிழ்)

---

தொல்காப்பியம் :—

எழுத்ததிகாரம்.—உரையாசிரியர், நச்சினார்க்கினியர் உரைகளுடன்.

சொல்லதிகாரம்.—

இளம்பூரணம்.—1. கா. நமச்சிவாய முதலியார் முதற்பதிப்பு.

2. சென்னை ஓரியண்டல் லைப்ரரி கையெழுத்துப் பிரதி.

சேனாவரையம்.—1. தாமோதரம் பிள்ளை பதிப்பு.

2. சென்னை ஓரியண்டல் லைப்ரரி கையெழுத்துப்பிரதி.

3. ராஜகோபாலப்பிள்ளை பதிப்பு.

4. சைவசித்தாந்தக் கழக முதற்பதிப்பு.

நச்சினார்க்கினியம்.—1. தாமோதரம்பிள்ளை பதிப்பு.

2. சென்னை ஓரியண்டல் லைப்ரரி கையெழுத்துப்பிரதி.

தெய்வச்சிலையார் உரை.—கரந்தைத் தமிழ்ச்சங்கத்து முதற்பதிப்பு.

கல்லாடனார் விருத்தியுரை,
56 சூ. உரை. } சென்னை ஓரியண்டல் லைப்ரரி கையெழுத்துப் பிரதிகள்

வீரசோழியம்

நன்னூல்

1. மயிலைநாதருரை
2. விருத்தியுரை
3. காண்டிகையுரை. (பத்தாம் பதிப்பு)

இலக்கணவிளக்கம்

பிரயோகவிவேகம்

தொல்காப்பிய முதற்சூத்திர விருத்தி

கால்ட்வெல் Comparative Grammar of Dravidian languages.



## 2. இலக்கண நூல்கள்.
## (வடமொழி).

ருக்வேதப்ராதிசாக்கியம்
தைத்திரீயப்ராதிசாக்கியம்
சுக்ல யஜுர்வேதப்ராதிசாக்கியம்
யாஸ்க நிருக்தம்
பாணினி அஷ்டாத்தியாயீ
பாணினி சிக்ஷை
பர்த்திருஹரி வாக்கியபதீயம்
ஹேலாராஜீயம் (வாக்கியபதீயவுரை)

## 3. இலக்கிய நூல்கள்.

கலித்தொகை
புறநானூறு
பத்துப்பாட்டு
குறுந்தொகை.
திருக்குறள்
திருக்கோவையார்
கம்பராமாயணம்



ஸ்ரீ:

# பாயிரம்.

பெரிய வடநூலாசிரியர் பரம்பரையிற் றோற்றமுடையோரும் வடமொழி தென்மொழி இலக்கணங்களிற் சிறந்த பரிசயமுள்ளோரும் ஆங்கிலங்கற்றுத் தேர்ந்தவருமாகிய ஸ்ரீமாந் **பின்னங்குடி. சா. சுப்பிரமணியசாஸ்திரியார்** தமக்கியல்பாகவுள்ள மதிநுட்பத்தைக்கொண்டும், தாம் பயின்ற வடமொழியிலக்கணங்களைக்கொண்டும் செவ்வனம் ஆராய்ந்த **தொல்காப்பியச்சொல்லதிகாரக்குறிப்பு** என்ற அரியதோர் ஆராய்ச்சிநூலை அவர் படிக்க நன்கு கேட்டேன். இவர் செய்துள்ள இவ்வாராய்ச்சியால் பல்புகழ்நிறைந்த படிமையோராகிய ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியனாரது அளக்கலாகா அறிவின் பெருமையும், திணையளவு போதாச் சிறுபுன்னீர் பனையளவு காட்டும் படித்தாக எத்துணையோ அரும்பெரும் பொருள்களைத் தம்முள் எளிதின் அடக்கிச் செவ்வனடியிற் செறித்தினிது காட்டுஞ் சூத்திரங்களின் திட்பநுட்பங்களும், அவைதம்முள் ஒன்றோடொன்று இயைந்து

நின்ற பொருள் சிறத்தலும், வடமொழி நெறியைத் தழீஇச் சேறலும், மொழிபெயர்த்து யாத்தலும், தனியே தமிழ் நெறியே தழீஇச் சேறலும், பண்டைவழக்குக்களை யெடுத்தாளுதலும் பிறவும் நன்கு அறியக்கிடப்பனவாகும். தமிழ்மொழிக்கு இலக்கணஞ் செய்த இத்தொல்காப்பியனார் தாம் வடமொழியுணர்ச்சியால் மிக்குச் சிறந்தாராயிருந்து தமிழ்நூல்களை நன்காராய்ந்து, அவ்விருமொழிக்கு முள்ள ஒற்றுமைவேற்றுமைகள் இவையென்று தெளிந்து துணிந்து, ஒற்றுமைகளை வடநூலிலக்கண முறைபற்றியும், வேற்றுமைகளைத் தனித் தமிழ்நெறி வழக்கம் பற்றியும் இலக்கணம்வகுத்துத் தமிழ்மொழியைப் பாதுகாத்து ஒழுகினர் என்பது இக்குறிப்பால் அறியப்படுவது.

தொல்காப்பியனார் தாம் செய்த தமிழிலக்கணத்துக்கு, வடமொழியில் அளவையிற்றலையாய் என்ஞான்றும்விளங்கும் தெய்வத்தன்மை பொருந்திய வேதங்கட்குரிய இலக்கணமாகவுள்ளனவும்





சௌனகர் முதலிய மஹர்ஷிகளால் இயற்றப்பெற்றனவும் ஆகிய ப்ராதிசாக்கியங்களையும், யாஸ்க மஹர்ஷி இயற்றிய நிருக்தத்தையும் பலவிடங்களில் முதனூல்களாகக் கொண்டுள்ளார் என்பது சாஸ்திரியார் இக்குறிப்புரையில் எழுத்தின்பிறப்பியல்[1], உரியியல், சொல்லிலக்கணம் முதலியவற்றிற்கு எடுத்துக் காட்டிய வடமொழிமேற்கோள்வாக்கியங்களால் நன்கு விளங்கும்.

உரிச்சொல் பெயர்வினைகளின் பதிகுயாமென்றும், இங் ஙனங் கொண்டாற்றன்,

'மொழிப்பொருட் காரணம் விழிப்பத் தோன்று' (சொல். 394)

'எழுத்துப் பிரிந்திசைத்த லிவணியல் பின்றே' ( ,, 395)

என்னுஞ் சூத்திரங்களில் மொழிப்பொருளென்பது பகுதிப் பொருளென்றும், எழுத்துப்பிரிதலென்பது பகுதியின் எழுத்துக் களைப் பின்னும் பிரித்தலென்றும் நேரே பொருள் கொள்ளப் பட்டு இலக்கணவரம்பு செய்ததாகுமென இக்குறிப்புரை காட்டு கின்றது. இவை யெல்லாம் உற்றுநோக்கும்போது வாதவூரடிகள்,

> தாயிற் சிறந்தன்று நாணுடைய லாருக்கந் நாண் டகைசால்
> வேயிற் சிறந்தமென் றோளிநின் கற்பின் விழுமிசன் றீங்
> கோயிற் சிறந்தசிற் றம்பலத் தாடுமெங் கூத்தப்பிரான்
> வாயிற் சிறந்த மதியிற் சிறந்த மதிநுதலே. (திருக்கோ. 204)

என, 'நாணினுஞ் செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று' என்னும் தொல்காப்பியவிலக்கணம் போற்றிக்கூறியதொன்றைக் 'கூத்தப்பிரான் வாயிற் சிறந்தமதி' என்று எடுத்துக்காட்டியதனை னும், கல்வியிற் பெரிய **கம்பர்**,

> உழக்குமறை நாவினு முயர்ந்தலக மோதும்
> வழக்கினு மதிக்கவி னினும்மரபி னுடி
> நிழற்பொலி கணிச்சிமணி நெற்றியுமிழ் செங்கட்
> டழற்புரை சுடர்க்கடவு ணந்ததமிழ் தந்தான். (கம்பரா. அகத்.41)

என்று உரைத்ததனுலும் வேதமார்க்கத்தையும் தமிழிலக்கணங் கள் தழீஇயின என்று நம் முன்னேப் பெருந்தமிழாசிரியர்கள் துணிந்தது, இவர் ஆங்காங்கு எடுத்துக்காட்டிய வடமொழி வேதவிலக்கணப்பிரமாணங்களால் வலியுறுகின்றது. இஃதன்றி, வடமொழியாளர்க்கும் அரியவாய அம்மொழியிலுள்ள நுண்பொ

ருள்களைத் தமிழ்மொழி எளிதிற்றன்பாற்கொண்டு யாவர்க்கும்

1. முகவுரைக் கீழ்க்குறிப்பிற் காண்க.



விளங்கச் சொல்லும் ஆற்றல்படைத்ததென்பது, தொகையையும் எச்சத்தையும் உணர்த்துஞ் சூத்திரங்களால் நன்கு விளங்கும்.

இங்ஙனம் பலபல அரிய விடயங்கள் அறிதற்கு வாயிலாகவுள்ள இக்குறிப்பில் சாஸ்திரியார் ஆராய்ச்சித்திறத்தை

'ணஃகானொற்றே...' (சொல். 5)
'பெயரினாகிய தொகையுமா ருளவே...' ( ,, 67)
'இயற்பெயர் முன்னர்...' ( ,, 270)

முதலிய சூத்திரங்களின் குறிப்பிற் காணலாம்.

தொல்காப்பியச் சொல்லதிகாரத்திற்கு உரைசெய்தாராக இதுகாறு மறியப்பட்டார் இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், கல்லாடனார், தெய்வச்சிலையார், பேர் தெரியாத மற்றொருவர் ஆவர். இவ்வறுவர் உரையுள்ளும் இவர் நன்கு புகுந்து ஆராய்ந்து பலமுறை படித்து, இன்னவுரை சூத்திரத்திற்கு ஏற்பதென்றும், இன்னவுரை சூத்திரக்கருத்திற்குச் சேய்மையதென்றும் நன்கு துணிந்துகொண்டு, அவ்வவ்வுரையாசிரியர்களை நன்கு மதித்துப் பண்டை மரியாதை கெடாமல் அவரவர் தகுதியைப் போற்றிக் கூறுவது எம்மனோர்க்கு அதிக மகிழ்ச்சி தருகின்றது. (ஒருசிலவிடங்களில் உரைகாரர்களினும் சூத்திரகாரருடைய கௌரவத்தை நன்கு மதித்து வடமொழி நூற்பொரு

ளைத் துணையாய்க்கொண்டு இவர் தாமே பொருள்கூறிச் செல்லு தல் எனக்கு வியப்பைப் பயப்பது.) அவற்றை,

| | |
|---|---|
| 'தன்மை சுட்டலும்...' | (சொல், 25) |
| 'மன்னாப் பொருளும்...' | ( ,, 34) |
| 'கண்ணுந் தோளும்...' | ( ,, 61) |
| 'எழுவாய் வேற்றுமை...' | ( ,, 65) |
| 'எழுத்துப் பிரிந்திசைத்தல்...' | ( ,, 395) |
| 'பெயர்நிலைக் கிளவி...' | ( ,, 70) |
| 'வேற்றுமை மருங்கிற் போற்றல் வேண்டும்...' | ( ,, 115) |
| 'ஒருமை சுட்டிய...' | ( ,, 461) |
| 'பெயரினாகிய தொகையும்...' | ( ,, 67) |
| 'இரண்டாகுவதே...' | ( ,, 71) |



| | |
|---|---|
| 'மூன்றாகுவதே...' | (சொல். 73) |
| 'அவைதாம்...' | ( ,, 120) |

முதலிய சூத்திரக் குறிப்பிற் கண்டு நல்லன கொள்க.

ஒவ்வொரு சூத்திரத்தும் உத்தேசியம் இன்னதென்றும் விதேயம் இன்னதென்றும் நன்கு தெளிந்து, அப்பால், 'இதற்கு இது விதிக்கப்படுகின்றது' என்று பொருள்கொள்ள வேண்டு மென்பதும், ஒவ்வோரு சூத்திரமும் ஓர் உத்தேசியமும் ஒரு

விதேயமுமே உடையது என்பதும் அங்ஙனமல்லாக்கால் இரு தொடர்ப்படுதலென்னும் வாக்கியபேதம் என்ற குற்றம் படு மென்பதும் இவர் ஆங்காங்குக் காட்டிச் செல்லுதல் மாணாக் கர்க்கு மிகவும் உபகாரப்படுவதாகும்.

உரைகாரர்களுள் மிகப்பழையோராகிய இளம்பூரணவடி களின் உரைவன்மை நம்மவர் போற்றத்தக்கதென்பதனை,

'தன்மைச் சொல்லே...' (சொல். 43)
'ஒருமை யெண்ணின்...' ( ,, 44)
'இயற்பெயர் முன்னர்...' ( ,, 270)

என்னுஞ் சூத்திரங்களில் இவர் கூறிய குறிப்பால் நன்கு உணர்ந்து கொள்க.

சேனாவரையர் வடமொழி யுணர்ச்சியிற் றலைசிறந்தவ ரென்றும், அவர் உரைநடை வடமொழிப்பொருளையே கொண்டு கூறுவதென்றும் இவர் ஆங்காங்கு விளக்கியுள்ளதோடு,

'இரண்டாகுவதே...' (சொல். 71)
'நான்காகுவதே..., ( ,, 75)

என்னு மிடங்களில் பர்த்ருஹரிவாக்யபதீய வாக்கியத்தையும், அதன் உரையாகிய ஹேலாராஜீய வாக்கியத்தையும் முறையே எடுத்துரைத்து மொழிபெயர்த்துக் கூறினர் என்று காட்டியுது கற்பார்க்கு மகிழ்ச்சி விளக்கும்.

தெய்வச்சிலையார், சேனாவரையரைபடுத்து வடமொழியுணர்ச்சி யுடையாரென்று இக்குறிப்பாளர் கருதுகின்றார். இத்தெய்வச் சிலையார் வடமொழிமார்க்கத்தையே மிகுதியாகப் போற்றுகின்றார் என்பது,

'ஒருவினை யொடுச்சொ லுயர்பின் வழித்தே' (சொல். 91)
என்ற சூத்திரத்திற்குத் தமிழ்ப்பண்டை வழக்கொடு மாறி



உரையிட்டவாற்றால் அறியலாம். இவர் கிளவியாக்கம் முதலாக நான்கியலும் வாக்கியம்பற்றிக் கூறுவன என்பதும், வேற்றுமை மயங்கியலில்,

'பிறிது பிறிதேற்றல்...' (சொல். 104)

முதலிய சூத்திரங்களுக்கும், எச்சவியலில் எச்சங்களை யுணர்த்துஞ் சூத்திரங்களுக்கும் கூறும்பொருளும் அறிஞர்க்கு இன்பந் தருவனவாகும்.

நச்சினார்க்கினியர், இலக்கியக்கடலாய் விளங்கியவராதலால், தாம் கண்ட இலக்கியத்தொடர்களுக்கெல்லாம் இலக்கணத்தை இத்தொல்காப்பியத்தே அமைத்துக்கொள்ள வேணவாவுடையராய்ச் சூத்திரங்களுக்குத் தம் நுண்ணறிவாற் பொருள் செய்து போதலும் இக்குறிப்பா லுணரப்படும். இதனை 'ஏஎ இஃதொத்தன்...' என்னும் கலித்தொகையடியுள் 'இஃது ஒத்தன்' என்னுந் தொடர்க்கு,

'பொருளொடு புணராச் சுட்டுப் பெயர்...' (சொல். 37)
என்ற சூத்திரத்துள் அவர் இலக்கணமமைத்தது கொண்டு தெளிக.

இங்ஙனம் உரையாளர்கள் தர்தமமும், நூலாசிரியர் உத்தமமும் நன்கு விளக்கி, சாஸ்திரியார் இந்நூலாராய்ச்சியைப் பலர்க்கும் பயன்படும்படி எளிய நடையில் எழுதிவெளியிட்டு உபகரித்ததற்கு இவர்பால் இத்தமிழுலகம் நன்றிபாராட்டுங் கடப்பாடுடையதாகும். பண்டைத் தமிழ்ப்புலவரெல்லாரும் வடமொழி தென்மொழி வன்மைபெற்றவரென்பது அவரவர் நூலால் அறியக் கிடப்பது. இச்சிறுநூலுள் அவ்விருமொழி வன்மை அறிவுவிளக்கத்திற்கு எத்துணையாக உபகாரப்பட்டுள்ளது என்பது, இவ்வுரைநடையைப் படிப்பவர்க்கு எளிது புலனாகும். சாஸ்திரியார் இவ்வாராய்ச்சியை இம்மட்டோடு விடாது, ஆசிரியர் தொல்காப்பியனாருடைய எழுத்ததிகாரம், பொருளதிகாரம் என்பவற்றிற்கும் இவ்வாறு குறிப்புரைசெய்து வெளியிடுமாறு இத்தமிழுலகம் தூண்டுவதாகுக.

இங்ஙனம்,

27-5-'30.
இராமநாதபுரம்.

ரா. இராகவையங்கார்,
ஸேதுஸம்ஸ்தான வித்வான்.

# முகவுரை.

5 திருச்சிராப்பள்ளி பிஷப் ஈபர் காலேஜில் படிக்கும் பி. ஏ. வகுப்பு மாணவர்க்கு கால்ட்வெல் துரை எழுதிய திராவிட பாஷையிலக்கணம் கற்பிக்க முதன்முதல் 1919-ம் வருஷத்தில் எனக்கு நேர்ந்தது. அவர் தமிழ்மொழியைப் பற்றிக் கூறுவன தமிழிலக்கண நூல்களிற் கூறியவாறே உள்ளனவா என்பதை

ஆராய 1920-ம் வருஷத்தில் தொடங்கினேன். நன்னூலில் இன வெழுத்து, சார்பெழுத்து முதலியவற்றைப்பற்றிய விஷயங்கள் ஒலி நூலார்களுக்கு ஒத்திராமையின், தொல்காப்பியத்தில் எவ்வாறு கூறப்பட்டன என்று அறிந்துகொள்ளத் தொல்காப்பியம் படிக்கத் தொடங்கி எழுத்ததிகாரத்தைப் படித்து அதனில் எனக்குத் தோன்றிய விஷயங்களை பிஷப் ஈபர் காலேஜ் பத்திரிகையில் வெளியிட்டேன். 1926-ம் ௵ சென்னைத் தமிழ் லெக்ஸிகன் ஆபீஸுக்கு உதவிப்பதிப்பாசிரியராகச் செல்ல நேர்ந்தது. அங்குச் சென்றபிறகு சொல்லதிகாரத்தில் உள்ள விஷயங்களை அங்குள்ள பிரமஸ்ரீ வித்வான் உ. வே. மு. இராகவையங்கார், பிரமஸ்ரீ வித்வான் உ. வே. வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியார் இவ்விருவர்களுடன் ஆராய்ந்து அவ்வாராய்ச்சியைச் செந்தமிழ்ப்பத்திரிகையில் 1927-ம் ௵ முதல் வெளியிட்டேன். 1929-ம் ௵த்தில் சொல்லதிகாரக்குறிப்பிலுள்ள குற்றங் குறைகளை, மதுரைக்குச் சென்று பிரமஸ்ரீ வித்வான் உ. வே. திரு. நாராயண ஐயங்கார் அவர்களுடன் ஆராய்ந்து அறிந்துகொண்டேன். அக்குறிப்பில் உரியியல்வரை இளம்பூரணம், சேனாவரையம், நச்சினார்க்கினியம் இம்மூன்று உரைகளிலுள்ள விஷயங்களே ஆராயப்பட்டன. அதன்பிறகு தெய்வச்சிலையார் உரையை பிரமஸ்ரீ தாக்ஷிணாத்யகலாநிதி மகாமகோபாத்தியாய உ. வே. சாமிநாதையர்

அவர்கள் அன்புடன் கொடுத்தனர். உரியியலிலும், எச்சவியலிலும் அவ்வுரையிலுள்ள விஷயங்களும் சேர்க்கப்பட்டன. அதன் பிறகு சென்னை ஓரியண்டல் கையெழுத்துப் புத்தகசாலையிலிருந்து கல்லாடனார் உரையும், 56-ம் நெ. உரையும் கிடைத்தன.



அவ்விரண்டிலுமுள்ள விஷயங்களை இச்சிறுநூலிற் குறித்துள்ளேன். செந்தமிழில் வெளிவந்த தொல்காப்பியச் சொல்லதிகாரக்குறிப்பைப்படித்த தமிழ்ப்புலவர்களிற் சிலர் அவ்விஷயங்கள் ஒரு புத்தகத்தில் எழுதப்படின், அப்புத்தகம் தொல்காப்பியம் படிக்கும் மாணவர்க்குப் பயன்படும் என்று கூறினர். அவர்களது நன்மொழிக்கு இணங்கி இச்சிறுநூலைப் பதிப்பிக்கத் துணிந்தேன். இந்நூலில் உரைகாரர் அனைவரது கருத்துக்களும் என் சிற்றறிவுக்கு எட்டியவரை ஆராயப்பட்டன. சில சூத்திரங்களுக்குப் பொருள் புதியவாயக் கூறப்பட்டன. இவ்வாராய்ச்சியில் கூறப்பட்டன அனைத்தும் குற்றமில்கூற்று என்ற எண்ணம் எனக்கு ஒருபோதும் இல்லை. குற்றங்களைக் காரணங்களுடன் அறிவிக்கும் புலவர்களிடம் எப்போதும் நன்றியோடிருப்பேன். பண்டைநால்நள் இயற்றிய நூலாசிரியரிடமும், உரைகள் இயற்றிய உரைகாரர்களிடமும் மிக்க பக்தியுடனும், கௌரவ புத்தியுடனும் இருக்கவேண்டும் என்பதோடு, அவர்கள் கொள்கையைத் தொல்காப்பியம் படிப்போர், நன்கு ஆராய்தல் வேண்டும் என்பதையும் அறிவிக்கவே இச்சிறு நூல் எழுதப்பட்டது.

ஆசிரியர் தொல்காப்பியரைப்பற்றி எழுத்ததிகாரச்சூத்ரங்களாலும், சொல்லதிகாரச் சூத்திரங்களாலும் யான் அறிந்த விஷயங்களை இம்முகவுரையில் சுருக்கமாக எழுதலாமென்று எனக்குத் தோற்றுகின்றது. ஆசிரியர் வடமொழியில் ப்ராதிசாக்ய நூல்

களேயும், யாஸ்கரது நிருக்தத்தையும், மற்றுமுள்ள இலக்கண நூல்களேயும் நன்கு அறிந்தவரென்பது முறையே பிறப்பியல்,[1]

[1] i. ககார ஙகார முதனு வண்ணம்.

(தொல். பிறப். 7)

हनुमूले जिह्वामूलेन कवर्गं स्पर्शयति
(தை. ப்ரா, 2,35)

ii. சகார ஞகார மிடைநா வண்ணம்.
(தொல். பிறப். 8)

तालु जिह्वामध्येन चवर्गं
(தை. ப்ரா. 2,36)
तालव्यानां मध्यजिह्वम्
(அ. ப்ரா. 121)

iii. அண்ண நண்ணிய பன்முதன் மருங்கில் நுனிநா நனியுறப் பரந்து மெய்யுற வொற்றத் தாமினிது பிறக்குந் தகார நகாரம்
(தொல். பிறப். 11)

जिह्वाग्रेण तवर्गं दन्तमूलेषु
(தை. ப்ரா. 2,38)
दन्त्यानां जिह्वाग्रं प्रस्तीर्णम्
(அ. ப்ரா. 1,24)



மொழிமரபு[2] இவற்றிலுள்ள சூத்திரங்களாலும், உரியியற் சூத்திரங்களாலும், வேற்றுமைப்பொருளே யுணர்த்தும் வேற்றுமையியற் சூத்திரங்களாலும் நன்கு அறியப்படும். அவர் அந்தணரது வேதத்தை யறிந்தவர் என்பது 'எல்லா வெழுத்து...அளபிற் கோட லந்தணர் மறைத்தே' (எழுத். 102) என்ற சூத்திரத்தால் விளங்கும்.

மேலும் அவருக்கு முன்னர்த் தமிழிலக்கண வாசிரியர் பலர் இருந்திருத்தல்வேண்டுமென்பது, உணர்ந்திசினோரே (116), புலவர் (38, 156, 164), அறிந்திசினோரே (158), கிளவார் (41),

(46), வரையார் (43, 45), மொழிப (62), என்ப (69) முதலியசொற்களாலும், அவர்கள் ஆண்ட உயிர், மெய், வேற்றுமை, புணர்ச்சி (அல்வழி, வேற்றுமை), உயர்திணை, அஃறிணை, பெயர், வினை இக்குறிகளை இவர் தன்குறிவழக்காக இலக்கணங் கூறுதற்கு எடுத்தாளுதலாலும் நன்கு விளங்கும். இவரால் எடுத்தாளப்பெற்ற ஆசிரியர்கள், அகத்தியனாரும் அவர் மாணாக்கரும் என்பர்.

---

இவர் தமிழ்மொழி, வடமொழி இவ்விரண்டையும் நன்கு ஆராய்ந்து, முன்னரிருந்த இலக்கணங்களினும் சிறந்ததோர் இலக்கணம் எழுதத் தொடங்கினர் என்பது திண்ணம். அவ்வாறு தொடங்குதற்குமுன் அம்மொழிகள் இரண்டற்குமுள்ள வேற்றுமை, ஒற்றுமை இரண்டனையும் அறிந்து வடமொழி முறைகளைத் தமிழ்மொழியின் அழகு குன்றுவாறு

---

| | |
|---|---|
| iv. இதழியைந்து பிறக்கும் பகார மகாரம். (தொல். பிறப். 15) | ओष्ठाभ्यां पवर्गे (தை. ப்ரா. 2,39) |
| v. பல்லித ழியைய வகாரம் பிறக்கும். (தொல். பிறப். 16) | ओष्ठान्ताभ्यां दन्तैर्वकारे (தை. ப்ரா. 2,43) |
| vi. சார்ந்துவரி னல்லது... (தொல். பிறப். 19) | ꣳकꣳपौ चापि पराश्रितौ (பா. சி.) |
| 2 ஞணநம னயரல வழள வென்னு, மப்பதி னொன்றே புள்ளி யிறுதி. (தொல். மொழி. 45) | ऊष्मान्तःस्थसोष्मचकारवर्गा नान्तं यान्त्वन्यत्र विसर्जनीयात्. (ரு. ப்ரா. 12,1) |

எங்கு ஆளவேண்டுமோ அங்கு ஆண்டும், மொழிபெயர்த்தும் அம்முறைகளினின்றும் மாறுபடுமிடங்களை உரியவிடங்களிற் காட்டியும் போந்தனர் ஆசிரியர் என்பது பார்க்கப் பார்க்க மிக்க வியப்புண்டாக்குகின்றது.

## தமிழ் மொழிக்கும் வடமொழிக்குமுள்ள வேற்றுமை.

எழுத்து.—உயிரெழுத்துக்களுள் தமிழ் மொழியிலுள்ள எ, ஒ ஸாமவேதத்துள் ராணாயனீயசாகையிற்றவிர மற்றவிடங்களில் வடமொழியில் வழங்கப்படவில்லை. வடமொழியிலுள்ள ஋, ௠, ஌ என்ற மூன்று உயிர்களும் தமிழ்மொழியிலில்லை. மேலும் வடமொழியில் ஏ, ஐ, ஓ, ஔ இந்நான்கும் சந்தியக்ஷரங்கள் ஆகும். அஃதாவது அ அல்லது ஆ, இ அல்லது ஈ, இவ்விரண்டும் சந்தியில் 'ஏ' ஆகவும், அ அல்லது ஆ, ஏ இவ்விரண்டும் 'ஐ' ஆகவும், அ அல்லது ஆ, உ அல்லது ஊ இவ்விரண்டும் 'ஓ' ஆகவும் அ அல்லது ஆ, ஓ இவ்விரண்டும் 'ஔ' ஆகவும் ஆம். அவ்வாறு தமிழில் ஆகா. ஆதலின் அவை தமிழில் சந்தியக்ஷரங்களென்பது பொருந்தா. மெய்களுள் வடமொழியிலுள்ள ख, ग, घ, छ, ज, झ, ठ, ड, ढ, थ, द, ध, फ, ब, भ, श, ष, स, ह இவை பண்டைத்தமிழில் இல்லை என்பது தொல்காப்பிய எழுத்ததிகார முதற்சூத்திரத்தால் அறியப்படுகின்றது. தமிழிலுள்ள ழ, ற, ன இம்மூன்றும் வடமொழியில் இல்லை. வடமொழியிலுள்ள ट, ण இவ்விரண்டும், நாவின் நுனி மடிந்து அண்ணத்தின் மேற்பகுதியைத்தொட, பிறக்கும். பண்டைத்தமிழில், நாநுனி அண்ணத்தின் முன்பாகத்தைத் தொட அவை பிறக்கும். தமிழிலுள்ள குற்றியலிகரம், குற்றியலுகரம்

இவ்விரண்டும் வடமொழியிலில்லை. க, ச, ட, த, ப, ற இவ்வாறுக்கு முன்னரும் ஆய்தம் தமிழில் வரும். க, ப இவ்விரண்டுக்கு முன்னரே, வடமொழியில் அது வரும். வடமொழியில் இணைந்தமெய் (ஸம்யுக்தாக்ஷரம்)சொல்லின் முதலில் வரலாம். அவ்வாறுபண்டைத் தமிழ்மொழியில் இல்லை.

புணர்ச்சியில் வேறுபாடுகள் பல:—(1) தமிழில் இரண்டு சொற்கள் ஒன்றுக்கொன்று வேற்றுமை வழியிலுள்ளனவா அல்வழியிலுள்ளனவா என்று அறிதல் வேண்டும். இதனை அறிவதற்கு அச்சொற்களின் பொருளைத் தெரிதல் இன்றியமையாதது. இவ்வாறு வடமொழியில் இல்லை. (2) நிலை மொழியீற்றிலுள்ள உயிரும், வருமொழிமுதலிலுள்ள உயிரும், புணரும்போது





இடையில் உடம்படுமெய் வருதல் இயல்பு. வடமொழியிலோ அவ்விரண்டும் புணரும்போது வரும் புணர்ச்சி[1] பெரும்பாலும் மாறுபட்டது. நிலைமொழியீறு உயிராகவும் வருமொழிமுதல் மெய்யாகவும் இருக்கும் போதும், இரண்டும் மெய்யுமாயிருக்கும்போதும் உள்ள தமிழ்மொழிப் புணர்ச்சி பெரும்பான்மையும் வடமொழிப் புணர்ச்சியினும் மாறுபட்டது. குற்றியலுகரம் வடமொழியில்லாமையின், குற்றியலுகரப்புணர்ச்சியும் ஆங்கு இன்று. புணர்ச்சியில் சாரியைகள் எவ்வாறு தமிழ்மொழியில் வருகின்றனவோ அவ்வாறு வடமொழியில் இல்லை.

சொல்.—தமிழில் பெயரின் பால் பெரும்பாலும் அதன் பொருளாலே விளங்கும். வடமொழியில் பொருளுக்கும் சொல்

லின் பாலுக்கும் சம்பந்தமே இன்றா. (1) அங்கு ஒரு சொல் ஆண்பாலாயிருக்க, அதன் பொருள் அஃறிணையாகவும்,[2] ஒருசொல் ஒன்றன்பாலா யிருக்க, அதன்பொருள் ஆண்பாலாகவும் பெண்பாலாகவும்[3] ஒரு சொல் ஆண்பாலாயிருக்க,[4] அதன் பொருள் பெண்பாலாகவும் இருக்கலாம். (2) வடமொழியிலுள்ள இருமை தமிழில் இல்லை. (3) 'அரசனை' முதலிய தமிழ்ப்பெயர்களில் 'ன்' என்பது ஆணையும், ஒருமையையுங் குறிக்க, ஐ என்பது இரண்டாம் வேற்றுமையைக் குறிக்கின்றது. வடமொழியிலோ ராமாந் என்னுமிடத்து அ என்பது ஆண்பாலையும்,

1. अ அல்லது आ + अ அல்லது आ = आ
 इ அல்லது ई + इ அல்லது ई = ई
 उ அல்லது ऊ + उ அல்லது ऊ = ऊ
 अ அல்லது आ + इ அல்லது ई = ए
 अ அல்லது आ + उ அல்லது ऊ = ओ
 अ அல்லது आ + ए = ऐ
 अ அல்லது आ + ओ = औ
 इ அல்லது ई + உயிர் = य् + உயிர்
 उ அல்லது ऊ + உயிர் = व् + உயிர்
 ए + உயிர் = अय् + உயிர்
 ऐ + உயிர் = आय् + உயிர்
 ओ + உயிர் = अव् + உயிர்
 औ + உயிர் = आव् + உயிர்

2. वृक्षः

3. मित्रम्

4. दाराः



अन् என்பது இரண்டாம் வேற்றுமையையும் பன்மையையுங்

குறிக்கின்றது. (4) வடமொழி வினையிலுள்ள விகுதி ஒருமை, பன்மை இவற்றைக் குறிக்குமேயன்றி பாலைக்குறியா; தமிழில் அவை இரண்டையுங் குறிக்கும். (5) சொல்லுருபாகச் சிறு பான்மை வருவது தவிரத் தமிழில் முதல் வேற்றுமைக்கு உருபு இல்லை; வடமொழியில் பெரும்பாலும் வரும். (6) தமிழில் வேற்றுமையுருபு, வினைவிகுதி, சாரியை இவையெல்லாம் இடைச்சொல்லெனக் கூறப்பட்டன; வடமொழியிலக்கணங்களில் அவை சொல்லாகக் கூறப்படவில்லை. (7) தமிழ்மொழியில் பெயர், வினை இவற்றின் பகுதியாகிய உரிச்சொல்லை நால்வகைச்சொற்களுள் ஒன்றாகக் கூறினர்; அவ்வாறு வடமொழியில் கூறிற்றிலர். (8) வினைவிகுதிகள் பாலைக்குறித்தலால், பெயரிற்றோன்றும் பாலறிகிளவியும், வினையிற்றோன்றும் பாலறிகிளவியும் மயங்கல் கூடா என்பதனையும், பொருளை அறியாது சொல்லிலக்கணம் கூற இயலாமையின், ஆகுபெயர், எச்சம் இவற்றையும் தமிழில் சொல்லிலக்கணத்திலே கூறினர்; வடமொழியில் அவ்வாறின்மையின் இலக்கணையும் எச்சமும் அலங்கார சாஸ்திரங்களிற் கூறப்பட்டன. (9) வினைக்கு வேற்றுமையுருபைச் சேர்ப்பின் அது பெயராய்த் தமிழில் ஆகின்றது; அவ்வாறு வடமொழியில் இல்லை.

## தமிழ்மொழிக்கும் வடமொழிக்கும் உள்ள ஒற்றுமை.

எழுத்து.—உயிர்களுள் அ, ஆ, இ, ஈ, உ, ஊ, என்பனவும் மெய்களுள் க், ங், ச், ஞ், த், ந், ப், ம், ய், ர், ல், வ் என்பனவும் இருமொழியிலும் ஓரேதன்மையன. சொல்லின் ஈற்றெழுத்துக்களினும், முதலிலுள்ள எழுத்துக்களிலும் சில ஒற்றுமை உள. புணர்ச்சியிலும் சிறுபான்மை ஒற்றுமை உள.

சொல்.—வேற்றுமைப் பொருள்கள் பெரும்பான்மையும் இருமொழியிலும் ஒருவகையாகவே உள்ளன. சொல் இரு

மொழியிலும் நாலுவகைப்படும்; ஆனால் அந்நால்வகையுள் பெயர், வினை இவ்விரண்டே இருமொழியிலும் ஒற்றுமைப்பட்டன. இருமொழியிலும் தொகை அறுவகைப்படும். ஆனால் தமிழ்மொழியிலுள்ள ஒவ்வொன்றும் வடமொழியிலுள்ள ஒவ்வொன்றுக்கும் முற்றிலும் ஒற்றுமைப்பட்டன என்று கூற இயலாது. மற்ற ஒற்றுமைகளை முன்னூல்களிற் கண்டுகொள்க.

XX

## ஆசிரியர் தொல்காப்பியனார் சூத்திரஞ் செய்த முறை.

**ஒவ்வொரு சூத்திரத்திலும் ஒன்றனையே உத்தேசித்து ஒன்றே விதிக்கப்பட்டது.** சிற்சிலசூத்திரங்களில் அவ்வாறு இன்றாகத்தோன்றினும், ஊன்றி நோக்கின் அவ்வாறே புலப்படத் தடையில்லை. இம்முறை சாஸ்திரங்களெல்லாவற்றிலும் ஆளப்பட்டது. இதற்குக் காரணம் யாதெனின் கேட்போருக்கு எளிதில் பொருள் விளங்கவேண்டும் என்பதே. அவ்வாறு சூத்திரஞ் செய்யாவிடின் வாக்கியபேதம் என்ற குற்றம் வரும். இம்முறையை ஆசிரியர் ஆண்டனர் என்பதைச் சேனாவரையர் 'இவ்வாறு ஒரு பொருணுதலிற்றாக உரையாக்கால், சூத்திரமொன்றுமாறில்லை' (தொல். சொல். 1. சே.) என்றவாக்கியத்தால் விளக்கியுள்ளார்.

சிற்சில இடங்களில் அதிகார சூத்திரத்தைக் கூறினர். அதிகார சூத்திரமாவது, தனக்குத் தனியே ஒரு பொருளுமின்றிப் பின் வரும் ஒவ்வொரு சூத்திரத்துடனும் சென்று பொருள்கொள்ளுவது. அவ்வாறு கூறுவதற்குப் பயன் யாதெனில், ஒவ்வொரு சூத்திரத்திலும் அதனைக் கூறாது, ஒருமுறை கூறுதலேயாகும். 120,

202, 299, ஆவது சூத்திரங்களிலுள்ள 'அவைதாம்' என்பது, தனிச் சூத்திரங்களாக ஆளப்பட்டிருத்தல் வேண்டும்; அம்மூன்றும் அதிகார சூத்திரமே. அவை அவற்றின் பின்வரும் சூத்திரங்களோடு கூடியே பொருள்கொள்ளும்.

**விகுதிகளைக் கூறுதலால் அவ்விகுதிகளைக் கொண்ட சொற்களைக்கொள்ளவேண்டும்** என்ற கருத்தினர் ஆசிரியர் என்பது சொல். 5, 6, 7 முதலிய சூத்திரங்களால் விளங்கும். இம்முறையும் வடமொழி முறையை ஒத்தது.

பாஷையின் பயன் ஒருவர் மனத்துள்ள கருத்தைப் பிறர்க்கு வெளிப்படுப்பதாதலானும், அவ்வாறு வெளிப்படுத்தல் வாக்கியத்தாலே பெறப்படுதலானும், தமிழ்மொழியிலுள்ள வாக்கியங்களைப்பற்றிக் கிளவியாக்கம் முதல் விளிமரபு இறுதியாகக்கூறி,[1]

(1) எழுவாய், பயனிலை கொண்ட வாக்கியங்களைக் கிளவியாக்கத்திலும், வேற்றுமையுருபுகொண்ட சொற்களுள்ள வாக்கியங்களில் வேற்றுமையுருபுகள் எவ்வாறு பயனிலையில் அந்நுவயிக்குமென்பதை வேற்றுமையியல், வேற்றுமைமயங்கியல் இவ்விரண்டிலும், விளிவேற்றுமை கொண்ட பெயர்களுள்ள வாக்கியங்களை விளிமரபிலும் உணர்த்தினர் என அறிக.,



பிறகு அவ்வாக்கியங்களுக்கு அங்கமான சொல்லின் இலக்கணம் பெயரியல் முதற் சூத்திரத்திலும், அதன்பாகுபாட்டை அதன் பின்னருள்ள நான்கு சூத்திரங்களிலும் கூறி, பின்பு பெயரைப் பற்றிப் பெயரியலில் உள்ள ஏனைச்சூத்திரங்களிலும், வினையைப் பற்றி வினையியலிலும், பெயர், வினை இவற்றிற்கு அங்கமான இடைச்சொல், உரிச்சொல் இவற்றை இடையியலிலும், உரியி

யலிலும் முறையே கூறினர். இவ்வியல்களிற் கூறப்படாத விஷயங்கள் சில எஞ்சின: அவை யாவை எனின் தமிழில் வழங்கும் இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என்ற நான்கு வகையும், வாக்கியங்களில் நேரும் மொழிமாற்று முதலிய பொருள்கோளும், தொகைகளும், எச்சங்களும் பிறவும் ஆம் இவை, எச்சவியலிற் கூறப்பட்டன.

ஆசிரியர் பெரும்பாலும் முன்னோரிட்ட குறிகளையே ஆண்டனர். சிலவற்றிற்கே புதுக்குறி யிடலாயினர். ஐவேற்றுமை, ஒடுவேற்றுமை, குவ்வேற்றுமை, இன்வேற்றுமை, அதுவேற்றுமை, கண்வேற்றுமை என்பன முன்னோர் இட்ட குறிகளாம். அவற்றிற்கு முறையே இரண்டாம் வேற்றுமை, மூன்றும் வேற்றுமை, நான்காம் வேற்றுமை, ஐந்தாம் வேற்றுமை, ஆறும் வேற்றுமை, ஏழாம் வேற்றுமை என்பன ஆசிரியர் இட்ட குறியெனத் தோன்றுகின்றது. இவ்வாறு ஆசிரியர் கூறியது வடமொழி முறையைப் பின்பற்றி என்று பிரயோகவிவேகநூலார் கூறுகின்றனர்.

சொல் 'பெயர்', 'வினை' என இருவகை என்பதே முன்னோர் கொள்கை என்பது 'சொல்லெனப் படுப பெயரே வினையென்றாயிரண் டென்ப வறிந்திசி னோரே' (சொல். 158) என்ற சூத்திரத்தால் தோன்றுகின்றது. இடைச்சொல்லையும், உரிச்சொல்லையுங் கூட்டியது, வடமொழியில் சொல் நால்வகை யாயிருப்பதுபற்றியோ என்ற ஐயம் உண்டாகின்றது. பொருள் அறியாது சொல்லிலக்கணங்கூற இயலாமையாலும், பொருள் குறித்தது சொல் எனச் சொல்லின் இலக்கணம் கூறப்பட்டமையாலும், இடைச்சொற்களுக்கும், உரிச்சொற்களுக்கும் பொருளிருத்தலாலும்,

அவ்வாறு இடையுரிகளையும் சொல்லாகக் கொண்டது தமிழ் மொழிக்கு ஏற்ற தென்னலாம்.

உரியியலைச் சொல்லிலக்கணத்தில் ஆசிரியர் கூறியது அவசிய மின்று எனச் சிலர் கருதுகின்றனர். உரிச்சொல், பெயர் வினை

இவற்றின் பகுதியாதலானும், அப்பகுதிகளுட் சிலவற்றின் பொருள் அவர்காலத்து வெளிப்படையாய் அறிய இயலாமை யானும், அவற்றின் பொருளை அவர் கூறவேண்டுவதாயிற்றென்க. வெளிப்படையாய்ப் பொருளறிவிக்கும் உரிச்சொற்களை, தாம் கூறவில்லை என்று ஆசிரியரே கூறுகின்றனர். அச்சொற்கள் சங்க இலக்கியங்களில் மிகுதியாய்க் காணப்படுகின்றமையின், அவை வெளிப்படவாராவுரிச்சொற்கள் என்பது எவ்வாறு பொருந்தும்? எனச் சிலர் கருதலாம். இஃதொன்றே, தொல்காப் பியர்காலத்துக்கும், இப்போதுள்ள சங்கவிலக்கியங்களுக்கும் இடையே சிலநூற்றாண்டுகளேனும் கழிந்திருத்தல் வேண்டும் என் பதை விளக்கும். இவ்வுரியியலில் ஒருபொருட்பலசொற்களை முன்னரும், பலபொருளொருசொற்களைப் பின்னரும், பெயர்ப் பகுதியைத் தனித்தும், வினைப்பகுதிகளைத் தனித்தும் கூறுகின்ற முறை வடமொழி யாஸ்க நிருக்தத்தில் ஆளப்பட்டமுறையை ஒத்துள்ளது.

வேற்றுமைப் பொருள்களைக் கூறுமிடத்து ஆளப்பட்ட முறை, பெரும்பான்மையும் வடமொழியிலக்கணநூன்முறை யை ஒத துளளது.

சொல்லதிகாரச் சூத்திரங்களில் வழங்கப்பட்ட வடமொழிச் சொற்கள் வருமாறு :—*அதிகாரம்*, *தெய்வம்* (4,57), *அந்தம்* (4), *பகுதி* (17), *காரணம்*(21, 22, 40, 394), *வண்ணம்*,(26, 78, 416), *இலக்கணம்* (27), *காலம்* (38, 57, 81, 110, 112, 198, 201, 221, 229, 234, 247, 248, 254), *உலகம்* (57), *பூதம்* (57), *ஏது* (74, 92, 93), *கருமம்* (84), *பிண்டம்* (90), *உருபு* (103, 104), *ஆனம்* (111), *உறு* (299), *பையுள்*[1] (341), *ஆணை* (396) *திசை* (397, 400, 449), *உவமம்* (414), *குணம்* (416), *அவை* (412), *மந்திரம்* (449).

ஷை சூத்திரங்களிலுள்ள வடசொன்மொழிபெயர்ப்பு.

(1) *வேற்றுமை* (विभक्तिः) (2) *தத்தம்பொருள்வயிற்றம்மொடு சிவணல்* (115) (अजहल्लक्षणा) (3) *ஒப்பில்வழியாற்பிறிது*

1. पर्याकुल *ப்ராக்ருதம்* पय्याउल.



*பொருள் சுட்டல்* (115) (जहल्लक्षणा) (4) *அளபு* (281) (मात्रा) (5) *வெளிப்படுசொல்* (298) संविज्ञातानि (6) *வெளிப்படவாராச் சொல்* (298) असंविज्ञातानि (7) *தொகை* (412) समासः (8) *முன்மொழிநிலையல்* (419) उत्तरपदार्थप्रधानः (9) *பின்மொழி நிலையல்*(419) पूर्वपदार्थप्रधानः (10) *அன்மொழி நிலையல்* (419) अन्यपदार्थप्रधानः.

**இளம்பூரணர்.**—இவர் சேனாவரையர் காலத்துக்குப் பல நூற்றாண்டுகள் முற்பட்டவர் என்பது இவரை உரையாசிரியர் என்றே அவர் கூறுகின்றமையானும், இவருடைய கொள்கையை மறுக்கும் முறையானும் விளங்கும். இவர் பண்டைக் காலத்துள்ள முறையில் தொல்காப்பியத்தைப்பயின்றவர் என்பதும், அம்முறை இறக்க வேறு முறையில் சேனாவரையர் பயின்றவர் என்பதும் 'இனைத்தென வறிந்த சினைமுதற் கிளவிக்கு...' (சொல். 33), 'ஒருமை யெண்ணின் பொதுப்பிரி பாற்சொல்...'(சொல். 44), 'இயற்பெயர் முன்ன ராரைக் கிளவி...' (சொல். 270) 'அளபெடை மிகூஉ மிகர விறு பெயர்...'(சொல். 125) முதலிய சூத்திரங்களுக்கு உரையாசிரியர் கூறும் உரையையும், அவற்றுக்குச் சேனாவரையர் கூறும் மறுப்பையும் ஊன்றி நோக்கின் விளங்கும். வடமொழி முறையே இளம்பூரணர்க்குத் தெரியாது என்பது சிலர் கொள்கை. 'சுத்தொக வரூஉங் கொடையெதிர் கிளவி...' (சொல். 99) என்ற சூத்திர வுரையில் கொடை என்பதற்கு 'விழுப்ப முடையாரை நுதலியக்காற் கொண்டு வைத்து விரும்பிக் கொடுத்தல்' என்று பொருள் கூறுகின்றனர். படி சூத்திரத்திற்குப் பொன் (வேற். 12. இ.), பத்துவகை விகாரம் (எச்ச. 7), அருத்தாபத்தி (கிளவி. 61) முதலிய சொற்களை வழங்குகின்றனர். வடமொழி முறையை அடியோடு அறியாதார் இவ்வாறு கூறுதல் இயலாதென்பது என் கருத்து. இவர் காலத்துக்கு முன்னரும் உரைகாரர்கள் இருந்தவராதல்

வேண்டுமென்பது 'வேற்றுமைத் தொகையே வேற்றுமை யியல' (சொல். 413) 'உவமத் தொகையே யுவம வியல' (சொல். 414) முதலிய சூத்திரங்களின் உரையிலுள்ள '...என்ப ஒரு சாரார், ஒரு சாரார் இல்லை என்ப', 'அதற்கு ஒரு சாரார் சொல்லுவது' என்ற வாக்கியங்களால் அறியப்படுகின்றது. இவர் உரையிற் கோடலால் கொள்ளுகின்றவற்றை நன்னூலார் சூத்திரமாக்கினர்.



இவர்காட்டிய உதாரணங்களையே பெரும்பாலும் பின்னோர் ஆண்டனர். அவை பெரும்பாலும் சங்கவிலக்கியங்களிற் காணப்படுகின்றன.

'தன்மைச் சொல்லே...' (சொல். 43), 'ஒருமை யெண்ணின்...' (சொல். 44), 'வியங்கோ ளெண்ணுப்பெயர்...'(சொல் 45)'இயற்பெயர் முன்னர்...' (சொல். 270) முதலிய சூத்திரங்களுக்கு இவர் கூறும் உரை மிகச்சிறந்தனவாகும்.

**சேனாவரையர்.**—இவர் உரையாசிரியர் காலத்துக்குப் பிற்பட்டவர் என்பது வெளிப்படை. இவருக்குத் தமிழிலக்கியங்களிலுள்ள பேரறிவு இவரது உரையின் நடையாலே விளங்கும். தமிழ்மொழியிலுள்ள அறிவுடன் வடமொழி வியாகரணம், பூர்வமீமாம்ஸை, தருக்கம்,வேதாந்தம் இச்சாஸ்திரங்களிலும் ஆழ்ந்த அறிவு இவர்க்குண்டு என்பது இவரது உரையால் நன்கு விளங்குகின்றது. செயப்படுபொருள் 'இயற்றப்படுவதும், வேறுபடுக்கப்படுவதும், எய்தப்படுவது மென மூன்றும்' (சொல். 71 சே.), என்றும், 'மாணாக்கற்கு நூற்பொருளுரைத்தான் எனக் கொடைப்பொருள வாகிய சொல்லானன்றிப் பிறவாய்பாட்டாற் கூறப்படுவனவும், மாணாக்கற்கு அறிவு கொடுத்தானெனக் கொடுப்பான் பொரு

ளாய்க் கொள்வான்கட் செல்லாது ஆண்டுத் தோன்றும் பொரு ளுமெல்லாமடங்குதற்கு எப்பொருளாயினு மென்றார்' என்றும் வடமொழி வாக்கியபதீயம், அதன் உரையாகிய ஹேலாராஜீயம் இவற்றுள்ள சொற் றொடரை மொழிபெயர்த்தலாலும் 'வடநூலாரும் பிரியாத்தொகையும் பிறசொல்லான் விரிக்கப்படுமென்றார்' (சொல். 416 சே.), 'இவற்றை வடநூலார் தாதுவென்பர் (சொல். 415 சே.), 'இயற்பெயராவன சாத்தன் கொற்றன் என வழங்குதற்பயத்தவாய் நிமித்த மின்றிப் பொருளே பற்றி வரும் (சொல். 174 சே.) 'இயைபின்மை நீக்கலும் பிறிதினியைபு நீக்கலு மென விசேடித்தல் இருவகைத்து, (சொல். 182 சே.), 'ஞாபகமாயிற்று, அநுவாதமாயிற்று' (சொல். 10 சே.), முதலியகூற்றாலும் வடமொழிவியாகரணத்தில் அவருக்குள்ள அறிவும், 'இவ்வாறு ஒருபொருளுதலிற்றாக உரையாக்கால், சூத்திரமொன்றுமாறில்லை' (சொல். 1 சே.), 'இரு தொடர்ப்படச் சூத்திரித்து' (சொல். 67 சே.), 'இரண்டு வேற்றுமையு மெய்துவதனை நியமித்தவாறு' (சொல். 87 சே.) 'ஏனையிடத்து வாராதென்று



நியமித்தற்கென்பது' (சொல். 260 சே.) முதலியவற்றால் பூர்வ மீமாம்ஸைக்குக் கண்களாயுள்ள வாக்கியபேதம், நியமவிதி இவ்விரண்டனையும் நன்கு அறிந்தவர் என்பது அறியப்படுதலின், பூர்வ மீமாம்ஸையில் அவருக்குள்ள அறிவும், 'பண்போடு இவற்றிடை வேற்றுமை யென்னை யெனின், இன்மை பொருட்கு மறுதலையாகலின்' பொருளின்கட் கிடக்கும் பண்பெனப்படாது: அன்மையும் உண்மையும் பண்பிற்கு மொத்தலிற் பண்பெனப்படா : என்னை? குணத்திற்குக் குணமின்மையின்' (சொல். 214

சே.) என்ற வாக்கியத்தால் தருக்க சாஸ்திரத்தில் அவர்க்குள்ள அறிவும் 'முயற்சியும் தெய்வமுமாகிய காரணங்களுட் டெய்வஞ் சிறந்தமையான்' (சொல். 242 சே.) என்ற வாக்கியத்தால் வேதாந்த சாஸ்திரத்துள்ள நுண்ணறிவும் நன்கு புலப்படும்.

202-ம் சூத்திரவுரையில் உரையாசிரியர் காட்டாத உண்கின்றனம், உண்கின்றும், என்ற உதாரணங்களையும் 229-ம் சூத்திரவுரையில் உண்டாக்கு, வேபாக்கு என்ற உதாரணங்களையும், காட்டுதலானும், 125-ம் சூத்திரத்தில் 'அளபெடை தன்னியல்பு மாத்திரையில் மிக்கு நான்கும், ஐந்தும் மாத்திரை பெற்று நிற்கும்' என்பதனுல் அளபெடைக்கு மூன்றுமாத்திரை என்று குறித்தலானும் நன்னூலாருக்கு இவர் பிற்பட்டவரோ என்று எண்ண இடமுண்டு.

'உயர் திணை யென்மனார்...'

'இருதிணை மருங்கின்...'

'செப்பும் வினவும்...'

'இரண்டாகுவதே...'

'கண்கால்...'

'முதற்சினைக் கிளவிக்கு...'

'பொருண்மை தெரிதலும்...'

'பன்மை சுட்டிய வெல்லாப் பெயரும்...'

'அன்மையின்...'

'இடைச்சொல்லெல்லாம்...'

(சொல். 1)
( ,, 10)
( ,, 13)
( ,, 71)
( ,, 82)
( ,, 87)
( ,, 156)

( ,, 182)
( ,, 214)
( ,, 455)

முதலிய சூத்திரங்களிற் கண்ட இவரது ஆராய்ச்சித்திறன் மகிழ்ச்சியூட்டுவதாம்.

ஆனால் இவர் நிலங்கடந்தான் என்பதைத் தொகையாகக்கொண்டு, அதற்காகப் 'பெயரினாகிய தொகையும்...' (சொல். 67) என்ற சூத்திரத்துக்கு வாக்கியபேதம் வருமாறு பொருள் கொண்டும், 'பெயருந் தொழிலும்...' என்ற எழுத்ததிகாரச் சூத்திரத்துள்ள தொகுதி என்பதற்குச் சமாசன் என்று பொருள் கொண்டும் உரையாசிரியரை மறுப்பது பொருத்தமின்று. இவ்வாறே இன்னும் சிற்சில விடங்களும் உள.

**நச்சினார்க்கினியர்.**—இவர் நன்னூலார் காலத்துக்குப் பின்னர் இருந்திருத்தல் வேண்டுமென்பது, "பின்னுள்ளோர் 'வினைமுற்றே வினையெச்சமாகலும்' எனச்சூத்திரஞ் செய்தார்" (எச்ச. 61 ந.) 'இக்கருத்தானே பின்பு நூல் செய்தவர்கள் எல்லாரும் உம்மீறு எதிர்காலமே உணர்த்து மென்றார்' (எச்ச. 19 ந.), 'இவை தொகுங்காற் கருவென்னும் பண்புமாத்திரம் நின்று, பண்புப்பெயராங்காற் பெற்று நிற்குங் கருமையென்னும் மகர ஐகாரந் தொக்குநிற்கு மென்றாற், கரியது, வெளியது, கரியன, வெளியன என்னும் பண்புணர்த்தும் ஈறுகளின்கண்ணும் அவை தொக்கு இவையுந் தொகைச்சொல்லாவான் சேறலின் அது பொருந்தாது' (எச்ச. 20 ந.) என்ற வாக்கியங்களால் வெளியாகின்றது. பண்டை யிலக்கியங்களை முற்ற ஆராய்ந்து சிறந்த தமிழ்நடையில் உரையெழுதிய சேனாவரையரை, 'அவர் (சேனாவரையர்) ஆசிரியர்கருத்துஞ், சான்றோர் செய்யுள்வழக்கும் உணராமற் கூறினாரென்பது இக்கூறியவாற்றான் உணர்க' என்று மறுத்தலின், சேனாவரையர் முதியவராயிருந்தகாலத்தேனும், அவர்க்குச் சிறிது பிற்பட்டகாலத்தேனும் இவர் இருந்திருத்தல் வேண்டும் என்பது என் கருத்து.

'இரண்டாகுவதே...' (சொல். 71)
'கொடுவென் கிளவி...' ( ,, 448)

முதலிய சூத்திரங்களுக்கு இவரெழுதிய உரை சிறந்தன.

'சொல்லெ னெச்சம்...' (சொல். 441)

முதலிய சூத்திரங்களுக்கு இவர் கொள்ளும் பொருள் சந்தருப்பத்திற்கு முற்றிலும் ஒவ்வாததோடு, தன்னினமுடித்தலால் ஏனையோர் கொண்டதைச் சூத்திரப் பொருளாகவும், சிற்சில விடங்களில் மாறுபட்ட பொருளைக்கொண்ட உரையாசிரியர் சேனாவரையர் இருவர் கூறியவற்றையும் ஒருங்குகூறியும் போந்தது



அத்துணைச் சிறப்புடையதன்றாயினும் பண்டை இலக்கிய வழக்குப் பலவற்றிற்கும் இலக்கணவமைதி காட்டவேண்டுமென்ற எண்ணத்தால் அவ்வாறு கூறினர் என்பது ஆங்காங்கு விளங்குகின்றது. இலக்கியக்கடல் இவர் என்பது இவரது உதாரணங்களால் நன்கு விளங்கும்.

**தெய்வச்சிலையார்.**—இவர் எக்காலத்தில் இருந்தார் என்பது வெளிப்படையாக அறிய இயலாதாயினும், உரையாசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் இவர்கள் காலத்துக்குப் பிற்பட்டவராயிருக்கலாம் என்பது 'எடுத்தோதாதன மூன்றுவதன்கண் ஆன், ஆல், ஓடு, ஆறுவதன்கண் அ' (வேற்று. 2 தே.), என்ற வாக்கியத்தாலும் 'ஒரு வினையொடுச் சொல்...' (சொல். 91) என்ற சூத்திரத்துக்குக் கூறும் பொருளாலும் தோற்றுகின்றது.

இவர் நுண்ணிய அறிவுடையார் என்பது கிளவியாக்கத்துத்தொடக்கத்தில் ஒவ்வோர் இயலுக்கு முள்ள இயைபைக் கூறும் முறையாலும், கிளவியாக்கத்துள்

'தகுதியும் வழக்கும்...' (சொல். 17)
'உருபென மொழியினும்...' ( ,, 24)
'தன்மை சுட்டலும்...' ( ,, 25)

முதலிய சூத்திரங்களின் உரையாலும், வேற்றுமை மயங்கியலில் 'பிறிது பிறி தேற்றலும்...' (சொல். 104), 'யாதனு ருபின்...' (சொல். 106), முதலிய சூத்திரங்களின் உரையாலும், எச்சவியலில் எச்சத்தைக் கூறும் சூத்திரங்களின் உரையாலும், உரிச்சொல் என்பது தாது என்று கூறுவதாலும், இருபெயரொட்டின் உட்பொருளை எடுத்துக் காட்டுவதாலும் தெளிவாக அறியப்படுகின்றது.

இவர் கூறும் உதாரணங்களிற் பல கலித்தொகையிலும் பத்துப்பாட்டிலுங் காணப்படுகின்றன. இவர் வடமொழியில் பாணினி வியாகரணங் கற்றவர் என்பது 'வேற்றுமைத் தொகை, உவமைத்தொகை, வினைத்தொகை, பண்புத்தொகை என்பன தம்மில் ஒருபுடை ஒப்புமையுடையவாதலிற், பாணினியார் தற்புருடசமாசம் என்று குறியிட்டார்' (எச்ச. 19 தே.), 'வடநூலாசிரியர் தாது என்று குறியிட்ட சொற்களே இவையென்று கொள்ளப்படும்' (உரி. 1 தே.) என்ற சொற்றொடர்களாலும்,



'ஒரு வினையொடுச்சொல்...' என்ற சூத்திரத்திற்கு இவர் கூறும் உரை முதலியவற்றாலும் விளங்கும். 'அவற்றுள் இயற்சொற்றாமே...' (சொல். 398) என்ற சூத்திரவுரையால் வஞ்சியாகிய

கருவூரும் கொடுங்கோளூரும் வெவ்வேறு ஊர்களென்பதும், அவை சேய்மையிலுள்ளன வென்பதும் விளங்கும்.

**கல்லாடனார் விருத்தியுரை.**—இவ்வுரை சென்னை ஓரியண்டல் கையெழுத்துப் புத்தகசாலையில் உள்ளது. கிளவியாக்கம் முதல் இடையியலிற் சில சூத்திரங்கள் இறுதியாக உரை எழுதப்பட்டுளது. கிளவியாக்கத்தில் 15 சூத்திரங்களுக்கு உரையாசிரியர் உரையும், 2 சூத்திரங்களுக்குச் சேனாவரையர் உரையும், ஏனைய சூத்திரங்களுக்கு நச்சினார்க்கினியர் உரையும்; வேற்றுமையியலில் 6 சூத்திரங்களுக்கு உரையாசிரியர் உரையும், 3 சூத்திரங்களுக்குச் சேனாவரையர் உரையும், ஏனைய சூத்திரங்களுக்கு நச்சினார்க்கினியர் உரையும் ; வேற்றுமை மயங்கியலில் 15 சூத்திரங்களுக்கு உரையாசிரியர் உரையும், ஏனைய சூத்திரங்களுக்கு நச்சினார்க்கினியர் உரையும் ; விளிமரபில் 12 சூத்திரங்களுக்கு உரையாசிரியர் உரையும், ஏனைய சூத்திரங்களுக்கு நச்சினார்க்கினியர் உரையும் ; பெயரியலில் பெரும்பாலும் நச்சினார்க்கினியர் உரையும்; வினையியலில் 6 சூத்திரங்களுக்கு உரையாசிரியர் உரையும், 2 சூத்திரங்களுக்குச் சேனாவரையர் உரையும், ஏனைய சூத்திரங்களுக்கு நச்சினார்க்கினியர் உரையும்; இடையியலில் சில சூத்திரங்களுக்கு உரையாசிரியர் உரையும், சில சூத்திரங்களுக்கு நச்சினார்க்கினியர் உரையும் கொடுக்கப்பட்டன. சிற்சில விடங்களில் அவற்றிற்குமேலுஞ் சிறிது கூறப்பட்டுளது. இவ்வுரைகாரர் பிரயோகவிவேக நூலாருக்கு முற்பட்டவர் என்பது 'சோற்றை யட்டான் எனச்செய்வான் கருத்துள்வழிச் செயப்படுபொருளாதலும், சோற்றைக் குழைத்தான் எனக் கருத்தில்வழியாதலு மென இருவகைய' என்ற இவர் வாக்கியத்தைப் பிரயோக விவேக நூலார்[1] கூறுதலின் வெளியாகின்றது.

56-ம் நெ. ஏட்டுரை.—இவ்வுரை சென்னை ஓரியண்டல் கையெழுத்துப் புத்தகசாலையிலுள்ளது. இதனில் கிளவியாக்கமுதல் வேற்றுமை மயங்கியலிலுள்ள சில சூத்திரங்கள்வரை உரையுள்ளது. இவ்வுரைகாரர் சேனாவரையர், நச்சினார்க்கினியர் இவ்விருவர்

1. Cf. பிரயோகவிவேகம். 12-உரை.



காலத்துக்கும் பிற்பட்டவர் என்பது வேற்றுமையியல் இறுதிச் சூத்திரத்துக்கு இவர் எழுதிய உரையால் வெளியாகின்றது. முதனூலாரது உரையில் இவருக்கு எது பொருத்தமென்று தோன்றியதோ அவற்றை இவர் உரைத்தனர். இவரது உரையால் சிற்சில விடங்களில் உரையாசிரியர் கருத்து நன்கு புலப்பட்டது. இவர் உரையினின்றே, முன்னுரைகாரர்கள் காட்டிய **வேண்களமர் கருங்களமர்** என்ற சொற்களின் பொருள்கள் விளங்கின.

தமக்கிருந்த பலகாரியங்களின் இடையே சிரமத்தை நோக்காது மிக்க அன்புடன் இந்நூலை கையெழுத்துப் பிரதியிலும், அச்சிலும் எழுத்தெழுத்தாய்ப் பலமுறைபடித்து ஆராய்ச்சி செய்து, அதனிலுள்ள குறைகளைத் திருத்திய பிரமஸ்ரீ உ. வே. வித்வான் **வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியர்** அவர்களுக்கும் அவ்வாறே அச்சில் ஆராய்ச்சிசெய்து உதவிய பிரமஸ்ரீ உ. வே. வித்வான் **மு. இராகவையங்கார்** அவர்களுக்கும், என் நன்றியைக் காட்டச் சொற்கள் உளவோ? தம் உடற்றளர்வையும், மற்ற வேலைகளையும் நோக்காது 16 மணிகாலம் சொல்லதிகாரக்குறிப்பைப்படித்து, அதனில் திருத்தவேண்டியவற்றைக் கூறிய பிரமஸ்ரீ உ. வே. வித்வான் **திரு. நாராயணையங்கார்** அவர்களுக்கு என் நன்றியைக் காட்டுகின்றேன். இச்சிறுநூலை இராமநாதபுரம் ஸேது

ஸம்ஸ்தானம் மஹாவித்வான் பிரமஸ்ரீ ரா. இராகவையங்கார் அவர்கள் முன்னிலையில் ஒருமுறை படித்துக் காட்டினேன். அவர்கள் ஆங்காங்கு வினவியவற்றிற்கும் என்னாலியன்ற விடைகளைக் கூறினேன். அவர்கள் என்பால் அன்பு கூர்ந்து இச்சிறுநூலைப் பாராட்டி யெழுதிய பாயிரவுரையை இந்நூல் முதலில் வைத்துள்ளேன். உடற்றளர்வையும், மற்றுமுள்ள தம்மாராய்ச்சி வேலைகளையும் பொருட்படுத்தாது நூலின் ஒவ்வொரு பகுதியையும் ஆராய்ந்து பாயிரமெழுதி என்பாற்காட்டிய அவர்களது அன்பை எக்காலத்தும் மறவேன்.

இச்சிறுநூல் எழுத எனக்கு மிக்க உதவியாயிருந்தது வடமொழி வியாகர்ணம், தர்க்கம், பூர்வமீமாம்ஸை இவற்றிலுள்ள சிற்றறிவே. இவற்றை எனக்கு ஊட்டிய நீலகண்டயதீந்திரர் அவர்களுக்கும், சென்னை, ப்ரஸிடென்ஸி காலேஜ் வடமொழிப்பேராசிரியரான பிரமஸ்ரீ மஹாமஹோபாத்யாய வித்யாவாசஸ்பதி S. குப்புஸ்வாமி சாஸ்திரிகள், M.A., I. E. S. அவர்களுக்கும்,



காசி, ஹிந்து யூனிவர்ஸிடியில் பூர்வமீமாம்ஸைப் பேராசிரியரான பிரமஸ்ரீ சின்னஸ்வாமி சாஸ்திரிகள் அவர்களுக்கும், மற்றுமுள்ள ஆசிரியர்களுக்கும் என் நமஸ்காரத்தை வணக்கத்துடன் அறிவிக்கின்றேன்.

இச்சிறு நூல் எழுதுவதற்காகத் தெய்வச்சிலையார் உரையைக் கொடுத்துதவிய பிரமஸ்ரீ தாக்ஷிணாத்யகலாநிதி, மஹாமஹோபாத்யாய உ. வே. சுவாமிநாதையர் அவர்களுக்கும் தொல்காப்பிய உரை யேடுகளைக் கொடுத்துதவிய சென்னை, ஓரியண்டல் கையெழுத்துச்சாலை க்யூரேடர் பிரமஸ்ரீ மஹாமஹோபாத்யாய வித்யாவாசஸ்பதி S. குப்புஸ்வாமி சாஸ்திரிகள்,

M.A., I. E. S. அவர்களுக்கும், அச்சுப்பிழையில்லாது கவனித்த மகா-௱-௱-ஸ்ரீ E. K. நடேச சர்மா (Vidvan), P. S. வேதாசலையர் (Vidvan), M. R. இராமமூர்த்தி சர்மா அவர்களுக்கும், விரைவில் நன்கு அச்சிட்டுக்கொடுத்த மகா-௱-௱-ஸ்ரீ R. நாராயணசாமி ஐயர், B.A., B.L., அவர்களுக்கும் நான் நன்றிபாராட்டுகின்றேன்.

66-A, பெல்ரோடு
திருவல்லிக்கேணி,
10-7-1930.

இங்ஙனம்:
பின்னங்குடி - சா. சுப்பிரமணிய சாஸ்திரி.

## பிழையுந் திருத்தமும்.

| பக்கம் | வரி |
|---|---|
| 2 | 25 |
| 8 | 3-6 |
| 26 | 1 |
| .. | 28 |
| 28 | 22 |
| 46 | 4 |
| 48 | 28 |
| 63 | 24 |
| 64 | 11 |
| 65 | 17 |
| 68 | 1 |
| 77 | 22 |
| 79 | 6 |

| | |
|---|---|
| 104 | 31 |
| 124 | 11 |
| 128 | 13 |

---

| பிழை | திருத்தம். |
|---|---|
| இ. | இல. |
| சிவணி—கொள்க. | இதனை 10-ஆம் பக்கம் 17-ஆம் வரியின் பின்னர் வைத்துப்படிக்க. |
| ஒ | ஓ. |
| புடையடுப்யை | புடையடுப்பை |
| சார்புபொருளை | சார்ப்புப்பொருளை 2. |
| —கருங்கல்லதில்லை | —கருங்கலல்லதில்லை |
| ஆயினும ; | ஆயினும் |

| | |
|---|---|
| இங்கு | இங்கு, |
| அன்றி | அன்றி, |
| என | என, |
| —விடந்து | —விடத்து, |
| விதயேம் | விதேயம் |
| —விடத்து | —விடத்து, |
| யபன் | பயன் |
| தன— | தன்— |
| —மொப்பாடு | —மொப்பொடு |

# சொல்லதிகாரக் குறிப்பு.

---

## 1. கிளவியாக்கம்.

1. [1]உயர்திணை யென்மனார் மக்கட் சுட்டே
யஃறிணை யென்மனா ரவரல பிறவே
யாயிரு திணையி னிசைக்குமன[2] சொல்லே.

**சொல்லின் இலக்கணம்:**—இவ்வதிகாரத்திற் சொல்லைப் பற்றி ஆசிரியர் தொல்காப்பியனார் உணர்த்துதலான், இது சொல்லதிகாரம் எனப் பெயர்த்து. சொல்லின் இலக்கணம் யாது? தொல்காப்பியனார் பொருளியலில் 'எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே' என்றார். அஃதாவது பொருள் குறித்தனவெல்லாம் சொல் என்பதாம். ஆயின், குறிப்பினுணர்த்தும் சைகையும் பொருள்குறிப்பதனால், அதன்கண் அதிவியாப்தி வருமோவென்று எண்ணி உரையாசிரியர், 'சொல் என்பது எழுத்தொடு புணர்ந்து பொருள் அறிவுறுக்கும் ஓசை' என்று ரென்க. இங்ஙனம் இலக்கணங் கூறின், ஓரெழுத்தொருமொழியில் அவ்வியாப்தி வருமென்று நினைத்து 'எழுத்தொடு' என்பதற்கு 'எழுத்து தற்றன்மையொடு' என்ற பொருளை உரையாசிரியர் கருதியிருக்கவேண்டும் என்று கூறிச் **சேனாவரையர்**, 'சொல்லாவது எழுத்தோடு ஒருபுடையா[3] னொற்றுமை யுடைத்தாய்ப் பொருள் குறித்து வருவது' என்று, சொல்லின் இலக்கணங் கூறினர் என்க. **நச்சினார்க்கினியர்**, 'சொல்லென்றது எழுத்தினான் ஆக்கப்பட்டு இருதிணைப் பொருட்டன்மையும் ஒருவன் உணர்

1. இந்நூலில் சூத்திரவெண்கள் சேனாவரையத்திலுள்ளவாறு கொடுக்கப்பட்டுள்ளன.

2. பா—ம் இ. ந. இசைக்குமன்.    3. ஒருபுடை = ஏகதேசம்.



தற்குக் கருவியாம் ஓசையை' என்று சொல்லி, பின் 'இனிச் சேனாவரையர், சொல் பொருள்குறித்து வருமென்றாராலெனின், ஒருவன் பொருட்டன்மையை உணர்தற்குச் சொல் கருவியாய் நிற்றலன்றித் தனக்கு ஒருணர்வின்மையின் தான் ஒருபொருளைக் கருதிநிற்ற லின்றென மறக்க' என்று சேனாவரையரை மறுத்தனர். ஆனால், சேனாவரையர் 'சொல் கருவியாய் நில்லாது' என்று கருதினர் என்பதற்குப் பிரமாணந் தெரியவில்லை. அன்றியும், 'எல்லாச்சொல்லும் பொருள் குறித்தனவே' (சொல். 155) என்ற தொல்காப்பியச் சூத்திரத்தை நச்சினார்க்கினியர் இங்கு மறந்தனர் போலும்.

**அதிகாரம் என்பதன் பொருள் :**—அதிகாரம் என்ற சொற்கு **உரையாசிரியரும் நச்சினார்க்கினியரும்** 'முறைமை' என்று பொருள் கூறினர். 'முறைமை' என்பதற்கு விதி என்ற பொருள் கொண்டனர்போலும். **சேனாவரையர்** 'அதிகரணம்' என்று பொருள் கூறினர். அது தெளிவாய் விளங்குகின்றது.

**சேனாவரையர்** 'தொடர்மொழியாவது அவாய்நிலையானும் தகுதியானும் அண்மைநிலையானும் இயைந்து பொருள்விளக்குந் தனிமொழியீட்டம்' என்றமையான் தொடர்மொழி சமயவாற்றல்[1], அவாய்நிலை[2], தகுதி[3], அண்மை[4] இவற்றால் பொருள்

விளக்கு மென்பது பெறப்படும். சமயவாற்றல்[5] என்பதற்கு இந்தச் சொல்லுக்கு இதுதான் பொருள் என்று கடவுள் இயற்றிய சங்கேதத்தாலுண்டாஞ் சத்தி என்பது பொருள். இதனைக்கருதியே இலக்கணவிளக்கத்தில், ‘தனிமொழி சமயவாற்றலாற் றனித்துந், தொடர்மொழி யவாய்நிலை தகுதி யண்மையிற், றொகைநிலை...தோற்றுவதியல்பே’ (இ. 161) என்ற சூத்திரத்ில் சமயவாற்றல் என்னுஞ்சொல்லை அந்நூலாசிரியர் ஆண்டனர். அவாய்நிலை என்பது ஒருசொல் தான் பொருள் விளக்குவதற்கு மற்றொரு சொல்லைத் தழுவிநிற்கும் நிலை. தகுதி என்பது ஒருசொல் மற்றொரு சொல்லோடுசேர்ந்து பொருள்விளக்கற்கு ஏற்ற

---

1. சமயவாற்றல் = सङ्केतरूपा शक्तिः 2. அவாய்நிலை = आकाङ्क्षा

3. தகுதி = योग्यता 4. அண்மை = सन्निधिः

5. பி—ம் சே. கை. சமவாயவாற்றலால் என்பது சமயவாற்றலால் என் றிருத்தல்வேண்டும்.



தாதல். அண்மை என்பது ஒரு சொல்லைக் காலதாமதமின்றி மற்றொரு சொல்லோடு சொல்லுவது.

கிளவியாக்கம்—என்று இவ்வோத்துக்குப் பெயர் வந்த

தற்கு 'வழூஉ ஙகளைந்து சொற்களை யாக்கிக்கொண்டமையான்,' 'சொற்கள் பொருள்கண்மேலாமாறு உணர்த்தினமையான்,' என்று இரண்டு காரணம் சேனாவரையர் கூறுகின்றனர். பிற் கூறிய காரணம் இவ்வோத்தில் முதல் 12 சூத்திரங்களுக்கும், முற்கூறியது 13-ம் சூத்திரம் முதலாக ஏனைச்சூத்திரங்கட்கும் பொருந்தும். தெய்வச்சிலையார், 'அது கிளவியாக்கமென விரியும்; அதற்குப் பொருள் சொல்லினது தொடர்ச்சி எ-று. சொற்கள் ஒன்றோடொன்று தொடர்ந்து பொருள்மேலாகு நிலை மையைக் கிளவியாக்க மென்றார். அது வேற்றுமைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாகி அதனையுடைய ஓத்திற்குப் பெயராயிற்று' என்றனர்.

ஒவ்வோர் ஓத்துள்ளும் உணர்த்திய பொருள்:—இங்கு 'அல் வழித்தொடர் கிளவியாக்கத்துள்ளும், வேற்றுமைத் தொடர் வேற்றுமையோத்துள்ளும், வேற்றுமை மயங்கியல் விளிமரபென் பனவற்றுள்ளும், தனிமொழிப் பகுதியாகிய பெயரிலக்கணம் பெயரியலுள்ளும், வினையிலக்கணம் வினையியலுள்ளும், இடைச் சொல்லிலக்கணம் இடைச்சொல்லோத்தினுள்ளும், உரிச்சொல் லிலக்கணம் உரிச்சொல்லோத்தினுள்ளும், எஞ்சியவெல்லாம் எச்ச வியலுள்ளும் உணர்த்தினர் என்று கொள்க' என்றார் தெய்வச் சிலையார். கிளவியாக்கத்துள், நால்வகைப்பட்ட சொற்களையும் பொருள்கள்மேலாமாறு கூறி, அவற்றுள் முதலாகிய பெயர்ச் சொல் இலக்கணம் வேற்றுமையியலில் ஆசிரியர் கூறினர் என்று உரையாசிரியரும், கிளவியாக்கத்துள் நான்கு சொற்கும் பொது விலக்கணமும், வேற்றுமையியலில் வேற்றுமையின் இலக்கணமும் கூறினர் என்று சேனாவரையரும், நச்சினார்க்கினியரும் வேற்றுமை

யியலின் தொடக்கத்தில் கூறினர். இவற்றுள் தெய்வச்சிலையார் கூற்றே மிகப்பொருந்தும்.

**'மக்கட்சுட்டு' என்பதன் பொருள் :—உ. தே.**—மக்களென்று சுட்டப்படும் பொருள்.

**சே.**—மக்களென்று **கருதப்படும்** பொருள் [மக்களாகிய சுட்டு (கருத்து) யாதன்கண் நிகழும் அது மக்கட் சுட்டு].



**ந.**—மக்களாகிய நன்கு மதிக்கப்படும் பொருள்.

சேனவரையர் கொள்கைப்படி, தூணை மகனெனக் கருதினும், அஃது உயர் திணை; அதனல், அவர் கொண்டபொருள் மெய்யுணர்வுக்கும்[1] திரிபுணர்ச்சிக்கும்[2] பொருந்தும். நச்சினர்க்கினியர் கொண்டபொருளோ மெய்யுணர்வுக்கே பொருந்தும்: அதனல், அவர் மதப்படி தூணைக்கண்டு மகன் என்று கருதியவழியும் அஃறிணையே வழங்கவேண்டும். உலகவழக்கிலோ உயர் திணையே காணப்படுகிறது. மேலும், சூத்திரத்தின் பொருள் சொல்லுமிடத்து மக்கட்சுட்டு என்பதற்கு மக்களென்று கருதப்படும் பொருள் என்று பொருள் கூறி, பின் 'மக்களாகிய சுட்டு யாதன் கண் நிகழும் அது மக்கட்சுட்டு' என்று சேனவரையர் சொல்லியிருப்பது தவறு என்று நச்சினர்க்கினியர் மறுத்தனர். ஆனல், 'கருதப்படும்' என்னுஞ் சொல்லின் தாற்பரியத்தை ஊன்றி நோக்கின் இருவகையாய்க் கூறியவற்றுக்கும் பொருளில் மாறுபாடு இல்லை யென்றே தோன்றுகின்றது.

**ஆயிருதிணை.**—ஆயிருதிணையின் என்னுமிடத்து உரையாசிரியரும் **நச்சினர்க்கினியரும்** இரண்டாம் வேற்றுமையுருபு தொக்

கதென்றும், சேனவரையரும் தெய்வச்சிலையாரும் ஏழாம்வேற்றுமையுருபு தொக்கதென்றும் கூறினர்.

சேனவரையர் ஏழாம் வேற்றுமைத்தொகை என்பதற்கு ஞாபகமாகத் தொல்காப்பியத்திலுள்ள சூத்திரங்களையே கூறுகின்றார். நச்சினார்க்கினியர் சான்றோர்செய்யுளைக் கூறுகின்றார். சான்றோர் செய்யுளுக்கு ஆதாரம் யாது எனத் தேடவேண்டியிருத்தலானும், தொல்காப்பியச் சூத்திரங்கள் இப்பொழுது நேரில் உள்ளமையானும் [3], சேனவரையர் ஏழாம்வேற்றுமைத்தொகையென்று கருதினர்போலும்.

**உயர்திணை என்பதன் தொகைவிரி** [4].—சே.—பண்புத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை.

ந.—இறந்தகால வினைத்தொகை; அஃது ஆகுபெயராய் அப்பொருளை உணர்த்தி நின்றது.

---

1. மெய்யுணர்வு = प्रमा    2. திரிபுணர்ச்சி = भ्रम:

3. இங்கு அனுமிதசுருதியினும் பிரத்தியக்ஷசுருதிக்குப் பலம் அதிகமென்ற வடநூலார் துணிபைச் சேனவரையர் கருதினர் போலும்.

4. தொகைவிரி = विग्रहः



தே.—பண்புத்தொகை (திணை=பொருள்); வினைத்தொகையுமாம்.

திணை என்பதற்குச் சாதி யெனப் பொருள் கொள்ளின் சமயவாற்றலாற் கிடைக்கும் அப்பொருளைக் கொண்டே சேனவரையர் கூறியவாறு தொகையை விரிப்பது சாத்தியமாயிருக்க, எளிதான அவ்வழியைவிட்டு ஆகுபெயரால் வந்த பொருளை

நச்சினர்க்கினியர் கொள்வது கௌரவம் அல்லது மிகை என்னுங் குற்றத்துக்கு இடனாகும். மேலும், அஃறிணை என்பதை இருவரும் பண்புத் தொகையாகவே கொள்ளவேண்டும். ஆதலால், உயர்திணை அஃறிணை என்ற இரண்டையும் பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாகவே கொள்ளுதல் நேராகும். தெய்வச்சிலையார் கூறும் பொருளின்படி இரண்டையும் பண்புத்தொகையாகவே கொள்ளலாம்.

**என்மனார்** :—உ.—என்மனார் என்பது என்ப என்னும் முற்றுச்சொல்லைக் குறைக்குங்வழிக் குறைத்தல் (சொல். எச்ச. 7) என்பதனாற் பகரங்குறைத்து, விரிக்கும் வழி விரித்தல் (சொல். எச்ச. 7) என்பதனால் மன்னும் ஆரும் என்பன இரண்டிடைச்சொற்பெய்து விரித்தான்.

சே.—என்மனார் என்பது செய்யுண்முடிபெய்தி நின்றதோர் ஆரீற்றெதிர்காலமுற்றுச் சொல். (என்மனா ரென்பது இடர்ப்பட்டுழிச் சிறுபான்மை வாராது, இந்நூலுள்ளும் சான்றோர் செய்யுளுள்ளும் பயின்று வருதலானும், இசைநிறை என்பது மறுத்துப் பொருள் கூறுகின்றார் பின்னும் இசைநிறையென்றல் மேற்கோண்மலைவாதலானும் அவர்க்கது கருத்தன்றென்க என்று உரையாசிரியரை மறுத்தனர்).

ந.—என்மனா ரென்பது ஓர் ஆரீற்று நிகழ்காலமுற்று வினைத்திரிசொல்.

தெ.—என்மனார் என என்பவென்னும் முற்றுச்சொல் திரிந்து நின்றது. (குறைக்கும்வழிக் குறைத்தல் என்பதனான் பகரம் குறைத்து, விரிக்கும்வழி விரித்தல் என்பதனான் மன்னும் ஆருமென இரண்டிடைச் சொற் பெய்து என்மனார் என்றாயிற்று

எனப் பொருளுரைப்பவாலெனின், பகரங்குறைக்கின்றது செய்



யுளின்பம் வேண்டியன்றே? ஆண்டுக் குறைத்தவழிப் பின்னும் இரண்டெழுத்து விரிக்கல் வேண்டுமாயிற் குறைத்ததனாற் பயனின் மையின் இவ்வாறு எழுதும் உரை குற்றமென்க).

சேனாவரையத்தில் 'இசைநிறை யென்பது...மேற்கோண் மலை வாதலானும்' என்பதற்குப் பொருள் :—இடையியலில் மன் என்பது இசைநிறையில் வரும் என்று ஆசிரியர் கூறுமலிருக்கும் போது, இங்கு இசைநிறையாகக் கொள்வது தாம் கொண்ட கொள்கைக்கு மாறுபாடாகலானும்—என்பதாகும்.

சூத்திரத்தில் 'அவரல' 'பிற' இவ்விரண்டும் வேண்டுமோ? 'அவரல' என்பதுமட்டும் இருந்தால், உயர்திணைக்கு ஒத்த அதனின் வேறுபட்ட மக்கள் அல்லாத உயிரோடுகூடிய உயிர்களே அஃறிணையாகும்: [1] அதனால், உயிரில்லாதனவும் அஃறிணையே என்று காட்டப் 'பிற' என்றார். இக்கருத்தையே 'அவ்வுயர் திணையல்லனவெல்லாம் அவ்வுயர்திணைபோல ஓரினத்த அல்ல; தத்தம் வகையான் வேறுபட்டன; உயிருடையனவும் உயிரில்லன வும் என்பது' என்னும் வாக்கியத்தால் உரையாசிரியர் குறிப்பாக உணர்த்தினர். அதனையே சேனாவரையர் 'இனி அவரலவென்றே பொழியின் அவற்றது பகுதியெல்லாம் எஞ்சாமற் றழுவாமை யின், எஞ்சாமற்றழுவுதற்கு அவரல பிறவென்றார்' என்ற வாக்கியத்தாற் கூறினர். நச்சினார்க்கினியர் 'இச்சூத்திரத்தாற் பொரு ளிரண்டு சொல்லிரண்டென வரையறுத்தார்' என்று சொல்லு

கிறார். அவ்வாறாயின், வாக்கியபேதம்[2] என்னுங்குற்றம் வரும்; 'இவ்வாறு ஒருபொருளுதலிற்றாக உரையாக்கால், சூத்திரமொன்றுமாமாறில்லையென்க' என்று சேனாவரையர் கூறியதும் இது பற்றியே.

---

1. இங்கு नञिवयुक्तमन्यसदृशे என்ற பிரமாணம் நோக்கத்தக்கது. அஃதாவது:—नञ्, इव என்னும் வட சொற்களைச் சார்ந்து வருஞ் சொல் ஒத்த வேற்றுப்பொருளைக் குறிக்கும் என்பது பொருள். அப்பிராமணன் என்றவிடத்துப் பிராமணனை ஒத்து வேறுபட்ட மற்ற மனிதரைக் குறிக்குமேயன்றி அவ்வன்மை அஃறிணைப்பொருளைக் குறியாதென்பது கருத்து.

2. விதிகூறுமிடத்து ஒன்றைக்கருதி ஒன்றையே விதிக்கலாமேயன்றி இரண்டு முதலிய பலவற்றைக்கருதிப் பலவற்றை விதித்தல் வாக்கியபேதம் ஆகும்.

## கிளவியாக்கம் 7

**இச்சூத்திரத்தின் பொருள் :**—சொல், மக்களைச்சுட்டும் உயர்திணை மக்களல்லாதவற்றைச் சுட்டும் அஃறிணை இவ்விரண்டு திணையின் கண்ணும் இசைக்கும் எ-று.

இச்சூத்திரத்தில் சொல் என்பது உத்தேசியம். மக்களைக் குறிக்கும் உயர்திணைக்கண்ணும் மக்களல்லாத பிறவற்றைக் குறிக்கும் அஃறிணைக்கண்ணும் இசைக்கும் என்பது விதேயம். விதிக்கப்படுவது விதேயம். எதனைப்பற்றி வேறொன்று விதிக்கப்படுவதோ அஃது உத்தேசியம். உத்தேசியம் முன்னரே அறியப்படினல்லது, அதனைப்பற்றி மற்றொன்று விதித்தல் இயலாது. இச்சூத்திரத்துள்ள சொல் 'ஓரெழுத் தொருமொழி யீரெழுத் தொருமொழி...' (எழுத். 45) என்ற எழுத்ததிகாரச் சூத்திரத்தால் முன்னரே பெறப்பட்டது. அதனை உத்தேசித்து இங்கு

உயர்திணை யஃறிணையின்கண் இசைத்தல் விதிக்கப்பட்டது. உத்தேசியம் எழுவாயாகவும் விதேயம் பயனிலையாகவும் இருக்கும்.

ஒரு சூத்திரத்தில் ஓர் உத்தேசியமும் ஒரு விதேயமுந்தான் இருத்தல்வேண்டும். இம்முறையை ஆசிரியர் தந்நூலுள் எங்கும் ஆண்டனர் என்பது, அந்நோக்கத்துடன் ஒவ்வொரு சூத்திரத்தையும் ஆராய்வோருக்கு நன்கு புலப்படும். இச்சூத்திரத்தில், மக்களைச் சுட்டுவது உயர்திணை, மக்களல்லாப் பிறவற்றைச் சுட்டுவது அஃறிணை, அவ்விரு திணையின்கண்ணும் சொல் இசைக்கும் என்று மூன்று உத்தேசியமும் மூன்று விதேயமும் இருப்பதால் வாக்கியபேதம் ஆகாதோவெனின், அற்றன்று ; இதனுள் உயர்திணை, அஃறிணை இவற்றின் இலக்கணங்கூறுவது முன்னோர் கூறிய இலக்கணத்தையே அநுவதித்து, சொல் என்பது உயர்திணை யஃறிணையின்கண் இசைக்கும் என்பது விதிக்கப்படுகின்றது என்க.

**தெய்வச்சிலையார்** இசைக்குமன என்பதைத் தொழிற்பெயராகவும், சொல் என்பதைப் பெயர்ப் பயனிலையாகவுங் கொள்ளுகின்றார். உத்தேசியம் 'சொல்' ஆதலால் அதனை எழுவாயாகக் கொள்ளுவதே மேலானது.

**இசைக்குமன.**—'இசைக்கு மென்பது செய்யுமென்னு முற்றுச் சொல். மன்னென்னு மிடைச் சொல் மனவென வீறு திரிந்து நின்றது' என்றார் **சேனாவரையர்**. 'இசைக்குமன வென்



பது செய்ம்மனவென்னும் <u>தொழிற்பெயர்</u>. அது செய்யுமன வென விரிந்து நின்றது' என்றார் **தெய்வச்சிலையார்**.

**சிவணி.**—தெய்வச்சிலையார் 'சிவணி என்பது வினையெச்ச மன்று; ஒலியின் பொருண்மை தோன்றவந்தது' என்கின்றார். அவர் கொள்கையில் அச்சொல் ஒருசொல்விழுக்காடு என்று கொள்க.

**பி-ம்.** **இளம்பூரணத்தில்** 'என்மனார் ஆசிரியர் என்று முடியற்பாற்று. முற்றுச்சொல் எச்சப்பெயர் என்பவாகலின், இது செய்யுளோக்கித் தொகுத்துக் கூறினான் என்பது' என்ற சொற்றொடர், 'என்மனார் ஆசிரியர் என்று முடியற்பாற்று, முற்றுச்சொல் எச்சப்பெயர் என்பவாகலின். இது செய்யுணோக்கித் தொகுத்துக் கூறினான் என்பது' என்றிருக்கவேண்டும். 'முற்றுச்சொல் எச்சப்பெயர் என்பவாகலின் என்பது 'என்மனார் ஆசிரியர் என்று முடியற்பாற்று' என்பதற்கு ஏதுவாகும். எச்சப்பெயர் என்பதற்கு எஞ்சிய பெயரையுடைய சொல் என்பது பொருள். இங்கு என்மனார் என்னுஞ் சொல் எச்சப்பெயர் என்பது அவ்விரயனார் மதமென்பது 'பெய ரெஞ்சு கிளவி பெய ரொடு முடிமே' (சொல். 425) என்ற சூத்திரத்தினடியிலுள்ள தெய்வச்சிலையார் உரையானும், 'பெயர் வினையும்மை...' (நன். 359) என்ற சூத்திரத்தினடியிலுள்ள மயிலைநாதருரையானும் நன்கு விளங்கும்.

'சுட்டுதற்குக் காரணமாகிய **தன்மை யென்னும் ஒருவன்'** என்பது 'சுட்டுதற்குக் காரணமாகிய **தன்மைய னென்னும்** ஒருவன்' என்றிருக்கவேண்டுமென்று தோன்றுகின்றது.

மேலும், அதனிலுள்ள 'இசைக்கும் என்பது செய்யும் என்னும் பெயரெச்சம்' என்ற வாக்கியம் பொருந்தவில்லை. சூத்திரத்துக்குப் பொருள் சொல்லுங்கால் வினைமுற்றாகவே சொன்ன

தாகத் தோன்றுகிறது. அன்றியும், 'இசைக்கு மென்பது செய்யு மென்னு முற்றுச் சொல்' என்று சொல்லும் சேனாவரையர் அதை மறுக்கவில்லை. ஆதலால் இஃது இளம்பூரணப்பிரதியைப் பார்த்து எழுதியவர் தம் தவறாயிருக்கலாம்.

பா-ம். சே. தா.; சே. சை.—நூலுள்ளும் சான்றோர் செய்யுளுள்ளும்; சே. ஓ.—இந்நூலுள்ளும் சான்றோர் செய்யுளுள்ளும். பின்பாடமே பொருந்தும்.



2. ஆடூஉ வறிசொன் மகடூஉ வறிசொற்
பல்லோ ரறியுஞ் சொல்லொடு சிவணி
யம்முப் பாற்சொ லுயர்திணை யவ்வே.

பொருள்.—(முன் சூத்திரத்திற் கூறப்பட்ட இருதிணைகளுள்) உயர்திணைச்சொல் ஆணைக்குறிக்குஞ் சொல் லென்றும், பெண் ணைக்குறிக்குஞ் சொல் லென்றும், பல்லோரைக் குறிக்குஞ்சொல் லென்றும் மூவகைப்படும் என்பதே. இப்பொருளைச் சேனா வரையர் 'உயர்திணைச் சொல்லுணர்த்தி அதனது பாகுபாடு கூறுகின்றாராகலின், அம்முப்பாற்சொ லுயர்திணைய என்றா ராயினும் உயர்திணைச்சொல் மூன்றுபாகுபாடு படுமென்பது கருத்தாகக் கொள்க' என்னும் வாக்கியத்தால் நன்கு விளக்கு கின்றார்.

அம்முப்பாற் சொல் என்றவிடத்து முற்றும்மை கொடாததற்குக் காரணம், அஃது உத்தேசியமாயிராது விதேயமாயிருப்பது என்பதேயாம். இக்கருத்தைச் சேனாவரையர் இச்சூத்திர வுரையின் இறுதியிற் குறித்தனர். இங்கு உயர்திணை என்பது பயனிலையாகவும் அம்முப்பாற்சொல் என்பது எழுவாயாகவும் இருப்பினும், முற்சூத்திரத்திற் கூறப்பட்ட உயர்திணை என்பது உத்தேசியமாதல்பற்றி அதனை எழுவாயாகவும் அம்முப்பாற் சொல் என்பதைப் பயனிலையாகவும் கொள்ளல்வேண்டும்.

சேனாவரையத்துள் 'ஆறும்வேற்றுமை யேற்று நின்ற சொல் பெயராயும் வினைக்குறிப்பாயும் நிற்குமாகலான்' என்றுளது. அது பொருந்தாது என்பதைத் தொல்காப்பிய முதற்சூத்திர விருத்தியிற் காண்க.

இச்சூத்திரவுரையிற் சேனாவரையர் 'உரையாசிரியரும் உயர்திணை யெனப்பட்ட பகுப்பை விரிப்புழி இத்துணை யல்லது விரிபடாதென்பது ஈண்டுக் கூறியது என்றுரைத்தாருமெனக' என்கின்றார். இவ்வாக்கியம் இ. நம. உரையிலேனும், இ. ஓ. உரையிலேனும் இச்சூத்திரத்தினடியிற் காணப்படவில்லை.

"னஃகா னொற்றே யாடூஉ வறிசொல்", "ளஃகா னொற்றே மகடூஉ வறிசொல்", "ரஃகா னொற்றும்...பலரறி சொல்லே" என்னும் மூன்று சூத்திரங்களானே ஆடூஉவறிசொல் மகடூஉவறி

2

சொல் பலரறிசொல் ஆகிய மூன்றும் அறியப்படுதலின் 'ஆடூஉ வறி சொன் மகடூஉவறிசொல்...உயர் திணையவ்வே' என்னும் இச் சூத்திரம் வேண்டாவென்று சிலர்க்குத் தோற்றலாம்; அஃது ஏற் புடைத்தன்று. ஏனெனில் 'னஃகா னொற்றே யாடூஉ வறிசொல்' என்பதற்கு ஆடூஉவறிசொல் னஃகானொற்றை ஈற்றிற்கொண்டது என்பது பொருள். இவ்வண்ணமே மற்ற இரண்டு சூத்திரங்களுக் கும் பொருள்கொள்ளவேண்டும். ஆதலால் இம்மூன்று சூத்தி ரங்களினும் ஆடூஉவறிசொல், மகடூஉவறிசொல், பலரறிசொல் இவற்றின் இலக்கணஞ் சொல்லப்படுகின்றதே யன்றி, இம்மூன்று சொல்லும் உயர்திணைச்சொல் என்று சொல்லப்படவில்லை. ஆகவே 'ஆடூஉ வறிசொன்...உயர்திணை யவ்வே' என்னும் இச் சூத்திரம் இன்றியமையாதது. இக்கருத்தையே சேனவரையர் 'ஆடூஉவறிசொன் முதலாயினவற்றை யுணர்த்தி யல்லது, அவற்ற திலக்கண முணர்த்த லாகாமையின் பாலுணர்த்து மெழுத்து வகுப்பவே அவை தாமும் பெறப்படும்; இச்சூத்திரம் வேண்டா வென்பது கடாவன்மை யுணர்க' என்னும் வாக்கியத்தால் நன்கு உணர்த்தினர்.

பி-ம்.—சே.—'இனைத்தென வறிந்த பொருட்டொகுதிக் குக் கொடுக்கும் உம்மை கோடாராயினும்' என்றவிடத்து இனைத் தெனவறிந்த..., கோடாராயினதூஉம் என்று இருக்கலாம்.

4. பெண்மை சுட்டிய வுயர்திணை மருங்கி
னாண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவியுந்
தெய்வஞ் சுட்டிய பெயர்நிலைக் கிளவியு
மிவ்வென வறியுமந் தந்தமக் கிலவே
யுயர்திணை மருங்கிற் பால்பிரிந் திசைக்கும்.

**அவதாரிகை:**—மக்களைக் குறிக்குஞ்சொல் உயர்திணையென்றும், அஃது ஆண்பால் பெண்பால் பலர்பால் என மூவகைப்படும் என்றும் சொன்னமையின், மக்களைக் குறித்தும் ஆண்பால், பெண்பால், பலர்பால் இவற்றுள் அடங்காப் பேடி, பேடர், பேடியர், பேடிகள், பேடிமார் என்னுஞ் சொற்கள் எப்பாலைக் குறிக்கும் வினையைப்பெற்று வருமென்றும், மக்களைக் குறிக்காது



தெய்வத்தைக் குறிக்குஞ் சொற்கள் எத்திணையைக் குறிக்கும் வினையைப் பெற்றுவருமென்றும் எழும் ஐயம் நீக்குவான் இச் சூத்திரம் கூறுவாராயினர்.

**பொருள் :**—உயர்திணையில் ஆண்மை திரிந்து பெண்மை சுட்டும் பொருளைக் குறிக்குஞ் சொல்லிற்கும், தெய்வத்தைக் குறிக்குஞ் சொல்லிற்கும் தமக்கென உரிய ஈற்றெழுத்து இல்லை; ஆதலால் அவை உயர்திணைக்குரிய பாலாய் வேறுபட்டிசைக்கும்.

இளம்பூரணத்திலும் நச்சினார்க்கினியத்திலும் 'பெயர்நிலைக் கிளவி' என்பதற்குப் பெயர்ப்பொருள் என்று பொருள் உரைக்கப்பட்டது, அங்ஙனமாயின் அந்தந்தமக்கிலவே என்பது எவ்வாறு பெயர்நிலைக்கிளவியோடு இயையும்? பொருளுக்கு அந்தம் ஏது? சொல்லுக்குத் தான் இவ்வெனவறியுமந்தம் உண்டு. ஆதலின் அவ்வுரை பொருந்துமாறில்லை. சேனாவரையரோ, 'பெண்மைசுட்டிய...பெயர்நிலைக்கிளவி' என்பதில் பெயர்

நிலைக்கிளவி என்பதற்குப் பொருட்சொல்லென்று பொருள் கொண்டு 'பெண்மைத்தன்மை குறித்த ஆண்மைதிரிந்த பெயர்ச் சொல்லும்' என்றுரைத்தனர். ஆனால் பெயர்ச்சொல் பொருளின் தன்மையாகிய பெண்மைத்தன்மையை எவ்வாறு குறிக்கும் என்ற ஐயத்தை மனத்திற்கொண்டு "தன்மை திரிபெயர் என்றாற் போலச் சொல்லொடு பொருட் கொற்றுமை கருதி ஆண்மை திரிந்த பெயர் நிலைக்கிளவி என்றார்" என்றனர். இளம்பூரணத்தில் பெயர்நிலைக்கிளவி என்பதற்குப் பிறனொருவன் கூற்றாகப் 'பெயர் என்பதனை ஆகுபெயராற் பொருளாக்கி, பொருண் மேல் நிலைபெற்ற கிளவி' என்று பொருள் கூறப்பட்டுளது. தெய்வச்சிலையார் பெயர்நிலைக்கிளவி என்பதற்குப் 'பெயர்க்கண் நிற்குஞ்சொல்' என்று பொருள் கூறுகின்றனர். இப்பொருள் மிகப்பொருத்தமானது.

---

இச்சூத்திரத்துக்கு இளம்பூரணத்திற் பேடி வந்தான், பேடி வந்தாள், பேடியர் வந்தார் எனவும், சேனாவரையத்திற் பேடி வந்தாள், பேடர் வந்தார், பேடியர் வந்தார் எனவும், நச்சினார்க்கினியத்திற் பேடி வந்தாள், பேடியர் வந்தார் எனவும் உதாரணங்கள் காணப்படுகின்றன. இளம்பூரணத்திற் பேடி வந்தான் என்பதைக் காட்டியதற்குக் காரணந் தெரியவில்லை. 'ஆண்மை திரிந்த பெயர்

நிலைக் கிளவி, ஆண்மை யறிசொற் காகிட னின்றே' என்னும் 12-வது சூத்திரத்தில், பேடி வந்தான் என்று சொல்லுதல் தவறு என்றே கூறப்பட்டது. அங்கும் 'ஆகிடனின்றே' என்பதனாற் சிறுபான்மை 'பேடி வந்தான்' என ஆண்பாற்கும் ஏற்கும் என்று உரையாசிரியர் சொல்வதற்குங் காரணம் தெரியவில்லை. சேனவரையரும் 'பெண்மைசுட்டிய எனவே பெண்மைசுட்டாப் பேடென்பதும் ஒழிக்கப்பட்டதாம்' எனச் சொல்லிப் பின்னர் 'பேடர்' என்பதனை உதாரணத்திற் கொடுத்ததால் பேடன் வந்தான் என்றும் அவர் உதாரணங்கூறியிருத்தல்வேண்டும். 'பேடியர், பேடிமார், பேடிகள் என்பனவும் அடங்குதற்கு' என்று அவர் பின் கூறுவதை நோக்கின், 'பேடர்' என்பது அவர் கூற்றன்றி எழுதினவர் தவற்றான் வந்ததோ வென்ற ஐயம் நிகழ்கின்றது. ஆனால், 'பெண்மை திரிதலுமுண்டேனும் ஆண்மை திரிதல் பெரும்பான்மையாகலான் ஆண்மை திரிந்த என்றார்' என்று சொல்லுமிடத்து உபலக்ஷணத்தாற் பேடன் என்பதற்குப் பலர்பாலாகப் 'பேடர்' என்பது உதாரணமாகக் கொள்ளலாம் என்று அவ்விடத்துக் காட்டியிருப்பிற் பொருந்தும். ஆதலின் நச்சினார்க்கினியர் தந்த உதாரணமே மிக மேலானது.

சூத்திரத்திற் பேடி என்று சொல்லாது, 'பெண்மைசுட்டிய வுயர்திணைமருங்கின், ஆண்மைதிரிந்த பெயர் நிலைக்கிளவி' என்று சொன்னதற்குப் பயன், 'பேடியர் வந்தார்' என்பது முதலிய பலர்பாற்சொற்களையும் தழுவுவதேயாம். இதனைச் சேனவரையர் 'பேடியர், பேடிமார், பேடிகள் என்பனவும் அடங்குதற்குப் பேடியென்னும் பெயர்நிலைக்கிளவி யென்னாது பெண்மை சுட்டிய ஆண்மை திரிந்த பெயர்நிலைக்கிளவி என்றார்' என்னும் வாக்கியத்தாற் காட்டுகின்றார். 'பெண்மை சுட்டிய ஆண்மை திரிந்த' என்பது

உடலக்கூணத்தால் 'பெண்மை திரிந்த ஆண்மை சுட்டிய' என்பதையுங் குறிப்பது என்பதைச் சேனவரையர் 'பெண்மை திரிதலு முண்டேனும் ஆண்மைதிரிதல் பெரும்பான்மையாகலான் ஆண்மைதிரிந்த என்றார்' என்பதனுற் குறித்தனர். பேடியென்பதற்குப் 'பெண்பிறப்பிற்றோன்றிப் பெண்ணுறுப்பின்றித் தாடி தோற்றி ஆண்போலத்திரிவது' என்று தெய்வச்சிலையார் கூறுகின்றார்.



பா—ம்.—சே. தா.—'தமக்கேனவீறுடைய', சே. சை.—'தமக்கேனவீறுடையவாய்' 'தமக்குரிய வீற்றுனிசைப்பதன்றியும்'. சே. ரா.—தமக்கேனவீறுடையவாய். பின்கண்ட இரண்டு பாடங்களும்பொருந்தும்.

சேனவரையத்தில், 'சுட்டிய வென்பது செய்யிய வென்னும் வினையெச்சமென்றும், ஆண்மைதிரிதல் சொற்கின்மையிற் பெயர்நிலைக்கிளவி என்பது ஆகுபெயராய்ப் பொருண்மேனின்றதென்றும் உரையாசிரியர் கூறினாராலெனின்' என்றுளது. அவ்வாக்கியம் இ. நம. இல் இல்லை. ஆனல் உரையாசிரியர் இச்சூத்திரத்தின் பொருள் சொல்லுமிடத்துப் பெயர்நிலைக்கிளவி என்பதற்குப் பெயர்ப்பொருள் என்று பொருள் கொண்டிருக்கின்றார். சுட்டிய என்பது வினையெச்சமென்று எங்குங் காணப்பட்டிலது.

5. னஃகா ஹெற்றே யாடூஉ வறிசோல்.

ஆடூஉவறிசொல்லாவது னஃகானாகிய வொற்று என்பது இச்சூத்திரத்திற்குப் பொருள். ஆடூஉவறிசொல் உயர்திணையின் ஒரு பகுதியாயினமையானும், னஃகானொற்று மாத்திரம் தனியாய்

வந்து பொருள் குறிக்க இயலாமையானும், ஔகாரவீற்று என்பது ஔகாரவீற்றை ஈற்றிற் கொண்டபெயர் என்றே கொள்ளப் படும். இவ்வாறாயின் ஔகாரவீற்றை ஈற்றிற்கொள்வது என்று நச்சினார்க்கினியர் இங்குப் பொருள் கூறுவதும், சேனாவரையர் அ ஆ வ என வருமிறுதியை யுடைய சொல் என்று 9-ம் சூத்திரத்தினடியிற் கூறுவதும் கருத்தைப்பற்றியதேயன்றிச் சொல்லைப் பற்றியதன்று என்று அறிக[1].

இவ்வாறே 102-வது சூத்திரத்தில் **வேற்றுமைக்கிளவி** என்பதனாலும், 103-வது சூத்திரத்தில் **உருபு** என்பதனாலும் வேற்றுமையுருபையீற்றிற்கொண்ட சொல்லே கொள்ளப்படும். 128-வது சூத்திரத்தில் ன, ர, ல, ள என்பன அவ்வவ்வீற்றைக்கொண்ட சொற்களைக் குறிக்கும். அவ்வாறே 202, 203, 205, 206, 216, 217 சூத்திரங்களில் அம், ஆம் முதலியன அவற்றை ஈற்றிற் கொண்ட வினைகளையே குறிக்கும்.

---

1. இவ்வாறே வடமொழியிலும் ஒரு விகுதியைப்பற்றி விதிப்பின் அவ்விகுதிகொண்ட சொற்களும் அங்குக் கொள்ளப்படலாம்.

Cf. **प्रत्ययग्रहणे यस्मात्स विहितस्तदादेस्तदन्तस्य ग्रहणम्** (**वनोर च** 4—2—7 என்ற **பாணினி சூத்திரத்தாற்** பெறப்பட்ட பரிபாஷை).



✓ ஏகாரத்தைப் பிரிநிலையாக **உரையாசிரியரும்**, அசைநிலையாகச் **சேனாவரையர் தெய்வச்சிலையார்** இவ்விருவரும், தேற்றேகாரமாக **நச்சினார்க்கினியரும்** கூறினர். இச்சூத்திரம் ஆடூஉவறிசொல்லின் இலக்கணத்தையே விதித்தலானும், ஔகாரவீற்று முற் சூத்திரங்களாற் பெறப்படாமையானும் **சேனாவரையர் தெய்வச்**

சிலையார் இவ்விருவர் கூற்றே பொருந்தும்.

> 7. ரஃகா னொற்றும் பகர விறுதியு
> மாரைக் கிளவி யுளப்பட மூன்று
> நேரத் தோன்றும் பலரறி சொல்லே.

பொருள் :—உ.—பலரை அறிவிக்குஞ் சொற்கு ரஃகானாகிய ஒற்றும், பகரமாகிய விறுதியும், மார் என்னுஞ்சொல்லும் ஆகிய மூன்றும் நிரம்பத்தோன்றும். (இப்பொருள் "நேரத்தோன்றும் பலரறி சொற்கு' என்பான், உருபுதொகுத்துச் 'சொல்லே' யென்றான் என்பது" என்னுங் குறிப்பானும், பல்லோரையறியுஞ் சொற்கு ஈறும் எழுத்து உணர்த்துதல் நுதலிற்று என்பதனானும் நன்கு அறியப்படுகின்றது.)

சே:—நேரத்தோன்றும், பலரறிசொல்லாவது, ரஃகானொற்றும், பகரவிறுதியும், மார் என்னுஞ்சொல்லுமாகிய மூன்றுமாம்.

ந.—ரஃகானாகிய ஒற்றினை ஈறாகவுடைய சொல்லும், பகரமாகிய இறுதியையுடைய சொல்லும், மார் என்பதை ஈறாகவுடைய சொல் உட்பட மூன்றும் நிரம்பத்தோன்றும் பலரை அறியுஞ்சொற்களாம்.

தெ.—ரகாரம் ஆகிய ஒற்றும், பகாரம் ஆகிய உயிர் மெய் யிறுதியும், மார் என்னுஞ் சொல் உளப்பட இம்மூன்றும் பொருந்தப் பலரறிசொல் தோன்றும் எ-று.

உரையாசிரியர் முன்னிரண்டு சூத்திரங்களிலும் 'னஃகானாகிய ஒற்று ஆடூஉவினை யறிவார்க்குக் கருவியாஞ் சொல்' என்றும், 'ளஃகானாகியவொற்று மகடூஉவினையறிவார்க்குக் கருவியாஞ்

சொல்' என்றும் கூறி, ஊஃகாரெற்றும் ஆடேவறிசொல்லும் ஒன்றாகவும், எஃகாரெற்றும் மகடேஉவறிசொல்லும் ஒன்றாகவும் பொருள் கொண்டிருத்தும், இங்குப் பலாறிசொற்கு ரஃகா ரெற்று முதலியன தோன்றும் என்று கூறுவதற்குக் காரணட்



சூத்திரப்போக்கின்படி பொருள் சொல்லவேண்டுமென்ற கருத் தாகும்.

நச்சினார்க்கினியரும், தெய்வச்சிலையாரும் உரையாசிரியர் கொள்கைப்படி, பல்லோரையறியுஞ் சொல் ரஃகாரெற்று முதலியவற்றை ஈற்றிற்கொண்டசொல் என்றே பொருள்கொள் வதோடு, 'னஃகா ரெற்றே யாடேஉ வறிசொல்' முதலாக, 'அஆ வ என வரூஉ மிறுதி, யப்பான் மூன்றே பலவறி சொல்லே' இறு தியாயுள்ள சூத்திரங்களனைத்திலும் (னஃகாரனை ஈற்றிலுடைய சொல் முதலியவாக ஒரேவகையாய்ப் பொருள் எழுதிச்செல்வா ராயினர். அவ்வாறு கூறுவது, னஃகாரெற்று முதலியவற் றை இருபெயரொட்டின்மேல் வந்த அன்மொழித்தொகையாகக் கொண்டதால் எனின், அற்றன்று; [4]சாரைப்பாம்பு முதலிய பண் புத்தொகையினின்றும் அன்மொழித்தொகை பிறப்பது இயற்கை யின்மையின் என்க.)

நேரத்தோன்றும் என்பதில் 'தோன்றும்' என்பது உரையா சிரியர், தெய்வச்சிலையார் இவ்விருவர்தம் கொள்கைப்படி வினை முற்று. சேனாவரையர், நச்சினார்க்கினியர் இவ்விருவர்தம் கொள் கைப்படி பெயரெச்சம்.

மார் என்பதன் ஈற்றிலும் ரஃகானெற்று இருப்பதால், மார் என்பதைத் தனியாகச் சொல்லியிருப்பதன்பயனைச் சேனவரையரும் நச்சினார்க்கினியரும் 'ஆரேயாயிற் கொண்மார் என்புழி மகரங் காலம்பற்றி வந்ததோ ரெழுத்தாகல்வேண்டும்; உண்மார், வருவார் எனக்காலம்பற்றி வருமெழுத்து முதனிலைக்கேற்றவாற்றான் வேறுபட்டு வருமன்றே; அவ்வாறன்றி உண்மார், வருமார் என வெல்லா முதனிலைமேலும் மகரத்தோடுகூடி வருதலானும், வினைகொண்டு முடிதற்கேற்பதோர் பொருள்வேறுபாடுடைமையானும் ஆரீறன்று வேறெனவே படுமென்பது' என்ற வாக்கியங்களால் விளக்கினர். தெய்வச்சிலையார் 'வினைக்கண் ஏனையபோல முற்றில்லாது எச்சம்போல வருதலானும், பெயர்க்கண் ஆர் ஈறுகிவருமிடத்துப் பன்மையுணர்த்தாத சொற்கள் [1] மார் ஈறுகி வரவேண்டுதலானும் வேறுபடுத்தோதப்பட்டதென்க' என்ற வாக்கியங்களால் விளக்கினர்.

---

1. Cf. தாயார்—தாய்மார், தகப்பனுர்—தகப்பன்மார்.



உண்கும், உண்டும், வருதும் என்பனவற்றுள் மகரவீறு பலரறிசொல்லாகையான், அதனை இச்சூத்திரத்திற்கொள்ளாததென்னை எனின், 'பன்மை யுரைக்குந் தன்மைக் கிளவி, யெண்ணியன் மருங்கிற் றிரிபவை யுளவே' (சொல். 209) என்னுஞ் சூத்திரப்படி 'யானுமென் னெஃகமுஞ் சாறும்' முதலிய உதாரணங்களில் மகரவீறு அஃறிணையையும் குறிப்பதால் என்க. அதனைக்கருதியே 'நேரத்தோன்றும்' என்றது. இதனைச் சேனு

வரையர் 'உண்கும், உண்டும்...இவற்றை நோக்கிதான்றும் பலரறிசொல்லென்றூர்' என்னும் வாக்கியத்தால் விளக்கினர்.

10. இருதிணை மருங்கி னைம்பா லறிய
வீற்றினின் றிசைக்கும் பதினோ ரெழுத்துந்
தோற்றந் தாமே வினையொடு வருமே.

**பொருள்.**—இருதிணைக்கண்ணுள்ள ஐம்பாலையு மறிவிக்கும் முற்கூறிய பதினோரீற்றெழுத்தும் திரிபின்றி வினையோடு வரும் என்பது. இச்சூத்திரத்தால் விதிக்கப்பட்டது அப்பதினோ ரெழுத்தும் வினையொடு வரும் என்பதே.

இச்சூத்திரத்திற் "பதினோரெழுத்து என்று ஆசிரியர் கூறியது பொருந்துமா? 'மார்' என்பது ஓரெழுத்தாகாதே" எனின், பன்மைபற்றி[1] எழுத்து என்றூரென்க. இவ்வாறு கூறுவது எளிதாயிருக்க, நச்சினார்க்கினியர் எழுத்து என்பதற்கு இடைச்சொல் என்று பொருள்கூறிப் 'பதினோரிடைச்சொல்லையும் எழுத்தென்றூர், எழுத்தினாற் சொல்லாதல்பற்றி; இது கருத்தாதல் மாரைக்கிளவி என்றதனாற் பெற்றும்' என்று கூறுகின்றூர். இங்ஙனங்கொள்ளுமிடத்து ன், ள், ர் இவை இடைச்சொலென்பது எங்ஙனம்? இடையியலில், இரண்டாஞ்சூத்திரத்தில் 'வினை செயன் மருங்கிற் காலமொடு வருநவும்' என்பதற்கு உதாரணமாக 'அன், ஆன், அள், ஆள், அர், ஆர் முதலியவற்றையே உரையாசிரியரொடு இவரும் கூறினர்.

---

1. பன்மைபற்றிக் கூறுதலை வடநூலார் 'சத்திரி நியாயம்' என்பர். छत्रिन्यायமாவது—ஒரு கூட்டத்திற் பல ஜனங்கள் குடைபிடித்துப் போகச் சிலர் குடைபிடித்துப் போகாவிடினும் 'छत्रिण: गच्छन्ति' (சத்திரிகள் போகின்றனர்) என்று வழங்குதல்போல்வது; இதற்குத் தமிழில் வழங்கும் உதாரணம், கமுகந்தோட்டம் என்பது

சூத்திரத்தில் ஈற்றினின் றிசைக்கும் பதினோ ரெழுத்தும் என் பது னகரமும் ளகரமும் ரகரமும் மாரும் இறுதியில் நின்று உணர்த்து மென்பதற்கு ஞாபகமென்றும், ஏனையவற்றுக்கு அநுவாதம்[1] என்றும் சேனாவரையர் கூறுகின்றார். அஃதாவது 'னஃகா னொற்றே யாடூஉ வறிசொல்,' 'ளஃகா னொற்றே மகடூஉ வறிசொல்,' 'ரஃகானொற்றும் பகரவிறுதியும், மாரைக் கிளவியும்...' என்னுஞ் சூத்திரங்களில் ன், ள், ர், மார் இவை ஈற்றில் வருவன என்று வெளிப்படையாய்க் குறிக்கப்படவில்லை; அவை ஈற்றிலுள்ளவைதாம் என்பதை 'ஈற்றினின்றிசைக்கும் பதினோரெழுத்தும்' என்பது உணர்த்தும். ஏனைய ப, து, று, டு, அ, ஆ, வ இவை ஏழும் இறுதியிலுள்ளவை என்பது 'பகர விறுதி', 'குன்றிய லுகரத் திறுதி' முதலியவற்றிலுள்ள இறுதி என்ற சொல்லால் வெளிப்படையாகக் கூறப்படுதலின் அநுவாதமாயிற்று. நச்சினார்க்கினியரோ 'னகரம் முதலிய இரண்டற்கும் ஞாபகம், அல்லனவற்றிற்கு அநுவாதம்' என்றார். 'ரஃகானொற்றும் பகரவிறுதியும் மாரைக்கிளவி...' என்னுஞ் சூத்திரத்திற் 'பகரவிறுதி' என்னுந் தொகைமொழியிலிருந்து 'இறுதி' என்னுஞ் சொல்லை ரஃகானொற்றோடும், மாரைக்கிளவியொடும் சேர்த்துப் பொருள்கொண்டதனால் இவ்வாறு கூறலாயினர்.

'தோற்றந்தாமே வினையொடு வருமே' என்றதனால் வினையொடு வருங்கால் திரிபின்றியும் பெயரொடு வருங்கால் திரிபுடனும் திரிபின்றியும் வரும். பெயரொடு வருங்கால் திரிபொடு வருவ

தற்கு உதாரணம் :—பெண்மகன், அலவன், பெருமாள், மக்கள், தாயார் முதலியன.

பா-ம். சே. தா.—'அநுவாத மாத்திர மென்றார்.' இங்கு அநுவாத மாயிற்றென்க' என்றிருப்பின் நலம்.

11. வினையிற் றோன்றும் பாலறி கிளவியும்
பெயரிற் றோன்றும் பாலறி கிளவியும்
மயங்கல் கூடா தம்மர பினவே.

பொருள். உ.—வினையிற் பாலறியப்படும் பொருளும் பெயரினாற் பாலறியப்படும் பொருளும் விராதல் பொருந்தா ; தத்தம் இலக்கணத்தனவே யாகும்.

---

1. அநுவாதம்=முற்கூறியதையே ஒரு காரணம்பற்றிப் பின்னுங் கூறுதல்.





சே.—கூறப்பட்ட பதினோரீற்றவாய் வினைபற்றிவரும் பாலறி சொல்லும், அவன், இவன், உவன் என்பன முதலாகப் பெயர் பற்றிவரும் பாலறிசொல்லும், தம்முட்டொடருங்கால், ஒருபாற் சொல் ஏனைப்பாற்சொல்லொடு மயங்கா ; தம்பாற்சொல்லொடு தொடரும்.

ந.—வினைச்சொல்லான் விளங்கும் பாலறியப்படும் பொருளும், பெயர்ச்சொல்லான் விளங்கும் பாலறியப்படும் பொருளும் ஒன்றோடு ஒன்றை மயங்கச்சொல்லுதல் பொருந்தா ; தத்தம் இலக்கணத்தாலே சொல்லுதலுடைய.

தே.—வினையிற்றோன்றாம் பாலறிசொல்லும், பெயரிற்றோன்றாம் பாலறிசொல்லும் தம்முள் மயங்குதல் பொருந்தா; தத்தம் மரபினையுடையவாதலான் எ-று. ஆதலால் என்பது எஞ்சி நின்றது.

உரையாசிரியர், நச்சினார்க்கினியர் இருவரின் கொள்கைப்படி இச்சூத்திரத்தின் பொருள், வினைச்சொல்லிற் பாலையறிவிக்குஞ் சொல்லான் உணர்த்தப்படும் பொருளும், பெயர்ச்சொல்லிற் பாலையறிவிக்குஞ்சொல்லான் உணர்த்தப்படும் பொருளும் மாறுபடக் கூடா என்பதே. அஃதாவது—வினையிற் பாலறிசொல்லால் ஆண்பொருளோ, பெண்பொருளோ, பலர்பொருளோ, ஒன்றன்பொருளோ, பலவின்பொருளோ உணர்த்தப்பட்டாற் பெயரின் பாலறி சொல்லானும் அப்பொருளே உணர்த்தப்படவேண்டும் என்பது. இவ்வாறுரைப்பின், 'தம்மரபினவே' என்பது பொருந்தாது. ஆண்முதலியபொருள் மற்றைப்பொருளோடு ஒருபோதும் மயங்கா. எப்போதாவது மயங்குதற்கு இடம் இருப்பின் அன்றோ அவை 'தம்மரபின' என்று கூறல்வேண்டும். அன்றியும், 'கிளவி' என்பதற்குச் சொல் என்றநேர் பொருளே அமைந்திருக்க, அதனைவிட்டு ஆகுபெயர்ப்பொருளை ஏன் கொள்ளவேண்டும்?

இச்சூத்திரத்தில் மயங்கல் கூடா, தம்மர பினவே என்ற இரண்டனுள் ஒன்றே போதும் என்று சேனாவரையர் வினாவெழுப்பிச் 'சொல் லில்வழியது உய்த்துணர்வது' என்று விடைகூறினர். இதன்கண் அடங்காத மரபினையும் அடக்கவேண்டி 'தம்மர பினவே' என்பதை யோகவிபாகம்[1] செய்து பயன்கூறி

1. யோகவிபாகம் (योगविभाग:) என்பது ஒரு சூத்திரத்தை இரண்டாகப் பிரிக்கும் நூற்புணர்ப்புவகை.

யிருக்கின்றனர். அஃதாவது மரபியலுட்கூறிய மரபு தவிர, யானை மேய்ப்பானைப் பாகன் என்பதுபோன்ற வேறு மரபுகளும் உள்ளன; அவ்வகை மரபையும் மாறுபடாமற் சொல்லுக என்பது. இம்மதத்தையே நச்சினார்க்கினியரும் கொண்டனர்.

உரையாசிரியரும், நச்சினார்க்கினியரும் "இனி மயங்கல் கூடா எனவே மயக்கமும் உண்டு என்பது சொல்லப்பட்டதாம்" என்றுரைத்து, அதன்பின் விரிவாய் மயக்கத்தின் வகைகளைக் கூறினர். இதன் பயன் யாதெனின் 'மயங்கல் கூடா' என்ற மறையால், அறியாதார் மயங்கிக்கூறுவராகையால், அங்ஙனம் மயங்காது விழிப்புடன் சொல்லவேண்டுமென்றும், மயங்கும்வகை இத்துணையாக நிகழுமென்றும் கற்போர் உணரவேண்டு மென்பதே.

சே.—'ஈண்டுப் பெயரென்றது பொருளை' என்பதன் பொருள்:—இச்சூத்திரத்தில் 'பெயரிற்றோன்றும் பாலறி கிளவியும்' என்னுமிடத்துப் பெயர் என்பதற்குப் பொருள் பெயரைக்குறிக்கும் பெயர்ச்சொல்லன்று; பொருளைக்குறிக்கும் பெயர்ச்சொல்லே என்பது. 'அவன் சொல்லப்பட்டது' என்னுமிடத்து அவன் என்பதற்கு அவன் என்னுஞ் சொல் பொருளாயின், அவன் என்னுஞ்சொல்லி லுள்ள 'ன்' ஆணைக்குறிப்பினும் சொல்லப்பட்டதிலுள்ள 'து' ஒன்றனைக்குறிப்பினும் அச்சொற்றொடர் வழுவாகாது என்க.

ந.—'சொல்லென்றார் அதனான் உணரும் பொருளை' என்றது, சூத்திரத்தில் 'சொல்' என்னும் பொருளுள்ள 'கிளவி' என்பதை மனத்துட்கொண்டு.

## 12. ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவி

ஆண்மை யறிசொற் காகிட னின்றே.

பொருள். உ.—ஆண்மையிற்றிரிந்து பெண்மைநோக்கி நின்ற பெயர்ப்பொருள் ஆண்மகனை யறிவிக்கும் ஈற்றெழுத்தினுற் சொலற்பாட்டிற்கு ஏலாது எ-று. ; ஒழிந்த [1]இரண்டு பெயர்க்கும் ஒக்கும் என்பதாம். 'ஆகிடனின்றே' என்பதனுற் 'பேடி வந்தான்' எனவும் ஆண்பாற்கும் ஏற்கும்.

சே. ந.—உயர்திணைமருங்கிற் பால்பிரிந் திசைக்கும் என்று மேற்கூறப்பட்ட ஆண்மைதிரிந்தபெயர்நிலைக்கிளவி ஆடூஉவறி

1. இரண்டுபெயர் எ-து., உயர்திணைப் பெண்பால் பலர்பாற் பெயர்களை.



சொல்லொடு புணர்தற்குப் பொருந்தும் இடனுடைத்தன்று எ-று.

தெ.—மேல் உயர்திணை மருங்கிற் பால்பிரிந்திசைக்கும் (சொல். 4) என்று ஓதப்பட்ட பேடி என்னும் பெயர்க்கண் நிற்கும் சொல் ஆண்மையறிசொற்கு ஆகும் இடன் இலது எ-று. எனவே பெண்மையறிசொற்கு ஆகும் என்றவாறும். (ஆண்மைதிரிந்த பெயர்நிலைக்கிளவி பெண்மையறிசொற் காகுமென்னது, ஆண்மையறிசொற்கு ஆகுமிடமின்று என எதிர் மறைவாய்பாட்டாற் கூறினமையாற் சிறுபான்மை ஆடூஉவறி சொல்லான் வருவன உளவேற் கொள்க.)

உரையாசிரியர், தெய்வச்சிலையார் இவ்விருவர் கொள்கைப்

படி பேடி வந்தாள், பேடியர் வந்தார் என்று பெரும்பான்மை வரும்; பேடி வந்தான் எனச் சிறுபான்மை வரும். **சேனாவரையர், நச்சினார்க்கினியர்** இவ்விருவர் கொள்கைப்படி பேடி வந்தான் என்பது ஒருபோதும் வாராது. ஆண்மையறிசொற் காகிடனின்றே என்பதால் ஆடூஉவறிசொல் ஒருபோதும் வாராது என்று சூத்திரத்தில் இருந்தபோதிலும், சிறுபான்மை வருமென்று உரையாசிரியர் கூறியது அவர்காலத்து வழக்கையொட்டிப் போலும். தொல்காப்பியருக்கு அவ்வாறான கருத்தில்லை யென்பதே சேனாவரையர் நச்சினார்க்கினியர் இவர்களின் கொள்கை என்று தோன்றுகின்றது.

'இச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின், எய்தியது விலக்குதல் நுதலிற்று' என்றார் **உரையாசிரியர்.** இதன்கருத்து.—5-ம் சூத்திரத்தில் உயர்திணைமருங்கிற் பால்பிரிந்திசைக்கும் எனப் பொதுவாகக் கூறியதனாலும், பேடிக்கு ஆண்மை சிறிது இருப்பதனாலும், 11-ம் சூத்திரப்படி பேடி என்னுஞ்சொல் ஆடூஉ முடியையும் பெறலாமென்பதை இச்சூத்திரம் விலக்குகின்றது என்பதே. இக்கருத்தையுட்கொண்டுதான் **சேனாவரையரும்,** இச்சூத்திரத்தைப் 'பெண்மை சுட்டிய' என்னுஞ்சூத்திரத்தின் பின் வையாது ஈண்டு வைத்தார், இது வழுவற்க என்கின்றதாகலான் என்றது.

**உரையாசிரியர்** பெயர்நிலைக்கிளவி என்பதற்கு முற்சூத்திரத்திற் பெயரிற்றோன்றும் பாலறிகிளவி என்பதற்குப்போல, பெயர்ப்பொருள் என்று பொருள்கொண்டனர்.



**13. செப்பும் வினாவும் வழாஅ லோம்பல்.**

சேப்பின் இலக்கணம். சே.—வினுபொருளை யென்னுது அறிவுறப்பது செப்பெனின் அவ்விலக்கணம் வினவிற்குஞ்செல் லுமாகலான் குன்றக்கூறலாமென்று கருதி, 'வினுபொருளை அறிவுறுத்தலே இலக்கணம்' என்று கொண்டார். அங்ஙனங் கொண்டபின் 'குமரியாடிப்போந்தேன், சோறு தம்மின்' என்ப தும் 'அறியலுறுதலை யுணர்த்தாது ஒன்றனை யறிவுறுத்து நிற்ற லிற் செப்பின்பாற்படும்' என்றுர். ஆகவே அவர்கருத்து, வினு பொருளை யறிவுறப்பது அல்லது வினுப்பொருளை யெதிர் பார்த்து ஒன்றனை அறிவுறப்பது செப்பு என்பதாகும்.

செப்பு எத்தனை வகைப்படும்? உ.—'ஆறுவகைப்படும் :— வினவெதிர்வினுதலும், ஏவுதலும், மறுத்தலும், உற்றதுரைத்த லும், உறுவதுகூறலும், உடம்படுதலும் என.'

சே.—'இரண்டு வகைப்படும் :—[1]செவ்வனிறையும், [2]இறை பயப்பதும் என.'

ந.—'செவ்வனிறையும் இறைபயப்பதவுமென இருவகைத்து. அவற்றுள், இறைபயப்பனதாம் வினுவெதிர்வினுதலும், ஏவுதலும், மறுத்தலும், உற்றதுரைத்தலும், உறுவதுகூறலும், உடம்படுதலும், சொற்ருெகுத்திறுத்தலும், சொல்லாதிறுத்த லும் என எண்வகை'.

தே.—'அச்செப்பு நான்கு வகைப்படும். துணிந்துகூறல், கூறிட்டுமொழிதல், வினவி விடுத்தல், வாய் வாளாதிருத்தல் என. துணிந்து கூறலாவது, தோன்றியது கெடுமோ என்றவழி கெடும் என்றல். கூறிட்டுமொழிதலாவது, செத்தவன் பிறப் பானே என்றவழி பற்றறத் துறந்தானே, பிறனே என்றல். வினவி விடுத்தல் என்பது, முட்டை மூத்ததோ, பனை மூத்ததோ என்ற வழி எம்முட்டைக்கு எப்பனை என்றல். வாய் வாளாமையாவது, ஆகாயப்பூ நன்றோ தீதோ என்றுர்க்கு உரையாடாமை.'

உரையாசிரியர் 'செப்பு ஆறுவகைப்படும்' என்று சொல்

லுவது பொருந்தாது என்பதற்குச் சேனவரையர் இரண்டு காரணங்கள் கூறினர். (1) உயிர் எத்தன்மைத்து என்றவழி

1. செவ்வனிறை=நேரான விடை.

2. இறைபயப்பது=நேரான விடையாகாமற் பொருளை யூன்றி நோக்க விடையாக் இருப்பது.



உணர்தற்றன்மைத்தென்றன் முதலாயின, மேற்கூறிய ஆறுவகையிலும் அடங்கா. (2) 'மறுத்தலும், உடம்படுதலும் ஒருவன் ஏவ வருமேயன்றி, வினவ வாரா.' எவ்வாறெனின் 'நீ செய்' என்று ஒருவன் ஏவ, மற்றொருவன் 'செய்கின்றேன்' என்பது உடம்படுதலும், 'செய்யேன்' என்பது மறுத்தலு மாகுமேயன்றி, 'நீ செய்கிறாயா ?' என்று ஒருவன் வினவ, மற்றொருவன் 'செய்கின்றேன்' என்று உடம்பாடாகவேனும் 'செய்யேன்' என்று எதிர்மறையாகவேனும் விடையிறுப்பினும், அவை உடம்படுதலும் மறுத்தலும் ஆகா. எங்ஙனமெனில், 'நீ செய்' என்று ஏவும்பொழுது ஏவுகின்றவனது எண்ணம் மற்றவன் செய்யவேண்டுமென்பதே யாதலின், அப்பொழுது 'செய்கின்றேன்' என்பது சொல்லுகின்றவனது எண்ணத்திற்கு உடம்படுதலும் 'செய்யேன்' என்பது அவன் எண்ணத்தை மறுத்தலும் ஆகும். 'நீ போகிறாயா ?' என்று வினவும்போது வினவுவோனின் எண்ணம் மற்றவன் போகவேண்டுமென்றேனும் போகவேண்டாமென்றேனும் திண்ணமாய் அறிய இயலாது. அதற்கு விடையாக, 'போகின்றேன்' என்றுவது 'போகேன்' என்றுவது கூறுவது வினவப்பட்டான் தன்கருத்தை

வெளிப்படுத்துவதேயன்றி வினவுவோனது கருத்தை உடம்பட்டேனும் மறுத்தேனும் கூறியதாகா தென்க.

நச்சினார்க்கினியர், சேனாவரையர் சொன்ன செவ்வனிறை, இறைபயப்பது என்ற இரண்டனையும் உடன்பட்டுப் பின்னர்க் கூறிய இறைபயப்பது எண்வகைப்படும் என்றார். அவ்வெண் வகையாவன, உரையாசிரியர் கூறியுள்ள அறுவகையும், சொற்றொகுத்திறுத்தல், சொல்லாதிறுத்தல் என்பனவுமாம். இங்குச் சேனாவரையர் 'மறுத்தலும், உடம்படுதலும் செப்பில் அடங்கா' என்று கூறியிருப்பதை மறக்காது, அவற்றை இறைபயப்பதன் பிரிவாகக் கொண்டார். இங்ஙனம் உரையாசிரியரும் நச்சினார்க்கினியருங் கொண்டது வினவிற்கு விடையாகவரும் எதிர்மறைக்கும், ஏவுதலுக்கு விடையாகவரும் எதிர்மறைக்குமுள்ள நுட்பமான வேறுபாட்டைக் கருதாமையானாகும். சொல்லாதிறுத்தல் என்பதற்கு, 'குமரியாடிப் போந்தேன், ஒருபிடி சோறு தம்மின்' என்று நச்சினார்க்கினியர் 15-வது சூத்திரத்தில் உதாரணம் கூறினர். செப்பின் இலக்கணம் தம்மதத்தில் இன்னதென்று கூறவில்லை; சேனாவரையர் மதமே இவர் மதம் போலும்.



தெய்வச்சிலையார் கூறிய துணிந்துகூறல் சேனாவரையர் கூறும் செவ்வனிறையில் அடங்கும். ஏனைய மூன்றும் கேட்ட வினா நேரிதன்று என்பதை உணர்த்துமேயன்றி நேர்விடையாகா என்றுணர்க.

15-வது சூத்திரத்தில் உரையாசிரியர் வினவழீஇயின விடத்து அமையாது என்றார். சேனவரையர் 'யாதென வரூஉம் வினவின் கிளவி...' (சொல். 32), 'வன்புறவரூஉம் வினவுடை வினைச்சொல்...' (சொல். 244), இவ்விரண்டு சூத்திரங்களானும் வினவழு அமைக்கப்படுவதனால் உரையாசிரியர் தம் உரை போலியுரையென்றார். நச்சினார்க்கினியர் "செப்பும் வினவும் வழாஅ லோம்பல்' என்னும் இச்சூத்திரத்தின்கண் சேனவரையரைப்போல, 'செவ்வனிறையும் அறியான் வினவும், ஐயவினவும், வழாநிலையாதலின் வழாஅலோம்பல் என்பதனாற் கொள்க. ஏனைய வழுவமைப்புழிக் காண்க' என்று கூறி, 15-ம் சூத்திரவுரையின் இறுதியில் 'வினவழீஇயின இடத்து அமையாதாம்' என்று மாறுபடக்கூறினர். சேனவரையர் காட்டிய 'யாதென வரூஉம் வினவின் கிளவி...' 'வன்புற வரூஉம் வினவுடை வினைச்சொல...' என்றவற்றுள் முதற் சூத்திரத்தான் வழுவமைதி கூறப்படவில்லை யென்று நச்சினார்க்கினியர் சேனவரையருக்கு மாறுபாடாகக்கருதினும், இரண்டாவது சூத்திரத்துக்குச் சேனவரையர்போலவே பொருள்கொண்டு அவர் கொடுத்த உதாரணமே கூறியுள்ளார். அஃதாவது ஒருவன் 'கதத்தானாக களியானாக மயங்கி இன்னாங்கு உரைத்துப் பின் தெருண்டவழி, அவ் வின்னாங்கு உரைக்கப் பட்டான் 'நீ என்னை வைதாய்' என்றக்கால், 'யான் வைதேனோ?' எனத் தான் வையாமையை வலியுறுத்துதற்குக் கூறியதுதானே, அப்பொழுது வைதேன் நோகாதே என நேர்ந்தமைபடவும் நிற்கும் என்று' என்பது. ஆதலால், வினவழுவமைதி கொள்ளத் தக்கதே யென்க.

பா-ம். சே. தா.—'வினவாவுணர்ந்து தான் குறித்த பொருளை.' சே. சை.—'வினவாவுணர்ந்து வினைய பொருளையன்றித் தான்

குறித்த பொருளே.' பின் பாடம் தெளிவாயுள்ளது. சே. தா.—'மறுத்தலும் உடம்படுதலும் ஏவப்பட்டார் கண்ணவாகலானும்.'



சே. சை.—'மறுத்தலும் உடம்படுதலும் வினவப்பட்டார் கண்ணன்றி ஏவப்பட்டார் கண்ணவாகலானும்.' பின் பாடம் சிறக்கும்.

14. வினவுஞ் செப்பே வினவெதிர் வரினே.

பா-ம். சே. சை.—'உண்பலென்பதும் கருத்துப் பொருளாகலின்.' சே. தா.—'உண்பலென்பது கருத்துப்பொருளாகலின்.' முதற்பாடத்துள்ள உம்மைக்குப் பொருள் விளங்காமையின் பின் பாடமே பொருந்தும்.

15. செப்பே வழீஇயினும் வரைநிலை யின்றே
யப்பொருள் புணர்ந்த கிளவி யான.

இங்கே 'அப்பொருள்' என்பதற்கு வினப்பொருள் என்று பொருள். 'அ' என்னுஞ் சுட்டு முன்சூத்திரத்து 'வினவைக்' குறிக்கின்றது.

பா-ம். சே. தா.—'பொழுதாயிற்றென்றும், இவை செவ்வனிறையல்லவேனும்.' சே. சை.—'பொழுதாயிற்றென்றும் வரும், இவை செவ்வனிறையல்லவேனும்.' பின் பாடமே பொருத்தமானது.

16. செப்பினும் வினவினுஞ் சினைமுதற் கிளவிக்
கப்பொரு ளாகு முறழ்துணைப் பொருளே.[1]

பொருள்.—செப்பின்கண்ணும் வினவின்கண்ணும் மாறுபாடும் ஒப்புமையுங் கூறுமிடத்துச் சினைக்கிளவிக்குச் சினைக்கிளவியையும் முதற்கிளவிக்கு முதற்கிளவியையுங் கொள்ளவேண்டு

மென்பது.

உ.—'துணை' யென்றதனான் எண்ணுமிடத்தும் இனமொத்தனவே யெண்ணுக; முத்தும், மணியும், பொன்னும் என.

சே. ந.—தன்னினமுடித்தலென்பதனாற் பொன்னுந் துகிரு முத்து மணியு மென வெண்ணுங்காலும் இனமாயபொருளே எண்ணப்படுமென்பது கொள்க.

---

1. தெய்வச்சிலையார் உரைப்புத்தகத்தின் அடிக்குறிப்பில் தெய்வச்சிலையார் இச் சூத்திரத்துக்குக் கூறிய உரை 'மற்றையோர் உரைகளினின்றும் முற்றும் வேறுபட்டது' என்று காணப்படுகின்றது. ஆழ்ந்து நோக்கின் அவர் உரை ஏனையோர் உரையினின்றும் வேறுபட்டதன்று: ஆனல் இம்மகள்கண் நல்லவோ, இக்கயல்நல்லவோ என்ற உதாரணத்தை இச்சூத்திரத்தில் உரையாசிரியர் கொண்டனர்; அவர் கொண்டிலர்.



17. தகுதியும் வழக்குந் தழீஇயின வொழுகும்
பகுதிக் கிளவி வரைநிலை யிலவே.

பொருள்.—தகுதிபற்றியும் வழக்குப்பற்றியும் நடக்கும் இலக்கணத்திற் பக்கச்சொற் கடியப்படா என்பதே. இப்பொருளையே உரையாசிரியர், சேனவரையர், நச்சினர்க்கினியர் மூவரும் கூறினர். ஆனல் தகுதியென்பதன் பொருளில் உரையாசிரியர் கொள்கை வேறு: சேனவரையர் கொள்கை வேறு. நச்சினர்க்கினியர், சேனவரையர் கொள்கையைத் தழுவினர்.

தகுதி. உ.—தகுதியென்பது மூன்றுவகைப்படும். மங்கல

மரபினாற் கூறுதலும், இடக்கரடக்கிக்கூறுதலும், குழூஉவின் வந்த குறிநிலை வழக்கும் என. செத்தாரைத் துஞ்சினார் என்றலும், சுடுகாட்டை நன்காடு என்றலும், மங்கலமரபினாற்கூறுதல். இடக்கரடக்கிக்கூறுதல் வருமாறு :—கண்கழீஇவருதும்...பொறையுயிர்த்தார் எனவும் வரும். இனி, குழூஉவின் வந்த குறிநிலை வழக்கு :—பொற்கொல்லர் பொன்னைப் பறி என்றும், வண்ணக்கர் காணத்தை நீலம் என்றும் வரும்.

சே.—தகுதியென்பது அப்பொருட்குரியசொல்லாற் சொல்லுதல் நீர்மையன்றென்று அது களைந்து தக்கதோர் வாய்பாட்டாற் கூறுதல். அது செத்தாரைத் துஞ்சினாரென்றலும்... கெட்டதனைப் பெருகிற்றென்றலு மென இத்தொடக்கத்தன.

இங்குச் சேனாவரையர் மங்கலமரபினாற்கூறுதலைமட்டும் ஏற்றுக்கொண்டு இடக்கரடக்கிக் கூறுதலும், குழூஉவின்வந்த குறிநிலை வழக்கும் உரையாசிரியர் சொல்வது பொருத்தமில்லை யெனக் கூறி, அதற்குக் காரணம் "குழூஉவின்வந்த குறிநிலை வழக்குச் சான்றோர் வழக்கின் கண்ணும் அவர் செய்யுட்கண்ணும் வாராமையின் அமைக்கப்படாவாகலானும், இடக்கரடக்கு 'அவையல் கிளவி மறைத்தனர் கிளத்தல்' (சொல். 442) எனவும், 'மறைக்குங் காலை மரீஇய தொராஅல்' (சொல். 443) எனவும் முன்னரமைக்கப்படுதலானும் அவர்க் கது கருத்தன்றென்பது" என்று கூறுகின்றார். குழூஉவின்வந்த குறிநிலை வழக்குச் சான்றோர்செய்யுட்கண் காணப்படாவிடினும், அவர்தம் வழக்குக்கண் வாரா என்று கொள்வதற்கு இடமின்மையான் சேனா

4

வரையர் சொல்லுவது பொருந்துமா? ஓ. ஏ. உரைகாரர் அதனை வழக்கின்கண் கொண்டனர். இடக்கரடக்கிக்கூறுதலைப்பற்றி 'அவையல்கிளவி...' என்னுஞ் சூத்திரத்திற் கூறினாராயினும், இச்சூத்திரத்திற் கூறியுள்ள பொருளுக்கும் அச்சூத்திரத்திற் கூறியுள்ள பொருளுக்கும் சிறிது வேறுபாடுளது. 'அவையல்கிளவி...' என்னுஞ் சூத்திரத்தில் அவையிற் கூறத்தகாத சொற்களைக் கூறக்கூடாது என்பது சிறப்புப்பகுதி; இச்சூத்திரத்திலோ அச்சொற்களுக்காகக் கூறுந் தகுதிச்சொற்கள் தள்ளத்தக்கன வல்ல என்பது சிறப்புப்பகுதி. 'அவையல்கிளவி' என்னுமிடத்து மறைத்தலைச் சிறப்புப்பகுதியாகக் கொள்ளாக்கால் **மறைத்தல், வேறென்று கிளத்தல்** என இரண்டு விதேயங்கள் கொள்ள வேண்டிவரும். அது வாக்கியபேதமென்னுங் குற்றத்திற்கு இடனாம். இனி இச்சூத்திரத்தானே அவையல்கிளவியைக் கிளக்க வேண்டுமுறை பெறப்படுதலான் அவையல்கிளவி என்ற சூத்திரம் வேண்டாபிற எனின்,—செத்தாரென்னும் அமங்கலச்சொல்லும் இலக்கணமாகக்கொண்டு வழங்கப்படுதல்போல அவையல்கிளவி தகுதிச்சொல்லான் வழங்கப்படுவதன்றி மறைக்கப்படாமலே வழங்குவதும் இலக்கணமாய்விடுமாதலால் அதனை விலக்குதற்கு அவையல்கிளவி யென்ற சூத்திரமும் வேண்டுமென்க.

**வழக்கு.** உ.—வழக்காறு இருவகைப்படும், இலக்கண வழக்கும், இலக்கணத்தோடுபொருந்திய மரூஉவழக்கும் என. இல்முன் என்பதனை முன்றில் என்று தலைதடுமாறச் சொல்லுதல் இலக்கணத்தோடுபொருந்திய மரூஉ.வழக்கு.

சே.—வழக்கென்பது காரணமின்றி வழங்கற்பாட்டைபற்றி வருவது. பண்புகொள்பெயராயினும் பண்பு குறியாது சாதிப்பெயராய் வெள்யாடு, வெண்களமா, கருங்களமா என வருவன

வும், குடத்துள்ளும் பிறகலத்துள்ளு மிருந்த நீரைச் சிறிதென்றது சிலவென்றலும், அடுப்பின்கீழ்ப் புடையடுப்பை மீயடுப்பென்றலும், பிறவும் வழக்காறும்.

இங்குச் சேனாவரையர் இலக்கணவழக்கைமட்டும் உடன்பட்டு மரூஉமுடிவு எழுத்ததிகாரத்துட் கூறப்பட்டமையான் இச்சூத்திரத்துக்கு விஷயமாக உரையாசிரியர் உரைத்தது பொருத்தமில்லையெனக் கருதினர். மரூஉவைப்பற்றி எழுத்ததிகாரத்தில் இரண்டு சூத்திரங்கள் உள. அவையாவன :—'முன்



னென் கிளவி முன்னர்த் தோன்று, மில்லென் கிளவிமிசை றகர மொற்றல், தொல்லியன் மருங்கின் மரீஇய மரபே' (எழுத். 355) என்பதும், 'கிளந்த வல்ல செய்யுளுட் டிரிநவும்—வழங்கியன் மருங்கின் மருவொடு திரிநவும்—விளம்பிய வியற்கையின் வேறுபடத் தோன்றின்—வழங்கியன் மருங்கி னுணர்ந்தன ரொழுக்க—னன்மதி நாட்டத் தென்மனார் புலவர்' (எழுத். 483) என்பதுமாம். முற்சூத்திரத்தில் 'முன்' என்னுஞ் சொற்கு முன்னர் 'இல்' என்னுஞ் சொல் வரின், இல்லுக்குமேல் றகர வொற்றுத் தோன்றுமென்பதே (முன் + இல் = முன்றில்) உணர்த்தப்பட்டுளது. இல்லும் முன்னும் தொகையாகுங்கால் தலை தடுமாறி 'முன்றில்' என ஆகும் என்று அச்சூத்திரத்திற் சொல்லப்படவில்லை. 'கிளந்த வல்ல செய்யுளுட் டிரிநவும்...' என்னுஞ் சூத்திரத்தில், எழுத்ததிகாரத்தில் முக்கியமாய்க் கூறப்பட்ட புணர்ச்சியிற் சொல்லப்படா தவற்றை ஆராய்ந்துகொள்ளல் வேண்டும் என்பதே கூறியுள்ளது. இல்லும் முன்னும் தொகைமொழியாகுங்கால் உண்டாம் மாறுதல் எழுத்ததிகாரத்

துக்கு விஷயம் அன்று, சொல்லதிகாரத்துக்குத்தான் விஷயம். எச்சவியலில் தொகையைப்பற்றிச் சொல்லுமிடத்தோ சொற்கள் தடுமாறி வருவதைப்பற்றிச் சொல்லவில்லை. ஆகையால் உரையாசிரியர் இலக்கணத்தொடு பொருந்தின மரூஉவழக்கை இச்சூத்திரத்தின்கண் அடக்கியது பொருத்தமென்றே தோன்றுகிறது. ஆனால் 'இனி, சோழநாடு என்பதனைச் சோணாடு என்பது மரூஉ வழக்கு. வழங்காறு இத்துணையென்பதில்லை. சிதைந்தும், சிதையாதும் பொருந்தி நடப்பனவெல்லாம் அவையெனப்படும் என்றலும் ஒன்று' என்ற சொற்றொடர் இளம்பூரணத்தில் உளது. இது முற்கூறப்பட்ட 'கிளந்த வல்ல செய்யுளுட் டிரிநவும்...' என்ற சூத்திரத்துக்கு விஷயமாதலால் இங்குச் சொல்லியிருப்பது பொருத்தமில்லை. ஆனால் மாணக்கன் படிக்கும்போது இலக்கணத்தொடு பொருந்திய மரூஉவழக்கைத் தவிர வேறு மரூஉவழக்கு உண்டுகொல் என்று ஐயுற, ஆசிரியன் மேற் சொன்ன வாக்கியத்தைச் சொல்லியிருக்கலாம். அதனையும் ஏட்டில் மாணவன் எழுத, பின்னர் அதுவும் மூலத்தோடு சேர்ந்திருக்கவேண்டுமென்பது, எனது துணிபு.



சேனாவரையத்தில், 'கருமை முதலாயின ஒரு நிகரவன்மையிற் காக்கையொடு சார்த்திக் களம்பழத்தை விதந்த துணையல்லது...உரையாசிரியர் பிறர்மதமுணர்த்திய கூறினாரென்பது' என்ற வாக்கியங்கள் உள. இவ்விஷயத்தை உரையாசிரியர் யாண்டுக் கூறினர் என்பது விளங்கவில்லை.

தெய்வச்சிலையார் மங்கலமரபையும் இடக்கரடக்கலையும்

'அவையல் கிளவி மறைத்தனர் கிளத்தல்' என்னுஞ் சூத்திரத்துள் அடக்கி, இச்சூத்திரத்திற்கு உரையாசிரியர், சேனவரையர் இவ்விருவர் கூறும் பொருளினின்று மாறுபட்ட பொருளைக் கூறுகின்றனர். அஃதாவது சினைமுதலாகிய பொருள்களை அவ்வப் பொருளோடு உறழ்தலேயன்றித் தகுதியையும் வழக்கினையுந் தழுவியவாய் நடக்கும் ஒரு கூற்றுச்சொல் விலக்கும் நிலைமையில என்று. இவ்வாறு கூறியதற்குக் காரணம் மங்கலமரபு முதலியவற்றைக் குறிப்பெச்சத்துள் இவர் அடக்கியதேயாகும்.

**பகுதிக்கிளவி.** என்பதற்குப் பக்கச்சொல் என்று உரையாசிரியர் முதலாய மூவரும் பொருள்கொண்டனர். பகுதி என்பது சார்பு, பாகம் என்னும் பொருளதாதலால், சொல் தனக்கு ஆற்றலாகவுள்ள பொருளை நேரே காட்டாது சார்பானபொருளைக் காட்டுவது என்னலாம். துஞ்சினார், நன்காடு என்பவை முறையே தூங்கினார், நல்லநாடு என்னும் பொருளைச் சொல்லாற்றலாற் குறிப்பினும், வழக்கில், செத்தார், சுடுநாடு என்று சார்புபொருளைக் கொள்ளுவதும், வெள்யாடு, [1]வெண்களமர் [2]கருங்களமர் முதலியவைகளில் வெண்மை, கருமை முதலியன ஆற்றலாலுள்ள தம்பொருளைக்குறிக்காது நிற்க, யாடு, களமர் என்பவை உரியபொருளைக் குறிப்பதும் காண்க. தெய்வச்சிலையார் பகுதிக்கிளவி என்பதற்கு ஒருகூற்றுச்சொல் என்று பொருள் உரைத்தனர்.

**18.** இனச்சுட் டில்லாப் பண்புகோள் பெயர்க்கொடை
வழக்கா றல்ல செய்யு ளாறே.

**பொருள்.**—இனப்பொருளைச் சுட்டுதலின்றிப் பண்படுத்து

வழங்கப்படும் பெயர் வழக்குநெறியல்ல; செய்யுணெறி.

இச்சூத்திரத்தில் "வழக்காறல்ல என்பதனை 'வழக்காற்றின் அல்ல' என ஐந்தாமுருபு விரித்து, 'அல்ல' என்பதனைப்

1. வெண்களமர் = வேளாளர். 2. கருங்களமர் = புலையர், ஓ. ஏ.



பெயர்ப்படுத்துக்கூறும்; கூறவே, வழக்கிற்கும் இனமில் பண்புகொள்பெயர்கள் உள என்பது போந்ததாம்." என்று உரையாசிரியர் பக்ஷாந்தரங்கூறி, அதற்கு உதாரணமாகப் 'பெருங்கொற்றன், பெருஞ்சாத்தன்' என்பவற்றைக் கூறினர். இதனைச் சேனாவரையர் 'பெருங்கொற்றன், பெருஞ்சாத்தன் என இல் குணமடுத்து வழக்கின்கண்ணும் இனஞ்சுட்டாது வருதலின்... அதனால் விசேடிக்கற்பாலது விசேடியாது நின்றதன்றாகலின் ஈண்டைக்கெய்தா' என்னும் வாக்கியத்தால் மறுத்தனர்.

'விசேடிக்கற்பாலது விசேடியாது நின்றதன்று' என்பதன் கருத்து :—வெண்டாமரை என்னுமிடத்து வெண்மை என்ற பண்பு தாமரை என்ற பொருளை வெண்மையில்லாத தாமரையினின்றும் நீக்கி வெண்மைக்குணமுள்ள தாமரையை விசேடித்தது. செஞ்ஞாயிறு என்னுமிடத்து ஞாயிறு பலவின்மையான், செம்மை யென்னும் குணம் ஞாயிற்றினிடத்தில் இருப்பினும், வேறு ஞாயிற்றினின்றும் அதனை விலக்கவில்லை. ஆதலால் விசேடிக்கற்பாலதாகிய செம்மை யென்னும் குணம் செஞ்ஞாயிறு என்னுமிடத்தில் விசேடியாது நின்றது. பெருங்கொற்றன் என்பது இயற்பெயராகையான் பெருமை யென்னும் குணம் கொற்றனிடம் இல்லாமையின் பெருமை என்பது விசேடிக்கற்பாலதன்று. ஆகையால் பெருங்கொற்றன் என்னுமிடத்து விசேடிக்கற்பாலது

விசேடியாது நின்றது என்று கூற இயலாது என்பதாம்.

‘பெருவண்ணான், பெருங்கொல்லன் என வழக்கின்கண் இனஞ்சுட்டாது வந்ததாலெனின் பண்பாவது தமக்குள்ளதோரியல்பு. ஈண்டு அப்பெருமையியல்பன்மையான், அஃது உயர்த்துச் சொல்லுதற்கண் வந்ததென்க’ என்றார் தெய்வச்சிலையார்.

22. ஆக்கக் கிளவி காரண மின்றியும்
போக்கின் றென்ப வழக்கி னுள்ளே.

இங்கு உரையாசிரியர் ‘வாளாதோதுஞ் சூத்திரமெல்லாம் வழக்கே நோக்கும்; செய்யுட்காயிற் கிளந்தே யோதும்; அதனால், வழக்கினுள் என வேண்டா; அம்மிகுதியான் ஆக்கமும் காரணமும் இன்றிவருதலும், காரணம் கொடுத்து ஆக்கமின்றி வருதலும் என இரண்டுங் கொள்ளப்படும்’ என்றார். சேனாவரைய



ரும் நச்சினார்க்கினியரும் ‘வழக்கினுட்காரணமின்றியும் வருமெனவே, செய்யுளுட் காரணம்பெற்றே வருமென்பதாம்’ என்று கூறுகின்றனர்.

போக்கின்று என்பதற்கு உரையாசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் மூவரும் குற்றமின்று என்று பொருள் உரைத்தனர். தெய்வச்சிலையார் ‘போகுதலின்று எ-று. எனவே வரும் என்று பொருளாயிற்று’ என்றனர்.

23. பான்மயக் குற்ற வையக் கிளவி

**பொருள்.** உ.— இச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின் உயர்திணைப் பால் ஐயத்துக்கட் சொல் நிகழுமா றுணர்த்துதல் நுதலிற்று. திணையறிந்து பாலையந்தோன்றிய வதனை அத்திணைப் பன்மைமேல்வைத்துச் சொல்லுக எ-று. உ-ம். ஒருவன் கொல் லோ, ஒருத்தி கொல்லோ தோன்றாநின்றார்.

**சே.**—திணை துணிந்து பா றுணியாத ஐயப்பொருளை அவ் வத்திணைப் பன்மையாற் கூறுக. உ-ம். ஆண்மகன் கொல்லோ, பெண்டாட்டி கொல்லோ, இஃதோ தோன்றுவார்; ஒன்றோ பலவோ செய்புக்கன. (திணைவயினென்னாது தானறிபொருள் வயினெனப் பொதுப்படக்கூறியவதனான், ஒருவன்கொல்லோ பலர்கொல்லோ கறவை யுய்த்த கள்வர் என்றும், ஒருத்தி கொல்லோ பலர் கொல்லோ இக்குருக்கத்தி நீழல் வண்டலயர்ந் தார் என்றும் திணையோடு ஆண்மை பெண்மை துணிந்த பன்மை யொருமைப் பாலையமுங் கொள்ளப்படும்.)

**ந.**—திணை துணிந்து பால்துணியாது நின்ற ஐயப்பொருளைத் தானறிந்த உயர்திணைப்பொருளிடத்துப் பன்மையாற் கூறுக. உ-ம். ஆண்மகன் கொல்லோ பெண்டாட்டி கொல்லோ தோன்றா நின்றவர். (திணைவயினென்னாது...ஆண்மை பெண்மை துணிந்த பன்மையொருமைப் பாலையமுங் கொள்ளப்படும்.)

**தெ.**—தானறிந்த பொருட்கட் பான்மயக்குற்ற ஐயப் பொருண்மையைப் பன்மையாற் கூறுக எ-று. (தானறிபொருள் என்றமையால் திணையறிந்து பால் அறியாதவழி என்பது பெறப் பட்டது.)

உரையாசிரியர்கொள்கைப்படி பான்மயக்குற்ற என்பதற்கு ஆண்பால் பெண்பால் மயக்குற்ற என்பது பொருள் ; சேனாவரையர், தெய்வச்சிலையார் இவ்விருவர் கொள்கைப்படி ஆண்பால், பெண்பால், பலர்பால், மயக்குற்ற: ஒன்றன்பால், பலவின்பால் மயக்குற்ற என்பது பொருள் ; நச்சினார்க்கினியர் கொள்கைப்படி ஆண்பால், பெண்பால், பலர்பால் மயக்குற்ற என்பதே. இங்குப் பான்மயக்குற்ற என்பதற்கு உயர்திணைப்பால் மயக்குற்ற என்ற பொருள் கொண்டதற்கு உரையாசிரியரும், நச்சினார்க்கினியரும் காரணங் கூறிற்றிலர். பின்வருஞ் சூத்திரத்தில் அஃறிணைப் பிரிப்பினும் என்றிருப்பதால் இங்கு அப்பொருள் கொண்டனர்போலும். சேனாவரையர் 'ஒன்றோ பலவோ செய்புக்கன' என்னும் உதாரணம் பின்கூறுஞ் சூத்திரத்துக்குப் பொருந்தாது என்று கருதி, பான்மயக்குற்ற என்பதற்கு ஒன்றன்பால், பலவின்பால் மயக்குற்ற என்றும் பொருள்கொண்டனர்.

சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் ஆண்பால், பெண்பால் ஐயத்தோடு பலர்பால் ஐயத்தையுங் கொள்வதற்காகத் 'திணைவயினென்றது தானறிபொருள்வயினெனப் பொதுப்படக்கூறினார்' என்று கூறினர். சூத்திரத்திலுள்ள 'பான்மயக்குற்ற' என்பதனாலேயே 'ஆண்பால், பெண்பால்,' 'ஆண்பால், பலர்பால்,' 'பெண்பால், பலர்பால்' என்ற மூவகை ஐயத்தையுங் கொள்ளலாமென்று தோன்றுகிறது.

இங்குப் 'பன்மைகூறல்' என்பதற்குப் 'பன்மைவிகுதி' கூற வேண்டும்' என்பது பொருளன்று. பன்மைச் சொல்லால் வழங்க வேண்டும் என்பதே பொருளாம்.

24. உருபென மொழியினு மஃறிணைப் பிரிப்பினு
மிருவீற்று முரித்தே சுட்டுங் காலை.

பொருள். உ.—திணையையம் தோன்றியவழி ஒரு வடிவு சொல்லக் கருதினும், அஃறிணையை ஒன்று பல எனப் பிரித்துச் சொல்லினும் மேலடுத்தபோலப் பொதுவினானே சொல்லுக எ-று.

சே.—உருபெனச் சொல்லுமிடத்தும், ஒருமையும் பன்மையு மாகப் பிரிக்கப்படும் அஃறிணைப்பொதுச்சொற்கண்ணும், இவ் விருகூற்றினும் ஐயப்புலப்பொதுச்சொல்லாத லுரித்து.

ந.—திணையையத்துக்கண்ணும் அஃறிணைப் பாலையத்துக் கண்ணுங் கூறும் மரபு கருதுமிடத்துத் திணையையத்துக்கண் உரு



வெனச்சொல்லுமிடத்தும், ஒருமையும் பன்மையுமாகப் பிரிக்கப் படும் அஃறிணையியற்பெயராகிய பொதுச்சொற்கண்ணும் ஐயத் தைப் புலப்படுத்தும் பொதுவாகிய தன்மை உரித்து.

தெ.—உயர்திணை அஃறிணை யென்னும் இரண்டு வேறுபாட் டினையுஞ் சுட்டி ஐயப்படுங்காலத்து, உருபெனச் சொல்லினு முரித்து, அஃறிணையொருமையாற் கூறலுமுரித்து அப்பொருள் எ-று. உ-ம். குற்றியோ மகனோ என ஐயுற்றவழி, குற்றியோ மகனோ தோன்றுகின்ற உருபு, தோன்றுகின்ற அது, என்க.

தெய்வச்சிலையார் இருவீற்றும்[1] என்பதற்கு, 'உயர்திணையஃ றிணை யென்னும் இரண்டு வேறுபாட்டினையும்' என்று பொருள் கொண்டு அதனைச் 'சுட்டுங்காலை' என்பதற்குச் செயப்படு பொரு ளாகவும், 'அஃறிணைப் பிரிப்பு' என்பதற்கு அஃறிணை யொரு மைச் சொல்லாகிய 'அது' என்று பொருளென்றுங்கொண்டு

திணையைத்தின்கண்ணே உருபு அல்லது அது என்று கூறவேண்டும் என்கிறார். அது குற்றியோ மகனோ என்ற சொற்றொடர் வழக்கிற் பயில்வது ஈண்டுக் கருதத்தக்கது.

'உருபென மொழியினும்' என்பதனால் திணையையமே கொண்டனர் உரையாசிரியர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார் இம்மூவரும். என்னையெனின், குற்றி கொல்லோ மகன் கொல்லோ தோன்றுகின்ற உரு என்னுமிடத்து உரு என்பது அஃறிணையைக்குறித்து நிற்க, மகன் கொல்லோ என்ற விடத்து உயர்திணைச்சொல்லாகிய மகன் என்பதை வழங்குவது வழுவென்று தோன்ற, வழுவன்று என்று இச்சூத்திரம் உணர்த்துகின்றது என்பதே. சேனாவரையர் திணையையத்தோடு ஆண்பால் பெண்பால் ஐயமும் ஒன்றன்பால் பலவின்பாலையமுங் கொண்டனர். ஓர் உருவைப் பார்த்து, அது 'ஆள்' என்று அறிந்தபின்னரே ஆணோ பெண்ணோ வென ஐயம் தோன்றுவது இயற்கை. ஆதலால் ஆண்மகன் கொல்லோ பெண்டாட்டி கொல்லோ இதோ தோன்றுகிற ஆள் என்று கூறுவது நேரிதே யன்றி, ஆண்மகன் கொல்லோ பெண்டாட்டி கொல்லோ தோன்றுகின்ற உரு என்பது நேரிதன்று. ஒன்றன்பால் பலவின்பாலையத்தின் தகுதியன்மையும் பின்னர்க்கூறும் காரணத்தான் விளங்கும்.

---

1. வீறு = வேறுபாடு.

'அஃறிணைப் பிரிப்பினும்' என்பதற்கு உரையாசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் மூவரும் 'ஒன்றோ பலவோ செய்புக்க பெற்றம்' என உதாரணங்காட்டினர். இயற்பெயராகிய பெற்றம் ஒன்றன்பால் பலவின்பால் இரண்டற்கும் பொதுவாதலின் அதனைக் கூறுவதில் வழுவின்மையான் அதனைப் புதிதாய் இச்சூத்திரம் கூறவேண்டுவதின்று. அஃறிணைப்பாலைப் பிரித்து உணர்த்தக்கூடிய சொற்கள் அது, அவை, இது, இவை, உது, உவை முதலியவே. சேய்மைக்கண்ணுள்ள பொருள்களிலேயே ஐயம் நிகழுமாதலின், இங்கு அது, அவை போன்றவற்றையே 'அஃறிணைப் பிரிப்பு' என்பதனுற் கொள்ளலாம். பன்மைப் பொருளில் ஐயம் நிகழ்வதைக் காட்டிலும் ஒருமைப்பொருளில் ஐயம் நிகழ்வது மிகுதியாதலின் 'அது' என்பதை மாத்திரம் தெய்வச்சிலையார் கொண்டனர்போலும்.

உரு என்ற சொல்லும் அதன் பரியாயங்களாகிய வடிவு, பிழம்பு, பிண்டம் முதலியனவும் அஃறிணைச்சொற்களேயாம். அவற்றை உயர்திணையாகவுங் கொள்ளலாகாதோவெனின், பின்வருஞ் சூத்திரத்தாற் பெறப்படும் உதாரணங்களுள் ஒன்றாகிய **இவ்வுரு குற்றியல்லன் மகன்** என்னுமிடத்து உரு ஆண்பாற்குமுரியதாதலால் அல்லன் என்ற ஆண்பால்முடிபைப் பெறுவது வழுவன்மையான், அதனை உரைகாரர்கள் அமைக்கவேண்டுவதின்று. அவர்கள் அவ்வாறு அமைத்தலான் உயர்திணையாகக் கொள்ளுதல் பொருந்தாது.

25. தன்மை சுட்டலு முரித்தென மொழிப
அன்மைக் கிளவி வேறிடத் தான.

**அவதாரிகை.**—அதோ தோன்றுகின்ற உரு குற்றியோ மகனோ? என்ற திணையையமும், அதோ தோன்றுகின்ற ஆள்

ஆண்மகனோ பெண்டாட்டியோ? என்ற ஆண்பால் பெண்பால் ஐயமும், அதோ தோன்றுகின்ற உரு ஒன்றோ பலவோ? என்ற ஒன்றன்பால் பலவின்பாலையமும் தோன்றுமிடத்து, அவ்வையம் நீங்கித் தெளிவு தோன்றியவுடன் தனக்குள்ளோ தன்போலையுற்ற அருகு நின்றார்க்கோ அத்தெளிவை எவ்வாறு கூறுவது வழக்கு என்பதை இச்சூத்திரம் உணர்த்துகின்றது. அதோ தோன்றுகின்ற உரு குற்றியன்று, ஆண்மகன்; அதோ தோன்றுகின்ற ஆள்

5



ஆண்மகனல்லன், பெண்டாட்டி; அதோ தோன்றுகின்ற உரு ஒன்றன்று, பல; என்றும், அதோ தோன்றுகின்ற உரு குற்றியல்லன், ஆண்மகன்; அதோ தோன்றுகின்ற ஆள் ஆண்மகனல்லள், பெண்டாட்டி; அதோ தோன்றுகின்ற உரு ஒன்றல்ல, பல, என்றும் கூறுவது வழக்கென்பது அறியப்படுகிறது.

இவற்றுள் முற்கூறிய மூன்றிலும் எழுவாயும் பயனிலையும் பாலில் ஒத்திருப்பதால் அவற்றையுணர்த்த இங்குச் சூத்திரம் வேண்டா; பின்னர்க் கூறிய மூன்றிலும் எழுவாயும் பயனிலையும் வெவ்வேறு பாலாயிருப்பினும், அவ்வழக்கு வழுவன்று என்று இச்சூத்திரம் அமைக்கின்றது. இவ்விருவகை வழக்கினுள் பின்னர்க் கூறியவை சிறுபான்மையவென்றும், அவை ஆசிரியர்க்குக் கருத்தல்ல என்றும், சூத்திரத்திலுள்ள உம்மைபற்றித் தெய்வச்சிலையார் கருதுவர். அது பெரிதும் பொருந்தும்.

பொருள். உ.—அன்மைத் தன்மையைச் சொல்லுதலும்

உரித்து, ஐயத்திற்கு வேறாய்த் துணிபொருளிடத்து என்றவாறு. ஒருத்தி யெனத்துணிந்தவழி 'ஒருவனல்லள், ஒருத்தி' என வரும். ஒருவன் எனத்துணிந்தவழி, 'ஒருத்தி யல்லன், ஒருவன்' என வரும்.

சே.—ஐயுற்றுத்துணியும்வழி அன்மைக்கிளவி அன்மைத் தன்மையைச் சுட்டி நிற்றலு முரித்தென்று சொல்லுவர், துணிந்த தழீஇக்கொள்ளப்பட்ட பொருளின் வேறாய பொரு ளிடத்து என்றவாறு; என்றது—குற்றிகொல்லோ மகன் கொல்லோ என்றானும், ஒருவன்கொல்லோ ஒருத்திகொல்லோ என்றானும், ஒன்றுகொல்லோ பலகொல்லோ என்றானும் ஐயம் நிகழ்ந்தவழித் துணிதலுமுண்டு; பிறநடையுட்டுணிந்தவழி மறுக் கப்படும்பொருண்மேல் அன்மைத்தன்மை யேற்றினு மமையு மென்றவாறு.

ந.—ஒருவர்க்குப் பாலையமுந் திணையையமும் நிகழ்ந்தழி அங்ஙனம் ஐயுறலேயன்றி அவர்க்கு அப்பொருள்களின் உண் மைத்தன்மையைக் கருதுதலும் உரித்து. ஆண்டு ஒருபொருள் ஒரு பொருளல்லவாந்தன்மை உணர்த்துஞ்சொல் ஐயத்துக்கு வேறாய்த் துணிந்து தழீஇக்கொண்ட பொருளின்கண்ண வென்று கூறுவர் ஆசிரியர்.



தெ.—துணியப்பட்ட பொருளின் வேறாகிய பொருட்கண் வரும் அன்மைக்கிளவி, துணியப்பட்ட பொருளைச் சுட்டலும் உரித்தென்று சொல்லுவர் புலவர் எ-று.

உரையாசிரியர்கொள்கைப்படி சூத்திரத்துக்கு அந்துவ

யம் :—அன்மைக்கிளவி வேறிடத்தான தன்மைசுட்டலு முரித் தென மொழிப என்பது. இங்கு, வேறிடத்தான தன்மை என் பதற்குத் துணியப்பட்ட பொருளின்றன்மை என்பது பொருள். பக்ஷாந்தரத்தில் 'வேறிடம் என்பதற்குத் துணியப்படும் பொருட்கு வேருகிநிற்கும் பொருள்' என்கிருர்.

சேனவரையர், உரையாசிரியர் கூறியவாறே சூத்திரத்துக்கு அந்துவயங்கூறி அவர் பக்ஷாந்தரமாக உரைத்த பொருளேயே கூறினர்.

உரையாசிரியர், தெய்வச்சிலேயார் இவ்விருவர்தம் கருத்தும் ஒன்றே; ஆயினும், 'வேறிடத்தான' என்பதற்கு 'ஐயத்திற்கு வேருய்த்துணிபொருளிடத்து' என்று கொண்டு அதைத் 'தன்மை' என்ற சொல்லோடு கூட்டிப் பொருள் உரைத்தனர் உரையாசிரியர்; தெய்வச்சிலேயாரோ: 'வேறிடத்தான' என்ப தற்குத் 'துணியப்பட்ட பொருளின் வேருய பொருட்கண்' எனக் கொண்டு 'அன்மை'யோடு கூட்டிப்பொருள் உரைத்தனர். இவ் விருவருக்கும் 'தன்மை' என்பதற்குத் துணியப்பட்ட பொரு ளின் தன்மையென்ற பொருள் ஒப்பமுடிந்ததாம்.

சேனவரையர், 'தன்மை' என்பதற்கு 'அன்மையின் தன்மை' என்றும் 'வேறிடத்தான' என்பதற்குத் 'துணிந்து தழீஇக்கொள்ளப்பட்ட பொருளின் வேருய பொருளிடத்து' என்றும் பொருள்கொண்டு 'இவன் குற்றியன்று, மகன்' முதலிய உதாரணங்களேக் கூறுகின்றனர். 'இவன் குற்றியன்று மகன்' என்னும் உதாரணத்தில் இவன் என்ற சொல்லானே ஐயம் நீங்கு மாதலானும், முன்னர்ச் சூத்திரத்தில் 'இவ்வுரு குற்றியோ

மகனே' என்று கூறியிருத்தலானும், அவ்வுதாரணத்தில் 'இவன்' என்பதற்குப்பிரதியாக 'இவ்வுருபு' என்றிருப்பின் ஏற்கும். அவ்வாறிருப்பின் இவ்வுருபு குற்றியன்று மகன் என்ற வழக்கில் வழுவொன்றுமில்லாமையால், அவர் கூறுவது பொருத்தமின்று.



நச்சினார்க்கினியர்கொள்கைப்படி சூத்திரத்துக்கு அந்நுவயம் :—'தன்மை சுட்டலுமுரித்து : அன்மைக் கிளவி வேறிடத்தான என மொழிப' என்பதே. 'தன்மை' என்பதற்குத் துணிந்த பொருளின்தன்மை என்பதும், 'வேறிடத்தான' என்பதற்கு ஐயப்பொருளுக்குவேறுபட்ட பொருட்கிளவியிடத்து என்பதும் பொருளாம். அஃதாவது அன்மையைக் குறிக்குஞ்சொல்லின் விகுதி ஐயப்பொருளின் வேறுபாதும் துணிபொருளுக்குத் தக்கதும் ஆம் என்பதே. அவர் பொருள்கூறியிருக்கும் முறையில், அப்பொருளின்கண் உண்மைத்தன்மையைக் கருதலும் உரித்து என்றும், 'அன்மைக்கிளவி வேறிடத்தான' என்றும் இரண்டு விதேயம் நிகழ்வதால் வாக்கியபேதம் என்ற குற்றம் வரும். இவ்வாறு இரண்டுவாக்கியமாகக்கொள்ளாது இதுவேபொருளே உரையாசிரியரும் தெய்வச்சிலையாரும் கொண்டது நோக்கத் தக்கது. நச்சினார்க்கினியர் கூறும்பொருள் உரையாசிரியர்கூறும் பொருளேயாயினும், அவர்கூறும் 'இவன் குற்றியல்லன்' என்ற உதாரணம் பொருந்தாது. இவன் என்பதற்குப் பிரதியாக இவ்வுருபு அல்லது இது என்றிருக்கவேண்டும்.

26. அடைசினை முதலென முறைமூன்று மயங்காமை
நடைபெற் றியலும் வண்ணச் சினைச்சொல்.

உரையாசிரியர், சேனவரையர், நச்சினார்க்கினியர் மூவரும் இச்சூத்திரத்துக்குப் பொருள் ஒருவகையாகவே கொண்டனர். ஆனல், வண்ணச்சினைச்சொல் என்பதற்கு வண்ணச்சொல்லோடு தொடர்ந்த சினைச்சொல்லையுடைய முதற்சொல் என்று சேனவரையர் பொருள் உரைத்தனர்; நச்சினார்க்கினியர் அப்பொருளைக் கொள்வதோடு அவ்வாறு கூறப்பட்ட சொற்களுக்கு வண்ணச் சினைச்சொல் என்று பெயர் என்றும் உரைத்தனர். அவ்வாறு கூறுவது சூத்திரப்போக்குக்குத் தகுதியானது என்றே தோன்று கின்றது. வண்ணம் என்பதற்குப் பண்பு என்பது பொருள்.

நடைபெற்றியலும் என்பதில் நடை என்பதற்கு வழக்கு எனப் பொருள்கொண்டு மேற்சொன்ன நியமம் வழக்கிற்கே; ஆதலாற் செய்யுளுள் மாறிவரலாம் என்று மூவருங் கூறுகின்ற னர். அவ்வாறு செய்யுளில் மாறிவருவதற்கு, 'பெருந்தோட் சிறுமருங்குற் பேரமர்க்கட்பேதை' என்பதை உதாரணமாக



உரையாசிரியர் கொண்டார். அவ்வுதாரணம் பொருத்தமின்று என்று மறுத்துச் சேனவரையர் 'கவிசெந் தாழிக் குவிபுறத் திருந்த-செவிசெஞ் சேவலும் பொருவலும் வெருவர-வாய்வன் காக்கையுங் கூகையுங் கூடி' (புறநா. 238) என்பதை உதாரண மாகக் கூறினர். இவ்வுதாரணம் முற்சொன்ன உதாரணத்தை

விடத் தெளிவானது என்பதில் ஐயமில்லை. நச்சினார்க்கினியர் இரண்டையும் உதாரணமாகக் கூறினர். தெய்வச்சிலையார் மேற் கூறிய நியமத்தை உலகவழக்கு, செய்யுள்வழக்கு என்ற இரண் டிடத்துங் கொண்டு செய்யுளில் மாறிவருவதை 'மொழிமாற்றிக் கொள்க' என்றனர்.

உரையாசிரியர் கூறிய 'முதலொடு குணமிரண் டடுக்குதல் வழக்கியல்—சினையொ டடுக்கல் செய்யு ளாறே' என்ற பிறமதத் தைச் சேனவரையரும், நச்சினார்க்கினியரும் ஒருவாறு உடன் பட்டனர்.

அடை, சினை, முதல் என்றதனாற் சினைக்கு அடையான சொற்கள் இச்சூத்திரத்துக்கு விஷயமல்ல. அடையையும் சினையையுங்கொண்ட முதல் எங்குள்ளதோ, அதுதான் இச் சூத்திரத்துக்கு விஷயம்; ஆதலாற் செங்காலனை என்ற சொல் தவறன்று என்றுமட்டும் இச்சூத்திரத்தாற் கூறப்பட்டதேயன் றிச் செங்காரைக்கால் முதலிய சொற்கள் தவறு, தவறன்று என் பது இச்சூத்திரத்தால் உணர்த்தப்படவில்லை.

பி-ம்:—சே. தா. ந.—'கவிசெந்தாழைக்...' அது கவிசெந் தாழி என்றிருக்க வேண்டும்.

27. ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்
ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவியும்
வழக்கி னாகிய வுயர்சொற் கிளவி
இலக்கண மருங்கிற் சொல்லா றல்ல.

இச்சூத்திரத்துக்குப் பொருள் உரையாசிரியர், சேனவரை

யர், நச்சினார்க்கினியர் மூவரும் ஒருபடியாகவே கூறினர். இச்சூத்திரத்தில் 'வழக்கினாகிய வுயர்சொற்கிளவி' என்பதனானே அச்சொற்கள் வழக்கில் வழுவல்லவென்பதும் செய்யுளுள் வழுவென்பதும் புலப்படுதலால் 'இலக்கணமருங்கிற் சொல்லாறல்ல' என்



பது மிகை என்று கருதி உரையாசிரியர் அம்மிகையால் 'உயர்திணையை அஃறிணைபோலச் சொல்லுதலும், அஃறிணையை உயர்திணைபோலச் சொல்லுதலுங் கொள்க' என்றார். சேனாவரையர் 'வழக்கினாகிய வுயர்சொற்கிளவி' என்பதனால் அச்சொற்கள் வழக்கில் வழுவல்ல என்பதனையும் 'இலக்கண மருங்கிற் சொல்லா றல்ல' என்பதனால் செய்யுளுள் அவற்றுக்கு விதியின்மையையுங் கூறி, உயர்திணையை அஃறிணைபோலச் சொல்லுதல் முதலியவற்றைத் தன்னினமுடித்தலாற் கொண்டனர். நச்சினார்க்கினியர் உரையாசிரியர்மதத்தையே தழுவினர்.

சேனாவரையத்திற் பன்மைக்கிளவியுமெனப் பொதுவகையாற் கூறினாரேனும், உயர்த்தற்கண் வழங்கப்பட்டுவரும் உயர்திணைப்பன்மையும் விரவுப்பன்மையுமே கொள்ளப்படுமென்றற்கு வழக்கினாகிய வென்றார் என்று கூறியுள்ளது. அதனால் ஒன்றனை உயர்த்துங் கூறப் பலவின்பாற்சொல் வருவது வழக்கின்று என்பது உணர்த்தியவாறாயிற்று.

28. செலவினும் வரவினுந் தரவினுங் கொடையினும்
நிலைபெறத் தோன்று மந்நாற் சொல்லுந்
தன்மை முன்னிலை படர்க்கை யென்னும்
அம்மூ விடத்து முரிய வென்ப.

29. அவற்றுள்,

தருசொல் வருசொல் ஆயிரு கிளவியும்
தன்மை முன்னிலை யாயீ ரிடத்த.

30. ஏனை யிரண்டு மேனை யிடத்த.

இச்சூத்திரங்களிற் செலவு, வரவு, தரவு, கொடை இவை நான்கும் கொடைப்பொருள என்று உரையாசிரியர் கொண்டனர். சேனவரையரும் நச்சினார்க்கினியரும் செலவு, வரவு என்பவற்றை முறையே செல்லுதற்பொருளிலும், வருதற்பொருளிலும், தரவு கொடை இவை யிரண்டனையும் கொடைப்பொருளிலும் கொண்டனர். இவர்கள் சொல்லுவதே பொருத்தமென்று தோன்றுகிறது.

29, 30-வது சூத்திரங்களைச் சிறிது மாற்றிக்கூறின் 28-வது சூத்திரம் வேண்டாவென்று ஆசங்கித்து, மூவரும் 29, 30-வது






சூத்திரப்பொருளுக்கு மாறாக வருவனவற்றை யமைப்பதற்காக 28-வது சூத்திரம் வேண்டுமென்றனர். ஆதலால், தருசொல் வருசொல் இரண்டும் பெரும்பான்மை தன்மைமுன்னிலையிடங்களில் வருமென்றும், ஏனையிரண்டும் பெரும்பான்மை படர்க்கையிடத்தில் வருமென்றும் உணர்த்தியவாறாயிற்று.

தெய்வச்சிலையார் இம்மூன்று சூத்திரங்களையும் ஒரு சூத்திர

மாக்கி 'செலவு, வரவு, தரவு, கொடையென்னும் தொழிற்கண் ணிலைபெறத்தோன்றும் அந்நாற்சொல்லும் தன்மை, முன்னிலை, படர்க்கை யென்னும் அம்மூன்றிடத்தும் உரிய வென்ப ஒரு சாரார். அவற்றுள், 'தருசொல் வருசொல் ஆயிருகிளவியும் தன்மை, முன்னிலையென்னும் இரண்டிடத்தினும் வரும்; ஏனை யிரண்டும் படர்க்கைக்கண் வரும்' என்றபொருள் கூறினர்.

இக்கூற்றுப் பொருத்தமாயிருக்கின்றது. மூன்று சூத்திரங்களையும் ஒரே சூத்திரமாகக் கொள்ளின் மூன்று உத்தேசியமும் மூன்று விதேயமும் வருதலின் வாக்கியபேதம் என்ற குற்றம் வாராதோ வெனின், அவற்றை மூன்று வாக்கியமாகக்கொள்ளாது மூவி டத்து வரும் என்ற அந்நாற்சொற்களும் என்பதை உத்தேசிய மாகவும், தருசொல் வருசொல் ••தன்மை முன்னிலையிடத்த ஏனையிரண்டும் ஏனையிடத்த என்பதை விதேயமாகவுங் கொள் வதால் அக்குற்றம் வாராது என்க.

31\. யாதேவ னென்னு மாயிரு கிளவியு
மறியாப் பொருள்வயிற் செறியத் தோன்றும்.

இச்சூத்திரத்துக்கு உரையாசிரியர், சேனாவரையர், நச்சினார்க் கினியர், தெய்வச்சிலையார் நால்வரும் ஒருமுறையாகவே பொருள் கொண்டனர். சூத்திரத்தில் 'செறிய' என்பதன் பயன், திணை பால். இடம் முதலியவற்றைச் சிறப்புவகையா னுணர்த்தும் யா, யாவை, யாவன் யாவள் முதலியவற்றை விலக்குவதாகு மென்றார் உரையாசிரியர். அவை 'அறியாப்பொருள்வயின்' என்பதனால் விலக்கப்பட்டன என்பர் சேனாவரையரும், நச்சினார்க்கினியரும்.

இச்சூத்திரத்துக்கு உதாரணமாகச் சேனாவரையர், நச்சி னார்க்கினியர் இருவரும் 'இச்சொற்குப் பொருள் யாது?' என் பதை யுணர்த்தியுள்ளார். இங்குப் பொருள் என்பதற்கு அருத் தம் என்று பொருள்கொண்டு, பொருள் என்பதும் யாது என்ப

தும் அஃறிணையேயாதலால் ஈண்டு வழுவமைதி எவ்வாறு எனின், பொருள் என்பதற்கு உயர்திணை அஃறிணை இரண்டற்கும் பொதுவாகிய விஷயம் என்பதே பொருளாம் என்க. அஃதாவது 'இராமன் என்ற சொல்லுக்குப் பொருள்யாது?' என்ற வாக்கியத்திற்கு 'இராமன் என்ற சொல்லாற் குறிக்கப்படுபவன் யாவன்' என்பது பொருள்; அவ்வாறாயின் ஈண்டுப் பொருள் என்பது உயர்திணையாகையால், 'இராமன் என்ற சொல்லுக்குப் பொருள் யாவன்' என்று தான் கூறவேண்டும் என்பது பெறப்பட, அதனை விலக்கி அங்கு 'யாது' என்றுங் கூறலாம் என்பது கருத்து.

பா-ம் :—சே. சை.—'எனின் அற்றன்று...ஆகலின், அவ்வாறுதல்.' சே. தா.—'எனின்,...அவ்வாறுதல்.'

32. அவற்றுள்,
யாதென வரூஉம் வினாவின் கிளவி
யறிந்த பொருள்வயி னையந் தீர்தற்குத்
தெரிந்த கிளவி யாதலு முரித்தே.

இச்சூத்திரத்துக்கு உரையாசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் மூவரும் ஒருவகையாகவே பொருள்கொண்டனர். உரையாசிரியரும் நச்சினார்க்கினியரும் செறியத்தோன்றாத யாவன், யாவர் முதலியவற்றையும் இச்சூத்திரத்துள் அடக்குவதற்கு இச்சூத்திரத்திற் கூறும் யாது என்னுஞ் சொல்லை முற்சூத்திரத்திற் பின்வையாது முன்வைத்ததே காரணமென்று கூறினர்.

சேனாவரையர் 'யாவன்,' 'யாவர்' முதலிய சொற்களில்

திணை, பால் முதலியன சிறிது அறியப்பட்டமையால் அறிந்த பொருள்வயின் ஐயந்தீர்தற்கே வருமன்றி 'யாது' என்பதைப் போல் அறியாப்பொருளிலும் வாராததால் இச்சூத்திரத்தில் அச்சொற்களை யமைக்கவேண்டாவென்பதை 'அவை அறிந்தபொருள்வயி னையந்தீர்தற்கல்லது யாண்டும் வாராமையின், ஈண்டமைக்கப்படா வென்பது' என்னும் வாக்கியத்தாற் கூறினர்.

சேனாவரையர் 'இதனான் வழுவமைத்தார்' என்றார். நச்சினார்க்கினியர் 'இஃது அறிந்தபொருட்கண் ஐயந்தீர்தலின் வழுவமைதியன்று' என்றார். இச்சூத்திரஞ் சிறப்புச்சூத்திரமாகையால் நச்சினார்க்கினியர் சொல்வதே பொருத்தம் என்று தோன்றுகின்றது.



தெய்வச்சிலையார் 'மேற்சொல்லப்பட்டவற்றுள் யாது என்று சொல்லப்பட்ட அறியாத பொருண்மைக்கண் நிகழும் சொல் அறிந்த பொருட்கண் ஐயந்தீர்தற்பொருட்டு ஆராய்ந்த சொல்லாகலுமுரித்து' என்று பொருள்கூறி 'உம்மை எச்சவும்மை ஆகலான், ஐயம் அறுத்தலேயன்றி அறிவொப்புக்காண்டற்பொருட்டும் வினவப்படும் என்றுங் கொள்க. ஐயம் அறுத்தலாவது, 'இச்சொற்குப்பொருள் இது' என உணர்ந்தான் ஒருதலையாகத் துணிதலாற்றாது, அஃதறிவான் ஒருவனை வினாதல். அறிவொப்புக்காண்டலாவது, சொல் இலக்கணம் அறிவானொருவன் அஃதறிவானொருவனை இதற்குப்பொருள் யாது என வினாதல். பிறவும் அன்ன. இவ்வாறு அறிந்தபொருளை வினாதல் வழுவாயினும் அமைக என்று' என்று கூறினர்.

33. இனைத்தென வறிந்த சினைமுதற் கிளவிக்கு
வினைப்படு தொகுதியி னும்மை வேண்டும்.

பொருள். உ.—இத்துணை என்று வரையறுக்கப்பட்ட சினைக் கிளவிக்கும் முதற்கிளவிக்கும் வினைப்படுத்துச் சொல்லுமிடத்து இறுதி உம்மைகொடுத்துச் சொல்லுக.

சே.—கேட்போரால் இத்துணை என்று அறியப்பட்ட சினைக் கிளவிக்கும் முதற்கிளவிக்கும் வினைப்படுதொகுதிக்கண் உம்மை கொடுத்துச் சொல்லுக.

ந.—கேட்போரால் இத்துணையென்று அறியப்பட்ட சினைக் கிளவிக்கும் முதற்கிளவிக்கும் முடிக்குஞ்சொல்லொடுபடும் தொகுதிக்கண் உம்மை கொடுத்துச் சொல்லுக.

தெ.—இத்துணையென வரையறுக்கப்பட்ட சினைக்கிளவியும் முதற்கிளவியும் தொழிற்படுதொகுதிக்கண் உம்மைபெறல் வேண்டும் எ-று. (எனவே தொழிற்படாத்தொகை இயல்பாகி வரப் பெறும் என்பது பெறுதும்.)

சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் வினைப்படுதொகுதியின் என்பதற்கு வினையோடு இயைந்த எண்ணின்கண் என்று பொருள்கொண்டனர் என்பது தெளிவாய் அவர்கள் உரையி லிருந்து விளங்குகின்றது. உரையாசிரியரோ வினைப்படுத்துச் சொல்லுமிடத்து என்று அத்தொடர்க்குப் பொருள்கூறினர்.





தெய்வச்சிலையாரும் அவ்வாறே கொண்டனர். அவர் கொள்கைப் படி தொகுதி என்பதற்குச் சொற்றொகுதி என்பதே பொருள் போலும்.

இங்கு வினை என்பதற்கு முடிக்குஞ்சொல் என்பது பொருளாகும். ஆகவே வினைப்படுதொகுதி என்பதற்கு முடிக்குஞ் சொல்லோடு பொருந்திய சொற்றொகுதி யென்பதும், அஃது உச்தேசியமாகு மென்பதும் பெறப்படும். படவே, சூத்திரத்திற்கு இனைத்தெனவறிந்த சினைக்கிளவியும் முதற்கிளவியும் உத்தேசியமாயிருப்பின், அவற்றினிறுதியில் உம்மை கொடுக்க வேண்டு மென்பது முடிவான பொருளாகும். அவ்வாறாயின் 'பன்னிருகையும் பாற்படவியற்றி' என்னுமிடத்து, 'பன்னிருகை' என்பது உத்தேசியமாகையால் ஆசங்கைக்கு இடமின்று. ஐந்தலைநாகமுடன்றது என்னுமிடத்து இனைத்தெனவறிந்த சினைக் கிளவியாகிய தலை உத்தேசியமாகாது உத்தேசியமாகிய நாகம் என்பதற்கு விசேடணமாகையால், அங்கு உம்மை வருவதற்கும் காரணமில்லை; கண்ணிரண்டுங் குருடு என்னுமிடத்துங் குருடு என்பது விதேயமாகையாலும், கண்ணிரண்டு என்பது உத்தேசியமாகையாலும் உம்மை வந்தது பொருத்தமே.

சேனாவரையர், நச்சினார்க்கினியர் இவ்விருவர் கொண்ட பொருளின்படி 'பன்னிருகையும்' என்பதற்கு '(பன்னிரண்டு, கை என்ற) இருசொல்லும் ஒருபொருண்மேல் வருதலிற் கையென்பதனோடியைந்த இயற்றி யென்னும் வினை தொகுதிப்பெயரோடு மியைந்ததாம்' என்று சமாதானங் கூறவேண்டியுள்ளது. அது வலிந்துகொள்ளுதலாகத் தோன்றுகின்றது.

இ. நம.—**முறையன்றிக் கூற்றினுள்** என்றுள்ளது. அது **முறையன்றிக் கூற்றினன்** என்றிருக்கலாமென்று தோன்றுகின்றது.

நச்சினார்க்கினியத்தில் 'ஐந்தலைநாகம் உடன்றது' என்பதற்கு

நாகம் வினைப்படுதொகுதியன்று, முடிக்குஞ்சொல்லன்மையின்' என்றுளது. இங்கு முடிக்குஞ் சொல்லன்மையின் என்பதற்குத் தொகுதிக்கு முடிக்குஞ் சொல்லன்மையினென்பது பொருள்.

பா-ம்.—இ. 'இனைத்தென...வினைப்படு தோகையின்...'

சே. ந.—' இனைத்தென...வினைப்படுதோகுதியின்...'



34. மன்னாப் பொருளு மன்ன வியற்றே.

பொருள். உ.—இல்லாப்பொருளையுஞ் சொல்லுமிடத்து உம்மை கொடுத்துச்சொல்லுக.

சே.—இல்லாப்பொருட்கும் இடமுங் காலமும் பொருளு முதலாயினவற்றொடுபடுத்து இன்மைகூறுதற்கண் உம்மைகொடுத் துச் சொல்லுக. (இடமுதலாயினவற்றொடு படுத்தற்கண் என் பது ஏற்புழிக்கோடலென்பதனாற் பெற்றாம்.)

ந.—உலகத்து நிலையில்லாதபொருளும், அதுபோல உம்மை கொடுத்துக் கூறுதல்வேண்டும். (பொருளும் என்ற எச்சவும் மையான் உலகத்தில்லாதபொருளும் இடமுங் காலமும் பொரு ளும் முதலாயினவற்றொடுபடுத்துக் கூறுதற்கண் உம்மைகொடுத் துக் கூறுதல் வேண்டுமென்று பொருளுரைத்துக்கொள்க.)

இனிப் பவளக்கோட்டு நீலயானை சாதவாகனன் கோயிலுள் ளுமில்லை...என இல்லாப் பொருள்களும் எச்சவும்மை பெற்ற வாறு காண்க.

தே.—நிலையாதபொருள் உம்மைபெறல் வேண்டும் எ-று. (அவையாவன இளமை, செல்வம், யாக்கை போன்றன.)

மன்னாப்பொருள்.—உரையாசிரியரும் சேனாவரையரும் மன் னாப்பொருள் என்பதற்கு இல்லாப்பொருள் என்று பொருள் கொண்டனர்; நச்சினார்க்கினியர், உலகத்து நிலையில்லாதபொருள்

என்று பொருள்கொண்டு, அப்பொருள்கொண்ட 'மன்னாக பெருமநிலமிசை யானே', 'மன்னா வுலகத்து மன்னுதல் குறித் தோர்', 'மன்னாப் பொருட்பிணி முன்னிய' என்ற மூன்றுமேற் கோளும் அதற்கு யாக்கையும் நிலையாது என்ற உதாரணமுங் காட்டிப் பிறகு 'இல்லாப்பொருள்களும் எச்சவும்மை பெற்ற வாறு காண்க' என்று கூறினர். தெய்வச்சிலையார் நிலையாத பொருள் என்றே பொருள்கொண்டனர். எல்லா வுரையும் நோக் கின், மன்னாப்பொருள் என்பதற்கு நிலையாதபொருள் என்ற பொருளே பொருத்தமாகத் தோன்றுகின்றது. உம்மையால் இல்லாப்பொருளை நச்சினார்க்கினியர் கொள்ளுவது சூத்திரப் போக்குக்குப் பொருத்தமாகத் தோற்றவில்லை.

அன்னவியற்றே.—உரைகாரர் நால்வரும் அன்னவியற்றே என்பதற்கு உம்மைகொடுத்துக் கூறுக என்று பொருள் உரைத் தனர்.

## 44 தொல்காப்பியச் சொல்லதிகாரக் குறிப்பு

உரையாசிரியர் சேனாவரையர் இருவரும் இச்சூத்திரத்துக்குப் 'பவளக்கோட்டு நீலயானை சாதவாகனன் கோயிலுள்ளுமில்லை' என்பதை உதாரணமாக்கினர். அவ்வாறு செய்வதில் 'இடமுங் காலமும் பொருளுமுதலாயினவற்றொடு படுத்து' என்பது சூத்தி ரத்தில் வருவித்துக்கொள்ள வேண்டியிருத்தலோடு, இங்குள்ள உம்மையை 'இனைத்தெனவறிந்த...' என்றவிடத்து முற்றும் மையின் வேறாய் எச்சவும்மையாகக் கொள்ளவேண்டியுமுள்ளது.

'பவளக்கோட்டு...கோயிலுள்ளுமில்லை' என்றவிடத்து உம்மை யோ எச்சவும்மை விதிக்குஞ் சூத்திரத்தால் பெறப்பட்டுவிட லாம். ஆதலால் அவர்கள் பொருளைக் கொள்ளின் இச்சூத்திரம் வேண்டாததாம்.

இச்சூத்திரக்கருத்து யாதெனின், இவ்வுலகத்தில் ஒருவர் செல்வம் நிலையாது என்று சொல்லுமிடத்து ஒருவர் செல்வமும் என்று செல்வம் என்பதற்குப்பின் உம்மை கொடுக்கவேண்டு மென்பதே. இவ்வாறு கொள்ளின் 'அன்னவியற்றே' என்பதற்கு வினைப்படுதொகுதியின் உம்மைவேண்டும் என்பதே பொரு ளாகும்.

இங்கு இவ்வுலகத்தில் ஒருவர் செல்வம் என்பதே வினைப் படுதொகுதியாகுமேயன்றி, செல்வம் மாத்திரம் வினைப்படு தொகுதியாகாது. உம்மையும் முற்சூத்திரத்திற் கூறியதுபோல முற்றும்மையேயாகும். ஆதலால் நச்சினார்க்கினியர் உம்மையை எச்சவும்மையாகக்கொள்ளுவது பொருந்தாது. 'சக்கரவர்த்தி செல்வமும் நிலையாது' என்று தெய்வச்சிலையார் காட்டிய உதா ரணங்களில் உம்மை முற்றும்மையாகாமையின் அவர் உதாரண மும் பொருத்தமின்று.

தெய்வச்சிலையார் உரைப்பதிப்பில் 'பொருந்தும் பொரு ளும்...' என்று மற்றொருபொருள் முதல் ஏட்டில் உள்ளதாகக் குறிக்கப்பட்டிருக்கிறது. அங்குக்கொடுத்துள்ள உதாரணத்தால் அது பேராசிரியர் உரைபோலும்.

35. எப்பொரு ளாயினு மல்ல தில்லெனின்
அப்பொரு ளல்லாப் பிறிதுபொருள் கூறல்.

பொருள். உ.—எவ்வகைப்பட்ட பொருளாயினும் தன் னுழையுள்ளதல்லதனை இல்லையெனலுறுமேயெனின், அவன்

கூறிய பொருளல்லாத பிறிதுபொருள்கூறி, இல்லை என்க. (இதன் கருத்து, அவன் வினவப்பட்ட பொருட்கு இனமாய பிறிதுபொருளே கூறுக என்பது.)

சே.—யாதாயினு மொருபொருளையாயினும் ஒருவன் அல்லதில் என்னும் வாய்பாட்டான் இல்லையெனவுறின், அப்பொருடன்னையே கூறாது அப்பொருளல்லாத பிறிதுபொருள் கூறுக.

ந.—யாதானுமொருபொருளையாயினும் தன்னுழை உள்ளதல்லதனை இல்லையெனவுறமேயெனின், அவன் வினயபொருடன்னையே கூறாது அதற்கு இனமாகிய பிறிதுபொருளைக்கூறி இல்லையென்க.

தெ.—யாதானும் ஒரு பொருளாயினும் அல்லது என்னும் சொல்லொடு கூட்டி இல்லை எனக்குறித்தான் ஆயின், அவன் வினவியபொருள் அல்லாத பிறிதாயபொருளைச்சொல்லுக எ-று. அப்பொருளல்லாப் பிறிது என்றமையான் அதற்கு இனமாகிய பொருளையே சொல்லப்படும்.

உரையாசிரியரும் நச்சினார்க்கினியரும் அல்லதில்லெனின் என்பதற்கு, தன்னுழையுள்ளதல்லதனை இல்லையெனவுறுமேயெனின் என்று பொருள்கொண்டனர். அவ்வாறாயின் "பயறுளவோ வணிகீர் ?" என்றால் உழுந்தில்லை என்று உதாரணங்கூறியிருத்தல்வேண்டும். அவ்வாறு கூறின் அது விடைவழுவாகும். அதனால் அவ்விருவரும் சேனாவரையர் தெய்வச்சிலையார் இவ்விருவர்போல 'அல்லது' என்னுஞ் சொல்லைக்கூட்டி 'உழுந்தல்லதில்லை' என்று கூறினர். சேனாவரையர் அல்லதில்லென்னும் வாய்பாட்டான் இல்லையெனவுறின் என்றும், தெய்வச்சிலையார்

‘அல்லது என்னும் சொல்லொடு கூட்டி இல்லையெனக்குறித்தாரு யின்’ என்றும் கூறுதலின் இவ்விருவர் கொள்கையே பொருத்தமானது.

உரையாசிரியர் அல்லதில்லென்பதற்குத் தன்னுழையுள்ள தல்லதனை என்றும், பிறிதுபொருள் என்பதற்கு இனப்பொருள் என்றும் பொருள்கொண்டதை நான்கு காரணங்களாற் சேனாவரையர் மறுக்கின்றார். அவையாவன :—(1) (சூத்திரத்தில் அல்லது என்ற சொல்லைக்கருதாது, பொருளை ஆசிரியர் கருதினராயின்) பயறுளவோ வென்று வினையவழிப் பயறில்லை யென்றற்படும்



வழுவென்னை? (2) உள்ளதல்லதென்றல் கருத்தாயின் ஆசிரியர் அல்லதெனக் குறித்தபொருள் விளங்காமையின் அகப்படச் சூத்திரியார். (3) பாம்புணிக்கருங்கல்லும் பயறும் விற்பானொருவனுழைச்சென்று பயறுளவோ வென்றவழிப் பாம்புணிக் கருங்கல்லதில்லை யென்றால் இனப்பொருள் கூறாமையாற்பட்ட இழுக்கு ஒன்றுமில்லை. (4) இனப்பொருள் கூறுகவென்பதே கருத்தாயின் ‘அப்பொருளல்லா இனப்பொருள்கூறல்’ என்றே ஆசிரியர் சூத்திரித்திருப்பர் என்பனவாம்.

நச்சினார்க்கினியர் சூத்திரத்தில் ‘அல்லது’ என்ற சொல்லுக்குப் பயனாக, “பயறுளவோ என்றவழி அல்லதென்பதொழியவும் பயறில்லை உழுந்துள என்றற்படும் இழுக்கென்னையெனின், எப்பொருளாயினுமென்றது ஐம்பாற்பொருளையாகலானும், அல்லதென்பது அஃறிணையொருமைப்பாற்கு உரித்தேனும்,

மற்றை நான்கு பாற்கண்ணும் பால்வழுவாயுந் திணைவழுவாயும் மயங்குதலானும், அதுகண்டு அதனை யமைத்தற்கு 'எப்பொருளாயினுமல்லதில்' என்றார். அவனல்லது, அவளல்லது அவரல்லது, அதுவல்லது, அவையல்லது எனவரும்'' என்கின்றார். அல்லது என்பதை வினையெச்சமென்றால் தவறென்? அல்லது என்ற சொல்லை இவ்வாறு வழங்கினால் வழுவன்று என்பது இச்சூத்திரத்தின் கருத்தாகுமா வென்பது ஆராயத் தக்கது. 'பயறில்லை என்றாற்படும் வழுவென்னை?' என்ற சேனாவரையர்தம் ஆசங்கை உலகவழக்குக்கு ஏற்றதா என்பதும் ஆராய்தற்குரியது. வணிகன் ஒருவனை ஏதோ ஒருபொருள் உள்ளதா என்று ஒருவன் வினவ, அப்பொருள் அவனிடமில்லாவிடில், அஃது இல்லை என்று அவ்வணிகன் பெரும்பாலும் விடையளிப்பதில்லை. சேனாவரையர் கூறிய மூன்றாவது காரணத்தைப் 'பயற்றான் முடிக்குங்குறை உழுந்தான் முடித்தலன்றிப் பாம்புணிக் கருங்கல்லான் முடித்தலாகாமையிற் பயறுளவோ என்றார்க்குப் பாம்புணிக்கருங்கலல்லதில்லையென்றல் பொருந்தாமை உணர்க' என்று நச்சினார்க்கினியர் மறுத்தனர். உரையாசிரியரும், நச்சினார்க்கினியரும், தெய்வச்சிலையாரும் பிறிது பொருள் என்பதற்கு இனப்பொருள் என்று கொண்டதன்காரணம் சூத்திரத்திலுள்ள 'அல்லது' என்ற சொல்லே. பயறல்லது என்றால் பயறுபோன்றதும் பயற்றின்வேறுபட்டதுமான பொருள் என்பதே கருத்தா



கும். பாம்புணிக்கருங்கல்லும் பயறும் வியாபாரப்பொருள் என்ற தன்மையில் ஒப்புமைப்படுவதால் இனமென்று கொள்வதற்கு இடனுண்டு.

36. அப்பொருள் கூறிற் சுட்டிக் கூறல்.

பி-ம். ந.—சுட்டாவது பயமல்லதில்லையெனின் என்று உளது. சுட்டாவது என்பது சுட்டாது என்றிருத்தல்வேண்டும்.

37. பொருளொடு புணராச் சுட்டுப்பெய ராயினும்
பொருள்வேறு படாஅ தொன்று கும்மே.

அவதாரிகை.—35-வது சூத்திரத்தில், அல்லதில் என்னும் வாய்பாட்டை வழங்கும்போது பிறிதுபொருளாற் கூற வேண்டுமென்பதும், 36-வது சூத்திரத்தில், அப்போது பிறிது பொருளாற்கூறாது அப்பொருளையே கூறின், சுட்டிக்கூற வேண்டுமென்பதும் விளங்கின. சுட்டிக் கூறுதல் இருவகைப் படும் :—இப்பயறல்லதில்லை என்னுமிடத்திற்போலச் சுட்டை அப்பொருளைக் குறிக்கும் பெயரொடு கூறுவது ஒன்று. இவையல்லது பயறில்லை என்னுமிடத்திற்போலச் சுட்டை அப் பொருளைக்குறிக்கும் பெயரொடு கூறாது தனியே கூறுவது மற் றொன்று. முதற்கூற்றில் ஐயந்தோன்றாது. இரண்டாவதில் இவையென்னுஞ் சொல்லால் அருகிலிருக்கும் பயற்றோடு, உழுந்து, கொள்ளு முதலியனவும் சுட்டப்படலாமாகையால், அவ்வாறு கூறுவது வழுவா, வழுவன்றா என்று ஆசங்கை தோன்ற, அது வழுவன்று என்று இச்சூத்திரம் உணர்த்துகின் றது. இவ்வவதாரிகை உரையாசிரியர், சேனாவரையர், தெய்வச் சிலையார் இம்மூவருங் கூறியுள்ள பொருளுக்குப் பொருந்தும்.

பொருள். உ.—பொருளொடு புணராதுநின்ற சுட்டுப்பெய ராமேயெனினும், அப்பொருட்கு இயைபுபட வருமேயெனின் அமையும்.

சே.—சுட்டானன்றிப் பொருள்வரையறுத் துணர்த்தாச் சுட்டுப்பெயராற்கூறினும், பொருள்வேறாகாது இப்பயறெனச்

சுட்டிக்கூறிய பொருளேயாம்.

ந.—ஒரு சுட்டுத் தான் உணர்த்துதற்கு உரிய அஃறிணைப் பொருளை உணர்த்தாது உயர்திணைப்பொருளை உணர்த்தி நிற்கு



மாயினும் ஆம்; சில பொருட்பெயர் சுட்டுப்பொருளை உணர்த்தாவாயினுந் தாஞ்சுட்டுவதோர் பொருளிடத்து வேறுபடநில்லாமல் அப்பொருளையே உணர்த்திநிற்கும்.

தே.—வினவப்பட்ட பொருளோடு புணராச் சுட்டுப்பெயரைச் சொல்லினும், பொருள் வேறுபடாது ஒன்றும் எ-று. இப்பயறல்லது இப்பட்டல்லது இல்லை என்றது இவையல்லது இல்லை எனினும் பொருள் வேறுபடாவாறு கண்டுகொள்க.

உரையாசிரியர், சேனாவரையர், தெய்வச்சிலையார் இம்மூவருங்கொண்ட பொருள் ஒன்றே. அவர்கள் கொள்கைப்படி 35, 36, 37-ஆம் சூத்திரங்கள் ஒரேவிஷயத்தில் வேறுபட வரும் வழக்குகளைப்பற்றிக் கூறுகின்றன. மேலும் இச்சூத்திரத்துக்கு அந்நுவயம் சூத்திரப்போக்குப்படியேயாம்.

நச்சினார்க்கினியர் 'இச்சூத்திரத்திற்குப் பலருங் கூறும் பொருளெல்லாம் முன்னிற்சூத்திரத்தாற் பெற்றவாறு காண்க' என்று கூறி முற்சூத்திரங்களிற் கூறப்பட்ட பொருள்கட்குத் தொடர்பில்லாதவேறுபொருள் கூறுகின்றார். 36-வது சூத்திரத்திற் சுட்டிக்கூறல் என்றவிதியினாற்றலாற் சுட்டுப்பெயர் பொருளையுணர்த்துமெனப் பெறப்படுமாதலால் 'இவையல்லது பயறில்லை' என்ற வழக்கு வழுவாகாதென்று கருதி இங்ஙனங் கூறுகின்றனர் போலும். சேனாவரையரும் ஒருகால் இக்கருத்தைக்கொண்டு

"யானை நூல்வல்லானொருவன் காட்டுட் போவுழி ஓர் யானை அடிச்சுவடுகண்டு, இஃது அரசுவாவாதற்கேற்ற இலக்கணமுடைத்து" என்றவழியும், 'இஃதோர் செல்வற்கொத்தனம்...பெயர் தந்தேனே' என்புழியும், சுட்டுப்பெயர் பொருளோடுபுணராது நிற்றலின், அவற்றையே அமைக்கின்றது இச்சூத்திரமென்பாருமுளர்' என்று பிறர்மதமாகக் கூறினர்போலும்.

நச்சினார்க்கினியர் கூறும் பொருளின்படி இச்சூத்திரத்துக்கு அந்வயம்:—சுட்டுப்பொருளோடு புணரா ஆயினும ஆகும்; பெயர் பொருளோடு புணரா ஆயினும் (சுட்டுப்)பொருள் வேறுபடாது ஒன்றும். முற்பகுதிக்குப் பொருள்:—சுட்டு தனக்குப் பொருந்திய பொருளொடு புணராவிட்டாலும், குற்றமில்லை. உ-ம். இஃது ஒத்தன். பிற்பகுதிக்குப்பொருள்:—பெயர் சுட்டுப்பொருளை உணர்த்தாவாயினும், தாஞ்சுட்டுவதோர் பொருளிடத்து வேறுபடாமல் அப்பொருளையே உணர்த்தும். உ-ம்.



"நாணிநின்றோ ணிலைகண்டியானும்...வானத், தணங் கருங்கடவுளன்னோள்..." என்னுமிடத்து அவள் என்று சுட்டிக்கூறாது 'வானத்தணங்கருங்கடவுளன்னோள்' என்று பொதுவாகக் கூறியது, என்றவாறு. இங்கு இரண்டு விஷயம் அறிஞர்களால் ஆராயத்தக்கன. சூத்திரப்போக்குக்குத் தக்கபடி அந்வயம் உளதா? என்பதொன்று. சூத்திரத்தை இரண்டாகப் பிரித்து, இரண்டு விஷயங்களை விதிப்பின், வாக்கியபேதம் என்ற குற்றம் வாராதா? என்பது மற்றொன்று.

38. இயற்பெயர்க் கிளவியுஞ் சுட்டுப்பெயர்க்கிளவியும்
விணைக்கொருங் கியலுங் காலந் தோன்றிற்

சுட்டுப்பெயர்க் கிளவி முற்படக் கிளவா
ரியற்பெயர் வழிய வென்மனார் புலவர்.

இச்சூத்திரத்தில் 'வினைக்கொருங்கியலுங்காலம்' என்பதற்கு இயற்பெயரும் சுட்டுப்பெயரும் ஒன்றாக்கொன்று முடிபாகாது வேறு வினையைக்கொள்ளுமிடம் என்று நான்கு உரைகாரர்களும் பொருள் கொண்டனர். ஆயினும் வினை என்பதற்குத் **தனித்தனி வினை** என்று பொருள் கொண்டு 'சாத்தன் வந்தான் அவற்குச் சோறு கொடுக்க' முதலிய உதாரணங்களையே உரையாசிரியர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார் மூவருங் காட்டினர். சேனாவரையர் மாத்திரம் அச்சொற்கு **ஒரு வினை, தனித்தனி வினை** என்று பொருள்கொண்டு சாத்தன் அவன் வந்தான், சாத்தன் வந்தான் அவன் போயினான் என்ற உதாரணங்களைக் காட்டினர். சாத்தன் அவன் வந்தான் முதலிய வழக்கு உரையாசிரியர் காலத்தில் மிகுதியாயிருந்தது என்பது 'தன்மைச்சொல்லும் அஃறிணைச் சொல்லும் அவை எண்ணுமிடத்து' (சொல். 43. இ.) முதலிய உரையாசிரியர் வாக்கியங்களால் அறியப்படுகின்றது.

உரையாசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் இம்மூவரும் இயற்பெயர் வழிய என்ற மிகையான் இயற்பெயரல்லா உயர்திணைப்பெயர்க்கும் அஃறிணைப்பெயர்க்கும் சுட்டுப்பெயர் பின் வருதல் கொள்க என்று கூறினர். தெய்வச்சிலையார் 'இயற்பெயர் என்றாராயினும் வந்தது கொண்டு வாராதது முடித்தல் என்பதனான் ஒரு பொருட்குப் பெயராகிவரும் நிலப்பெயர் முதலாயினவுங் கொள்க' என்றனர். சேனாவரையரும், நச்சினார்க்கினியரும்
7

தன்னினமுடித்தலால் விரவுப்பெயர்க்கும் அவ்வாறு வருதலைக் கொண்டனர். 'இயற்பெயர்' எனவே உலகத்து இயன்றுவரும் பெயரெல்லாம் அடங்கும் என்று ஒருவன் கருத்து என உரையாசிரியர் கூறியுள்ளார். இவ்வாறு கூறுவது பொருந்தாது என்பதை மனத்தில் வைத்துக்கொண்டு 'அவன்றான், வந்தான், அவனொருவனு மறங்கூறும், ஈதொன்று குருடு என இயற்பெயரல்லா விரவுப்பெயர்க்கும் உயர்திணைப்பெயர்க்கும் அஃறிணைப் பெயர்க்கும் வரையறையின்றிச் சுட்டுப்பெயர் முற்கிளக்கவும்படுதலின், இயற்பெயர்க்கிளவியென்றார்' என்ற வாக்கியத்தைச் சேனாவரையர் கூறினர்போலும்.

40. சுட்டுமுத லாகிய காரணக் கிளவியுஞ்
சுட்டுப்பெய ரியற்கையிற் செறியத் தோன்றும்.

பொருள். உ.—மேற் சுட்டுப்பெயர் இயற்பெயரின்வழியே கிளக்க எனப்பட்டதுபோலச், சுட்டு முதலாகிய காரணப்பெயரையும் இயற்பெயர்க்குவழியே வைத்துச் சொல்லுக. (முதற் சூத்திரம் பொருள் வழிவந்தது; இது பொருளது குணத்துவழி வந்தது.)

சே.—சுட்டை முதலாகவுடைய காரணப்பொருண்மையை உணர்த்துஞ் சொல்லுஞ் சுட்டுப்பெயர்போலத் தன்னாற் சுட்டப்படும்பொருளையுணர்த்துஞ் சொற்குப் பின் கிளக்கப்படும். (சுட்டு முதலாகிய காரணக்கிளவி உருபேற்றுநின்ற சுட்டு முதற் பெயரோடொப்பதோரிடைச்சொல்.)

ந.—சுட்டுப்பெயர் முதலாகிய காரணப்பொருண்மையை உணர்த்துஞ் சொல்லும், உம்மையாற் காரணமின்றிவருஞ்சுட்டுப் பெயரும் சுட்டுப்பெயர்போலத் தன்னாற் சுட்டப்படுந் தொழிலை

உணர்த்துஞ் சொற்குப் பின் கிளக்கப்படும்.

தே.—சுட்டெழுத்து முதலாகிய காரணச்சொல்லும் சுட்டுப்பெயர் இயற்கைபோலப் பொருந்தத் தோன்றும் எ-று. என்றது பிற்படக் கூறப்படும் எ-று. (இது சுட்டுப்பெயருள் அடங்காதோ எனின், பொருளைச் சுட்டாது தொழிலைச் சுட்டுதலானும் காரணக்கிளவி கருவியாதலானும் வேறு ஓதப்பட்டது.)

உரையாசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் இம் மூவரும் இச்சூத்திரத்துக்கு, சாத்தன் கையெழுதுமாறுவல்லன்,



அதனால் தந்தையுவக்கும்' என்பதனையே சிறப்புடைய உதாரணமாகக் கொண்டனர். ஆனால், அங்கு **அதனால்** என்பதை உரையாசிரியர் **பெயர்ச்சொல்** லென்றும், மற்ற இருவரும் இடைச்சொல்லென்றும் கூறினர். 'சாத்தன் வந்தான். அஃதரசற்குத் துப்பாயிற்று', 'கிழவன் பிரிந்தான், அதனைக் கிழத்தி யுணர்ந்திலள்' என்ற உதாரணங்களில்—அஃது, அதனை முதலிய சொற்கள் முற்கூறப்பட்ட தொடர்மொழிப்பொருளை யுணர்த்திநிற்பதைச சேனாவரையர் தன்வினைமுடித்தலாற் கொண்டனர். நச்சினார்க்கினியர் உம்மையாற் கொண்டார். உரையாசிரியரும் தெய்வச்சிலையாரும் அவற்றைக் கூறிற்றிலர்.

'இது பொருளது குணத்துவழி வந்தது' என்று உரையாசிரியர் கூறியதைச் சேனாவரையர் 'சாத்தன் வந்தான்; அஃதரசற்

குத்துடையாயிற்று என்றும், கிழவன் பிரிந்தான், அதனைக் கிழத்தி யுணர்ந்திலள் என்றும் எழுவாயாயும் ஏனைவேற்றுமையேற்றும் அச்சுட்டுப் பயின்றுவருதலாற் பண்புமுதலாயினவற்றைச் சுட்டுஞ் சுட்டெனப் பொதுவகையாற்கூறாது காரணக்கிளவியென ஒருசார் வேற்றுமைக்குரிய வாய்பாடுபற்றி யோதுதல் குன்றக்கூறலாலும், சுட்டுப்பெயராயிற் சுட்டுமுதலாகிய காரணக்கிளவி யென்றும், சுட்டுப்பெயரியற்கையிற் செறியத்தோன்றும் என்றுங் கூறுதல் பொருந்தாமையாலும் அது போலியுரையென்க' என்று மறுத்தனர்.

சேனாவரையர் 'செய்யுட்கண் முன்னிற்றல் வந்தவழிக்கண்டு கொள்க' என்றார். பரிமேலழகர், 'ஆக்கமுங் கேடு மதனால் வருதலாற், காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு' என்ற குறளுரையில், 'செய்யுளாதலிற் சுட்டுப்பெயர் முன்வந்தது' என்று காட்டியிருத்தல், சேனாவரையர் 'வந்த வழிக் கண்டுகொள்க' என்றதற்கு ஏற்ற உதாரணமாதல் காண்க.

41. சிறப்பி னாகிய பெயர்நிலைக் கிளவிக்கு
மியற்பெயர்க் கிளவி முற்படக் கிளவார்.

**பொருள்.** உ.—சிறப்புப்பெயரும் இயற்பெயரும் ஒருவற்கு உளவாயின், அவ்விடத்து அவனைப் பெயர்கொடுக்குங்கால், அவன் சிறப்புப்பெயரை முற்கூறி, இயற்பெயரைப் பிற்கூறுக.



**சே.**—வினைக்கொருங்கியலும்வழிச் சிறப்பினாகியபெயர்க்

கும் இயற்பெயரை உலகத்தார் முற்படக்கிளவார்; பிற்படக் கிளப்பர்.

ந.—வினைக்கு ஒருங்கியலும்வழிச் சிறப்பினுகிய பெயராய் நிற்றலையுடைய சொற்கும், உம்மையால் தவங் கல்வி குடி உறுப்பு முதலியவற்ருன் ஆகிய சொற்கும், இயற்கைப்பெயராகிய சொல்லை உலகத்தார் முற்படக் கிளவார்; பிற்படக் கிளப்பர்.

தெ.—மன்னர் முதலாயினுராற் பெற்ற சிறப்பினல் ஆகிய பெயர்ச்சொற்கும், உம்மையான் நிலப்பெயர் முதலாகிய பெயர்க் கும் இயற்பெயர்ச்சொல்லை முற்படக் கூருர் ஆசிரியர் எ-று.

சேனுவரையரும், நச்சினர்க்கினியரும் **வினைக்கொருங்கிய லும்** என்பதை ஏற்புழிக்கோடலாற் கொள்ளுகின்றனர். ஆனல் ஏனுதி நல்லுதடன் முதலிய உதாரணத்தில் வினை காணப்படவில்லை. அது தொக்குள்ளதுபோலும். **வினைக்கொருங்கியலும்** என்ப தற்கு 38-வது சூத்திர வுரையில் 'வினைக்கென்புழி அவ்விருபெய ரும் ஒருவினைகோடலுந் தனித்தனி வினைகோடலுங் கொள்க' என்று சேனுவரையர் கூறியுள்ளமையால், இச்சூத்திர வுதாரணத் தில் ஒருவினைகோடலுண்மைபற்றி வினைக்கொருங்கியலும் வழி என்பது ஒருவாறு பொருந்தும். நச்சினர்க்கினியர் அங்கு அச்சொல்லுக்கு 'ஒன்றனையொன்று கொள்ளாது இரண்டும் பிறிதுவினைகோடற்கு ஒருங்குநிகழுங் காலந்தோன்றுமாயின்' என்று பொருள் கொடுத்தமையாற் பிறிதுவினைகோடலில்லாத இங்கு வினைக்கொருங்கியலும் என்பதைக்கொண்டது எவ்வாறு பொருந்தும்?

மார்தக்கொங்கேனுதி முதலிய சொற்களில் இயற்பெயர்க் கிளவி முற்படக்கிளந்ததற்குச் சேனுவரையர் 'அவை தொகைச் சொல்லாகலான், அவற்றின்கண்ணதன்று இவ்வாராய்ச்சி' என் ருர். பிற்காலத்து வழக்காகையால் 'கடிசொல் லில்லைக் காலத் துப் படினே' (சொல். 452) என்னுஞ் சூத்திரத்தாற் கொள்ளப்

படும் என்று நச்சினார்க்கினியர் கூறியவாறே அவர் கூறியிருப்பின் நன்றாம்.

42. ஒருபொருள் குறித்த வேறுபெயர்க் கிளவி
தொழில்வேறு கிளப்பி னொன்றிட னிலவே.



பா-ம். இ. நம. :—(1) 'அப்பெயர் வேறு வேறு தொழில் கோடற்கு வரும் பெயரெல்லாஞ் சொல்லியபின்னைத் தொழில் கொடுக்க' என்றுளது. இஃது 'அப்பெயர் வேறு வேறு தொழில் கோடற்கு வரும். அப்பெயரெல்லாஞ் சொல்லிய பின்னைத் தொழில் கொடுக்க' என்றிருப்பின் நலம்.

(2) 'ஒரு பொருண்மேல் நிற்கும் மற்றையதாயின்' என்றுளது. இஃது 'ஒரு பொருண்மேல் நிற்கும், மற்றையதாயின்' என்றிருப்பின் நலம்.

43. தன்மைச் சொல்லே யஃறிணைக் கிளவியென்
றெண்ணுவழி மருங்கின் விரவுதல் வரையார்.

பொருள். உ.—தன்மைச்சொல்லும், அஃறிணைச்சொல்லும் அவை எண்ணுமிடத்து விராஅய் வரப்பெறும் எனக்கொள்க.

சே.—தன்மைச்சொல்லும், அஃறிணைச்சொல்லும் எண்ணுதற்கண் விராய் வரப்பெறும் எ-று.

ந.—தன்மைச்சொல்லும், அஃறிணைச்சொல்லு மென்று கூறிய இரண்டும் எண்ணுமிடமாகிய இடத்து விராய் வந்து தன்மைப்பன்மைச் சொல்லான் அஃறிணைச்சொல் முடிதலை நீக்கார் ஆசிரியர் எ-று.

தே.—தன்மைப் பெயர்ச்சொல்லும், அஃறிணைப் பெயர்ச்சொல்லும் எண்ணுமிடத்தில் விரவுதல் நீக்கார் எ-று.

இச்சூத்திரத்திற்கு நால்வருங்காட்டிய உதாரணம் 'யானும் என் எஃகமும் சாறும்' என்பதேயாயினும், பொருளில் உரையாசிரியர் தெய்வச்சிலையார் இவ்விருவர் கொள்கைக்கு ஏனையோர் கொள்கை மாறுபட்டது. உரையாசிரியர், தெய்வச்சிலையார் இவ்விருவரும் தன்மைப் பெயர்ச்சொல்லும், அஃறிணைப் பெயர்ச்சொல்லும் உம்மை முதலியவற்றால் எண்ணப்படினும் வழுவன்று என்று கொள்ளுகின்றனர். சேனாவரையர், நச்சினார்க்கினியர் இவ்விருவரும் அவை தன்மைப்பன்மைவினை கொள்ளின் வழுவன்று என்கின்றனர். பொதுவாய் ஓர் இனமாகிய பொருள்களை எண்ணுவதே வழக்கு. ஆதலால் இவ்வாறு தன்மைப்பெயரையும் அஃறிணைப் பெயரையும் உடன் எண்ணுவது வழுவன்று என்று கூறவேண்டும். அது வேறு சூத்திரத்தாற் கூறப்படாமை



யானும், அவை தன்மைப்பன்மைவினை கொள்ளும் என்பது 'பன்மை யுரைக்குந் தன்மைக் கிளவி...' (சொல். 209) என்ற சூத்திரத்தாற் பெறப்பட்டமையானும், ஆங்குக் கூறப்பட்டது வழுவன்றென்று இச்சூத்திரம் உணர்த்துகின்றது எனச் சேனாவரையர் கூறுவது, பொருந்தாது. சேனாவரையருக்கு இவ்வாறு கருத்தென்பது 'வியங்கோளெண்ணுப் பெயர்' (சொல். 45) என்ற சூத்திரத்தினடியில் அவர் எழுதிய உரையால் நன்கு விளங்கும். ஆகவே, உரையாசிரியர் தெய்வச்சிலையார் இவ்விருவர் கூறும் பொருளே பொருத்தமானது.

உரையாசிரியர் மருங்கு என்ற மிகையான் "நீயும் நின்

படைக்கலமுஞ் சாறீர், அவனும் தன் படைக்கலமுஞ் சாறும், எனவும் வருதல் கொள்க'' என்றார். சேனாவரையர் 45-வது சூத்திரவுரையில் ''அவ்வுதாரணம்போன்றவற்றை அதிகாரப்புறனடையாற் கொள்க'' என்றார்.

44. ஒருமை யெண்ணின் பொதுப்பிரி பாற்சொல்
லொருமைக் கல்ல தெண்ணுமுறை நில்லாது.

**பொருள்.** உ.—ஒருமை எண்ணின் பொதுப்பிரிபாற்சொல் என்பது—ஓர் எண்ணுப், இரண்டுபாற்கும் பொதுவாய், ஒருவன் ஒருத்தி எனப் பிரிந்து நின்று, பால்வேறுபடுவதாயிற்று. அஃது யாதோவெனின், ஒருவர் என்பது. அஃது இருபாற்கும் பொதுவாய் நிற்பினும், ஒருவர் இருவர் என்று எண்ணும்பொழுதாயின் ஒருபாற்கே உரித்தாம்.—(அப்பொதுமையிற் பிரிந்த பாற்சொல் ஒருவன் ஒருத்தி என்பது : அவை தத்தம் ஒருமை விளங்கி நிற்குந் துணையல்லது அப்பான்மேல் எண்ணுமுறையோடா என்பது).

சே. ந.—ஒருமை யெண்ணினையுணர்த்தும் பொதுப்பிரிபாற் சொல்லாகிய ஒருவன் ஒருத்தி யென்னுஞ்சொற்கள், ஒருமைக் கண்ணல்லது இருமைமுதலாகிய எண்ணுமுறைக்கணில்லா எ-று. எனவே, பொதுப்பிரியாப்பாற்சொல்லாகிய ஒருவரென்னுஞ் சொல் இருவர் மூவரென எண்ணுமுறைக்கண்ணு நிற்கு மென்பதாம்.

தே.—ஒருமையெண்ணின் பொதுமையாகிய ஒருவர் என்னும் சொல்லினின்றும் பிரிந்த ஒருவன் ஒருத்தி யென்னுஞ்சொல் அவ்வொருமைக்கல்லது எண்ணுமுறைக்கண் ணேடாது எ-று.

எனவே, எண்ணுமுறைக்கண் ஆண்பாலாயினும் பெண்பாலாயினும் ஒருவர், இருவர், மூவர் என எண்ணினல்லது பால்தோன்ற எண்ணப்படாது என்றவாறும்.

உரையாசிரியர் தெய்வச்சிலையார் இருவர் கொள்கையும் ஒன்றே. அதுவே பொருத்தமானது. ஏனெனின், இச்சூத்திரத்திற்கு முற் சூத்திரமும் பிற் சூத்திரமும் எண்ணும்போதுள்ள சொன்னிகழ்ச்சியைப்பற்றிக் கூறுவதால் இதுவும் அதனையே கூறவேண்டும். ஓர் ஆணைக் குறிக்க வழங்கும் ஒருவன் என்ற சொல்லும் ஒரு பெண்ணைக் குறிக்க வழங்கும் ஒருத்தி என்ற சொல்லும் எண்ணும்போது ஒருவன் இருவர் மூவர், ஒருத்தி இருவர் மூவர் என்று வர இடனுண்டாக, அதனை விலக்கி, ஒருவர் இருவர் மூவர் என்றே வரவேண்டும் என்று இச்சூத்திரம் விதிப்பதாகும்.

சேனாவரையர் நச்சினார்க்கினியர் கொள்கையில், இரண்டு குற்றங்களுள :—இருவன் இருத்தி என்னுமிடத்துப் பகுதியே பன்மைப்பொருளை உணர்த்துவதால், ஆண்பெண்ணொருமை விகுதிகளாகிய ன், இ இவ்விரண்டும் அங்குவர இடனின்று. இடனிருப்பி னன்றோ அதனை விலக்கவேண்டும். மேலும் பொதுப் பிரிபாற்சொல் என்பதனால் 'ஒருவன் ஒருத்தி யென்பனவற்றின் பாலுணர்த்துமீறே' எனக் கொள்ளவேண்டியுள்ளது.

இளம்பூரணத்தின் உரையில் 'அஃது யாதோவெனின்'

என்றவிடத்துள்ள 'அஃது' என்பதற்குப் பொருள் ஓர் எண்ணுய் இரண்டு பாற்கும் பொதுவாய் நிற்பது என்பது ஆகும்.

பி-ம்.—இளம்பூரணத்தில் இச்சூத்திரவுரையினிறுதியில் 'இனி, ஒருமை எண்ணின் பொது என்ப ஒருவர் என்பது' என்ற சொற்றொடர் வேறொரு கருத்துங் கூறுகின்றதுபோலக் காணப்படுகின்றது. இதன் கருத்து சூத்திரத்துக்கு உரை கூறுமிடத்து 'அஃதியாதோவெனின், ஒருவர் என்பது' என்பதனுற் பெறப்படுதலின் இஃது ஏட்டில் மிகையாகச் சேர்க்கப்பட்டிருக்கவேண்டும்.

45. வியங்கோ ளெண்ணுப்பெயர் திணைவிரவு வரையார்.

பொருள். உ.—வியங்கோளுடைய எண்ணுப்பெயர் திணை விரவுதல் கடியப்படா எ-று.



சே. ந.—வியங்கோளொடு தொடரு மெண்ணுப்பெயர் திணைவிராய் வருதல் வரையார் எ-று.

தே.—வியங்கொள்ளும் எண்ணுப்பெயர் திணை விரவுதல் நீக்கார் எ-று. 'தன்மைச் சொல்லே...' (சொல். 43) என்ற சூத்திரத்துப்போல இச்சூத்திரத்திலும் உரையாசிரியர் தெய்வச்சிலையார் கொள்கை வேறு; ஏனையோர் கொள்கைவேறு. வியங்கோள் வினைகொள்ளுமிடத்தும் உயர்திணை அஃறிணைப் பெயர்கள் உடன் எண்ணப்படலாம் என்பது உரையாசிரியர் தெய்வச்சிலையார் கொள்கை. வியங்கோள்வினை உயர்திணைப் பெயரொடு வருமிடத்து உயர்திணையாகவும், அஃறிணையோடு

வருமிடத்து அஃறிணையாகவும் இருப்பினும், உயர்திணை அஃறிணைப்பெயர் இரண்டும் சேர்ந்துவருகையில் ஒரு வியங்கோள் வினையையேகொண்டு முடியலாம் என்பது சேனாவரையர் நச்சினார்க்கினியர் கருத்து.

உயர்திணைப்பெயரும் அஃறிணைப்பெயரும் உடன் எண்ணப்படலாம் என்பது வேறு சூத்திரத்தாற் பெறப்படாமையானும், வியங்கோள்வினை இருதிணைக்கும் பொதுவாகலானும் உரையாசிரியர் தெய்வச்சிலையார் இவ்விருவர் கொள்கையே பொருந்தும்.

உரையாசிரியர் கருத்தைச் சேனாவரையர் நான்கு காரணங்களால் மறுக்கின்றனர். அவற்றுள் முதலாவது 'திணைவேறுபாடுண்டேனும் யானுமென்னெஃகமும் என்புழி வினைமுதலுங் கருவியுமாகிய இயைபும், ஆவுமாயனும் என்புழி மேய்ப்பானும் மேய்க்கப்படுவனவுமாகிய இயைபுமுண்மையான் உடனெண்ணப்படுதல்' என்பது. இயைபைக் கற்பிக்கப்புகின் எந்தப் பொருளோடும் எதற்கும் இயைபு கற்பிக்கலாம். ஆகவே, இயைபைக் கற்பிக்காமல், உரையாசிரியர் கூறிய பொருளின்படி தன்மை யஃறிணைப் பெயர்களையும் உயர்திணை யஃறிணைப்பெயர்களையும் உடனெண்ணுதல் ஆசிரியரது சூத்திரங்களாற் பெறப்படுமென்றலேசாலும்; அன்றியும், சேனாவரையர் கொள்கைப்படி 'பன்மையுரைக்குந் தன்மைக் கிளவி...... (சொல். 209) என்ற சூத்திரம் கூறியதுகூறலாகும். 'யானை தேர் குதிரை காலாளெறிந்தான் என முன்னர் உதாரணங்காட்டுதல்' (சொல். 291) என்பது இரண்டாவது மறுப்பு. திணைவிராய் வந்து

முன்னிலை வினைகோடலைச் செய்யுண்முடிபாலும், வியங்கோளல்லா விரவுவினையோடு வருவதை ஒன்றென முடித்தலாலும் இவர் கொள்வதுபோல, ஒன்றென முடித்தலால் 'யானை தேர் குதிரை காலாளெறிந்தான்' என்பதை உரையாசிரியர் கொண்டனர் எனின் குற்றம் என்னை ? 'எண்ணுத்திணைவிரவுப்பெயர் அஃறிணை முடிபின' (சொல். 51) என ஆசிரியர்க்கு ஆராய்ச்சி முடிபு கோடற்கண்ணது' என்பது மூன்றாவது மறுப்பு. அச்சூத்திரம் முடிபைக் கூறினும், 44-வது சூத்திரம் எண்ணுமுறை வரும் பெயரைக் குறிப்பதால், 43-வது, 45-வது சூத்திரங்கள் அவ்வாறே எண்ணுமுறை வரும் பெயரைப்பற்றிக் கூறுகின்றன எனின் குற்றம் யாது? "திணைவிராய் எண்ணல் வழுவென்பதே கருத்தாயின் ...படர்க்கைச்சொல்லும் அஃறிணைக்கிளவியும் விராயெண்ணுதல் வழக்குப்பயிற்சி யுடைமையான் அவையுடங்க உயர்திணைச் சொல்லே யஃறிணைக்கிளவி எனப் பொதுப்படவோதாது 'தன்மைச் சொல்லே யஃறிணைக் கிளவி' எனத் தன்மைச் சொல்லையே விதந்தோதல் குன்றக்கூறலாம்" என்பது நான்காவது. 'பன்மை யுரைக்குந் தன்மைக் கிளவி...' (சொல். 209) என்ற சூத்திரத்தில் தன்மைப்பெயரும் அஃறிணைப்பெயரும் எண்ணுமிடத்துத்தன்மைப்பன்மை வினைகொள்ளும் என்று அதிகாரப்படுவதால், அவ்விரண்டும் விராய் எண்ணப்படும் என்பது பெறப்பட ஓர் சூத்திரம் கூறவேண்டியமையாலும், அஃறிணைச்சொல்லையும் படர்க்கைச்சொல்லையும் எண்ணுவதைத் தன்னின முடித்தலாற் கொள்வது எளிதாகையாலும் சேனாவரையர் கூறும் நான்காங் குற்றமும் ஏற்புடைத்தன்று.

46. வேறுவினைப் பொதுச்சொ லொருவினை கிளவார்.

இச்சூத்திரத்திற்கு நால்வரும் ஒருவகையாகவே பொருள் உரைத்தனர். உதாரணத்தில் உரையாசிரியரும் சேனாவரையரும் அயின்றார் என்றதைப் பொதுவினையாகவும், சேனாவரையர் மிசைந்தார் என்றதையும் பொதுவினையாகவும் கொண்டதை நச்சினார்க்கினியர் மறுத்து, உண்டார் என்பதைக் கூறி 'உண்டற் குரியவல்லாப் பொருளை—யுண்டன போலக் கூறலு மரபே' என்ற பொருளியற் சூத்திரத்தை அதற்குமேற்கோளாகக் காட்டினர். அவர் மறுப்பிற் காட்டியுள்ள 'மூங்கின் மிசைந்த முழந்தா ளிரும்

8



பிடி' முதலியவற்றிற் பொதுவினையான மிசைதல் முதலியவற்றைச் சிறப்புப் பொருளில் வந்தன என்று கொண்டாற் குற்றம் என்னை?

பா-ம்.—'ஒருவினை' என்றதற்குப் பிரதியாக 'ஒரூஉவினை' என்ற பாடபேதம் உளது என்று உரையாசிரியர் உரையால் வெளியாகின்றது.

48. இரட்டைக் கிளவி யிரட்டிற்பிரிந் திசையா.

பா-ம். உ.—'இரட்டுப் பிரிந்திசையா'. 'சே. ந. தே.'—'இரட்டிற் பிரிந்திசையா.'

50. பெயரினுந் தொழிலினும் பிரிபவை யெல்லா
மயங்கல் கூடா வழக்குவழிப் பட்டன.

பொருள். உ.—மேனின்ற அதிகாரத்தால் உயர்திணைக் கண்ணும் அஃறிணைக்கண்ணும் பெயரினும் தொழிலினும் பிரிந்து வருமவையெல்லாம் மயங்குதற்குச் செல்லா; வழங்கு வழிப் பட்டன ஆகலான் என்பது. எ-று.

சே.: ந.—உயர்திணைக்கண்ணும் அஃறிணைக்கண்ணும் பெயரினானும் வினையினானும் பொதுமையிற் பிரிந்து ஆண்மைக்கும் பெண்மைக்கு முரியவாய் வருவனவெல்லாம் வழுவாகா; வழக்கு வழிப்பட்டனவாகலான் எ-று.

தெ.—உயர்திணைக்கண்ணும் அஃறிணைக்கண்ணும் பெயரானும் தொழிலானும் பொதுமையிற்பிரியும் பொருளெல்லாம் எண்ணுங்கால், தம்முண் மயங்குதல் கூடாதவழக்குவழிப்பட்டன எ-று.... (எனவே இனஞ்சேர எண்ணல் வேண்டும் என்றவாறாயிற்று. எண்ணுங்கால் என்பது தந்துகொணர்ந்துரைத்தல் என்னும் தந்திர வுத்தியால், வருகின்ற சூத்திரத்தினின்றும் கொணர்ந்துரைக்கப்பட்டது.)

உரையாசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் இம்மூவர் கூறும் பொருளும் ஒன்று. மூவரும் 'வடுகரசர் ஆயிரவர் மக்களையுடையர்' முதலிய உதாரணங்களைக் கூறினர். இவை 'அவற்றுள் வினை வேறுபடூஉம்...' (சொல். 53) என்ற சூத்திரத்திற்கண்ட 'சார்பினும்' என்பதில் அடங்குமென்று கருதி இச்சூத்திரத்திற்குத் தெய்வச்சிலையார் கூறிய வேறு பொருளும், அவர் கூறும் 'முனிவரும் அந்தணரும் சான்றோரும்', 'பாணருங் கூத்தரும் விறலியரும்', முதலிய உதாரணங்களும் நோக்கற்பாலன. இப்பொருள்



கொள்ளின் இச்சூத்திரம் 'பலவயினானும்...' (சொல். 51) என்ற மேற்சூத்திரத்துக்குமுன் ஏன் வைக்கப்பட்டது என்பது நன்கு விளங்கும்.

பா-ம். தெ.—'உயர்திணை மருங்கினு மஃறிணை மருங்கினும்'

என்பது முற்சூத்திரத்திலிருந்து எடுக்கப்பட்டு ஈண்டுச்சேர்க்கப் பட்டது.

### 51. பலவயி னானு மெண்ணுத்திணை விரவுப்பெய ரஃறிணை முடிபின செய்யு ளுள்ளே.

**அவதாரிகை.**—ஓர் இனங்குறித்து உயர்திணையும் அஃறிணையும் விராய் எண்ணப்படின் அவற்றின் முடிபு உயர்திணையாயிருக்க வேண்டுமா? அஃறிணையாயிருக்கவேண்டுமா? என்ற ஐயம் நிகழ, அதனைப் போக்குகின்றது இச்சூத்திரம் என்க.

**பொருள். உ.**—பலவிடத்தினானும் உயர்திணையும் அஃறிணையும் விரவி எண்ணப்படும்பொருள் அஃறிணை முடிபினவாம் செய்யுளகத்து.

**சே.**—திணைவிரா யெண்ணப்பட்ட பெயர் செய்யுளகத்துப் பெரும்பான்மையும் அஃறிணைச் சொற்கொண்டு முடியும்.

**ந.**—பலவிடத்துந் திணைவிராய் எண்ணப்பட்ட பெயர் செய்யுளகத்துப் பெரும்பான்மையும் அஃறிணைச் சொற்கொண்டு முடியும்.

**தே.**—எண்ணின்கண் திணைவிரவி வரும்பெயர் பெரும்பான்மையும் அஃறிணை முடிபின செய்யுளுள் எ-று. எனவே சிறுபான்மை உயர்திணையான் முடியவும் பெறுமென்று கொள்க.

இங்கு உரையாசிரியர் பலவயினானும் என்பதை உத்தேசியமாகிய எண்ணுத் திணைவிரவுப்பெயருடன் கூட்டி, 'சிலவயினான அஃறிணை விரவாது உயர்திணையான் எண்ணி, அஃறிணைமுடிபிற்றாகலும் உண்டு' என்று பயனும் 'பாணன், பறையன், துடியன், கடம்பனென்றிந்நான் கல்லது குடியுமில்லை' என்று உதாரணமும் கூறினர். சேனாவரையரும் தெய்வச்சிலையாரும் அச்சொல்லை

(பலவயினானும் என்பதை) விதேயமாகிய அஃறிணைமுடிபின என்பதுடன் கூட்டிச் 'சிறுபான்மை உயர்திணைச்சொல்லைக்கொண்டு முடியவும் பெறும்' என்று பயன் கூறினர். சேனாவரையர் 'பாணன் முதலாயினாரைக் குடியென்று சுட்டியவழிக் குடிக்



கேற்ற தொகை கொடுத்தல் வழுவன்மையான் அவ்வுரை போலியுரையென்று மறுக்க' என்று உரையாசிரியரை மறுத்தார். நச்சினார்க்கினியர் பலவயினானும் என்பதை உத்தேசியம், விதேயம் இரண்டிடத்துங் கூட்டி உரையாசிரியர் சேனாவரையர் இருவர் கருத்திற்கியையச் சூத்திரத்திற்குப் பொருள் கூறி, 'பாணன் பறையன்...அந்நான்கல்லது குடியு மில்லை' என்றவிடத்து, உரையாசிரியரை மறுத்த சேனாவரையரைப் 'பாண்குடி பறைக்குடியெனக் குடியைச் சுட்டிநில்லாது பாணன் பறையன் எனப் பால்காட்டி நிற்றலான் உயர்திணைப்பொருள் நின்று அஃறிணை முடிபு கொண்டனவேயாம்' என்று மறுத்தனர்.

பலவயினானும் என்பது விதேயமாகிய கொண்டுமுடியுஞ் சொல்லொடு இயைதற்கே உரியதாகத் தோன்றுவதால் நச்சினார்க்கினியர் கூறியவாறு உத்தேசியமாகிய எண்ணுத்திணைவிரவுப்பெயர் என்பதனோடும் அந்நுவயிக்குமா என்பது ஆராய்தற்கு உரியது. இவர் கூறிய பயன், பெரும்பான்மையும் அஃறிணைச்சொற்கொண்டு முடியும் என்று கூறியதினின்றே பெறப்படலாம். இவ்வாறிருக்க, பலவயினானும் என்பதை இவர் ஈரிடத்துஞ் சேர்த்தது உரையாசிரியர் கூறுவதையும் சேனாவரையர் கூறுவதையும் தழுவுவதென்ற ஒரு கொள்கைபற்றியே.

53. அவற்றுள்,

வினைவேறு படூஉம் பலபொரு ளொருசொல்
வேறுபடு வினையினு மினத்தினுஞ் சார்பினுந்
தேறத் தோன்றும் பொருடெரி நிலையே.

இங்குச் சார்பு என்பதற்குச் சந்தர்ப்பம் என்பது பொருள். இம்மா வயிரம் என்னுமிடத்து முடிக்கும் வினையின்மையின் இச்சூத்திரம் ஆங்குச் செல்லாது, குன்றக்கூறலென்னுங் குற்றமுடைத்தாமெனின், அற்றன்று; வினையென்பது இங்கு முடிக்குஞ் சொல் என்பதற்கு உபலக்கணமாதலின். சூத்திரத்திற் சார்பினும் என்பதே போதும், வினையினும் இனத்தினும் என்றது எற்றுக்கு எனின், எளிதிற் பொருள் தோன்றுவதற்கேயாகும்.

54. ஒன்றுவினை மருங்கி னொன்றித் தோன்றும்
வினைவேறு படாஅப் பலபொரு ளொருசொன்
னினையுங் காலைக் கிளந்தாங் கியலும்.



பொருள். உ.—பொதுவினையாயிற் பகுதியுணராமற்றோன்றும். வினைவேறுபடாஅப் பலபொருளொருசொல்லை ஆராயுமிடத்து இன்னதென்று அறியக் கிளந்தே சொல்லுக.

சே.—வேறுபடாத வினைகொண்டவழி வேறுபடாது தோன்றும் வினைவேறுபடாப் பலபொருளொருசொல் ஆராயுங்காற் கிளந்து சொல்லப்படும்.

ந.—முற்கூறிய வினைவேறுபடூஉம்பலபொருளொருசொல் வேறுபட நில்லாது பொதுவினைகொண்டு பொதுமைப்பட

னின் றுழியும் வினைவேறுபட்டாற்போல இன்னதிது வென வேறு படநிற்றலும் வழக்கினகத்துண்டு. வினையான் வேறுபடாத பல பொருளொருசொல் ஆராயுங்காலத்து இன்னதிது வெனக் கிளக் கப்பட்டு அவ்வாராய்ச்சியுடையவிடத்து நடக்கும்.

தெ.—வினைவேறுபடும் பலபொருளொருசொல், வேற்றுமை வினைகொண்டு முடிதலேயன்றி இருபொருட்கும் பொருந்திய ஒரு வினைகொண்டு முடியின், பிறிதொரு சொல்லோடு ஒன்றிப் பொருள்தோன்றும் எ-று. (மா வீழ்ந்தது என்றவழி இன்ன மாவென்பது அறியலாகாமையின், யானை முறித்தலால் வீழ்ந்தது என்றவழி மரம் உணர்த்தியவாறு கண்டுகொள்க. வினைவேறு படாத பலபொருளொருசொல் பொருள் உணருங்கால் எடுத்துக் கூறல் வேண்டும் எ-று. உ-ம். சேவல், பெடை என்பன வினை யால் வேறுபடாமையால் அன்னச்சேவல், குயிற்சேவல், அன்னப் பெடை, குயிற்பெடை என எடுத்துக்கூறப் பொருள் விளங்கின வாறு கண்டுகொள்க.)

உரையாசிரியர் நச்சினார்க்கினியர் தெய்வச்சிலையார் இம் மூவர் கொள்கைப்படி 'ஒன்றுவினை மருங்கி னொன்றித் தோன் றும்' என்பது 53-வது சூத்திரத்திற்குப்புறனடையான தனிச் சூத்திரம். ஆயினும் மூவரும் பொருளில் தனித்தனி வேறுபட்ட னர். 'பொதுவினையாயிற் பகுதியுணராமற்றோன்றும்' என்று உரையாசிரியர் கூறியுள்ளது இச்சூத்திரத்திற்குப் பொருளாயின், இச்சூத்திரம் எற்றுக்கு? கூறுவோன் உள்ளத்திலுள்ளதைக் கேட்போனுக்கு அறிவித்தற்பொருட்டன்றோ சொற்றொடர் நிகழ்ச்சி; அஃது அவ்வாறு அறிவிக்காவிடின், அது வாக்கியமே யாகாது. நச்சினார்க்கினியர் 'முற்கூறிய வினைவேறுபடூஉம்

பலபொருளொருசொல் வினையான் வேறுபடலில்லாது பொது வினைகொண்டு பொதுமைப்பட நின்றுழியும் வினைவேறுபட்டாற் போல இன்னதிதுவென வேறுபடநிற்றலும்வழக்கினகத்து உண்டு' என்று பொருள் கூறி, 'மாவீழ்ந்தது என்பது வீழ்தல்வினை எல்லாவற்றிற்கும் பொதுவேனும் இவ்விடத்து இக்காலத்து இவன் சொல்லுகின்றது இம்மாவினையென ஒன்றினை உணர்த்திநின்ற வாறு காண்க' என்று கூறினர். இம்மாவினையென ஒன்றினை உணர்த்திநின்றது முற்சூத்திரத்திற் கூறின சார்பில் அடங்கும். அவ்வாறே தெய்வச்சிலையார் கூற்றும் ஏற்புடைத்தன்று. ஆதலின் சேனாவரையர்பொருளே பொருத்த முடையதாகும்.

சேனாவரையர் 'தோன்றும்' என்பதனை 'வினைவேறுபடாஅப் பலபொருளொருசொல்' என்பதைத் தழுவும் பெயரெச்சமாகக் கொண்டு முழுமையும் ஒரு சூத்திரமென்று உணர்த்தி, 'ஒன்று வினைமருங்கினொன்றித் தோன்றும்' என்பதை உரையாசிரியர் தனிச்சூத்திரமாகக்கொண்டது பொருந்தாது என்று—'அங்ஙனம் பிரிப்பின்...அது போலியுரை என்க' என்பதனால் மறுத்தனர். நச்சினார்க்கினியர் 'அங்ஙனம் பொருள் கூறின், வினைவேறுபடாப் பலபொருளொருசொல்லென வேறோர் சொல்லின்றி ஆயிரு வகைய வென்பதனோடு மாறுபடும்' என்று சேனாவரையரை மறுக்கின்றார். இங்ஙனம் மறுப்பவர் வினைவேறுபடாஅப் பலபொருளொருசொல்லுக்குத் தனியே வேறு உதாரணங்காட்டவேண்டும். காட்டாது அவர்கூறிய உதாரணத்தையே கூறுவது பொருந்துமா வென்பது ஆராயத்தக்கது.

பி-ம். இ. நம்.—'அமையும், ஆராய்ச்சியுடைய நிலம் என்பது எருநிலம்' என்ற சொற்றொடர் பொருளியைபின்றி நிற்கின்றது. அவ்வாறன்றி 'யாதோவெனின்' என்றதன் பின்னரும் 'கன்று நீரூட்டுக' என்றதன் முன்னரும் 'நிலம் செல்க என்றவிடத்து விளைநிலமும் எருநிலமும் ஆங்கு உள்வாயின், அவன் சொன்ன நிலம் நிற்பப் பிறிதொரு நிலஞ்செல்லுதல் வழுவாம். அதனான் இன்னநிலமென்று கிளந்து சொல்லுக. அல்லாக்கால் இன்ன நிலமென்று கிளவாதே சொல்ல அமையும். ஆராய்ச்சியுடைய நிலம் என்பது எருநிலம்' என்று இருப்பிற் பொருந்துமென்று தோன்றுகின்றது.



## 55. குறித்தோன் கூற்றந் தெரித்துமொழி கிளவி.

இச்சூத்திரத்திற்கு உரையாசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் மூவரும் 'தான் ஒரு பொருளைச் சொல்லக் கருதுமேல், அதனை இற்றென்று தெரித்துச் சொல்லுக' என்றும், தெய்வச்சிலையார் 'தெரிந்து வேறுபடுக்கவருஞ்சொல்லைக் கிளந்துரைத்தலேயன்றி, குறித்தோன் கூற்றமும் ஆம்' என்றும் பொருள் உரைத்தனர். முன்னர்க்கூறிய பொருளே பொருந்தும்.

56. குடிமை யாண்மை யிளமை மூப்பே
யடிமை வன்மை விருந்தே குழுவே
பெண்மை யரசே மகவே குழவி
தன்மை திரிபெய ருறுப்பின் கிளவி
காதல் சிறப்பே செறற்சொல் விறற்சொலென்
றவறு மூன்று முளப்படத் தொகைஇ

யன்ன பிறவு மவற்றேடு சிவணி
முன்னத்தி னுணருங் கிளவி யெல்லா
முயர்திணை மருங்கி னிலையின வாயினு
மஃறிணை மருங்கிற் கிளந்தாங் கியலும்.

இச்சூத்திரத்திற்கு உரையாசிரியர், சேனாவரையர், நச்சி னார்க்கினியர் மூவரும் பொருள் ஒரு வகையாகவேகொண்டனர்.

சேனாவரையர் 'குடிமை, ஆண்மை, இளமை, மூப்பு, அடிமை, வன்மை, பெண்மை, உறுப்பின்கிளவி, சிறப்புச்சொல், விறற் சொல் என்பன உயர்திணைக்கண் ஆகுபெயராயல்லது வாரா' என்று கூறினர். குடிமைமுதற் பெண்மையீறாகக் கொண்ட சொற்கள் இயற்கையாய்ப் பண்பைக் குறிப்பினும், இங்கு பண் போடுகூடிய சாதியைக் கூறுவதாலும், உறுப்பின்கிளவி, உறுப் பின் பண்பைக் குறிப்பினும், இங்கு அப்பண்புடன்கூடிய உறுப் புடையோனைக் கூறுவதாலும், விறற்சொல் விறலைக்கொண்டோ னைக் காட்டுவதாலும், இயற்கையாய் ஒன்றையுணர்த்துஞ் சிறப் புச்சொல் இங்கு அதற்கு ஒப்பான மக்களைக் கூறுவதெனக்கருதி அவ்வாறு கூறினர். ஆகவே, குடிமை முதலியன உயர்திணைப் பொருளை யுணர்த்தினவேனும் சொல்லால் அஃறிணையாயிருத்தல் பற்றி அஃறிணைமுடிபைப்பெறும் என்று கூறினாராயிற்று. ஒரு சொல் ஆகுபெயரால் மற்றொரு பொருளைக் குறிப்பது, அச்



சொற்கொண்ட வாக்கியத்தில், அச்சொல்லுக்குச் சமயவாற்ற

லாற்கொண்ட பொருள் பொருந்தாவிடத்தேயாம். ஆதலின் வினை கூறுவதற்கு முன்னரே அஃறிணையைக் குறித்து நிற்கும் குடிமை முதலாயின ஆகுபெயரால் உயர்திணையைக் குறிக்குமென்றது பொருந்தாது. ஆதலின் குடிமை முதலாயின ஆற்றலால் உயர்திணைப் பொருளையும், அஃறிணைப்பொருளையும் உணர்த்தும் என்பதே ஆசிரியரது கொள்கையாயிருத்தல்வேண்டும். இதனை மனத்திற்கொண்டுதான் நச்சினார்க்கினியர் 'இனிக் குடிமை ஆண்மை முதலியவற்றை ஆகுபெயரென்பாருமுளர். குடிமையென்னுங் குணப்பெயர் ஆகுபெயராய்க் குடிமகனை உணர்த்திற்றேற், குடிமை நல்லனென உயர்திணையான் முடியும்; அன்றி குடிமையெனத் தனக்கு உரிய பண்பையுணர்த்தி நிற்குமேற் பின்னர் அஃறிணை மருங்கிற் கிளந்தாங்கியலு மெனவேண்டா, தானே அஃறிணையான் முடியும்: ஆதலின் ஆகுபெயரென்றலும் பண்புணர்த்தி நிற்கும் என்றலும் பொருந்தாமை யுணர்க' என்று மறுத்தனர்.

தெய்வச்சிலையாரும் 'இவையெல்லாம் ஆகுபெயர் அன்றோ வெனின் ஆகுபெயராயின் தன்பொருட்குரிய பாலான் முடியும். இவை அன்னவன்றி வேறுபட்டு முடிதலாற் குறிப்பு மொழியாயின' என்றனர்.

பி-ம்.—நச்சினார்க்கினியப்பதிப்பில் 'அப்பண்புச் சொல் தன் பன்மையும்...' 'விரவுப்பெயராய் அஃறிணைப்பன்மை...' என்னுமிடங்களில் தன்பன்மையும், அஃறிணைப்பன்மை இவற்றிற்குப் பிரதியாக தன்தன்மையும், அஃறிணைப்பண்பை என்று இருத்தல் வேண்டும்.

57. கால முலக முயிரே யுடம்பே
பால்வரை தெய்வம் வினையே பூத
ஞாயிறு திங்கள் சொல்லென வரூஉ
மாயீ ரைந்தொடு பிறவு மன்ன
வாவயின் வரூஉங் கிளவி யெல்லாம்
பால்பிரிந் திசையா வுயர்திணை மேன.

இச்சூத்திரத்தில் சொல் என்பதற்குச் சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் 'நாமகளாகிய தெய்வம்' என்றும், தெய்வச்சிலையார் 'வேதம்' என்றும் பொருள் கொண்டனர். சேனாவரையர்



உலகமென்பது வடசொல்லென்று கூறினர். நச்சினார்க்கினியர் 'ஆசிரியர் வடசொற்களை எடுத்தோதி இலக்கணங்கூறாராகலின் அது வடசொல்லன்று' என்று மறுத்தனர். இச்சூத்திரத்தின் கண்ணே தெய்வம், பூதம் என்ற வேறு வடசொற்களும் இருப்பதால் அவர் கூறுங்காரணம் பொருந்தாது.

59. இசைத்தலு முரிய வேறிடத் தான.

ஈண்டு வேறிடத்தான என்பதற்கு உரையாசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் இம்மூவரும் ஈறுதிரிந்து வாய்பாடு வேறுபட்ட வழி என்றும், தெய்வச்சிலையார் அஃறிணையின்கண் என்றும் பொருள் கொண்டனர். 'காலமுலகம்...' (சொல். 55) என்ற சூத்திரத்தில் காலம் முதலியன பால்பிரிந்திசையா என்று கூறப்பட்டமையால், அதற்கு இணங்க வேறிடத்தில் பால்பிரிந் திசைக்கும் என்று கூறுவதே பொருத்தமுடைத்து.

60. எடுத்த மொழியினஞ் செப்பலு முரித்தே.

உரையாசிரியரும், தெய்வச்சிலையாரும் இச்சூத்திரம் அருத்தாபத்தியைக் கூறுகின்றது என்று கருதினர். உரையாசிரியர் இதற்கு உதாரணமாக 'மேலைச்சேரிக்கோழி அலைத்தது என கீழைச்சேரிக்கோழி அலைப்புண்டமை சொல்லாமையே முடிந்ததாம். குடங்கொண்டான் வீழ்ந்தான் என்றவழிக் குடம்வீழ்ந்தமை சொல்லாமையே முடிந்ததாம்' என்று கூறினர். இதனைச் சேனாவரையர் 'கீழ்ச்சேரிக்கோழி யலைப்புண்டலின்றி மேற்சேரிக்கோழியலைத்தலைமையாமையானும், குடம் வீழ்தலின்றிக் குடங்கொண்டான் வீழ்தலைமையாமையானும் கீழ்ச்சேரிக்கோழி யலைப்புண்டலும் குடம்வீழ்தலும் சொல்லானன்றி இன்றியமையாமையாகிய பொருளாற்றலாற் பெறப்படுமாகலான் ஈண்டைக்கெய்தா. இது சொல்லாராய்ச்சி யாகலான்' என்று மறுத்து, 'இனமாகிய பல பொருட்கண் ஒன்றனை வாங்கிக் கூறியவழி அச்சொல் தன் பொருட்கினமாகிய பிறபொருளைக் குறிப்பா னுணர்த்த லுரித்து' என்று இச்சூத்திரத்திற்குப் பொருள் கூறினர். 'தத்தங் குறிப்பி னெச்சஞ் செப்பும்' (சொல். 440) என்ற சூத்திரத்தினடியில் அவர் எழுதிய உரையை நோக்கின், இச்சூத்திரப் பொருளும் ஆங்கு அடங்கு மென்பது தெளிவாகும். மேலும், 'அறஞ்செய்தான் சுவர்க்கம் புகும்' என்புழி இனப்பொருளியல்புரைக்

9



குங்குறிப்புள்வழி மறஞ்செய்தான் நிரயம்புகான் என இனஞ் செப்புவது பொருளாற்றலாலா, சொல்லாற்றலாலா? ஆதலின் உரையாசிரியர் தெய்வச்சிலையார் கொள்கையே பொருந்தும்.

நச்சினார்க்கினியர், உரையாசிரியர் கூறியதுபோல் இச்சூத்திரம் அருத்தாபத்தியைக் கூறுகின்றது என்று கூறிச் சேனாவரையர் பகர்ந்த உதாரணத்தையுங் காட்டினர். அவ்வுதாரணம் அவர் கருத்துப்படி செய்யுளியலிற் கண்ட குறிப்பெச்சத்திற்கு விஷயமாதலான் அதனை இங்குக் கூறவேண்டியதின்று.

61\. கண்ணுந் தோளு முலையும் பிறவும்
பன்மை சுட்டிய சினைநிலைக் கிளவி
பன்மை கூறுங் கடப்பா டிலவே
தம்வினைக் கியலு மெழுத்தலங் கடையே.

பொருள். உ.—கண்ணுந் தோளும் முலையும் பிறவும் பன்மைப்பாலாற் கூறுதல் கடப்பாடில, தம்வினைக்கியலும் எழுத்தல்லாதவிடத்து எ-று.

சே.—கண்முதலாயவும் பிறவும் பன்மை குறித்துநின்ற சினைநிலைக்கிளவி; அவை தம் வினைக்கியலுமெழுத்தான் முடியாது தம் முதல்வினைக்கியலு மெழுத்தான் முடியும்வழிப் பன்மையாற் சொல்லப்படும் யாப்புறவுடைய வல்ல; முதலொன்றாயின் ஒருமையானும், பலவாயிற் பன்மையானுங் கூறப்படும் எ-று.

ந.—கண்ணுந் தோளும் முலையும் அவைபோல்வன பிறவும் பன்மையைக் குறித்துநின்ற சினைநிலைமையை உணர்த்திய சொற்கள்: அவை தமக்கு உரிய பன்மைவினைக்கேற்ற அகர வீற்றாற் கூறக்கருதாது தம் முதல்வினைக்கேற்ற ஒருமையீற்றானும் பன்மையீற்றானுங் கூறக் கருதியவழி தமக்கு உரிய பன்மையாற் கூறப்படும் யாப்புறவு உடையவல்ல எ-று.

தே.—கண்ணும் தோளும் முலையும் அத்தன்மைய பிறவும் ஆகிய பன்மை சுட்டிய சினை உணர வருஞ்சொல், தம்வினைக் கேற்ற எழுத்தான் முற்றுப்பெறுதவழிப் பன்மையுணர்த்தும் மரபில எ-று. (எனவே பன்மை ஈற்றான் வாராக்கால் ஒருமை ஈற்றான் வரப்பெறும் என்பதூஉம், அவ்வழி அவ்விருபொருட்கண்ணும் கிடப்பதொரு பொதுமையைக்குறிக்கும் என்பதூஉங் கொள்ளப்படும். கண் நொந்தது, முலை எழுந்தது, தோள்



தசைத்தது என்றவழிப் பன்மையுணர்த்திற்றிலவாயினும் அச்சாதியொருமையை உணர்த்தியவாறு கண்டுகொள்க... ஒப்பக்கூறல் என்னும் தந்திரவுத்தியால் சினைப்பொருளேயன்றி முதற்பொருளும் சாதியொருமைபற்றி வருவனவும் அமைத்துக்கொள்க... அஃதேல், கண்ணல்லன் என்பது எவ்வாறு வந்ததெனின், கண்ணது நன்மையுடையன் என்னும் பொருள்படவந்தது. கண்ணொந்தான் என்பது எவ்வாறு வந்ததெனின், கண்ணோவப்பட்டானெனச் செயப்படுபொருள் குறித்து நின்றது).

உரையாசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் மூவரும் கொண்ட பொருள் ஒன்றே. மூவரும் கண்ணல்லள், தோணல்லள் முதலிய உதாரணங்களைக்கூறிக் கண், தோள் என்பன நல்லவ என்பதைக் கொண்டுமுடிந்தன ; ஆகவே, இச்சூத்திரத்தில் 'பன்மை கூறுங் கடப்பாடிலவே யென்றதனாற் பால்வழுவும், தம்வினைக்கியலுமெழுத்தலங்கடை யென்றதனாற் றிணைவழுவுமமைத்தார்' என்று கூறினர். இவ்விடங்களில் எழுவாய் அவளென்பதும், கண்ணல்லள் முதலியன வேற்றுமைத்தொகையாய் நின்று பயனிலையாகின்றன என்பதும் தெய்வச்சிலையார் உரையால்

விளங்கும். அம்மூவர் கூற்றின்படி, அவள் கண்ணல்லள் என்னுமிடத்துத் தம் வினைக்கியலுமெழுத்தல்லாத நல்லள் என்ற சொல்லோடுமுடிந்த கண் என்பது உத்தேசியமாகும். பன்மையாற் சொல்லப்படும் யாப்புறவுடையவல்ல என்பது விதேயமாகும். ஆகவே, நல்லள் என்ற வினையோடு முடிந்தபிறகு நல்லன என்ற வினையோடு முடியாது என்று விதிப்பது பொருந்தாக்கூற்றும்.

தெய்வச்சிலையார் 'இச்சூத்திரம் சாதியொருமையைக் குறிக்கின்றது' என்றனர். 'ஒருமை சுட்டிய பெயர் நிலைக் கிளவி—பன்மைக்காகு மிடனுமா ருண்டே' (சொல். 461) என்ற சூத்திரத்தானே அது பெறப்படும். மேலும் 'பன்மை கூறுங் கடப்பாடிலவே' என்றதனால் கண் நொந்தது என்ற பிரயோகத்தைக் கொண்டு அங்குக்கண் என்பது சாதியொருமையாகையால் இரண்டுகண்ணும் எனப்பொருள்பட வந்தது என்று அவர் கொள்ளுவது சூத்திரப்போக்குக்குப் பொருத்தமின்று.

ஆயின் இச்சூத்திரத்திற்குப் பொருள் யாது? எனின்,—தம் வினையாகிய அஃறிணைப்பன்மைக்கு இயலும் எழுத்தல்லாத



விடத்துப் பன்மையைச் சுட்டும் சினைநிலைக்கிளவியாகிய கண், தோள், முலை முதலியன பன்மையைக் குறிக்கவேண்டுமென்ற நியதி இல்லை. இடத்திற்கேற்றவாறு பன்மையையுங் குறிக்கலாம், ஒருமையையுங் குறிக்கலாம். இவள் கண்ணாற்கொத்தை, கண்ணகி முலையிலாள் முதலிய வழக்குக்கள் இரண்டுகண்ணும், இரண்டு முலையும் இல்லாமலிருக்கும்போதுதான் வரவேண்டுமென்ற நியதியில்லை. ஒரு முலையில்லாமலிருக்கும்போதே கண்ணகி முலையிலாள்

என்றும், ஒரு கண்ணில்லாமலிருக்கும்போதே இவள் கண்ணுற் கொத்தை என்றும், ஒரு கால் முடமாய் இருக்கும்போதே அவன் காலால் முடவன் என்றும் பிரயோகங்கள் உலகில் வழங்கி வருதல்காண்க.

இப்பொருளைக்கொள்ளின் உரையாசிரியர் சேனவரையர் நச்சினார்க்கினியர் இவர்கள்போல, மூக்கு நல்லள், கொப்பூழ் நல்லள் முதலியவற்றைத் தன்வினை முடித்தலாற் கொள்ள வேண்டா. தெய்வச்சிலையார் கண்ணல்லள் என்பதற்குக் கூறிய வாறே மூக்குநல்லள் முதலியவற்றை மூக்குநன்மை என்ற தொகைச்சொற்புறத்துப் பிறந்த குறிப்புவினை என்று கொண்டு விடலாம். அன்றியும் தெய்வச்சிலையார்போல் 'ஒப்பக்கூறல்' என்ற தந்திர வுத்தியால் 'சினைப்பொருளேயன்றி முதற்பொரு ளும் சாதியொருமை பற்றிவரும்' என்று அமைத்துக்கொள்ளவும் வேண்டா.

இவ்வாறு பொருள் கூறின், இது பொருளாற்றலாற் பெறப் படுமேயன்றிச் சொல்லாற்றலாற் பெறப்படாதே யெனின், பொரு ளாற்றலாற் பெறப்படுவதைக்கூறும் 'எடுத்த மொழியினஞ் செப் பலு முரித்தே' (சொல். 60) என்ற சூத்திரத்துக்குப்பின் பொருளாற்றலாற் பெறப்படுவதைக் கூறும் இச்சூத்திரம் நன்கு பொருந்து மென்க.

கிளவியாக்கம் முற்றும்.

---

## 2. வேற்றுமையியல்.

## கிளவியாக்கத்துடன் வேற்றுமையியலுக்குள்ள இயைபு.[1]

உ.—மேலோத்தினுள் நால்வகைப்பட்ட சொற்களையும் பொருள்கள்மேலாமாறு கூறிப்போந்தான் ; அவற்றுள் முதலது பெயர்ச்சொல் ; அதனது இலக்கணம் உணர்த்திய எடுத்துக் கொண்டான்.

சே.—நான்குசொற்கும் பொதுவிலக்கண முணர்த்தினர் ; அதற்கு இடையீடின்றி அவற்றது சிறப்பிலக்கணமுணர்த்துதன் முறைமையாயினும், வேற்றுமையிலக்கணமுணர்த்துதற்கு வேறிட மின்மையானும், பொதுவிலக்கணமாதலொப்புமையானும், உரு பேற்றல் பெயர்க்கிலக்கணமாகலின் வேற்றுமையுணர்த்திப் பெய ருணர்த்தன் முறையாகலானும், கிளவியாக்கத்திற்கும் பெயரியற் குமிடை வேற்றுமையிலக்கண முணர்த்திய வெடுத்துக்கொண் டார் ; வேற்றுமையாவன—பெயரும் ஓரிடைச்சொல்லுமாகலின் அவற்றதிலக்கணமும் பொதுவிலக்கணமேயாம்.

ந.—முன்னர் நான்குசொற்கும் பொதுவிலக்கணம் உணர்த் திய அதிகாரத்தானே இப்பொதுவிலக்கணங்கூறுகின்ற ஓத்தினை யுஞ் சேரக்கூறினர். அப்பொதுவிலக்கணம் என்னை யெனின், வேற்றுமைதாமும் பெயரும் ஒருசார்வினைச்சொல்லும் இடைச் சொல்லும் உரிச்சொல்லுமாகிய பொதுவிலக்கணமாதலுடைமை

யானும், 'எழுவாய் வேற்றுமை பெயர்தோன்று நிலையே' எனவும், 'ஈறுபெயர்க் காகு மியற்கைய வென்ப' எனவும், 'பெயர்நிலைக் கிளவி காலந் தோன்றா' எனவும், 'தொழிற்பெயர் காலந்தோன் றும்' எனவும் மேற்கூறுஞ் சிறப்புடைப்பெயர்க்குப் பொதுவிலக் கணம் ஈண்டுக்கூறுதலுடைமையானும், இவ்வோத்துப் பொது விலக்கணமே கூறியதாயிற்று.

தே.—மேல் **அல்வழித்தொடர்** கூறி இனி **வேற்றுமைத் தொடர்** கூறுகின்றார். ஆதலின் அதன்பின் கூறப்பட்டது.

---

1. இயைபு = सङ्गतिः



உரையாசிரியர்மதத்தைச் சேனாவரையர் இரண்டு காரணங் களால் மறுத்தனர் :—(1) இவ்வோத்துப் பெயரிலக்கணமுந்தவி யெடுத்துக் கொள்ளப்பட்டதாயின், உருபேற்றலும் ("கூறிய முறையி னுருபுநிலை திரியா—தீறுபெயர்க் காகு மியற்கைய வென்ப"—சொல். 69), பயனிலைகோடலும் ("பொருண்மை சுட் டல்...அன்றி யனைத்தும் பெயர்ப்பய னிலையே"—சொல். 66), காலந்தோன்றாமையும் ("பெயர்நிலைக் கிளவி காலந்தோன்றா" —சொல். 70.) ஆகிய பெயரிலக்கணம் முன்னோதி, இயைபுபடு தலான் வேற்றுமையுணர்த்துங் கருத்தினராயின் அவற்றையும் இன்னவிலக்கணத்தவென உணர்த்திப் பின்னும் எடுத்துக் கொண்ட பெயரிலக்கணமேபற்றியோதிப் பெயரியலென ஓரோத் தான் முடியற்பாற்றன்றே. (2) 'எல்லாச்சொல்லும்பொருள் குறித்தனவே' (சொல். 155) என்பது முதலாகிய ஐந்து சூத்திர

மும் பெயரிலக்கண முணர்த்தியோத்தின் (உரையாசிரியர் மதப்படி பெயரிலக்கணமுணர்த்தும் இவ்வோத்தின்) முன்வையாது இடைவைத்தல் பொருந்தாது.

சேனாவரையர் கூற்றுப் பொருந்துமாவென்று இங்கு ஆராய்வேன். அவர் வேற்றுமையியலைக் கிளவியாக்கத்தின்பின் வைத்தற்குக் கூறுங் காரணங்கள் மூன்றும். 'அவற்றில் வேறிடமின்மையால்' என்னும் முதற் காரணத்தைப்பற்றி ஆராயவேண்டுவதின்று. கிளவியாக்கத்தில் நான்கு சொற்கும் பொதுவிலக்கணமுணர்த்தினர்; இங்கு வேற்றுமையாகிய பெயருக்கும் இடைச்சொல்லுக்கும் பொதுவிலக்கணம் உணர்த்துகின்றார் என்பது இரண்டாவது. உருபேற்றல் பெயர்க்கிலக்கணமாகலின், வேற்றுமையுணர்த்திப் பெயருணர்த்தல் முறையாகும் என்பது மூன்றாவது. கிளவியாக்கத்தில் முதற்பத்துச் சூத்திரங்களிற் பெயருக்கும் வினைக்கும் பொதுவான விஷயங்களைக் கூறி மற்றைச்சூத்திரங்களிற் சிற்சில சொற்களைக்கொண்ட வாக்கியம் எவ்வாறிருக்க வேண்டுமென்பதைப் பெரும்பாலும் ஆசிரியர் கூறினரேயன்றிப் பொதுவாக நால்வகைச் சொற்களுக்கும் இலக்கணங்கூறினரா? அவ்வாறு நூலாசிரியர் கூறியதாகக் கருதி, இங்கும் பொதுவிலக்கணமாதல் என்ற ஒப்புமை வேண்டுமென்றும் 'வேற்றுமையாவன பெயரும் ஓரிடைச்சொல்லுமாகலின் அவற்றதிலக்கணமும் பொதுவிலக்கணமேயாம்' என்றும் சேனாவரையர் கூறுவது



பொருத்தமின்று. மூன்றாவது காரணங் கொள்ளின், உரையாசிரியரை அவர் மறுத்தவாறு, உருபேற்றலை யுணர்த்துஞ் சூத்திரம் இவ்வோத்துக்கு முற்சூத்திரமா யிருக்க வேண்டியதன்றோ?

நச்சினார்க்கினியர் "அப்பொதுவிலக்கணம் என்னை யெனின், வேற்றுமைதாமும் பெயரும் ஒருசார்வினைச்சொல்லும் இடைச் சொல்லும் உரிச்சொல்லுமாகிய பொதுவிலக்கணமாதல் உடைமை யானும்" என்று கூறுமிடத்து உரிச்சொல் எவ்வாறு வேற்றுமை யாகும்? வேற்றுமையாயின், அவ்விடத்து அவை பெயரென்றே கொள்ளவேண்டாவோ? அன்றியும், 'எழுவாய் வேற்றுமை பெயர் தோன்று நிலையே' எனவும், 'அன்றி யனைத்தும் பெயர்ப்பய னிலையே' எனவும், 'ஈறுபெயர்க் காகு மியற்கைய வென்ப' என வும், 'பெயர்நிலைக்கிளவி காலந்தோன்றா' எனவும், 'தொழிற்பெயர் காலந்தோன்றும்' எனவும் மேற்கூறுஞ் சிறப்புடைப்பெயர்க்குப் பொதுவிலக்கணம் ஈண்டுக் கூறுதல் உடைமையானும்" என்று கூறினர். இங்குச் சிறப்புடைப்பெயர்க்குப் பொதுவிலக்கணம் ஆசிரியர் கூறினரா? அன்றி, வேற்றுமையுருபு எங்கு வருமென்றும், பெயர் எப்போது எழுவாய்வேற்றுமையாவதென்றும், தொழிற் பெயருக்கும் பின் வேற்றுமையுருபு வருமென்றும் விதிகூறினரா?

மூவர் கூறும் இயைபும் பொருத்தமற்றது: தெய்வச்சிலை யார் கூறும் இயைபே மிகப் பொருந்தும். எழுவாய் வேற்றுமை, விளிவேற்றுமை வருமிடங்களில், அவை அல்வழியாமே யெனின், பன்மைபற்றி அவ்வாறு கூறினர் என்க.

**வேற்றுமை**[1]. வேற்றுமை யென்பது பெயர்ப்பொருளைச் செயப்படுபொருண் முதலாயினவாக வேறுபடுத்துணர்த்துவது என்று சேனாவரையர் கூறினர். அவ்வாறு வேறுபடுத்துணர்த்து வது ஐ, ஒடு, கு, இன், அது, கண் இவை ஆறே. இவை ஆறனையும் 'ஐ ஒடு கு இன் அது கண் ணென்னு—மவ்வா றென்ப **வேற்றுமை யுருபே'** (எழுத். புண. 11) என்னுமிடத்து வேற்

றுமையுருபென்று ஆசிரியர் கூறினர். ஆதலின், வேற்றுமை யுருபு என்பதை வேற்றுமையாகிய உருபு என்று விரித்தல் வேண்டும். ஆயின், அவ்வவ்வேற்றுமையுருபை யிறுதியிற்கொண்ட பெயரை அவ்வவ்வேற்றுமையென்று உபசாரத்தால் உலகில் வழங்குகின்றனர். இவ்வாறு வேற்றுமையும் வேற்றுமையுருபும்

1. வேற்றுமை = विभक्तिः



ஒன்றே எனக் கொள்ளின், எழுத்ததிகாரத்தில் ஆசிரியர் 'அவ்வா றென்ப வேற்றுமை யுருபே' என்று கூறி, இங்கு 'வேற்றுமை தாமே யேழென மொழிப', 'விளிகொள் வதன்கண் விளியோ டெட்டே' என்று கூறுவது எவ்வாறு பொருந்துமெனின், அங்கு வேற்றுமையுருபு ஆறென்றும், இங்கு வேற்றுமைப் பொருள் எட்டென்றும் கூறினர் என்க.

62. வேற்றுமை தாமே யேழென மொழிப.

எழுவாய் வேற்றுமை, வேற்றுமையாவது எங்ஙனம்? சேனா வரையர் 'செயப்படுபொருண் முதலாயினவாகப் பெயர்ப் ருளை வேறுபடுத்துணர்த்தலின், வேற்றுமையாயின. செயப்படு பொருண் முதலாயினவற்றின் வேறுபடுத்துப்பொருண்மாத்திர முணர்த்தலின், எழுவாயும் வேற்றுமையாயிற்று. அல்லதூஉம், வேற்றுமை யென்பது பன்மைபற்றிய வழக்கெனினுமமையும்' என்று கூறுகின்றார். தெய்வச்சிலையார் வேற்றுமை என்பது 'பொருள்களை வேறுபடுத்தினமையாற் பெற்ற பெயர். என்னை

வேறுபடுத்தியவாறு எனின், ஒரு பொருளை யொருகால் வினை முதலாக்கியும், ஒருகாற் செயப்படுபொருளாக்கியும், ஒருகாற் கருவியாக்கியும், ஒருகால் ஏற்பது ஆக்கியும், ஒருகால் நீங்க நிற்பது ஆக்கியும், ஒருகால் உடையது ஆக்கியும், ஒருகால் இடம் ஆக்கியும் இவ்வாறு வேறுபடுத்தது என்க' என்றனர். 'மயில்' என்று தனிமொழியாய்க் கூறுமிடத்து, அச்சொல்லான் மயிலின் பொருட்டன்மையே பெறப்படும். 'மயில் ஆடிற்று' என்றக்கால் பொருட்டன்மை வினைமுதலாந் தன்மையாக வேறுபட்டது காண்க. ஈதே தெய்வச்சிலையார் கொள்கை. இஃது ஏற்புடைத்து. எழுவாய்வேற்றுமையில் பெயர்ப்பொருள் வினைமுதலாக வேறு படுக்கப்பட்டதைச் சேனாவரையர் நோக்கிலர்போலும்.

63. விளிகோள் வதன்கண் விளியோ டெட்டே.

பி-ம். இ. நம.—' கூறுதல் ' என்றுளது. ' கூவுதல்' என்றிருக்கவேண்டும்.

பா-ம். தே.—இச்சூத்திரம் முற்சூத்திரத்துடன் கூட்டி உரைக்கப்பட்டது.

64. அவைதாம்
பெயர் ஐ ஒடு கு
இன்அது கண்விளி யென்னு மீற்ற.



இச்சூத்திரத்தால் வேற்றுமைகளின் பெயர் உணர்த்தப்பட்டன என்று உரையாசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் இம்மூவருங் கொண்டனர். அவரது கொள்கையில் 'விளியென்னு மீற்ற' என்பது 'பெயர் ஐ ஒடு கு இன் அது கண்' என்ற தொகை மொழிக்கு அடைமொழி.

தெய்வச்சிலையார் அவ்வாறு கூறாது 'மேற்சொல்லப்பட்ட

வேற்றுமைகள்தாம் பெயர், ஐ, ஒடு, கு, இன், அது, கண், விளி என்று சொல்லப்பட்ட ஈறுகளையுடைய எ-று. விளியீறுவது விளிக்கண்வரும் எழுத்துக்கள்' என்று உரைத்தனர். இதனால் அவரது கொள்கையில் இச்சூத்திரம் வேற்றுமையுருபுகளையும், அவை பெயரின் ஈற்றில் வருமென்பதையும் உணர்த்துகின்றது என்று கூறலாகும். அவ்வாறாயின் 'ஐ ஒடு கு இன் அது கண் ணென் னு—மவ்வா றென்ப வேற்றுமை யுருபே' (எழுத். 113) என்ற எழுத்ததிகாரச் சூத்திரமும் 'கூறிய முறையி னுருபுநிலை திரியா—தீறுபெயர்க் காகு மியற்கைய வென்ப' (சொல். 69) என்ற சொல்லதிகாரச் சூத்திரமும் வேண்டா. ஆதலின், ஐயெனப் பெயரிய வேற்றுமை, ஒடுவெனப் பெயரிய வேற்றுமை என்று குறியிட்டுக் கூறும் ஆசிரியர் இங்கு வேற்றுமைகளின் பெயரைப் பெயர்வேற்றுமை, ஐவேற்றுமை, ஒடுவேற்றுமை... விளிவேற்றுமை என்று உணர்த்துகின்றார் என்பதே பொருந்தும்.

65. அவற்றுள்
எழுவாய் வேற்றுமை பெயர்தோன்று நிலையே.

**போருள். உ.**—எழுவாய் வேற்றுமைப்பெயர்—முதல் வேற்றுமைப்பெயர் எ-று. இனித் 'தோன்றுநிலை' என்றதனால் மேற்சூத்திரத்திற் கூறப்படும் அறுவகைப்பயனிலையும் தோன்ற நிற்கும் பெயர் எழுவாய்வேற்றுமையாவது என்றவாறும்.

சே.—மேற்சொல்லப்பட்ட வேற்றுமையுள், முதற்கட் பெயரென்று கூறப்பட்டவேற்றுமையாவது பெயர் தோன்றிய துணையாய் நிற்கு நிலைமையாம் எ-று. (பெயர் தோன்றிய துணையாய் நிற்குநிலைமையாவது உருபும் விளியுமேலாது பிறிதொன்றனோடு தொகாது நிற்குநிலைமை.)

ஈ.—மேற்கூறிய வேற்றுமை எட்டனுள் முதல்வேற்றுமை யாவது பெயர், பொருளாறவகைப்பட்ட பயனிலையுந் தன்கட்
10



டோன்ற நிற்கும் நிலைமை எ-று. (அஃது உருபும் விளியும் ஏலாது நிற்கும் நிலையதாயிற்று.)

தே.—மேற்சொல்லப்பட்டவற்றுள் முதல் வேற்றுமையாவது பெயர் தோன்றும் நிலை எ-று. (அஃதேல் பெயர் என அமையும், தோன்றும் நிலை என்றதனாற் பயன் என்னை யெனின், பெயர் கண்டுழி யெல்லாம் வேற்றுமையென்று கொள்ளற்க என்பது அறிவித்தற்கெனக் கொள்க. அஃது யாதோவெனின்,—ஆயன் சாத்தன் வந்தான் என்றவழி ஆயன் என்பது சாத்தற்கு அடையாகி நிற்றலானும், வருதற்றொழில் சாத்தனொடு முடிதலானும், இரு பெயரும் ஒரு பொருட்கண் வருதலின் இரண்டினையும் வேற்றுமை எனப்படாது ஆகலானும் இறுதிநின்றதே வேற்றுமை எனப்படுவது என்று கொள்க.)

உரையாசிரியர் கொள்கைப்படி சூத்திரத்தில் எழுவாய் வேற்றுமைப்பெயர் என்பது எழுவாய்; பயனிலை தோன்றுநிலை என்பது பயனிலை. எழுவாய் என்பதற்கு முதற்கண் என்பது பொருள். எழுவாய் வேற்றுமைப்பெயர் என்பதற்கு முதற்கண்ணுள்ள பெயராகிய வேற்றுமை என்பது பொருள். பயனிலை தோன்றுநிலை என்பதில் பயனிலை என்பது வருஞ்சூத்திரத்தி

விருந்து வருவிக்கப்பட்டு, தோன்றுநிலை என்பதனோடு தொகையாயிற்று. சூத்திரத்துக்குப் பொருள், பெயர்வேற்றுமை பயனிலையது தோன்று நிலைமையை யுடையது என்பதாகும். **ஆதலின்** பயனிலை தோன்று நிலைமையுடைமை பெயர்வேற்றுமைப்பொருள் என்பதும், இச்சூத்திரம் பெயர்வேற்றுமையின் பொருளை யுணர்த்துகின்றது என்பதும் பெறப்படும். **நச்சினார்க்கினியரும் தெய்வச்சிலையாரும்** இப்பொருளையே கொள்ளினும், சூத்திரத்தில் அந்வயத்தை வேறாகக் கூறுகின்றனர். **நச்சினார்க்கினியர்** கூற்றின்படி **எழுவாய் வேற்றுமை** என்பது எழுவாயாகும். **பெயர் பயனிலை தோன்றுநிலை** என்பது பயனிலையாகும். பெயர் பயனிலை தோன்றுநிலை என்னுமிடத்துப் பயனிலை வருஞ்சூத்திரத்திலிருந்து வருவிக்கப்பட்டு, பெயர் தோன்றுநிலை என்ற தொகைமொழியின் இடையில் வைக்கப்பட்டது. பெயர்பயனிலை தோன்றுநிலை என்பதற்குப் பெயர்பயனிலை தன்கட்தோன்ற நிற்கும் நிலை என்று பொருள் கூறுகின்றனர். அப்பொருளாயின் அது தொகைமொழியாகுமா? **தெய்வச்சிலையார்** கூற்றின்படி **எழுவாய்வேற்றுமை** என்பது



எழுவாயாகும். **பெயர்தோன்றுநிலை** என்பது பயனிலையாகும். பெயர்தோன்றுநிலை என்பதற்குப் பெயரது தோன்றுநிலை என்பது பொருள். 'பயனிலைக்குமுன்' என்பது வருவிக்கப்பட்டது.

இம்மூவர் கொள்கையும் இச்சூத்திரம் முதல் வேற்றுமையின் **பொருளை** உணர்த்துகின்றது என்பதே. ஆனால் இவ்வேற்றுமையின் பொருள் எழுவாய் (வினைமுதல்) என்பது நேரில் கொள்ளப்படவில்லை. மேலும் வருஞ் சூத்திரத்திலிருந்து பயனிலை என்பது வருவிக்கவேண்டி யுள்ளது.

**சேனாவரையர்** கூற்றின்படி **எழுவாய்வேற்றுமை** என்பது எழுவாயாகும். **பெயர்தோன்றுநிலை** என்பதற்குப் பெயராது தோன்றுநிலை என்பது பொருளாகும். தோன்றுநிலை என்பதற்கு உருபும் விளியுமேலாது பிறிதொன்றனோடு தொகாது நிற்கும் நிலைமை என்று அவரே பொருள் கூறினர். ஆதலின் அவர் கொள்கையில் இச்சூத்திரம் முதல் வேற்றுமையின் **உருவம்** உணர்த்திற்று என்பது. இப்பொருள் சூத்திரப்போக்குக்குப் பொருத்தமானது. ஆனால் வருஞ்சூத்திரப்பொருளை இச்சூத்திரப் பொருளுடன் கூட்டி முதல்வேற்றுமை பயனிலை கொள்ளும் என்று கொள்ளவேண்டியுள்ளது. மேலும் இப்பொருளிலும் இவ் வேற்றுமையின் பொருள் எழுவாய் என்பது நேரில் கூறப்பட வில்லை.

வேற்றுமையியலில் 'இரண்டாகுவதே...' (சொல். 71) முதல் 'ஏழாகுவதே...'(சொல். 81) இறுதியாக எல்லாச்சூத்திரங்களும் வெளிப்படையாய் வேற்றுமைப்பொருளைக்கூறுவதாலும், 'ஐ ஒடு...' (எழுத். 113) என்ற எழுத்ததிகாரச்சூத்திரத்தில் வேற்றுமையுருபு ஆறு என்று வரையறுக்கப்பட்டதாலும் 'அவைதாம் —பெயர் ஐ...' (சொல். 64) என்னுமிடத்துப் பெயர் என்றே குறிக்கப்பட்டதாலும், விளிமரபில், விளியில் பெயரின் ஈற்றுமாறு தல் கூறப்பட்டதாலும், முதல் வேற்றுமையில் பெயர் உருபே

லாது விளிகொள்ளாது நிற்கும் என்பது பெறப்படுமாகையால் முதல் வேற்றுமையின் உருவத்தை யுணர்த்தவேண்டுவது அவசிய மன்று. ஆதலின் உரையாசிரியர் முதலிய மூவர் கூற்றே சிறக்கலாம்.

அம்மூவர் கூற்றின்படி பயனிலைகொள்ளுதல் முதல்வேற் றுமைப் பொருளாகும். ஆனால் 'வினையே செய்வது...' (சொல்.



112) என்ற சூத்திரத்தின் உரையில் நச்சினார்க்கினியர் 'செய்வது எழுவாயாயும், வினையுஞ் செயப்படுபொருளும் இரண்டாவதா யும்... சேர்ந்தன' என்றும், தெய்வச்சிலையார் 'இவற்றுள் கருத்தா முதல்வேற்றுமையுமாம்' என்றுங் கூறுவதால் முதல் வேற்றுமைப்பொருள் செய்வது என்பது விளங்குகின்றது. அச் சூத்திரத்துரையில்தானே 'செய்வது முதலாகிய முதனிலை வேற் றுமையோத்தினுட் கூறப்பட்டமையின்...' என்றும், 'வனைந்தான் என்றவழி வனைந்த கருத்தாவும்' என்றும் சேனாவரையர் கூறுகின் றனர். இவரெல்லாம் வேற்றுமையியலில் செய்வதை முதல்வேற் றுமைப் பொருளாகக் கூறிற்றிலர்.

ஆதலின் பிற் கூறப்படும் முறையில் ஏதேனும் ஒன்றை இச்சூத்திரப் பொருளாகக் கொள்ளலாமோவென அறிஞர் ஆராய்ந்து ஏற்புடையது கொள்க.

(1) வேற்றுமைப்பெயர், எழுவாய் தோன்றுநிலை என்ற சூத்திரத்திற்கு அந்துவயங்கொண்டு, மேற்கூறியவற்றுள் பெய ராகிய வேற்றுமை (வாக்கியத்தின்) முதற்கண் தோன்றுநிலைமை யுடையது என்னலாம். அங்ஙனந்தோன்று நிலைமையுடையது

வினைமுதலேயாம். அப்பொருளில் வாக்கியம் என்பது வருவிக்கப் பட்டது. இவ்வியல் வாக்கியத்தைப்பற்றிக் கூறுவதால் அவ்வாறு கொள்வதில் குற்றமின்று.

(2) இனி, வேற்றுமை, பயனிலை என்பனபோல எழுவாய் என்பதும் முதல்வேற்றுமைக்கருத்தாவுக்கு முன்னோரிட்ட குறி என்று கொள்ளின் 'அவ்வேற்றுமை எட்டனுள் பெயர் வேற்றுமை, கருத்தாப்பொருளில் தோன்று நிலையுடையது' என்று இச் சூத்திரத்திற்குப் பொருள்கூறிவிடலாம். இவ்வாறு கூறுவதற்கு 'அவ்விருமுதலிற் றோன்றுமதுவே' (சொல். 71), 'அனைவகைக் குறிப்பிற் றோன்றுமதுவே (சொல். 81)' என்ற ஆசிரியர் வசனங்கள் தக்க சான்றாகும். நச்சினார்க்கினியர் 'வினை முதலாகிய எழுவாயை முற்கூறினார்' என்றும் 'வினைமுதல் கருத்தா என்பன ஒன்று' (சொல். 74) என்றும் கூறுதலால், எழுவாயும் கருத்தாவும் ஒருபொருட் கிளவி என்பது அவர் கருத்தாதல் காண்க. இங்ஙனமாயின் சூத்திரத்தில் வேற்றுமைப்பெயர் என்று இருக்க வேண்டாவோ வெனின் அஃதே உரையாசிரியர்கொண்ட பாடம் என்பது அவரது உரையால் நன்கு விளங்கும். வேற்றுமைப்



பெயர் என்பதற்கு வேற்றுமையாகிய பெயர் என்பது அவர்க்குங் கருத்தாதல் கண்டுகொள்க.

பா-ம். இ. நம.—'ஆயன் சாத்தன் வந்தான் என்புழி ஆயன் என்பதூஉம் பெயர், சாத்தன் என்பதூஉம் பெயர். ஆயினும், இரண்டிற்கும் இரண்டு பயனிலை தோன்ற நில்லாமையாற் சாத்தன் என்பதூஉம் வந்தான் என்பதூஉம் ஆயன் என்பதற்கே பயனிலை;

அதனுல், சாத்தன் என்பது ஆண்டு எழுவாய்வேற்றுமையாயிற்று' என்றுளது. இங்கு 'சாத்தன் என்பதூஉம் ஆயன் என்பதற்கே' என்பது 'ஆயன் என்பதூஉம் சாத்தன் என்பதற்கே' என்றிருப் பின், வாக்கியம் பொருந்தும். சாத்தன் என்பது இயற்பெய ராகையால் சாத்தன் என்பவன் ஆயன், அவன் வந்தான் என் பதே ஆயன் சாத்தன் வந்தான் என்பதற்குப் பொருளென்று உரையாசிரியர் குறிப்பான் உணர்த்தியது காண்க.

இ. நம.—'முதல்வேற்றுமைப்பெயர் என்றவாறு' என்ப தனை விட்டிசைத்தொடராகக் கொள்ளாது 'இனித் தோன்றுநிலை என்றதனுல்,' என்பதனேடு கூட்டிப்படிக்க.

66. பொருண்மை சுட்டல் வியங்கோள வருதல்
வினைநிலை யுரைத்தல் வினவிற் கேற்றல்
பண்புகோள வருதல் பெயர்கோள வருதலென்
றன்றி யனைத்தும் பெயர்ப்பய னிலையே.

இச்சூத்திரத்தில் பெயர்ப்பயனிலை என்பது உத்தேசியம். பொருண்மை சுட்டல்…அன்றியனைத்தும் என்பது விதேயம். பயனிலை என்பது உத்தேசியமாயிருப்பின், அது முன்னர் எச் சூத்திரத்திற் கூறப்பட்டது எனின், முற்சூத்திரத்தில் எழுவாய் என்பது உணர்த்தப்பட்டமையானும், எழுவாய் என்பது பய னிலையின்றிப் பெறப்படாமையானும் கொள்ளப்படும் என்ன லாம். இங்குப் பயனிலை என்பது முன்னேரிட்ட குறி. இச் சூத்திரத்தால் பயனிலை எத்துணைவகைப்படும் என்று உரைக்கப் பட்டது.

சேனுவரையர் 'ஆ பல என்புழிப் பலவென்பதற்குப் பய னிலை யாதெனின்' என்று ஆசங்கித்து அதற்கு, 'அது பயனிலை

யாய், ஆவென்பதனை முடித்தற்கு வந்ததாகலின், தான் பிறி



தோர் சொன்னேக்கா து ஆ வென்பதனோடு தொடர்ந்து, அதனை முடித்தமைந்து மா று மென்பது' என்று விடையளித்து, பின் 'அஃதேல், பயனிலை கொள்ளாதது எழுவாய்வேற்றுமையாமா றென்னையெனின்' என்று கூறுவதால், பல என்பது எழுவாய் வேற்றுமை என்பதே அவர் கருத்தாம். 'எழுவாய்வேற்றுமை பெயர்தோன்று நிலையே' என்னுஞ் சூத்திரத்திற்கு உரையாசிரியர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார் இம்மூவர் கொண்ட பொருளை நோக்கின் பல என்பது எழுவாய்வேற்றுமை யன்று, அதற்குப் பயனிலையின்மையின். சேனவரையர் 'உருபேற்றற் கேற்ற தன்மையும் பயனிலையும் பயனிலை கோடற்கேற்ற தன்மையும் எழுவாய்வேற்றுமைக்கிலக்கணம்' என்றார். ஆ பல என்னுமிடத்துப் பல என்பதனை எழுவாய்வேற்றுமையாகக் கொள்ளுவதற்காகப் 'பயனிலைகோடற்கேற்ற தன்மையும்' என்ற தொடரைச் சேர்த்துள்ளார். இங்குப் பல என்பதற்குப் பயனிலையில்லாவிடினும் 'பல உள்ளன' முதலிய இடங்களில் பயனிலை கொள்ளுவதால், பல என்ற சொல் பயனிலை கொள்ளுவதற்கு உரிமைபூண்டது என்பது அவர்கருத்து. அதனை மற்றவர்போல் எழுவாய்வேற்றுமையாகக், கொள்ளாது குறிப்புவினையாகக் கொள்ளின் இலக்கணத்தில் அத்தொடர்வேண்டா. முற்சூத்திரத்தில் உருபு விளியேலாதது, முதல்வேற்றுமை என்று பொருள் கூறினமையின் 'உருபேற்றற்கேற்ற தன்மையும்' என்

பதனை இலக்கணத்துட் சேர்த்தனர். அச்சூத்திரத்திற்கு ஏனையோர் கூறிய பொருளைக்கொள்ளின் அத்தொடரும் வேண்டா.

இச்சூத்திரத்தானும் முற்சூத்திரத்தானும் உருபேற்றல்,[1] பயனிலைகோடல் என்பன பெயர்க்கு இலக்கணம் என்பது பெறப் பட்டது என்பர் உரைகாரர்கள். 'எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே' (சொல். 155.) என்று ஆசிரியர் சொல்லிலக்கணங்

1. உருபேற்றல் பெயருக்கு இலக்கணம் அன்று. இலக்கணமாயின் ஒரு சொல், உருபேற்பின் பெயராகும்; பெயராயின் உருபேற்கும் எனக்கூறவேண்டிவரும். அப்போது அன்னியோன்னியாச்சிரயம் எனுங்குற்றம் வரும். ஆயினும் அவ்வாறு உரைகாரர்கள் கூறியது सुबन्तम् என்பதைப் பெரும்பான்மையும் பெயராக வடமொழியிலக்கணக்காரர் வழங்குவதை ஒட்டிப்போலும்; ப்ராதிபதிகமே உருபேற்றலால் வடமொழியிலக்கணக்காரர்க்கு அக்குற்றம் வாராது.



கூறினமையானும், பெயர்ப்பொருளைக் குறிப்பதே பெயர்[1] என்பது அக்குறியீட்டாற் பெறப்படுதலானும், பெயரியலிற்கூறிய பெயர்ச்சொற்கள் அனைத்தும் பெயர்ப்பொருளையே உணர்த்துகின்றமையானும் அவ்வாறு கொள்ளவேண்டிய கட்டாயின்று.

நச்சினார்க்கினியத்தில் 'ஆவினது சாதித்தன்மை' என்றவிடத்து சாதித்தன்மை என்பதற்குச் சாதியாகிய தன்மை என்பதே பொருளாம். ஆதலின் தன்மை என்பதற்குக் குணம் என்பது பொருளாகாது.

67. பெயரி னாகிய தொகையுமா ருளவே
யவ்வு முரிய வப்பா லான.

பொருள். உ.—அறுவகைத்தொகைச்சொல்லும், எழுவாய் வேற்றுமைப் பயனிலைப்பாடும்[2] பிழையாதுவரும் எ-று. இனி ஒரு கருத்து—'பெயரினாகிய தொகையுமாருளவே' என்பது பெயரும் பெயருந் தொக்க தொகையும் எ-று. உம்மையான் வினையும் பெயருந்தொக்கதொகையும் எழுவாய் வேற்றுமைப் பயனிலைப்பாடு பிழையாது வரும் என்று கொள்க.

சே.—பெயரும் பெயருந்தொக்கதொகையு முள; அவையு முரிய எழுவாய் வேற்றுமையாய்ப் பயனிலைகோடற்கு எ-று. பெயரினாகிய தொகையு மென்னு மும்மையால், பெயரொடு பெயர் தொக்கனவேயன்றி, நிலங்கடந்தான், மாக்கொணர்ந்தான் எனப்பெயரொடு வினைவந்து தொக்க வினையினாகிய தொகையு முள வென்பதாம். ஆகவே, பெயரொடு பெயரும் பெயரொடு தொழிலுந் தொக்கன தொகை யென்பது பெற்றும். அவ்வுமுரிய வெனப் பொதுவகையாற் கூறினாரேனும், ஏற்புழிக்கோடலென்பதனான் எழுவாய் வேற்றுமையாதற் கேற்புடைய பெயரினாகிய தொகையே கொள்ளப்படும்.

ந.—பெயரும் பெயருந்தொக்க தொகையும் உள. உம்மையாற் பெயரும் வினையுந்தொக்க தொகையும் உள; அவ்விரண்ட

1. மேற்கூறிய இலக்கணமும், द्रव्याभिधायकं नाम என்ற இருக் வேத ப்ராதிசாக்கிய வாக்கியமும் ஒப்பிடத்தக்கன.

2. பி-ம்.—பயனிலைப்பாடும் என்பது பயலரிலைப்பாடு என்றிருக்க வேண்டும்.

ணுட் பெயரும் பெயருந்தொக்கதொகையும் உரிய அவ்வெழு வாய் வேற்றுமையாய்ப் பயனிலை கொள்ளுமிடத்து.

**தே.**—பெயரினாகிய தொகைச்சொல்லும் உள. அவையும் எழுவாயாகிப் பயனிலை கோடற்கு உரிய. (உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை.)

நச்சினார்க்கினியர், சேனாவரையர்கொள்கையைக் கொண்டனர். உரையாசிரியர், தெய்வச்சிலையார் இவ்விருவரும் சேனாவரையரும், உம்மைக்குப் பொருள் கூறுவதில் மாறுபடுகின்றனர்.

**உரையாசிரியர்** பெயர் எவ்வாறு பயனிலை கொள்ளுமோ அவ்வாறே தொகைச்சொல்லும் கொள்ளும் என்று உம்மைக்குப் பொருள் கொண்டனர். பின்னர் வினையும் பெயருந் தொக்க தொகையும் என்று உம்மைக்கு வேறொருவர் கருத்து என்றுங் கூறினர். **சேனாவரையர்** உம்மையாற் பெயரொடு வினைவந்து தொக்க வினையினாகிய தொகையுமுள வென்பதாம் என்று கூறுகின்றார். எழுவாய்வேற்றுமையைப்பற்றிக் கூறும் இவ்விடத்தில் உம்மையாற் பெயரும் வினையும் தொக்க தொகையும் உண்டு என்று கூறுவது எவ்வாறு பொருந்தும்? நிலங்கடந்தான் என்பதைத் தொகைச்சொல்லென்று கருதி, அதற்குப் பிரமாணம் யாண்டுமின்மையின் உம்மைக்கு இவ்விடத்திற்கு ஏற்புடைத் தாகாத பொருளைக் கொண்டனர். பெயரினாகிய தொகை யென்பதனாற் பெயரை வருமொழியாகக் கொண்ட அறுவகைத்தொகைச் சொல்லும் பெறப்படுதலின், உரையாசிரியர் உம்மைக்குத் தம் கருத்தாகக் கூறிய பொருளே சிறக்கும். சேனாவரையத்தில், 'பெயரினாகிய தொகையு' மென்ற வும்மையான் வினையினாகிய வினைத் தொகை தழுவப்பட்டதென்று உரையாசிரியர் கூறியதாகக் கூறி, "வினைத்தொகைக்கு நிலைமொழி வினை யென்பது உரையா

சிரியர்க்குக் கருத்தன்மை 'வினையின் றொகுதி காலத் தியலும்' என்னுஞ் சூத்திரத்திற் சொல்லுதும்'' என்று உரைக்கப்பட்டுளது. இருவர்க்கும் கொல்யானை முதலிய தொகைச்சொற்கள் எழுவாய்வேற்றுமையா யிருந்து பயனிலைகொள்ளும் என்பதில் மாறுபாடில்லை; அச்சொற்கள் வினைத்தொகை என்பதிலும் மாறுபாடில்லை. கொல் என்பது பெயரெச்சம் தொக்கு நிற்கும் வினையா? தாதுவா? என்பதில் மாத்திரம் வேறுபாடுளது.



அதனை 'வினையின் தொகுதி காலத்தியலும்' (சொல். 415) என்னுமிடத்து ஆராய்வேன்.

இச்சூத்திரத்தில் பயனிலைகோடல் மாத்திரம் விதேயம் என்றும், 'எல்லாத்தொகையும் ஒருசொன்னடைய' (சொல். 420) என்பதன்கண் எழுவாய்வேற்றுமையாய் நிற்றல் விதேயம் என்றும் உரையாசிரியர் கொண்டனர் எனச் சேனாவரையர் கருதி "எல்லாத் தொகையு மொருசொன்னடைய என்பதற்கு ஒரு சொன்னடையவா மென்பதல்லது எழுவாய்வேற்றுமையா மென்னுங்கருத்தின்மையானும், அக்கருத்துண்டாயின் அவையும் எழுவாய் வேற்றுமையாய் நின்று 'அன்றி யனைத்தும் பெயர்ப்பயனிலையே' என்றதனாற் பயனிலை யெய்துமாகலின் 'அவ்வுமுரிய வப்பாலான' என்றல் கூறியதுகூறிற்றுமாகலானும், அதுவு முரையாசிரியர் கருத்தன் றென்க'' என்னுஞ் சொற்றொடரால் மறுத்தனர்.

ஆனால் இச்சூத்திர வுரையில் உரையாசிரியர் 'எழுவாய் வேற்றுமைப் பயனிலைப்பாடு' என்று கூறுவதானும், 'எல்லாத் தொகையு மொருசொன்னடைய' என்ற சூத்திரவுரையின்கண்

‘அறுவகைத் தொகைச்சொல்லும் எழுவாய் வேற்றுமை யியல் பாம்’ என்று பொருளும், ‘அவை பலசொன்மைப்பட்ட பொரு ளிசையா’ என்று கருத்தும் உரைக்கின்றமையானும், எழுவாய் வேற்றுமையாதல் பயனிலைகொள்ளுதல் இவ்விரண்டும் இச்சூத் திரத்தில் விதேய மென்பதும், தொகை எழுவாய்வேற்றுமை யாதல் அங்கு விதிக்கப்படவில்லை என்பதும் அவர் கருத்தென் பது விளங்கும். ஆதலின் அம்மறுப்புக்கு இடமின்று.

உரையாசிரியர் தெய்வச்சிலையார் இவ்விருவர் கூறியவையே இச்சூத்திரத்திற்குக் கருத்தாயினும், பொருள் கூறுமிடத்து அவர்கள் இருதொடர்ப்படுத்தினர். இருதொடராகக் கொள்ளின் சூத்திரம் ஒன்றுமாறில்லை. அக்கருத்தமையச் சூத்திரம் ஒன்று மாறு எங்ஙனமெனின், அப்பாலான = பயனிலை கொள்ளுமி டத்து, அவ்வுமுரிய = எழுவாய்ப்பொருளுக்கும் பெயர்வேற்று மைக்கும் உரியவான, பெயரினாகிய தொகையும் = பெயரானே வந்ததொகையும், உள = உண்டு எனக் கொள்ளுதலேயாம்.

68. எவ்வயிற் பெயரும் வெளிப்படத் தோன்றி
யவ்விய னிலையல் செவ்வி தென்ப.

11



**பொருள்.** உ.—எல்லாப் பெயரும் பயனிலைப்பட நிற்றற் றன்மையில் திரியாமை அதற்குச் செவ்விது என்ப. பிறிது அதற்குச் செவ்வியதாகாமையு முடையது. (யாதோ எனின், உருபேற்றலும் பெயரதிலக்கணம். அவ்வுருபேற்றலையுடைய தாகாது எனலுமாம். நீயிர் என்பது பெயர்; பெயராயினும், நீயிரை என்று உருபேலாது.)

சே.—மூன்றிடத்துப்பெயரும் செவிப்புலனாகத்தோன்றி நின்று பயனிலைகோடல் செவ்விதென்ப ஆசிரியர் எ-று. (எனவே

அவ்வாறு தோன்றுதுநின்று பயனிலைகோடலுமுண்டு, அது செவ்விதன்றென்றவாறும்).

ந.—மூன்றிடத்து எழுவாயுஞ் செவிப்புலனாகத் தோன்றி நின்று பயனிலைகோடல் செவ்விதென்ப ஆசிரியர் எ-று. (எனவே அவ்வாறு தோன்றுதுநின்று பயனிலைகோடலும் உண்டு, அது செவ்விதன்று என்றவாறும். செவ்விதெனவே பிறிதேற்றற்குச் செவ்வியவாகாமையும் உடைய; அவை நீயிரென்பதும் அவ் வாய்க்கொண்டான் என்பதும், உருபேற்றற்குச் செவ்வியவல்ல.)

தே.—மூன்றிடத்துப் பெயரும் வெளிப்படத்தோன்றிப் பயனிலைப்பட நிற்றல் செவ்விது.

இச்சூத்திரத்திற்கு உரையாசிரியர் கூறியபொருள் வேறு; சேனாவரையர் தெய்வச்சிலையார் கூறியபொருள் வேறு; நச்சினார்க்கினியர், சேனாவரையர் கூறியபொருளைக்கூறி, உரையாசிரியர் 'செவ்விதென்ப' என்பதற்குக் கூறிய கருத்தையுங் கூறினர்.

உரையாசிரியர் 'அவ்வியனிலையல்' என்பதற்குப் **பயனிலைப்பட நிற்றற்றன்மையில் திரியாமை** எனப் பொருள் கூறினர். அஃதாவது பெயர் எழுவாயா யிருக்கும்போது கொண்ட உருவத்தினையே வேற்றுமை யுருபேற்கும்போதும் கொள்ளுதலும், மாறுபடாமலிருத்தலும் என்பது. **சேனாவரையர் தெய்வச்சிலையார்** இருவரும் அச்சொல்லுக்குப் **பயனிலைகோடல்** எனப் பொருள் கொண்டனர். உரையாசிரியர் கொண்ட கருத்தைக் கொள்ளின் தோன்றுவெழுவாயுடைய முற்றுவினையின் பிரயோகம் பெறப்படாமையின், சேனாவரையர், தெய்வச்சிலையார் கொள்கையே சிறக்கும். **நீயிர் என்னுஞ்சொல்** பெயர் என்பது சேனாவரையர் **கொள்கையில் எவ்வாறு** பெறப்படுமெனின்,

நீயிர்...' (சொல். 188) என்ற ஆசிரிய வசனத்தாற் பெறப்படு மென்க.

பி-ம்.—சேனாவரையத்தில் 'அவ்வாய் நீயிர் என்பன உரு பேலாவென்று காட்டினரால் உரையாசிரியரெனின்', என்றத னால் 'அவ்வாய், நீயிர்' இரண்டினையும் உதாரணமாக உரையா சிரியர் கூறினர் என்று தோன்றுகிறது. இவ்விரண்டும் நச்சினார்க் கினியத்திலும் கூறப்பட்டன. ஆனால், இ. நம.—இல் இச்சூத் திரத்தின்கீழ் 'அவ்வாய்' என்பது காணப்படவில்லை.

69. கூறிய முறையி னுருபுநிலை திரியா
தீறுபெயர்க் காகு மியற்கைய வென்ப.

இச்சூத்திரத்தின் பொருள் நால்வருக்கும் ஒன்றே. நிலைதிரியாது என்று கூறுவதன் பயன் உரையாசிரியர் மதத்தில் வேறு; சேனாவரையர், நச்சினார்க்கினியர் இவ்விருவர் மதத்தில் வேறு. "நிலைதிரியாது என்றது இவை இடைச்சொல் லாகலால் 'தம்மீறு திரிதல்' (சொல். 251.) என்னுமிலக் கணமுடையகொல்லோ எனின், அவை இல என்றதற்குக் கூறினான் என்பது. அன்றியும், முன்னர் வேற்றுமைமயங்கிய லுள் 'கு ஐ ஆன் என வரூஉம் இறுதி அவ்வொடு சிவணும்' (சொல். 108) என்று செய்யுட்கண் திரிபுகூறுப வாகலானும், அது சொல்லினார் என்பது" என்று உரையாசிரியர் கூறுகின்றார். சேனாவரையர் "வினைச்சொலிறுதி நிற்கு மிடைச்சொல் தாமென

வேறு உணரப்படாது அச்சொற்குறிப்பாய் நிற்குமன்றே, இவை அவ்வாறு பெயர்க்குறிப்பாகாது தாமென வேறுணரப்பட்டு இறுதிநிற்குமென்பார் நிலைதிரியாது என்றார்'' என்றுகூறினர். நச்சினார்க்கினியர் சேனாவரையர் கொள்கையையே உடன்பட்டனர். உருபும் இடைச்சொல்; வினைச்சொல்லிற்கு இறுதிநிற்கும் 'அன் ஆன்' முதலியனவும் இடைச்சொல்; உருபுக்கும் பொருள் உள்ளது; அன், ஆன் முதலியவற்றிற்கும் பொருள் உள்ளது. அவ்வாறிருக்க, அன், ஆன் முதலியன மாத்திரம் வினைக்குறிப்பாய் நிற்கும், உருபு பெயர்க்குறிப்பாய் நில்லாது என்று கொள்வதிற் பயனின்மையால், உரையாசிரியரது கூற்றே சிறப்புடைத்து. உருபுதிரியின் 'வினையே ... தொழின்முதனிலையே' (சொல். 112) என்னுஞ் சூத்திரத்திற் கூறப்பட்ட எண்வகைத்



தொழின்முதனிலையில் அவ்வுருபு எதனைக்குறிப்பது என்று தெளிவாய் அறியமுடியாமையின், பெயர்ப்பகுதி ஒருவாறு திரியினும் உருபு திரியாது என அறிவித்தற்கு 'நிலைதிரியாது' என்றனர் ஆசிரியர் என்பதே உரையாசிரியர் கருத்தாகும்.

உருபைப் பெயர்க்கு முதலிடையிறுதி இவற்றுள் எவ்விடத்துச் சேர்ப்பது என்ற ஐயந் தோன்ற, ஈற்றின்கண்ணே சேர்க்க வேண்டுமென்பதை உணர்த்தற்கு 'ஈறு' என்ற சொல்லைச் சூத்திரத்தில் வழங்கினர். உலகத்திற் சிலமொழிகளில் உருபை முதற்கண்ணும் சிலமொழிகளில் இடையிலும் சேர்த்தல் காண்க.

தெய்வச்சிலையார் 'இச்சூத்திரங் கூறவேண்டா. மேலைச் சூத்திரத்து 'பெயர் ஐ ஒடு கு...' என்பதனாற் பெறுதும் எனில்

அது கருதியன்று கூறியது. வடமொழிக்கண் எழுவாயாகிய பெயர் ஈறு கெட்டு உருபேற்கும், அவ்வாறன்றித் தமிழ்மொழி ஈறு திரியாது எழுவாயாகிப் பெயரின்மேலே உருபு நிற்கும் என்பது அறிவித்தற்கெனக் கொள்க' என்றனர். 'பெயர் ஐ ஒடு கு...' என்ற சூத்திரத்திற்கு அவர் கூறிய உரை சிறந்ததன்று என்று ஆங்குக் கூறப்பட்டது; அக்கருத்துப்பற்றியே ஈண்டும் அவர் கூறுதலின் இவ்வுரையும் பொருந்தாமை யறிக.

70. பெயர்நிலைக் கிளவி காலந் தோன்றா
தொழினிலை யொட்டு மொன்றலங் கடையே.

**பொருள்.** உ.—பெயர்ச்சொல் காலந்தோன்றா; தொழிற்பெயராயிற் காலந்தோன்றும் எ-று.; (இனி ஒரு கருத்து; தொழில்நிலைப்பெயர்ச்சொல் காலந்தோன்றா, காலம் ஒட்டுந் தொழிற்பெயர் அல்லாதவிடத்து எ-று.)

சே.—பெயர்ச்சொல் காலந்தோன்றா, வினைச்சொல்லோடொக்கும் ஒருகூறல்லாதவிடத்து எ-று. (பெயராகிய நிலையையுடையது பெயர்நிலையென அன்மொழித்தொகை. பெயர்-பொருள். தொழினிலையுமது. ஒட்டுமென்பது உவமச்சொல்).

ந.—பெயர்ப்பெயராகிய சொல்லும், அப்பெயரது நிலையிலே நிற்றலையுடைய சொல்லும் காலந்தோன்றாவாய் நிற்கும், ஒரு பொருளது புடைபெயர்ச்சியாய்க் காலந்தோன்றுதற்குப் பொருந்தும் ஒரு கூற்றுத் தொழிற்பெயரல்லாவிடத்து. பெயர் தொழினிலை என்பன ஆகுபெயர். பெயர்-பொருள்; தொழினிலை-காலம்; ஒட்டும்-பொருந்தும்.



தெ.—பெயர்நிலைமையுடைய சொல் காலந்தோன்றா.

தொழில் நிலையொடு ஒட்டி நிற்கும் பெயரும் ஒருவகையல்லன் காலம் தோன்றா.

பெயர்நிலைக்கிளவி என்பதற்கு உரையாசிரியரும், சேனவரையரும், தெய்வச்சிலையாரும் பெயர்ச்சொல் என்று பொருள் கொண்டனர். நச்சினார்க்கினியர் பெயர்க்கிளவி, நிலைக்கிளவி என்று பிரித்துப் பெயர்ப்பெயராகிய சொல்லும் அப்பெயரது நிலையிலே நிற்றலையுடைய சொல்லும் என்று பொருள் கொண்டார். அவ்வாறு பிரிப்பதற்குக் காரணம், உண்டல் பூசல் என்பவை காலந் தோன்றாத் தொழிற்பெயராயிருத்தலின், அவையும் இச்சூத்திரத்துள் அடங்கவேண்டும் என்பது கருதிப்போலும்.

உரையாசிரியர் கூறிய இரண்டாம் கருத்துக்கு[1]க் காரணம், பெயர்ச்சொல்லுக்குக் காலங்காட்டுந் தன்மை ஒருகாலும் நிகழாமையே. ஆயினும் அஃது இவ்விடத்திற்குப் பொருத்தமின்று.

காலந்தோன்றாமையாகிய பெயரிலக்கணம் இச்சூத்திரத்தாற் பெறப்பட்டது என்பர் சேனவரையரும் தெய்வச்சிலையாரும். உண்டான், வந்தான் என்பன வினையின் உருவங்கொண்டு காலத்தைக் குறிப்பினும், பெயர்ப்பொருளைக் குறிக்கும்போது பெயர்த் தன்மையடைந்து பயனிலைகொள்ளும், உருபையுமேற்கும் என்பது இச்சூத்திரத்தாற்போந்த கருத்து என்னலாம்.

71. இரண்டாகுவதே
ஐயெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
யெவ்வழி வரினும் வினையே வினைக்குறிப்
பவ்விரு முதலிற் றோன்று மதுவே.

பொருள். உ.—இரண்டாம் எண்ணுமுறைமைக்கண்ணது ஐ என்னும் பெயரையுடைய வேற்றுமைச்சொல் ; அது யாண்டுவரினும் வினையும் வினைக்குறிப்பும் என அவ்விரண்டையும் தனக்குத்

தோற்று நிலமாக உடைத்து: அவ்விரண்டும் நிமித்தமாகத் தோன்றுமெனினு மமையும் எ-று.

சே.—'பெயர் ஐ ஒடு கு...' என்னுஞ் சூத்திரத்து ஐயெனப் பெயர்பெற்ற வேற்றுமைச்சொல் இரண்டாவதாம். அஃது

1. இ. ந.—இல் 'அற்றன்று' என்பதற்குமுன் 'எனின்' என்ற சொல் இருப்பின் அந்நுவயித்துப் பொருள் தரும்.



**யாண்டுவரினும் வினையும் வினைக்குறிப்புமாகிய அவ்விரண்டு முதற் கண்ணுந் தோன்றும்,** அவை பொருளாக **வரும்** எ-று.

ந.—'பெயர் ஐ ஒடு கு...' என்னுஞ் சூத்திரத்து ஐயெனப் பெயர்பெற்ற வேற்றுமைச்சொல் இரண்டாவதாம்: அஃது யாண்டுவரினும் **வினைச்சொல்லினும் வினைக்குறிப்புச்சொல்லினும் பிறந்த செயப்படுபொருளாகிய அவ்விரண்டு காரணத்தின்கண் ணுந் தோன்றும்.**

தே.—இரண்டாம் வேற்றுமையாவது ஐ எனக் குறித்த வேற்றுமைச்சொல். அஃதியாதானும் ஒரு பெயர் வரினும் வினையும் வினைக்குறிப்புமாகிய அவ்விரண்டு முதற்கண்ணுந் தோன்றும் எ-று. (ஐகார வேற்றுமை இரண்டாவதென்னுங் குறியும் பெற்றது. வினை என்பது **செயல்;** வினைக்குறிப்பென்பது அவ் **வினையாற் குறிக்கப்பட்ட பொருள்;** அஃதாவது **செயப்படுபொருள்.)**

'இரண்டாகுவதே, ஐயெனப் பெயரிய வேற்றுமைக்கிளவி' என்பதன் பொருளில் முதன்மூவருக்கும் மாறுபாடில்லை. **வினையே வினைக்குறிப் பவ்விரு முதலிற் றோன்றும்** என்பதன் தாற்பரியார்த்தமாகிய வினைச்செயப்படுபொருளினும், வினைக்குறிப்புச்செயப்

படுபொருளிலும் தோன்றும் என்பதிலும் அம்மூவருக்கும் மாறுபாடில்லை. ஆனால், வினையே வினைக் குறிப் பவ்விருமுதல் என்பதற்கு உரையாசிரியர் வினை வினைக்குறிப்பு அவ்விரண்டையும் தோற்றுநிலமாகக்கொண்டது அல்லது அவ்விரண்டையும் நிமித்தமாகக் கொண்டது என்று இருவகையாகப் பொருள்கொண்டனர். வினை வினைக்குறிப்புக்களைத் தோற்றநிலமாகக் கொள்வதென்ற இவ்விலக்கணம் ஒடு, கு, இன், கண் இவற்றுக்கும் பொருந்தும். 'வினையே செய்வது செயப்படுபொருளே...ஆயெட் டென்ப தொழின்முதனிலையே' (சொல். 112) என்னுஞ் சூத்திரத்தின்கண் முதனிலை என்பதற்குக் காரணம் என்று சேனாவரையர் பொருள் உணர்த்தினமையால் இங்கும் முதல் என்பதற்குக் காரணம் என்று பொருள் கொள்ளுவதே தக்கதென்று தோன்றுகிறது. அவ்வாறாயின் செயப்படுபொருள் வினை, வினைக்குறிப்பு இவற்றால் உணர்த்தப்படும் தொழிலுக்குக் காரணமே யன்றி, வினையும் வினைக்குறிப்பும் செயப்படு பொருளுக்குக் காரணமாகா. சேனாவரையர் 'வினையும் வினைக்குறிப்புமாகிய அவ்விரண்டு



முதல்' என்று பொருள்கூறி, வினையே, வினைக்குறிப்பென்றாயினும், அவற்றின் செயப்படுபொருளே கொள்ளப்படும்' என்று கூறுகின்றார். நச்சினார்க்கினியர் 'வினைச்சொல்லினும் வினைக்குறிப்புச் சொல்லினும் பிறந்த செயப்படுபொருளாகிய அவ்விரண்டு காரணம், என்கின்றார். இவ்விரண்டனுள் நச்சினார்க்கினியர் கூறுவதே பொருத்தமானது. ஏனெனில், வினை, வினைக்குறிப்பு இவ்விரண்டு சொல்லையும் வினைக்குக் காரணம், வினைக்குறிப்புக்குக் காரணம்

என்று சேனாவரையர்க்கு ஆகுபெயராக்கிக்கொள்ள வேண்டியுள்ளது. இருவரும் முதல் என்பது முதனிலை என்பதன் ஏகதேசமாகக்கொண்டு அதற்குக் காரணம் என்று பொருள்கொண்டனர். 'வினையே செய்வது செயப்படு பொருளே—நிலனே காலங் கருவியென்றா—வின்னதற் கிது பயனாக வென்னு—மன்ன மரபி னிரண்டொடுந் தொகைஇ—யாயெட் டென்ப தொழின்முத னிலையே' (சொல். 112) என்னுஞ் சூத்திரத்தில் தொழின்முதனிலை எட்டு என்று கூறியிருக்கும்போது இச்சூத்திரத்தில் முதல் என்பதற்குச் செயப்படுபொருள் என்று எவ்வாறு பொருள்கொள்ளலாம் எனின், செய்வது முதல்வேற்றுமையாற் கூறப்பட்டதனாலும், நிலன் காலம் முதலியன மூன்று முதலிய மற்றவேற்றுமைகளாற் கூறப்படுமாதலாலும், எஞ்சியிருக்கும் செயப்படுபொருளே இங்குக் கூறியுள்ள முதலுக்குப் பொருள் என்று கொண்டனர் என்க. நச்சினார்க்கினியர் செயப்படுபொரு ளென்ற சொல்லை ஏற்புழிக்கோடலால் வந்ததாகக் கூறுகின்றார். அன்றியும் அச்சூத்திரத்தில் செய்வது என்பதற்குப்பின் செயப்படுபொருள் கூறப்பட்டமையானும், செய்வதைப்பற்றிப் பெயர்வேற்றுமையிற் கூறப்பட்டமையானும் அம்முறைபற்றி ஈண்டுச் செயப்படுபொருள் கொள்ளப்பட்டது எனினுமமையும். தெய்வச்சிலையார் வினை, வினைக்குறிப்பு இரண்டற்கும் கொண்டபொருள் சிறந்ததன்று.

இயற்றப்படுவதும் வேறுபடுக்கப்படுவதும் எய்தப்படுவது[1]மெனச் செயப்படுபொருள் மூன்றும் என்று சேனாவரையர் கூறுகின்றார்.

1. Cf. निर्वर्त्यं च विकार्यं च प्राप्यं च त्रिविधं मतम् । तत्रेप्सिततमं कर्म ... ...
(வாக்யு. 3, கா. 45).



ஐ, ஒடு முதலிய வேற்றுமைகளுக்கு இரண்டாவது, மூன்றுவது முதலிய வேற்றுமை யென்ற பெயர் வடமொழியில் அந்தேபொருள் கொண்ட பிரத்தியயங்களுக்குத் துவிதீயை, திருதீயை முதலிய பெயரை யொத்துள்ளன: "துதியை, திருதியை என்றாற்போலத் தொல்காப்பியரும் 'இரண்டாகுவதே', 'மூன்றாகுவதே' என மொழிபெயர்த்துக் கூறுவர்" என்று பிரயோக விவேகநூலார் கூறுவதுங் காண்க.

இச்சூத்திரத்தில் 'ஐ' என்னுஞ் சொல்லை யுத்தேசித்து அதன் பெயர் இரண்டாம் வேற்றுமை என்றும், அது செயப்படு பொருளில் வரும் என்றும் இரண்டு விதிப்பது வாக்கியபேத மன்றோ என்ற ஐயம் தோன்றலாம்: அதற்கு இரண்டாம்வேற்றுமை என்னும் பெயர் 'அவைதாம், பெயர் ஐ ஒடு கு...' (சொல். 64) என்னுஞ் சூத்திரத்தானே விதிக்கப்பட்டது: அச்சூத்திரத்தால் விதிக்கப்பட்ட 'இரண்டாம்வேற்றுமை' என்ற பெயரை இச்சூத்திரம் அநுவதித்து, அது செயப்படு பொருளில் வரும் என்பதை மாத்திரம் விதிக்கின்றது என்று கொள்க. அங்ஙனங்கூறுது இரண்டாகுவது என்பதை ஐயெனப்பெயரியவேற்றுமைக்கிளவி என்பதற்கு அடைமொழியாகவும், 'வினையே வினைக்குறிப்பவ் விருமுதலிற் றோன்றுமது' என்பதை விதேயமாகவுங் கொள்ளின் அவ்வையமும் நிகழாது. இம்முறையை வருஞ்சூத்திரங்களுக்குங் கொள்க.

பா-ம்.சே. தா.—' அவ்விரண்டு முதற்கண்ணுந் தோன்றும், அவை பொருளாக வரும்.' சே. சை.—' அவ்விரண்டு முதற்கண்ணுந் தோன்றுமவை பொருளாக வரும்.' பின் பாடத்தின்படி சூத்திரத்திலுள்ள அவ்விருமுதலிற்றோன்றுமது என்பது பயனில்லையாயிருக்கவேண்டும். அதற்கு எழுவாய் சூத்திரத்திற் காணப்படவில்லை. வேற்றுமைக்கிளவியை எழுவாயாகக் கொள்ளின், அஃது இரண்டாகுவதே என்பதற்கு அன்றி இதற்கு எழுவாயாகாது. மேலும், சேனாவரையத்திலுள்ள 'அஃது ... அவ்விரண்டுமுதற்கண்ணுந் தோன்றுமவை பொருளாக வரும்' என்ற வாக்கியத்தில் அவ்விரண்டு முதற்கண்ணுந் தோன்றுமவை என்பது அஃது என்பதனோடும் அந்நுவயிக்கவில்லை; பொருளாக என்பதனோடும் அந்நுவயிக்கவில்லை. அஃது என்பதனோடு அந்நுவயிக்குமாயின், தோன்றுமவை என்பதற்குப் பிரதியாகத்



தோன்றுமது என்றிருத்தல் வேண்டும். அவ்விரண்டு முதற்கண்ணுந் தோன்றுதலையுடையது உருபேயன்றிப் பொருளன்றாதலாற் பொருளாக என்பதனோடும் அந்நுவயிக்காது. ஆதலால், சே. தா. பாடமே பொருத்தமானது என்று தோன்றுகிறது. அவை என்பதற்கு வினைமுதல்[1], வினைக்குறிப்புமுதல் என்பன பொருளாகும்.

72. காப்பி னொப்பி னூர்தியி னிழையி
னோப்பிற் புகழிற் பழியி னென்றா
பெறலி னிழவிற் காதலின் வெகுளியிற்

செறலி னுவத்தலிற் கற்பி னென்ற
வறுத்தலிற் குறைத்தலிற் றொகுத்தலிற் பிரித்தலி
னிறுத்தலி னளவி னெண்ணி னென்ற
வாக்கலிற் சார்தலிற் செலவிற் கன்றலி
னோக்கலி னஞ்சலிற் சிதைப்பி னென்ற
அன்ன பிறவு மம்முதற் பொருள
வென்ன கிளவியு மதன்பால வென்மனார்.

இச்சூத்திரத்திற்கு உரைகாரர் நால்வரும் ஒருவகையாகவே பொருள் கொண்டனர். உரையாசிரியர் இச்சூத்திரத்தையும் இதற்குமுன்னுள்ள சூத்திரத்தையும் ஒன்றாக்கினர். அதற்குக் காரணம் அவ்விரண்டும் ஒரு வேற்றுமையைப்பற்றிக் கூறுதல் போலும். ஆனால், அவ்வாறு ஒரே சூத்திரமாகக்கொள்ளின் வாக்கியபேதம் என்ற குற்றம் வரும். மூன்றாம் வேற்றுமை முதலியவற்றின் பொருளைக் கூறுமிடத்தும் இவ்வாறே அவர் கூறியாது காண்க.

73. மூன்றாகுவதே,
ஒடுவேனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
வினைமுதல்[2] கருவி யனைமுதற் றதுவே.

இச்சூத்திரத்திற்குப்பொருள் நால்வருக்கும் ஒன்றே. இங்கு ஒடு என்பதை மாத்திரங் கூறியிருப்பினும்,[3] 'ஒம்படைக் கிளவிக்

1. இங்கு வினைமுதல் என்பதற்குக் கருத்தா அன்று பொருள். வினைக்குக் காரணம் என்பதே. அக்காரணம் செயப்படுபொருள் எவ்வாறு என்பது முன்னர்க் கூறப்பட்டது.

2. Cf. कर्तृकरणयोस्तृतीया (அஷ். 2-3-18).

3. 'ஆறு மானும் மூன்றனுருபே யென்றார் அவிநயனார்' என்று வீரசோழியவுரையிற் கூறியுள்ளது காண்க.

12



கையு மானுங்—தாம்பிரி விலவே தொகைவரு காலை' (சொல். 97) என்னுமிடத்தும், 'கு ஐ ஆனென வரூஉ மிறுதி—அவ் வொடு சிவணுஞ் செய்யுளுள்ளே' (சொல். 108) என்னுமிடத் தும் 'ஆன்' என்னுமுருபை ஆசிரியரே ஐங்குப்பின் உடம்பொடு புணர்த்துக் கூறியிருத்தலால், ஒடுவோடு ஆனும் மூன்றாம்வேற்று மையுருபாகக் கொள்ளப்பட்டது என்னலாம். இக்காலத்தில் வினை முதற்பொருளிலும் கருவிப்பொருளிலும் 'ஆன்,' 'ஆல்' இவை கூறப்படுகின்றனவேயன்றி 'ஒடு' கூறப்படுகின்றிலது. இவ்வாறே சேனாவரையர்காலத்தும் இருந்தது என்பது 'வினைமுதல் கருவிக் கண் ஒடுவெனுருபு இக்காலத் தருகியல்லது வாராது' என்னும் வாக்கியத்தால் தெளிவாகிறது. ஆசிரியர்காலத்தில் ஒடுவும் ஆனும் வேற்றுமையின்றி எல்லாப்பொருளிலும் வழங்கியிருத்தல் வேண்டும்.

வினைமுதற்பொருளில் வருகின்ற 'ஒடு'விற்கு உதாரணமாகக் 'கொடியொடுதுவக்குண்டான்' என்பதை மூவரும் கொடுத்தனர். அகத்தியனாற் றமிழுரைக்கப்பட்டது என்னுமிடத்து மூன்றாம் வேற்றுமை, இச்சூத்திரத்துள்ள 'வினைமுதல்' என்பதனால் பெறப் படுதலின் வருஞ் சூத்திரத்தில் 'அதன்வினைப்படுதல்' என்பது எற்றுக்கு? எனின், 'இது இயற்றும் வினைமுதலும் ஏவும் வினை முதலும் என இருவகைப்படும்' என்று ஈண்டு நச்சினார்க்கினியர் கூறியது காண்க.

74. [1]அதனி னியறல் அதற்றகு கிளவி
யதன்வினைப் படுத லதனி னாதல்

லதனிற் கோட லதனோடு மயங்க
உலதனோ டியைந்த வொருவினைக் கிளவி

1. 'அதுவென்றது உருபேற்கும் பெயர்ப்பொருள்' (சே.)

2. 'அதனொடியைந்த வொருவினைக்கிளவி' என்று பொதுப்படக் கூறியதனால் ஆசிரியனோடு வந்த மாணாக்கன், மாணாக்கனோடு வந்த ஆசிரியன் என்ற இரண்டும் பெறப்படுமாயினும், 'ஒருவினை யொடுச்சொ லுயர்பின் வழித்தே' (சொல். 91) என்று சிறப்பாக விதித்தலால் ஆசிரியனொடு வந்த மாணாக்கன் என்பதே பெறப்படுதல் காண்க. வடமொழியில் सहयुक्तेऽप्रधाने (அஷ். 2-3-19) என்னுஞ் சூத்திரப்படி மாணாக்கனொடு வந்த ஆசிரியன் என்றே கூறவேண்டும். இது வடமொழிக்கும் தமிழ் மொழிக்குமுள்ள பல வேறுபாடுகளில் ஒன்று. ஆனால் பிற்காலத்தில் தமிழில் அது மாறியும் வரும். உ-ம்.—வந்த நம்பியைத் தம்பி தன்னொடு (கம்பரா. கையடை. 17).



யதனோ டியைந்த வேறுவினைக் கிளவி
யதனோ டியைந்த வொப்ப லொப்புரை
யின்னா னேது[1] வீங்கென வரூஉ
மன்ன பிறவு மதன்பால வென்மனார்.

இச்சூத்திரத் தொருபகுதியான இன்னானேது என்பதற்கு உரையாசிரியர் இன்னான் என்புழியும் ஏதுவின் கண்ணும் என்று பொருள் கொண்டார். சேனாவரையர் 'இன்னானென்பது உம்மைத்தொகை, அவற்றதேது, இன்னானேது; அதனிறுதலெனக் காரகவேது முற்கூறப்பட்டமையான் இது ஞாபகவேதுவாம்' என்றுகூறி, 'சினைவிகாரத்தை முதன்மேலேற்றிக் கூறும்

பொருண்மை இன்னனென்பதனற் பெறப்படாமையான் அது போலியுரையென்க' என்று உரையாசிரியரை மறுத்தனர். சேனவரையர் கூறியுள்ள பொருள் ஏது என்பதிலேயே கிடைக்கும். இன்னன் என்பது வேண்டா. உரையாசிரியர் இன்னன் என்பதற்கு இவ்வாறுள்ளவன் என்று பொருள்கொண்டு அதற்கு உதாரணமாகக் கண்ணற் கொத்தை, காலான் முடவன் என்னுமிவற்றைக்கூறியது பொருத்தமானதே. 'அன்னபிறவும்' என்பதனல், 'கண்ணற் கொத்தை' முதலியவற்றை அடக்கிய சேனவரையர் சூத்திரத்திலுள் 'இன்னன்' என்பதற்கு அவற்றை உதாரணமாகக் காட்டிய உரையாசிரியர் கொள்கையை மறுத்தது பொருந்துமா? தெய்வச்சிலையார் இன்னனேது என்பதற்கு இன் என்னுஞ் சொல், ஆன் என்னுஞ் சொல், ஏது என்னுஞ் சொல் என்று பொருள்கூறிப் புகையுண்மையின் நெருப்புண்மையறிக, புகையுண்மையான் நெருப்புண்மையறிக, புகையேதுவாக நெருப்புண்மையறிக என்று உதாரணங்கூறினர். மூன்றும் வேற்றுமைப் பொருளின்விரிவைக் கூறும் இச்சூத்திரத்தில் இவ்வாறு கூறுவது பொருத்தமின்று.

"அதனினியற லென்பதற்குத் தச்சன் செய்த சிறுமாவைய மென்று உதாரணங்காட்டினரால் உரையாசிரியர் எனின், அற்றன்று; தச்சன் செய்த சிறுமாவையமென்பது வினைமுதல் கருவி யணைமுதற்று" என்புழி யடங்குதலால் அது போலியுரை

1. Cf. हेतौ (அஷ். 2-3-23).



யென்க" என்று சேனவரையர் உரையாசிரியரை மறுத்தது பொருந்தும்.

பி-ம். இ. நம.—'ஏதுவினைக்கண்ணும்' என்றுளது. அஃது **ஏதுவின்கண்ணும்** என்றிருத்தல்வேண்டும்.

சே. தா.—'வடநூலுட் பொருள்வேற்றுமையல்லது **உருபு வேற்றுமையின்** (உருபுவேற்றுமையான்) ஒருவேற்றுமையாக **வோதப்பட்டமையானும்**'[1]. சே. கை.— 'வடநூலுட்பொருள் வேற்றுமையல்லது **உருபுவேற்றுமையான்** ஒரு வேற்றுமையாக **வோதப்படாமையானும்**'. இரண்டு பாடத்திற்கும் பொருள் ஒன்றே. முன்னருள்ள பாடத்தில் **பொருள்வேற்றுமையல்லது** என்பது பெயராய் 'உருபு' என்பதற்கு அடையாகும். பொருள் வேற்றுமையல்லாததாகிய உருபு என்பது பொருள்; பின்னருள்ள பாடத்தில் அச்சொல் **ஓதப்படாமையானும்** என்பதைத் தழுவும். அவற்றின் கருத்து ' வடநூலுட் பல உருபுகள் உருவத்தில் மாறுபடினும் பொருளில் மாறுபடாவிடின், அவை ஒரு வேற்றுமையாகக் கொள்ளப்பட்டன; பொருளில் மாறுபடின் ஒரு வேற்றுமையாகக் கொள்ளப்படவில்லை' என்பதே.

75. நான்காகுவதே,
கு எனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
யெப்பொரு ளாயினுங் கொள்ளு மதுவே.

கொடை என்பதில் இரண்டு அமிசம் உள்ளன; பிறரை அடையச் செய்தல் ஒன்று; தன்னைவிட்டுநீங்குதல் மற்றொன்று. பொதுவாக ஒவ்வொரு கொடையிலும் இவ்விரண்டும் இருக்க வேண்டும். ' மாணுக்கற்கு அறிவுகொடுத்தான் ' என்னுமிடத்துக் கொடைப்பொருள் அறிவு; அதனை மாணுக்கன்பால் அடைவித்த போதிலும், அஃது ஆசிரியனைவிட்டு நீங்கவில்லை. அவ்விடத்தும் நான்காம் வேற்றுமை வருமென்பதற்கு ' எப்பொருளாயினும் '

1. ஒடுவும் ஆனும் வெவ்வேறு பொருள்களில்தான் வருமென்று

கருதி, டாக்டர் கால்ட்வெல் (Dr. Caldwell) 'அவற்றைத் தமிழ் இலக்கணக்காரர்கள் இரண்டு வேற்றுமையாகக் கூறாது ஒருவேற்றுமையாகக் கூறினது வடமொழியைப் பின்பற்றியே' என்று கூறினர். இக்கொள்கை 'ஒடுவும் ஆனும் இரண்டு வேற்றுமையாகற்பால வெனின் அற்றன்று... ஒரு வேற்றுமையாகவே யோதினுரென்க' என்று பன்னூற்றாண்டுகட்கு முன்பே சேனாவரையரால் மறுக்கப்பட்டமை ஈண்டுக் காண்க.



என்றார் என்று சேனாவரையர் கூறுகின்றார்.[1] உரையாசிரியர் "எப்பொருளாயினும்' என்றார், மூன்றிடத்துப்பன்மை நோக்கி" என்று பயன் கூறியுள்ளார். செலவும் கொடையும், 'ஏனை யிரண்டு மேனை யிடத்த' (சொல். 30) என்னுஞ் சூத்திரப்படி, தன்மைமுன்னிலைக்கு வாராவிடினும் 'எப்பொருளாயினும்' என்று இச்சூத்திரத்திற் கூறியிருத்தலால் கொடை மூன்றிடத்திற்கும் வரும் என்பதே அவர் கருத்துப்போலும்.

79. ஆறாகுவதே,
அதுவெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
தன்னினும் பிறிதினு மிதன திதுவெனு
மன்ன கிளவிக் கிழமைத் ததுவே.

பா-ம். சே. தா.—'நிற்குமதனுற் கிளவியிற்றேன்றும்'. சே. சை.—'நிற்குங் கிளவியிற்றேன்றும்'. பின்பாடமே பொருந்தும்.

81. ஏழாகுவதே,
கண்ணெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி

வினைசெய் யிடத்தி னிலத்திற் காலத்தி
னனைவகைக் குறிப்பிற் றோன்று மதுவே.

சூத்திரத்திற் குறிப்பு என்னுஞ் சொல்லுக்கு 'அவற்றையிடமாகக் குறித்தவழி அவ்வேற்றுமை தோன்று மென்றவாறு. எனவே இடமாகக் குறிக்கப்படாதவழி அப்பெயர்க்கண் வேற்

1. Cf. त्यागो दानम्, दीयमानस्य स्वत्वनिवृत्यापरस्वत्वापादनम् । शूद्राय मतिं ददाति इत्यत्रापि मतिसन्तानस्य चैकदेशस्त्यज्यमान इति स्वत्वनिवृत्यपरस्वत्वापादनलक्षणे मुख्य एव ददात्यर्थः । अन्ये तु मतेः दानसम्बन्धानवगमात् गौण इत्याहुः ॥

(வாக்ய. 3. கா., 262, பக். ஹேலா.)

(இதற்குப் பொருள்.) 'தியாகம் என்பது தானம். அஃதாவது தனக்கு உரியது என்பதை ஒழித்துப் பிறருக்கு உரியதாகக் கொடைப்பொருளைச் செய்வது. சூத்திரனுக்கு அறிவுகொடுக்கிறான் என்னுமிடத்தும் ஆசிரியனது திரண்ட அறிவின் ஒரு பகுதி ஆசிரியனைவிட்டு மாணாக்கனுக்குப் போதலால், கொடுத்தல் தனக்குரிய முக்கியப் பொருளதேயாம். சிலர் கூறுவது 'ஆசிரியனது அறிவு ஆசிரியனைவிட்டுச் செல்லாததால் ஈண்டுக் கொடுத்தல் கௌணப்பொருளது என்க'. சேனாவரையர் பின் கூறிய கொள்கையைக் கொண்டனர்.



றுமை தோன்றாதென்பதாம். தன்னினமுடித்த லென்பதனான் ஏனைவேற்றுமைச் சொற்களும் அவ்வப் பொருட்கண் குறிப்பின்வழி அவ்வப்பெயர்க்கண் வாராமை கொள்க' என்று 'சேனாவரையர் கூறியது வடநூற் கொள்கையோடு பொருந்துகின்றது.[1]

82. கண்கால் புறமக முள்ளுழை கீழ்மேல்
பின்சா ரயல்புடை தேவகை யெனாஅ
முன்னிடை கடைதலை வலமிட மெனாஅ

உரையாசிரியர் 'இனி, அவ்வேற்றுமை யுருபு பலவாகலின் அவற்றை விரிக்கின்றார்' என்றும், 'தேவகை என்பது திசைக் கூற்று: அது வடக்கண் வேங்கடம், தெற்கண் குமரி எனவரும்' என்றும் கூறினர். அவர் மதத்தில் தேவகையைத் தவிர மற்றவை யெல்லாம் ஏழாம் வேற்றுமை யுருபுகளே. இம்மதத்தைச் சேனவரையர் 'உருபாயின், ஏழாவதற்குக் கண்ணென்பது உருபாதல் மேலே பெறப்பட்டமையாற் பெயர்த்துங் கண்காலென்றல் கூறியது கூறல்: ஊர்ப்புறத்திருந்தான், ஊரகத்திருந்தான், கைவலத்துள்ளது கொடுக்கும் எனப் புறம், அகம் வல மென்பனவற்றுவழி அத்துச் சாரியை கொடுத்துதாரணங்காட்டினது பொருந்தாது:' என்ற இரண்டு காரணங்களால் மறுத்து, 'கண் கால் முதலியனவெல்லாம் ஏழாம்வேற்றுமைப் பொருளே யுணர்த்தின' என்று கூறினர். நச்சினார்க்கினியர், கண், தேவகை இவ்விரண்டும் பொருள் என்றும், எஞ்சியவை உருபென்றும் கூறிச் சேனவரையரை 'கண் கால் முதலியன உருபை விளக்குதற்கு அவ்வுருபின் பொருளாய்நின்று கண்ணெனுருபு விரித்துக் கொண்டு நிற்கு மெனின், கண்ணென்னும் உருபின்பொருளாவது கண்ணென்னும் இடைச்சொல்லானுணர்த்தப்படும் இடப் பொருண்மை யென்று பொருளுரைத்தாற் பின்வருகின்ற இடப் பொருண்மையை முன்னுங் கூறிற்றேயாமாதலிற் கூறியது கூறித் தும்: அல்லதூஉங் கண்ணகன்ஞால மென்புழிக் கண்ணென்னும் இடைச்சொல்லான் உணர்த்தும் இடப்பொருண்மைக்கும்

1. இதுபோலவே வடமொழியிலக்கணத்துள்ளும் विषयात: कारकाणि என்ற நியாயம் உளது.

இடத்துக்கண்ணெனக்[1] கண்ணெனுருபு மீண்டுங் கூறல்வேண் டும்: அல்லதூஉம் வடக்கண் வேங்கடம் என்புழிக் கண்ணெ னுருபு விரித்தலின் ஒழிந்தவற்றிற்கு ஒவ்வாதாம்:[2] அல்லதூஉம் ஆலின்கீழ்க் கிடந்த ஆ, மரத்தின்மேலிருந்த குரங்கு என்பன முதலியவற்றிற்குக் கண்ணெனுருபு கொடுத்து உலகம்வழங்காமை உணர்க: என்ற நான்கு காரணங்களால் மறுத்து 'முன் இரண் டாவது முதலிய உருபுகளை முடித்தற்கு எடுத்தோதிய காப்பு முதலிய பொருள்களைப்போல் உருபை முடித்தலில்லாது ஈண்டுக் கூறிய பொருள்கள் கண்ணென்னும் உருபையே உணர்த்திநின் றன என்றலிற் சேனாவரையரும் இப்பொருள்களை உருபென்றே கூறினாரியிற்று' என்று கூறினர். இடைச்சொல்லாகிய கண்ணி னது பொருளில் உருபாகிய கண் வருமென்பது சேனாவரையர் கருத்தேயன்றி, அக்கண்ணின் பொருட்குப் பின் இவ்வுருபாகிய கண் வருமென்பது அவர் கருத்தன்று என்று கூறின் நச்சினார்க் கினியர் சேனாவரையரின்மேற் கூறும் முதல் இரண்டு குற்றமும் நில்லா. ஆலின்கீழ்க்கிடந்த ஆவை ஆலின்கட்கிடந்தது, மரத்தின் மேலிருந்த குரங்கை மரத்தின்கண் இருந்தது என்று உலகம் வழங்கியுள்ளது எனச் சேனாவரையர் கூறினர்; நச்சினார்க்கினியர் அன்று என மறுப்பர். ஆயின், 'பெயருந் தொழிலும்...' (எழுத். 132) என்னுஞ்சூத்திரத்தி னுரையில் மரத்துக்குரங்கு, மரத்துக் கட் குரங்கு என்று அவரே உதாரணமாகக் கூறியதை மறந்த னர். ஆதலின், இச்சூத்திரம் கண்ணெனுருபின் பொருள் களை யுணர்த்துகின்றதா? கண்ணின் பொருளில்வரும் வேறுருபு களை யுணர்த்துகின்றதா? என்று ஆராய்தல்வேண்டும். கால் புறம்

முதலியன உருபுகளாயின், சேனாவரையர் கூறியவாறே ஊரகத்திருந்தான், ஊர்ப்புறத்திருந்தான் என்புழி அத்துச்சாரியை கொடுப்பது பொருந்தாது. ஏனெனில், சாரியைகள் உயர்திணைப் பெயருக்கும் அஃறிணைப்பெயருக்கும் பின்வருமேயன்றி, இடைச் சொற்களுக்குப்பின்னர் வாரா என்பது ' அவற்றுவழி மருங்கிற்

1. கண்கண்ணென என்பதற்குப் பிரதியாக இடத்துக்கண்ணென என்று பொருள்நோக்கிக் கூறினர்போலும்.

2. தேவகைக்கு உதாரணமாகிய வடக்கண் என்னுமிடத்துக் கண்ணுருபு பொருளைக்காட்டுமென்பது பொருந்தும். மற்ற இடங்களிற் பொருந்தாது என்பது பொருள்.



சாரியை வருமே ' (எழுத். 118) என்னுஞ் சூத்திரத்தால் தெளிவாய் அறியப்படுகின்றது. வேற்றுமையுருபிற்கும் பின்வருஞ் சொற்களுக்கு மிடையிற் சாரியை வருமென்று யாண்டும் விதித்திருப்பதாகத் தெரியவில்லை. மற்ற வேற்றுமையிற் சொல்லுருபுகள் வருமிடத்து, அவ்வுருபுகளுக்கு முன்னேதான் சாரியை சேர்ந்துள்ளன. உ-ம். மரத்திலிருந்து, மரத்தினுடைய. அன்றியும் கால் புறம் முதலிய சொல்லுருபுகளை விதித்த ஆசிரியர் ஆறுவது வேற்றுமையில் உடைய என்பதையும், ஐந்தாம் வேற்றுமையில் இருந்து என்பதையும் ஏன் கூறிற்றிலர் ? என்ற வினாவிற்கு விடையின்மை யறிக.[1] இதனால் நச்சினார்க்கினியர் கூறிய மூன்றாங்குற்ற மொழிந்தமை காண்க.

மேலும் 'காப்பினொப்பின்...' (சொல். 72) என்ற சூத்திரத்தால் ஊரைக்காக்கும் என்னுமிடத்து 'ஐ' என்பது காக்கப்படுதல் என்ற செயப்படுபொருள்விசேடத்தைக் குறிக்கும். அப்பொருள்விசேடம் காக்கும் என்ற வினையின் தொடர்பால் சேரும். இங்கும் 'கண் கால்...' என்ற சூத்திரத்தால் மரத்துக்கட் குரங்கு என்னுமிடத்து கண் என்பது மேலிடம் என்ற இடவிசேடத்தைக் குறிக்கும். அப்பொருள்விசேடத்தைக் குறிக்க 'மேல்' என்ற சொல்லின் தொடர்பு அவசியமன்று. ஆயினும் 'காப்பினொப்பின்...' என்ற சூத்திரம் 'ஐ' உருபுக்குச் செயப்படுபொருள் விசேடத்தைக் கூறியதுபோல் 'கண் கால்...' என்ற இச்சூத்திரமும் கண்ணுருபுக்கு இடம் காலம் இவற்றின் விசேடத்தைக் கூறிற்று என்பதில் குற்றமொன்றுமில்லை. மேலும், ஆசிரியர் 71, 73, 75, 77, 79-ஆவது சூத்திரங்களால் இரண்டாம்வேற்றுமைமுதல் ஆறும்வேற்றுமை யிறுதியான வேற்றுமைகளின் பொருளைப் பொதுவாய்க்கூறி, தனித்தனி அவற்றை அடுத்து 72, 74, 76, 78, 80-ஆவது சூத்திரங்களால் அவற்றின் விசேடத்தைக் கூறியதுபோல், இங்கும் 81-ஆவது சூத்திரத்தால் ஏழாம் வேற்றுமைப்பொருளைப் பொதுவாய்க்கூறி 82-ஆவது சூத்திரத்தால் அவ்வேழாம்வேற்றுமைப் பொருளின் விசேடத்தைக் கூறுகின்றார் என்பதே சூத்திரப் போக்குக்குத் தக்கதாகும்.

---

1. இலக்கணவிளக்கவாசிரியர் சேனாவரையர் கொள்கையையே ஆண்டனர் என்பது கவனிக்கத்தக்கது.



## 83. வேற்றுமைப் பொருளை விரிக்குங் காலை

யீற்றுநின் றியலுந் தொகைவயிற் பிரிந்து
பல்லா றாகப் பொருள்புணர்ந் திசைக்கு
மெல்லாச் சொல்லு முரிய வென்ப.

**பொருள்.** உ.—(பிரிந்தே என்று பாடங்கொண்டு இதனது முன்னிரண்டடிகளை ஒரு சூத்திரமாகவும், பின்னிரண்டடிகளை மற்றொரு சூத்திரமாகவுங் கொண்டார்.) அக் கூறிய வேற்றுமைகள் தொக்குமுடியவும் வேண்டும்; அத்தொக்க வேற்றுமையுருபு விரியுங்கால் யாண்டுநின்று புலப்படுமோ வெனின், மொழியீற்றுக் கண்ணே புலப்படும் எ-று. உருபு தொக்கும் விரிந்தும் நிற்கும் என்றார், அவ்வுருபேயும் அன்று, ஆண்டுப் பிறசொற்களும் உள, அவ் வுருபேபோல வந்து ஒட்டநிற்பன; அவையெல்லாம் அவ் வுருபேபோல ஆண்டே தொகுதலும் விரிதலும் உடையன எ-று.

சே. ந.—வேற்றுமைத்தொகையை விரிக்குமிடத்து, வேற்றுமையேயன்றி, அன்மொழித்தொகையை விரிப்புழிப் பல்லாற்றான் அன்மொழிப்பொருளொடு புணர்ந்துவரும் **எல்லாச்சொல்லும்** விரிக்கப்படும்.

தே.—வேற்றுமைக்குரிய பொருளை விரியக் கூறுங்கால், முதற்பெயர் இறுதிக்கண் இயலும் தொகைச்சொல்லின்கண், தொகையாந் தன்மையிற் பிரிந்து, பலநெறியாகப் பொருளைப் புணர்ந்து ஒலிக்கும் எல்லாச் சொல்லும் உரிய என்று சொல்லுவர் ஆசிரியர் எ-று.

'உரையாசிரியர் இரண்டு சூத்திரமாக அறுத்து ஆசிரியர் மதவிகற்பங்கூறித் தம்மத மிதுவென்பது போதர ஒன்றாகவுரைப் பாருமுளரென்றார். இரண்டாய் ஒன்றாயவழிப் பிறிதுரையின்மையின் உரையாசிரியர் கருத்திதுவேயாம்' என்று சேனாவரையர் கூறினர். ஆனால் இ. நம.—இல் இச்சூத்திரவுரையின்கண் 'ஒன்றாக வுரைப்பாருமுளர்' என்ற வாக்கியங் காணப்பட

வில்லை.

உரையாசிரியர், தெய்வச்சிலையார் இவ்விருவருக்கும் வேற்று மைத்தொகைவிரியின்கண் இடையில் பல சொற்கள் தோன்ற லாம் என்பது. சேனாவரையர், நச்சினார்க்கினியர் இவ்விருவர்க்

13



கும் வேற்றுமைத்தொகை, அன்மொழித்தொகை இவற்றின் விரி யின்கண் அவ்வாறு தோன்றலாம் என்பது. இவர்கள் உரைகளில் வேற்றுமைத்தொகை, அல்லது வேற்றுமைத்தொகையும் அன் மொழித்தொகையும் என்பன உத்தேசியமாகும். இவ்வியலிலே னும், கிளவியாக்கத்திலேனும் அவற்றைப்பற்றிக் கூறாமையின், அவற்றை உத்தேசியமாகக் கொள்வது பொருத்தமின்று.

இச்சூத்திரத்திற்குப் பொருத்தமான பொருள் சிவஞான முனிவரால் கூறப்பட்டுள்ளது. அது வருமாறு.—(ஒத்தினிறுதிக் கட்புறனடை). "காப்பினொப்பின்..." என்றற்றொடக்கத்தன வாக ஈண்டுக்கூறிய பொருளே யன்றி இன்னும் வேற்றுமைப் பொருளை விரித்துக்கூறுங்காலத்துக் காப்பினொப்பி னென்றற் றொடக்கத்துத் தொகைச்சொற்களின் வேறுபட்டுப் பொருளோடு புணர்ந்திசைக்கு மெல்லாச்சொற்களும் ஈண்டுக் கோடற்குரிய வென்ப ரென்றவாறு. முடிக்குஞ்சொல்லைப் பொருள் என்றார், தொடர்மொழிப்பொருள் அதன்கண்ணதாகலின். காப்பினொப் பின் முதலிய சொற்கள் புரத்தல் ஓம்புதல் நேர்தல் நிகர்தல் என் றற்றொடக்கத்துப் பொருள்புணர்ந்திசைக்குஞ் சொற்களையெல் லாங் கருத்துவகையா னுள்ளடக்கித் தொகுத்தமொழியாய் நிற்ற லின் அவற்றைத் தொகை யென்றும், அதனினியறல் அதற்றகு

கிளவி என்றற்றொடக்கத்துத் தொடர்மொழிகளி னிறுதிச்சொற் களே ஈண்டுக் கொள்ளப்படுமென்பது விளக்கிய ஈற்று நின்றியலுந் தொகை யென்றும், ஊரைப் பேணும், ஊரைத் தாங்கும் என்றாற் போலப் பிறவாற்றான் வருவனவுங் காத்தற்பொருளே பயந்துநிற்ற லின் அவையுந் தழுவுதற்குப் பல்லாறாகவென்றுங் கூறினார். வேற்றுமைத்தொகை விரியுமாறு 'வேற்றுமைப்பொருளை விரிக்குங் காலை' என்னுஞ் சூத்திரத்தாற் பெறப்பட்டதாலோவெனின்;— வேற்றுமைத்தொகையை விரிக்குங்காலை யென்னாமையானும், எச்சவியலுட்கூறும் வேற்றுமைத்தொகை விரியுமாறு வேற்று மையியலுட் கூறுதற்கோரியைபின்மையானும், வேற்றுமையிய லுள் உருபும் பொருளும் உருபு நிற்குமிடமு மாத்திரையே கூறி யொழிந்தாரன்றி வேறொன்றுங் கூறாமையானும், வேற்றுமைத் தொகை விரியுமாறு 'வேற்றுமையியல' என்பதனாற் பெறப்படுத லின் வேறு கூறவேண்டாமையானும், வேண்டுமெனிற் பான்மொழி யென்னும் 'முவமத்தொகையும் பாலினினிமைபோலு மினி



மையையுடைய மொழி யென விரிதலின் உவமத்தொகைக்கட் சொற் பெய்து விரித்தற்கு வேறுசூத்திரங்கூறாமை குன்றக்கூற லாய்முடியுமாகலானும் அச்சூத்திரத்திற் கது பொருளன்றென் றொழிக." இவர் கூற்றில் உத்தேசியவிதேயபாவம் நன்கு பொருந்தும்.

மேலும், சேனாவரையர் "இதனை 'வேற்றுமைத் தொகையே

யுவமத் தொகையே' என்னுஞ் சூத்திரத்தின்பின் வைக்கவெனின், அதுவும் முறையாயினும், இனி வருஞ்சூத்திரங்களான் வேற்றுமைத்தொகைவிரிபற்றிய மயக்கமுணர்த்துதலான், ஆண்டுப் படுமுறைமை யுணர்த்துதல் ஈண்டு மியைபுடைத் தென்க" என்று கூறினர். அடுத்துள்ள 34 சூத்திரங்கொண்ட வேற்றுமை மயங்கியலில் அவர் கொள்கைப்படியே தொகையைப்பற்றிக்கூறும் சூத்திரங்கள் 94-ஆவது முதலாக 100-ஆவ திறுதியாக விருக்கும் 7 சூத்திரங்களே. அவையும் தொகைவிரியைப்பற்றிக் கூறுவதல்ல என்பது ஆங்காங்குக் காட்டப்படும். மேலும் அவற்றுள், ஒன்றிலாவது வேற்றுமைத்தொகையை விரிக்குமிடத்து வேற்றுமையே யன்றி அன்மொழிப்பொருளொடு புணர்ந்துவரும் எவ்வகைச் சொல்லும் உணர்த்தப்படவில்லை.

வேற்றுமையியல் முற்றும்.

---

## 3. வேற்றுமைமயங்கியல்.

84. கரும மல்லாச் சார்பென் கிளவிக்
குரிமையு முடைத்தே கண்ணென் வேற்றுமை.

உரையாசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் இம்மூவரும் கருமம் என்பதற்கு மெய்யுறுதல் என்ற பொருள் கொண்ட

னர். அஃதாவது சையோகத்தை உண்டாக்கும் வினை என்று பொருளாகும். தெய்வச்சிலையார் அச்சொல்லுக்குச் செயப்படு பொருள் என்று பொருள் கொண்டனர்.

86. கன்றலுஞ் செலவு மொன்றுமார் வினையே.

பி-ம். சே. சை.—'இரண்டாவதற்கும் ஒருதொழில் என்ற வாறு' என்றுளது. அங்குத் தொழில் என்பது தொழில என்றிருத்தல் வேண்டும்.

87. முதற்சினைக் கிளவிக் கதுவென் வேற்றுமை
முதற்கண் வரினே சினைக்கை வருமே.

இது 'சினைநிலைக் கிளவிக் கையுங் கண்ணும்...' (சொல். 85) என்னுஞ் சூத்திரத்திற்குப் புறனடைச்சூத்திரம்[1] என்பது உரையாசிரியர் கொள்கை. நியமசூத்திரம்[2] என்பது சேனாவரையர் கொள்கை. சேனாவரையர் கொள்கையே பொருந்தும்.

---

1. புறனடைச்சூத்திரம் = अपवादसूत्रम्; அபவாதசூத்திரமாவது ஒரு சூத்திரத்தால் விதிக்கப்பட்டதற்கு முற்றும் மாறுபாடாக விதிக்கும் மற்றொரு சூத்திரம். உதாரணமாக 'உகர விறுதி யகர வியற்றே' (எழுத். 254) என்பதற்கு, 'சுட்டுமுத விறுதி யியல்பா குமமே' (எழுத். 257) என்பது அபவாதம். ஏனெனில், முற்சூத்திரத்தால் விதிக்கப்பட்ட வல்லெழுத்து மிகுவதைத் தடுத்து இயல்பைப் பின்னர்ச்சூத்திரம் விதிக்கின்றது.

2. நியமசூத்திரமாவது ஒருசூத்திரத்தில் ஒன்றை உத்தேசித்து விதிக்கப்பட்டிருக்கும் பலவற்றிலோ, சூத்திரமின்றி இயற்கையாற் கொள்ளப்படும் பலவற்றிலோ, சிலவற்றையே கொள்ளல்வேண்டும் என்று விதிக்கும் சூத்திரம். உதாரணம் :—व्रीहीन् अवहन्ति (நெல் குத்த

வேண்டும்) என்னுமிடத்து அவிசுக்கு வேண்டிய அரிசியை நெல்லைக்குத்தியும் கொள்ளலாம், நகத்தால் உமியை உரித்துங் கொள்ளலாம். இவ்வாறிருக்க, குத்தவேண்டும் என்ற இவ்விதி, நெல்லைக் குத்தித்தான் அரிசியைக் கொள்ளவேண்டும் என்று நியமிக்கின்றது.



88. முதன்மு னவற்றிற் கண்ணென் வேற்றுமை
சினைமுன் வருத றெள்ளி தென்ப.

இதுவும் நியமசூத்திரமென்பதை "இது வருஞ்சூத்திரத்திற்கு மொக்கும்' என்று முற்சூத்திரவுரையிற் சேனாவரையர் கூறினர். இவ்வாறிருக்க, நச்சினார்க்கினியர் முற்சூத்திரத்தில் உருபுமயக்கம் கூறுகின்றது எனவும், இச்சூத்திரத்தில் 'இது பொருண்மயக்கம் உணர்த்துகின்றது' எனவும் கூறுவது பொருத்தமின்று.

இச்சூத்திரத்தையும் முற்சூத்திரத்தையும் ஒன்றாக்கினர் தெய்வச்சிலையார். அங்ஙனமாக்கின் வாக்கியபேதம் என்னுங் குற்றம் வருமாதலின் அது பொருந்தாது.

91. ஒருவினை யொடுச்சொ லுயர்பின் வழித்தே.

உயர்பின் வழித்தே என்பதற்கு உரையாசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் இம்மூவரும் சிறப்புப்பொருள் கொண்ட பெயரின்கண் என்றும், தெய்வச்சிலையார் சிறப்புப்பொருள் கொண்ட பெயரின் வழித்தோன்றும் சிறப்பில்லாப் பொருள் கொண்ட பெயரின்கண் என்றும் பொருள் கொண்டனர். தெய்வச்சிலையார் அவ்வாறு உரைத்தற்குக் காரணம், பாணினி வடமொழியில் அவ்வாறு கூறியதும், பிற்காலத்துத் தமிழிலக்கியங்களில் சிறப்பில்பெயரினும் 'ஒடு' தோன்றுதலும்போலும். பண்

டைத்தமிழிலக்கியங்களிற் சிறப்புப் பெயரிலேயே 'ஓடு' வருத லால் அவர்கூற்றுச் சிறந்ததன்று.

92. மூன்றனு மைந்தனுந் தோன்றக் கூறிய
வாக்கமோடு புணர்ந்த வேதுக் கிளவி
நோக்கோ ரனைய வென்மனார் புலவர்.

சேனவரையர் "'அதன்வினைப்படுத லதனிறைதல்' (சொல். 74) என்றும், 'புதுமை பழமை யாக்கம்' (சொல். 78) என்றும் மூன்றுவதற்கும் ஐந்தாவதற்கும் ஏதுப்பொருள் மேற்கூறப்பட்டமையான் இச்சூத்திரம் வேண்டாவெனின்" என்று ஆசங்கித்து "மயக்கமாத லொப்புமையான் மயக்கவாராய்ச்சிக்கண் ஈண்டுங் கூறின ராகலின், கூறியதுகூறலென்னுங் குற்றமின்றென்பது" என்று கூறினர். 'அதன்வினைப் படுத லதனி றைதல்...இன்னானேது...' என்னுஞ் சூத்திரத்தால் ஏதுப்பொருளில் மூன்றும்



வேற்றுமை வரு மென்று விதித்து, 'புதுமை பழமை யாக்கம்' என்னுஞ் சூத்திரத்தால் ஆக்கக்கிளவியின் முன் ஐந்தாம்வேற்றுமை வரு மென்று விதித்ததனால், அவ்வேது ஆக்கக்கிளவியோடு இயையின், மூன்றுவதைத் தவிர்த்து, ஐந்தாவதுதான் வருமோ என்று மாணுக்கனுக்குத் தோன்றக் கூடிய ஐயத்தை இச்சூத்திரம் போக்குகின்றது என்னலாம்.

94. அதுவேன் வேற்றுமை யுயர்திணைத் தொகைவயி
னதுவே னுருபுகெடக் குகரம் வருமே.

**பொருள். உ.**—மேல் 'இயற்கையி னுடைமையின் முறைமையின்' (சொல். 80) என ஆறுவதனை முறைமைப் பொருட்குரித்தென்று ஓதினுன்; அம்முறைப்பொருள் உயர்திணைக்காயின் அது என் உருபு கெடக் குகரம் வரும், எ-று. நம்பிக்குமகன் என வரும். நம்பியதுமகன் என்புழி இழுக்குள் ளதுகண்டு அஃது காத்தவாறு.

**சே.**—ஆறும்வேற்றுமைப்பொருண்மேல் வரும் உயர்திணைத் தொகைக்கண் உருபுவிரிப்புழி, அதுவென்னுமுருபு கெட அதன் பொருட்கண் நான்காமுருபு வரும் எ-று. ஈண்டு அதுவேனுருபு கெடுதலாவது அவ்வுருபாண்டுவாராமை. நம்பிமகன், நங்கை கணவன் என்னுந் தொகைகளை விரிப்புழி, நம்பிக்குமகன், நங்கைக்குக் கணவன் என நான்கனுருபு வந்தவாறு கண்டுகொள்க.

**ந.**—உயர்திணைப்பொருள் இரண்டுசேர்ந்தவிடத்து உருபு விரிப்புழி நான்கனுருபு விரியும்; அதுவன்றி அவ்வுயர்திணைத் தொகைவயின் ஆறும்வேற்றுமையை விரிப்புழி, அவ்வதுவெனுருபு தான் கெட்டுப்போக அதனுடைமைப்பொருள் விரியும் எ-று.

**தே.**—உயர்திணைத்தொகைப்பொருண்மேல் வரும் அது வென்வேற்றுமை அது என் உருபுகெடக் குகரம் வரும்.

இச்சூத்திரத்திற்கு **உரையாசிரியர்** ஒருவகையாகவும், **சேனுவரையர் தெய்வச்சிலையார்** இருவரும் ஒருவகையாகவும், **நச்சினுர்க்கினியர்** ஒருவகையாகவும் பொருள் கூறினர்.

உரையாசிரியர் கொள்கைப்படி **அதுவேன்வேற்றுமை** என்பது **உயர்திணைத்தொகைவயின்** என்பதனேடு தொடரும். **உயர்திணைத்தொகைவயின்** என்பதற்கு **உயர்திணைச்சொல்லைத் தழுவி வரின்** என்பது பொருள். **'வினைப்படுதொகுதியின்'**

(சொல், 33) என்ற விடத்துத் தொகுதி என்பதற்குப்போல் ஈண்டுத் தொகை என்பதற்கும் உடன்வருதல் என்பதே பொருளாகும். ' உ-ம். நம்பிக்குமகன் என்பதை நம்பியதுமகன் என்று கூறுவது தவறு என்பதே. நம்பியது என்ற சொல்லி லுள்ள அது என்னும் உருபு நம்பியதுபொருள் என்றாற்போல அஃறிணையைக்கொண்டு முடிவது இலக்கணத்துக்கு ஒத்ததாமே யன்றி, உயர்திணையாகிய மகன் என்பதனோடு நம்பியது என்பது இயையாது என்றது அவர்கருத்து. சேனாவரையர் தெய்வச் சிலையார் இவ்விருவர் கொள்கைப்படி அதுவென்வேற்றுமை யுயர் திணைத்தொகைவயின் என்பதற்கு அதுவேன் வேற்றுமைப் பொருள் தொகவரும் உயர்திணைவேற்றுமைத்தொகையில் என்பது பொருள். உ-ம். நம்பிமகன் என்னுந் தொகையை நம்பிக்கு மகன் என்றே விரிக்கவேண்டுமென்பது. இவ்வாறு ஒரு நியமங்கொள்வதால் யாது பயன் ? ஆறும்வேற்றுமையாக விரித் தாற் படு மிழுக்கு என்னை ? தொகைச்சொற்களை இங்ஙனந்தான் விரிக்கவேண்டுமென்று ஒருகாரணமுமின்றி ஆசிரியர் விதிப் பாரா ? இந்தக்கேள்வி நச்சினார்க்கினியர் கூறும் பொருளினும் வருகின்றது. தொகை என்பதற்கு, சமாசன் என்று பொருள் கொண்டதனால், இவ்வாறு அவர் கூறினார்போலும். நச்சினார்க்கினி யர் கொள்கைப்படி 'உயர்திணைத்தொகைவயின் குகரம் வருமே; அதுவென் வேற்றுமை அது என் உருபு கெடவரும்' என்பது சூத் திரத்திற்கு அந்நுவயம். இவ்வாறு கூறின் வாக்கியபேதம் என் னுங் குற்றமும் வரும். இவ்வாறு கொள்ளுவதற்குக் காரணம் தொகை என்பதற்குச் சேனாவரையர்போலச் சமாசன் என்று

பொருள்கொண்டதும், நின்மகள் என்பதை நினக்குமகள் என்று விரிப்பது தவறு என்ற எண்ணங்கொண்டதுமே. மேலும் உயர்திணைத்தொகைவயின் என்பதற்குப்பின் உருபுவிரிப்புழி என்று வருவித்துக்கொள்ளவேண்டும். நின்மகள் என்னுமிடத்து விரி எவ்வாறு என்பதும் சூத்திரத்தில் உணர்த்தப்படவில்லை.

இச்சூத்திரத்தை 'அச்சக் கிளவிக்கு...' என்ற சூத்திரத்தின் பின் வைத்தனர் தெய்வச்சிலையார்.

95. தடுமாறு தொழிற்பெயர்க் கிரண்டு மூன்றுங்
கடிநிலை யிலவே பொருள்வயி னான.



தடுமாறுதொழிற்பெயர் என்பதற்குத் தடுமாறு தொழிலைத் தழுவும் பெயர் என்பது பொருளாகும். தடுமாறுதொழிலாவது செய்வினையாகவும் செயப்பாட்டு வினையாகவும் பொருள் கொள்ளத்தக்க வினைச்சொல். புலிகொன்றயானை என்னுமிடத்துக் கொன்ற என்பது செய்வினைப்பொருளிலும், செயப்பாட்டு வினைப்பொருளிலும் வரும். செய்வினைப்பொருளாயின் புலி என்பது இரண்டாம் வேற்றுமை; செயப்பாட்டு வினைப்பொருளாயின் அது மூன்றும்வேற்றுமை; அவ்விரண்டினும் புலி என்பது கொன்ற என்பதனைத் தழுவுகின்றமையால் தடுமாறுதொழிற்பெயர் புலி என்ற சொல்லேயாகும்.

97. [1]ஓம்படைக் கிளவிக் கையு மானுந்
தாம்பிரி விலவே தொகைவரு காலே.

புலிபோற்றிவா என்ற தொடர்க்குப் பொருள் சந்தருப்பத்

துக்குத் தக்கவாறு புலியைப்போற்றிவா என்றேனும் புலியாற் போற்றிவா என்றேனுங் கொள்ளலாம். புலிபோற்றிவா என்னுமிடத்துப் புலிபோற்றி என்பது நிலங்கடந்தான் (சொல். 420. சே.) என்பதுபோல் தொகை (சமாசன்) என்பது சேனாவரையர் கொள்கை. அவ்வாறு கொள்வதில் பெரும்பயனில்லை என்று 'எல்லாத் தொகையு மொருசொன் னடைய' (சொல். 420) என்னுஞ் சூத்திரத்திற் கூறப்படும். ஆதலின் இங்குத் தொகை என்பதற்கு உருபுதொகுதல் என்ற பொருளே பொருந்தும். புலியைப் போற்றிவா, புலியாற்போற்றிவா என்ற பிரயோகங்கள் இரண்டு மூன்றும் வேற்றுமைப் பொருள்களையுணர்த்தும் பொதுச் சூத்திரங்களாலேயே அமைக்கப்படும். ஆகவே இச்சூத்திரம் எற்றுக்கு? இதனைக் கருதியே 'இரண்டு வேற்றுமைக்கும் ஓம்படைப் பொருண்மை இச்சூத்திரத்தா னெய்துவித்தாரெனினுமமையும்' எனச் சேனாவரையர் கூறியிருத்தல்வேண்டும்.

பா-ம். ந. தா.—தோகவருகாலை. இ. சே. தே.—தோகை வருகாலை. ந. தா.—'இரண்டுருபும் ஒப்ப விரிந்து' ந. ஓ.—'இரண்டுருபும்...ஒப்ப விரிந்துழி.' பின் பாடம் பொருந்தும்.

---

1. 95, 96, 97-ஆவது சூத்திரங்களால் பெரும்பயன் இல்லை என்பது என் கருத்து.



99. குத்தொக வரூஉங் கொடையெதிர் கிளவி
யப்பொரு ளாறற் குரித்து மாகும்.

**பேர்ருள்.** **உ.**—நான்காம்வேற்றுமை தொக்குக் கொடையெதிர்ந்து நின்றவழி ஆறுவது சொல்லவும் அமையும் எ-று. நாகர்பலி என்பது ஆண்டு நாகர்க்குப்பலி என நான்காவது தொக்குநின்றது; அந்நிலைக்கண் நாகரது பலி என ஆறுவதும் ஆக எ-று.

**சே. ந.**—குவ்வென்னு முருபு தொகவருங் கொடையெதிர் கிளவியாகிய தொகையினது கொடையெதிர்தலாகிய அப்பொருண்மை ஆறும்வேற்றுமைக்குரித்துமாம் எ-று. நாகர்பலி என்பது நாகர்க்கு நேர்ந்த பலியென விரிதலேயன்றி நாகரதுபலியென விரியினு மமையுமென்றவாறு.

**தெ.**—நான்காம் உருபு தொக எதிர்காலம் பற்றிவரும் கொடைப்பொருண்மை ஆறுவது விரித்தற்கு உரித்துமாகும் எ-று.

உரையாசிரியர் கூறிய பொருளே சிறந்தது; ஏனெனில் அவரது உரையின்படி '**இது நாகர்பலி**' என்னும் பிரயோகம் போலவே '**இது நாகரதுபலி**' என்னும் பிரயோகமும் தவறன்று என்பது இச்சூத்திரத்தால் விதிக்கப்படுகின்றது. சேனாவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார் இம்மூவர் கொள்கைப்படி **தொகைவிரியின்மாறுபாடு** கூறப்படுவதாகும். அவ்வாறு கூறப்படுவதாற் பயன் யாதுமில்லையென்பது முன்னரே விளக்கப்பட்டது. சேனாவரையர், உரையாசிரியர் கருத்தையும் பக்ஷாந்தரமாக 'நாகர்க்குக் கொடுத்தலை விரும்பி...அமையு மென்றவாறு' என்ற சொற்றொடராற் கூறினர்.

நான்காம்வேற்றுமைகொண்ட சொல் பின்வருமாறு வரலாம். பலி நாகர்க்குக் கொடுத்தான், நாகர்க்குப் பலி கொடுத்தான், அறத்துக்குக் கறக்கும், கரும்பிற்கு வேலி, கடிசூத்திரத்திற்குப் பொன், கைக்குக் கடகம், சாத்தனுக்கு மகன் முதலியன. இவற்றில் முதற்பிரயோகத்தைத் தவிர மற்றவை, நான்காம்வேற்றுமை தொக்கு, நாகர்பலிகொடுத்தான், அறங்கறக்கும், கருப்பு வேலி, கடிசூத்திரப்பொன், கைக்கடகம், சாத்தன்மகன் என்று தொகையாகலாம். இவற்றுள் 'நாகர்பலிகொடுத்தான்' என்னு





மிடத்தில் தான் நான்காம்வேற்றுமை கொடையெதிர்கிளவியொடு வந்து தொக்கது. அறங்கறக்கும் முதலியவற்றில் அறம் முதலியன கொடையெதிர்கிளவியல்ல. ஆகவே நான்காம்வேற்றுமையைப் பற்றிய சூத்திரங்களால் நாகர்க்குப் பலி கொடுத்தான், நாகர்பலி கொடுத்தான் என்று இரண்டுவகையாக மாத்திரம் பிரயோகம் வரலாமென்பது ஏற்பட, நாகரது பலி கொடுத்தான் என்றும் வரலாமென்பதை இச்சூத்திரம் விதிக்கின்றது. சூத்திரத்தில் '**குத்தொகவரூஉங் கோடையெதிர்கிளவி** என்பதற்குக் **குத்தொக வருதற்குத் தகுதியுள்ள கோடையெதிர்கிளவி** என்பது பொருள். 'கு' தொக்குவருவதற்குத் தகுதி நாகர்க்குப்பலி என்னுமிடத்திற் போல், குவ்வுருபுள்ள சொல் பெயரைத் தழுவினால்தான் அமையும்; பலி நாகர்க்குக் கொடுத்தான் என்னுமிடத்திற்போலக் குவ்வுருபுள்ளசொல் வினையைத்தழுவினால் 'கு' தொக்குவருதற்குத் தகுதியுடையதாகாது.

பி-ம். இ. நம.—'கொடை எதிர்தல் என்பது விழுப்பமு

டையாரை நுதலியக்காற் கொண்டுவைத்து விரும்பிக்கொடுத்தல்' என்றனது. அங்குக் **கோடை** எதிர்தல் என்பதற்குப் பிரதியாக **கோடை** என்றே இருத்தல் வேண்டும். ஏனெனில் விழுப்ப முடையாரை நுதலியக்காற்[1] கொண்டுவைத்து[2] விரும்பிக்[3] கொடுத்தல் கொடையேயன்றிக் கொடையெதிர்தலன்று. கொடையெதிர்தலாயின், கொடையெதிர்கிளவியாகிய நாகர் மற்றவர்க்குப் பலி கொடுக்கவேண்டுவது இன்றாகையால் நாகர்பலி என்ற தொடர் பொருந்தாதாம். தேவதைகட்கு ஞானகாண்டத்தில் அதிகாரமேயன்றிக் கர்மகாண்டத்தில் இல்லையென்பது நூற்றுணிபு.

100. அச்சக் கிளவிக் கைந்து மிரண்டு
மெச்ச மிலவே பொருள்வயி னான.

95-வது சூத்திரத்திற்போலவே **பொருள்வயினான** என்பதற்கு உரையாசிரியர் **பொருளின்கண்** என்று பொருள்கொண்டு

---

1. விழுப்பமுடையாரை நுதலியக்கால் = உத்தேசித்த தேவதையைக் கூப்பிடும்போது.
2. கொண்டுவைத்து = ஆவாஹனஞ்செய்து.
3. விரும்பி = தனக்குச் சில பயனை வேண்டி.

இச்சூத்திரத்திற்குப் புலியின் அஞ்சும், புலியை அஞ்சும் என்று உதாரணங்காட்டினர். சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் வேற்றுமை தொக அவற்றின் பொருணின்றவழி என்று பொருள் கொண்டு 'பழியஞ்சும் என்புழிப் பழியினஞ்சும், பழியையஞ்சும் என விரண்டும் ஒத்த கிழமையவாய் நின்றவாறறிக' என்று கூறினர். பழியஞ்சும் என்பதைத் தொகையாக்கி விரிப்பதிற் பயனில்லை யென்பது முன்னரே கூறப்பட்டது.

101. அன்ன பிறவுந் தொன்னெறி பிழையா
தருபினும் பொருளினு மெய்தடு மாறி
யிருவயி னிலையும் வேற்றுமை யெல்லாந்
திரிபிட னிலவே தெரியு மோர்க்கே.

இச்சூத்திரத்தில் இருவயினிலையும் என்பதற்கு ஒரு வேற்றுமையுருபின் இடத்தில் மற்றோர் வேற்றுமையுருபு வருவதும், ஒரு வேற்றுமையுருபு தன் பொருளைவிட்டு மற்றோர் வேற்றுமைப் பொருளில் வருவதும் ஆகிய இரண்டிடத்தும் என்று உரையாசிரியரும், தெய்வச்சிலையாரும், 'பிறிதொன்றன்பொருளுந் தன் பொருளுமாகிய ஈரிடத்தும்' என்று சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் பொருள்கொண்டனர். ஓர் உருபு தன் வேற்றுமைப் பொருளையோ மற்றோர்வேற்றுமைப்பொருளையோ ஏற்பதன்றி ஓரே இடத்தில் தன்பொருளொடு பிறிதொன்றன் பொருளை யேற்பது இயலாமையின் உரையாசிரியர் தெய்வச்சிலையார் கூறிய பொருளே பொருந்தும். அவ்வாறாயின் 'யாதனுருபின்...'(சொல். 106) என்ற சூத்திரத்திற்கு உதாரணமாக உரையாசிரியர் காட்டிய 'மணற்கீன்ற' என்பதும் இச்சூத்திரத்திற்கே உதாரணமாகக் கொள்ளலாம். ஆகவே, அச்சூத்திரத்திற்கு உரையாசிரியர் சேனாவரையர் நச்சினார்க்கினியர் இம்மூவருங்கூறிய பொருள்

பொருந்தாது என்பது அச்சூத்திரத்தினடியிற் கூறப்படும்.

**பா-ம். சே. தா.**—'என்னை ? தன்பொருளிற்றீராது...' **சே. சை.**—' என்னை? ஏனைய தன் பொருளிற்றீராது...' பின்பாடமே தெளிவானது.

**102. உருபுதொடர்ந் தடுக்கிய வேற்றுமைக் கிளவி**
**யொருசொ னடைய பொருள்சென் மருங்கே.**



**பொருள். உ.**—பல உருபு தொடர்ந்து அடுக்கின்றவிடத்து இறுதியுருபு முடிந்தமுடிவே ஒழிந்தனவற்றிற்கும் முடிபாக எ-று. உ-ம். யானையது கோட்டை நுனிக்கட் குறைத்தான்.

**சே.**—பலவுருபுந் தம்முட் டொடர்ந்தடுக்கிவந்த வேற்றுமைச் சொற்களெல்லாம் முடிக்குஞ்சொல் லொன்றனுன் முற்றுப் பெற்று நடக்கும், அவ்வொன்றனுற் பொருள் செல்லுமிடத்து எ-று. உ-ம். என்னொடு நின்னொடுஞ் சூழாது.

**ந.**—ஓருருபும் பலவுருபுந் தம்முட்டொடர்ந்து அடுக்கிவந்த வேற்றுமையுருபை இறுதியாகவுடைய சொற்கள் முடிக்குஞ் சொல்லொன்றனுன் முற்றுப்பெற்று நடக்கும், அவ்வொன்றனுற் பொருள்செல்லும்பக்கத்து எ-று. உ-ம். என்னொடு நின்னொடுஞ் சூழாது; யானையது கோட்டை நுனிக்கட் குறைத்தான்.

**தே.**—வேற்றுமையடுக்காவது ஓருருபு அடுக்கிவருதலும், பல உருபு அடுக்கி வருதலும் என இருவகைப்படும். அவற்றுள் ஓருருபு அடுக்கி வருதல்—ஒரு பொருண்மேல் அடுக்கிவருதலும், பல பொருண்மேல் அடுக்கிவருதலும் என இருவகைப்படும். அவ்விருவகையும் இச்சூத்திரத்தாற் கூறப்படும்.

சேனவரையர் தெய்வச்சிலையார் இவ்விருவர் கொள்கைப்படி

ஒரேவகையான உருபுகளைக்கொண்ட சொற்களே அடுக்காகும் என்பது. நச்சினார்க்கினியர் கொள்கை ஒருவகையான உருபுகளும், வெவ்வேறுவகையான உருபுகளும் அடுக்காகலாம் என்பது. உரையாசிரியர் காட்டிய உதாரணத்தை நோக்குமிடத்து அதனில் வெவ்வேறுருபுகளே வந்திருப்பினும், சூத்திரப்பொருள் கூறுவதை நோக்கின் அவர் வெவ்வேறுருபுகளே வரல்வேண்டுமென்று கொண்டாரெனத் துணிவுடன் கூறவியலாது. ஒரே வகையான பொருளை அடுக்குவதே உலகில் வழக்காதலின், சேனாவரையர் தெய்வச்சிலையார் கூறுவது பொருந்தும். சேனாவரையத்தில் நின்றேனும் என்னுமிடத்து 'உம்'மை யின்றி உதாரணங்கூறியிருப்பின் நலம். அவ்வாறே உம்மையின்றி ஓ-ஏ. இல் இருப்பது காண்க.

சேனாவரையர், 'கோட்டை நுனிக்கட் குறைத்தான்' என்னுமிடத்து நுனிக்கண் என்பது குறைத்தான் என்பதற்கு அடையாய் இடைநின்றதாகலான், கோட்டை, நுனிக்கண் என்பன அடுக்



கல்ல என்று உரையாசிரியரை மறுத்தனர். நுனிக்கண் என்பது அடையென்றுகூறுதல் பொருந்தாது என்று நச்சினார்க்கினியர் சேனாவரையரை மறுக்கும்போது 'அவை அடுக்கல்ல' என்ற கூற்றை மறுக்கவில்லையென்பது நோக்கற்பாலது.

கோட்டை, நுனிக்கண் என்ற இரண்டிடத்திலும் வெவ்வேறு உருபு வந்தமையால் கோட்டை நுனிக்கண் என்பன அடுக்கன்று என்று சேனாவரையர் மறக்காது, நுனிக்கண் என்பது குறைத்தான் என்பதற்கு அடையாய் இடைநின்றதாகலான், அவை அடுக்கல்ல என்று மறுத்தமையால், வெவ்வேறு உருபுகள் தொடர்ந்தனவும் அடுக்காகலாம் என்பது அவர் கருத்தாகும் எனின், அற்றன்று ; வெவ்வேறு பொருள்கொண்ட ஓர் உருபை யேற்ற சொற்கள் தொடர்ந்தவரினும், அவை அடுக்காகா என்ற கருத்தை நோக்கி அவ்வாறு மறுத்திலரென்க.

103. இறுதியு மிடையு மெல்லா வுருபு
நெறிபடு பொருள்வயி னிலவுதல் வரையார்.

இச்சூத்திரத்திற்கு உரையாசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் இம்மூவருங் கொண்ட பொருள் ஒன்றே. அஃதாவது, வேற்றுமைத்தொடரிறுதிக்கண்ணும் அதனிடைநிலத்தும் ஆறுருபுந் தத்தமக்கோதிய பொருட்கணிற்றலை வரையார் எ-று. ஆனால் உரையாசிரியர் 'ஆடை சாத்தனது', 'சாத்தனது ஆடை' இரண்டிற்கும் பொருளில் மாறுபாடில்லாததுபோற் கூறினர். சேனாவரையரும், நச்சினார்க்கினியரும் அவ்விரண்டிற்கும் பொருளில் வேறுபாடுண்டு என்று கூறினர். கண்ணென்னும் உருபேற்ற சொல் வினையைத் தழுவினால், அச்சொல் இடையிலிருப்பினும் இறுதியிலிருப்பினும் ஓரே பொருளைக் கொள்ளுமென்றும், பெயரைத்தழுவினால்[1] அப்பெயருக்கு முன்னர் ஏழனுருபுகொண்ட பெயரைக் கூறவேண்டுமென்றும் சேனாவரையர் தாம் கருதியுள்ளாரென்பதை 'ஏழாவதும்...குன்றத்துக்கட் கூகை என இடைநின்று தம்பொருளுணர்த்தினாற்போலக் கூகை குன்றத்துக்கண் என இறுதிநின்றவழி அப்பொருளுணர்த்தாமையான், அவ்வுரு

1. குன்றத்துக்கட் கூகை என்னுமிடத்துக் குன்றத்துக்கண் என்பது கூகையைத் தழுவும்; கூகை குன்றத்துக்கண் என்னுமிடத்து 'இருந்தது' என்பது போன்ற தொக்குள்ளவினையைத்தான் குன்றத்துக்கண் என்பது தழுவும்.



புகள் ஆண்டு வரையப்படும்' என்னும் சொற்றொடரால் அறிவித்தனர்.

இனி, தெய்வச்சிலையார் உரைக்கும் பொருள் ஏனையோர் பொருளினின்று மாறுபட்டது. அஃதாவது, முதற்கண் நின்ற வேற்றுமையுருபே பொருளோடு முடிதலின்றி, இறுதிக்கண்ணும், இடையின்கண்ணும் எல்லா உருபும் விரவி வந்து முடிக்கும் பொருண்மைக்கண்ணே நிலைபெறுதல் நீக்கார் என்பது. ('நெறிபடுபொருள் என்பது முதலும், இடையும், இறுதியும் நின்ற பலவகை உருபிற்கும் ஏற்புடைப்பொருள். உ-ம். குயவன் குடத்தைத் திரிகையால் அரங்கின்கண் வனைந்தான் எனவும், சாத்தனது ஆடையை வலியினாற் காட்டின்கண் பறித்தான் எனவும், இறுதியும், இடையும் முதலும் நின்ற உருபெல்லாம் ஒரு வினையால் முடிந்தவாறு காண்க' என்றார்.) இவ்வுரையைக்கொள்ளின் இச்சூத்திரத்திற்கும் முற்சூத்திரத்திற்கும் இயைபுண்டு. முற்சூத்திரத்தால் வேற்றுமையடுக்கின் முடிபு கூறப்பட்டது. இச்சூத்திரத்தால் வெவ்வேறு வேற்றுமைகள் வரினும், அவை ஒரு முடிபைக்கொண்டு முடியும் என்பது கூறப்படும். மேலும் வருஞ் சூத்திரத்திலுள்ள 'பிறிது பிறிதேற்றலும்' என்பதனாற் கூறப்படும் வேறுபட்டவினைமுடிபும் இச்சூத்திரத்தோடு இயையும். அங்ஙனமாயின், கடந்தான் நிலத்தை, வந்தான் சாத்தனொடு என்று வினைக்குப் பின்வேற்றுமைச்சொல் வரும் வழக்கு

எதனாற் பெறப்படுமெனின், 'ஐயுங் கண்ணு மல்லாப் பொருள் வயின்...' என்ற சூத்திரத்தால் அவை பெற்றும் என்றார், தெய்வச்சிலையார்.

சேனாவரையத்தில் "ஈறுபெயர்க்காகும்' (சொல். 69) என்றோதப்பட்ட உருபுதம்மையே இறுதியுமிடையும் நிற்குமென வகுத்துக் கூறினாரென்பது" என்ற வாக்கியம் இன்றாயின் நலம்; இஃது ஏட்டிற் சேர்க்கப்பட்டதாக இருக்கலாம்; ஏனெனில் ஈறு பெயர்க்காகும் என்னுஞ் சூத்திரத்தினால் வேற்றுமையுருபு ஒரு பெயர்ச் சொல்லின் ஈற்றில் வருமென்பது உணர்த்தப்பட்டது; இச்சூத்திரத்தினால் அவர் கொள்கைப்படி ஒரு வாக்கியத்தின் ஈற்றிலும் இடையிலும் வேற்றுமையுருபுகொண்டபெயர் பொருள்வேறுபாடின்மையின் வரலாமென்பது உணர்த்தப்படுகின்றது. ஆதலின் இச்சூத்திரத்திற்கும் அச்சூத்திரத்திற்கும் யாதொரு



தொடர்பும் இல்லை. சிவஞானமுனிவர் 'கூறிய முறையின்...' (சொல். 69) என்பதனால் 'வேற்றுமைத்தொடரின் யாண்டுப் பெயர்நின்றது ஆண்டுப் பெயரிறுதியின் உருபு நிற்குமென்பது தானே பெறப்படுதலின் இச்சூத்திரம் வெற்றெனத்தொடுத்தலாய் முடியு மென்க' என்று சேனாவரையரின்மேற் கூறிய குற்றத்திற்குக் காரணம் இவ்வாக்கியமே. சேனாவரையர் கருத்தை யறிந்திருப்பின் சிவஞானமுனிவர் இவ்வாறு குற்றங்கூறா ரென்க.

சிவஞானமுனிவர் "அங்ஙன முருபுதொடர்ந்தடுக்கும்வழி 'அரிக்கும் பிரமற்கு மல்லாத தேவர்கட்கும்' என்றாற்போல இறுதியு மிடையு முருபுவிரிந்தே நிற்றலை நீக்கார் வடநூலார்"ரெனப்

பிறர்மதங்கூறி, 'பிறிது பிறிது...' என்னுஞ் சூத்திரத்தாற் றமிழ்நடையின் அவ்வாறு நியமமின்றி 'அரிக்கும் பிரமற்கும்...' என விறுதியுமுடையு முருபேற்றலும், 'ஒண்டொடிமாதர் கிழவன் கிழத்தியொடு...' என இடையிற்றொக விறுதியி னுருபு வருதலும் நெறிபடவழங்கிய வழக்கைச்சார்ந்து வருதலான் வழுவாகா'' என்று கூறினர். இங்கு வடமொழிமதங் கூறவேண்டுவதின் றாகையான் தெய்வச்சிலையார் கூறிய பொருளே சிறந்தது.

இச்சூத்திரத்தில் இறுதியு மிடையு மென்பதற்கு **வாக்கியத்தின் இறுதியு மிடையு** மென்பதுதான் ஆசிரியர் கருத்தென்பது 'ஐயுங்கண்ணும்...' (சொல். 105) என்னுஞ் சூத்திரத்தால் விளங்கும். முற்சூத்திரத்தில் **வேற்றுமைக்கிளவி** என்பதற்கு **வேற்றுமையுருபை யிறுதியிற்கொண்ட சொல்** என்று பொருள் கொண்டதுபோல, இங்கு உருபு என்பதற்கு **உருபை யீற்றிற்கொண்ட பெயர்** என்றே பொருள் கொள்ளல்வேண்டும்.

பி-ம். ந. **தா.**—இச்சூத்திரவுரையி னிறுதியில் 'சாத்தனதாடை என்புழி அதுவென்பது பெயராய்நிற்கும்...வினைக்குறிப்பாயிற்று' என்ற வாக்கியங்கள் உள. 'அதுவென்பது பெயராய் நிற்கும்' என்னுமிடத்து 'அது' என்பதற்கு **அதுவேன்னுருபுகோண்ட** சாத்தனது என்னுஞ்சொல் என்பது பொருள். முன்னரே "இறுதிக்கண்நின்றதேல் வினைக்குறிப்பாமென்றுணர்க'' என்று கூறியிருத்தலின் இவ்வாக்கியங்கள் பாடங்கேட்ட மாணக்கரால் ஏட்டிற் சேர்க்கப்பட்டன வாதல்வேண்டும்.

**104. பிறிதுபிறி தேற்றலு முருபுதோக வருதலு**
**நெறிபட வழங்கிய வழிமருங் கேன்ப.**

இச்சூத்திரத்துக்கு உரையாசிரியர், சேனாவரையர், நச்சி னார்க்கினியர் இம்மூவரும் ஓர் உருபு ஓர் உருபினையேற்றலும், உருபுகள் புலப்படாது நிற்றலும் இலக்கணத்துப்பட்டன என்று பொருளுரைத்து, பிறிதுபிறிதேற்றலும் என்பதற்கு ஆறனுருபு மற்றவுருபைக் கொள்ளுதலும் என்று கொண்டு அதற்குச் சாத்த னதனை, சாத்தனதனொடு... என்ற உதாரணங் கூறினர்.

தெய்வச்சிலையார் 'இறுதியும் இடையும் நின்ற எல்லா உரு பும் முடிக்கும் வினை ஒன்றனோடு முடிதலேயன்றி, வேறு வேறு வினையேற்று ஒருவினையோடு முடிதலும், அவ்வுருபுகள் தொக்கு நின்று முடிக்குஞ் சொல்லோடு முடிதலும் நெறிபட வழங்கிய நெறிப்பக்கத்தன என்று சொல்லுவர்' என்று பொருள் உரைத்து, 'இறுதியும் இடையும் என்பது மேலைச்சூத்திரத்தினின்றும் தந் துரைக்கப்பட்டது. நெறிபட வழங்கிய வழிப்பக்கம் என்றமை யான், ஏற்கும் வினையே கொள்ளப்படும். பிறிது பிறிதேற்றல் கூறல்வேண்டா, வேற்றுமை உருபு வினையோடு முடியும் என்பத னாற் பெறுதுமெனின், மேல் நின்ற அதிகாரம் பல உருபடுக்கிய வழி ஒரு வினையான் முடியு மென்றமையால், தனித்தனி வினை கொண்டு முடியவும் பெறுமோ என நின்ற ஐயம் தீர்த்தற் குக் கூறல்வேண்டுமென்க' என்றும், 'ஈண்டு உருபு தொகுதல் கூறியதென்னை ? வேற்றுமைத்தொகை என எச்சவியலுட் கூறு கின்றாராதலின் எனின், தொகைச் சொல்லாவது இறுதிப் பெய ரோடு தொக்கு ஒரு சொன்னீர்மைப்பட்டு நிற்பது : இஃதன்ன தன்றித் தொகாநிலைத்தொடர்ச்சிக்கண் உருபுமாத்திரம் தொக்கு நிற்கும் என்று கொள்க' என்றுங்கூறி, 'பிறிது பிறிதேற்றல் என் பதனை ஆறனுருபு ஏனையுருபேற்கும் எனப் பொருளுரைத்து சாத்

தனதனை...என உதாரணங்காட்டுபவாலெனின், அவ்வாறு வரும் அது என்பது உருபுநிலையொழிந்து பொருளாய் நிற்றலானும், சாத்தனதனைக் கொணர்ந்தான் என்றவழி இடைநின்ற அது என்பது உருபாயிற் சாத்தனைக்கொணர்ந்தான் என்னும் பொருள்படல்வேண்டும்: அவ்வாறு பொருள்படாது உடைப் பொருளையே காட்டுதலானும், அஃறிணையொருமை அது என்னும் பெயர்த்தாகலானும் சாத்தன் பொத்தகத்தைக் கொணர்ந் தான் என்றாற்போல் வந்ததல்லது, உருபு உருபிலேற்றல் என்றல்



அமையாதென்க' என்ற சொற்றொடரால் உரையாசிரியர் முதலி யோர் கொள்கையை மறுத்தனர்.

'பிறிது பிறிதேற்றலும்' என்பதற்குத் தெய்வச்சிலையார் காட்டிய உதாரணம்

'காதலியைக் கொண்டு கவுந்தி யொடுகூடி
மாதரிக்குக் காட்டி மனையி னகன்றுபோய்க்
கோதி லிறைவனது கூடற்கட் கோவலன்சென்
றேதமுற் றுதல் வினை.'

என்பது. இங்குக் காதலியை, கவுந்தியொடு, மாதரிக்கு, மனை யின் என்ற வெவ்வேறுருபேற்ற சொற்கள் முறையே கொண்டு, கூடி, காட்டி, அகன்றுபோய் என்ற வெவ்வேறு வினையேற்றமை காண்க.

106. யாத னுருபிற் கூறிற் றாயினும்
பொருள்சென் மருங்கின் வேற்றுமை சாரும்.

பொருள். உ. சே. ந.—ஒரு தொடர் யாதானுமோர் வேற்றுமையுருபு கொடுத்துச் சொல்லப்பட்டதாயினும், அவ்வுருபு தன் பொருளான் அத்தொடர்ப்பொருள் செல்லாதவழிப் பொருள் செல்லும் பக்கத்து வேற்றுமையைச் சாரும் எ-று.

தெ.—யாதொன்றன் உருபிற் கூறினும் பொருள் செல்லும் வழி வேற்றுமையுஞ் செல்லும் எ-று. "யாதனுருபு என்பது வேற்றுமையல்லாத உருபு. உருபு எனினும் வடிவு எனினும் ஒக்கும். உ-ம். வானின்றுலகம் வழங்கி வருதலான் (குறள். வான். 1) எனவும், மருந்துண்டு நோய் தீர்ந்தது எனவும் வருவழி, உலகம் வழங்க வருதற்கு மழை ஏதுவாகலானும், நோய் தீர்தற்கு மருந்து ஏதுவாகலானும், இவற்றுக்குப் பொருளுரைக்குங்கால் 'மழைநிற்றலான் உலகநடை தப்பாது வருதலான்' எனவும், 'மருந்துண்டலால் நோய் தீர்ந்தது' எனவும் உரைக்கவேண்டுதலின், இவை வேற்றுமையுருபான் வந்திலவாயினும், பொருண்முகத்தான் வேற்றுமையாதலின், இவை இவ்வாறு வரப்பெறும் என்று வழுவமைத்தவாறும்"

உரையாசிரியர் முதலிய மூவர்பொருளைக்கொள்ளின் இச்சூத்திரப்பொருள் 'அன்ன பிறவும்...' (சொல். 101) என்ற சூத்





திரத்தாற் பெறப்பட்டமையின் இச்சூத்திரம் வேண்டா. தெய்வச்

சிலேயார் கூறிய பொருளேக்கொள்ளின் 'இச்சூத்திரம் சொல்லுருபு முதலிய் வேற்றுமைப் பொருளில் வருஞ் சொற்களே உணர்த்திற்று' என்று கூறலாம்.

பா-ம். சே.—'ஏழாவதன்பொருட் கேன்னு மிமைபின்மையான்' என்றுளது. இங்கு என்னும் என்பதற்குச் சிறிதும் என்பது பொருள். 'என்னு மிமையா னிணைத்திருந்தாள்' (சீவக. 1658) என்புழி இப்பொருள் பெறுதல் காண்க.

111. ஏனை யுருபு மன்ன மரபின
மான மிலவே சொன்முறை யான.

இச்சூத்திரத்தில் மானம் என்பதற்குக் குற்றம் என்ற எல்லாவுரைகளிலும் பொருள் கூறப்பட்டுள்ளது. மானம் என்பதற்குப் பிரமாணம் என்ற பொருளேயன்றிக் குற்றமென்று பொருள் இருப்பதாகத் தெரியவில்லே; ஹாநம் என்ற வடமொழியின் தற்பவமாகிய ஆனம் என்பதற்கு, குற்றமென்று பொருளாம். ஆகவே, 'மெல்லெழுத்துமிகினுமானமில்லே' (எழுத். 341) என்னுமிடத்து மெல்லெழுத்துமிகினும் மானமில்லே என்று பிரித்துப் பொருள்கொண்ட அச்சிட்டோர் இங்கும் வானம் என்று ஏட்டிலிருந்ததை மானம் என்று திருத்திக்கொண்டனரோ என்று கருதவேண்டியதாக இருக்கின்றது[1].

112. வினையே செய்வது செயப்படு பொருளே
நிலனே காலங் கருவி யென்ற
வின்னதற் கிதுபய னுக வென்னு
மன்ன மரபி னிரண்டொடுந் தொகைஇ
யாயெட் டென்ப தொழின்முத னிலையே.

இச்சூத்திரத்தில் வினை என்பதற்குச் சேனுவரையர் தொழில்

என்றே பொருள்கொண்டார் என்பது, 'தொழிலின் வேறாயது காரகமாகலின், வனைதற்றொழிற்கு அத்தொழில் தான் காரகமாமா

1. சூடாமணி முதலிய நிகண்டுகளில் மானம் என்பதற்குக் குற்றம் என்ற பொருளிருக்கின்றது எனச் சிலர் எண்ணலாம். அந் நிகண்டுகளில் வடமொழிச் சொற்களின் சந்தியைத்தவறாகப் பிரித்து வழங்கிய வேறு சொற்களும் காணப்படுதலின் அஃதொரு காரணமாகா தென்க.



றென்னை யெனின்' என்னும் வாக்கியத்தால் அறியப்படுகிறது. தெய்வச்சிலையாரும் அப்பொருளே கொண்டனர். நச்சினார்க்கினியர் வினை என்பதற்கு **வினைப்பெயரையும் வினைச்சொல்லையுந் தோற்றுவிக்கும் உண், தின், சொல்...என்பன** என்று பொருள் கொண்டு, 'வினையுந் தொழிலும் வேறு' என்று கூறினர். சேனாவரையருரையில் **வனைந்தான்** என்பது **வனைதலைச்செய்தான்** என்று பிரிக்கப்பட்டு வனைதல் செய்தற்குச் செயப்படுபொருளாகக் கொள்ளப்பட்டது. இவ்வாறாயின் சூத்திரத்தில் **வினை** என்பது எதற்கு என்று ஆராய்தல்வேண்டும். நச்சினார்க்கினியரது கூற்றுப்படி வினை என்பது உண் முதலாகிய **சொற்கள்**; அவை தொழிற்குக் காரணமா என்பதும் ஆராயத்தக்கது. குயவன் குடம் வனைந்தான் என்புழி வனைதற்றொழில் வெளியிற் புலப்படுவதற்குமுன் குயவனிடத்தில் அத்தொழிலுக்கு இன்றியமையாதனவான சில பிரயத்தினம் நிகழவேண்டுமென்பது திண்ணம். இப்பிரயத்தினத்தைத்தான் ஆசிரியர் **'வினை'**[1] என்பதனாற் கூறியிருத்தல்வேண்டும். தெய்வச்சிலையார் ஐந்தாவதாகிய நீங்க

நிற்றல் காரகமன்றோ எனின், காரகம் என்பது தொழில் முதனிலையாகலிற் காரகம் அன்றென்பதுபோலும் கருத்து. நீங்க நிற்றல் முதனிலையாகாவாறு என்னையெனின், ஆடையை நெய்து முடித்தான் படாரத்தினின்றும் வாங்குதல் நீங்கம் ஆகலின், அத்தொழில் முடிந்தபின் நிகழினல்லது தொழிற்குறுப்பன்மையால் காரகம் அன்றாயிற்று' என்றார். ஐந்தன் பொருளாகிய அபாதானத்துக்கு ஆச்சிரயமாயிருப்பதுபற்றி நிலன் என்பதனுள் அஃது அடங்கலாம்.

114\. முதலிற் கூறுஞ் சினையறி கிளவியுஞ்
சினையிற் கூறு முதலறி கிளவியும்
பிறந்தவழிக் கூறலும் பண்புகொள் பெயரு
மியன்றது மொழிதலு மிருபெய ரொட்டும்
வினைமுத லுரைக்குங் கிளவியொடு தொகைஇ
யனையமர பினவே யாகுபெயர்க் கிளவி.

அவதாரிகை.—'தெங்குதின்றான்' என்னுமிடத்துத் தெங்கு என்ற சொல் ஆற்றலால் மரத்தைக் குறித்தலின் அஃது தின்றற்

1. வினை = க்ரியா:



றொழிற்குச் செயப்படுபொருளாதற்கு உரியதன்று; ஆகவே, அது முற்கூறப்பட்ட தொழின்முதனிலை எட்டனுள் ஒன்றிலும் அடங்காது நிற்கும். நிற்கவே, இவ்வாக்கியம் இலக்கணமுறைக்கு மாறுபட்டதாகும் என்று ஆசங்கை நிகழ, வாக்கியங்களில் சில சொற்கள் ஆற்றலாற்பெறப்பட்ட பொருளுக்குத் தொடர்புள்ள பொருளையும் குறிக்கலாம். அச்சொற்களுக்கு ஆகுபெயரென்பது பெயராகும் என இச்சூத்திரம் உணர்த்துகின்றது.

இச்சூத்திரத்தில் **வினைமுதலுரைக்குங்கிளவி** என்பதற்கு உரையாசிரியர் **தொல்காப்பியம், கபிலம்** என்று உதாரணங்கூறிக் 'கிளந்த வல்ல வேறுபிற தோன்றினும்...'(சொல். 117) என்னுஞ் சூத்திரவுரையிற் 'கிளந்த வல்ல பிற என்னாது வேறு என்பதனால் ஆகுபெயர்கள் ஈறுதிரியும் என்பது காட்டுக' என்று கூறினர். வினை முதல் தொல்காப்பியன், கபிலன் என்பனவாதலின், தொல் காப்பியம், கபிலம் என்பன வினைமுதலுரைக்குங் கிளவியாகா: அது பற்றியே சேனாவரையர் தொல்காப்பியனாலும் கபிலனாலும் செய்யப்பட்ட நூலைத் 'தொல்காப்பியம், கபிலம் என்றல் வினை முதலுரைக்குங் கிளவியென்றாரால் உரையாசிரியரெனின்...உரை யாசிரியர் கருத்தன்றென்க' என்னுஞ் சொற்றொடரால் அவரை மறுத்தனர். நச்சினார்க்கினியர் இச்சூத்திரவுரையிற் சேனாவரையர் கூறிய **இவ்வாடை கோலிகன்** என்னு முதாரணங்கூறிக் 'கிளந்த வல்ல...' என்னுஞ் சூத்திரவுரையில் உரையாசிரியர் மதம்பற்றித் **தொல்காப்பியம், கபிலம்** என்ற உதாரணங்களைக் கூறினர். சிவ ஞானமுனிவர் சேனாவரையர்மதத்தையேகொண்டு 'அவராகு பெயர்ப்பெற்றி யறிந்திலர்போலு மென்க. ஆகுபெயர்களெல்லாம் நின்றாங்குநின்று இயற்பெயர்ப்பொருளையும், வேறுணர்த்தி நிற்கு மாற்றலுடையவாதலும், அகத்தியம், தொல்காப்பியம், கபிலம் என்பவற்றிற்கு அவ்வாற்ற லின்மையு மோர்ந்துணர்க' என்று கூறியது காண்க.

**இருபெயரொட்டு.** இருபெயரொட்டு என்பதற்கு உரையா சிரியரும் சேனாவரையரும் **அன்மொழிப்பொருண்மேனின்ற இரு பெயரொட்டு** என்று பொருள் உரைத்தனர். நச்சினார்க்கினியர் '**அன்மொழிப்பொருண்மேல் நில்லாத இருபெயரொட்டு** என்றனர்.

அவ்வாறு மாறுபடுதற்குக் காரணங் கூறவில்லை. சிவஞானமுனி



வர் நச்சினார்க்கினியர் கொள்கையைக்கொண்டு 'அது (சேனாவரையர்கூற்று) வடநூல் விதியோடு மாறுகின்றது' என்று காரணங் கூறினர். இங்குப் பயில்வோர் ஊன்றி நோக்கவேண்டுவது ஒன்று உண்டு :—தமிழ்மொழியின் அன்மொழித்தொகை வடமொழியின் அன்மொழித்தொகையை[1] முற்றிலும் ஒத்தது அன்று; சிறுபான்மை மாறுபடும். வடமொழியில் மஞ்சள் நிறமுள்ள ஆடையைக் குறிக்கும் பீதாம்பரம்[2] என்ற தொடர் அன்மொழித் தொகையாய் ஆண்பாலை யுணர்த்துமிடத்துப் பீதாம்பர:[3] என்று வரும். இவ்வண்ணம் அன்மொழித்தொகை ஆண்பாலைக் குறிக்குமிடத்து ஆண்பால்விகுதியையும் பெண்பாலைக் குறிக்குமிடத்துப் பெண்பால் விகுதியையும் பெறுவதுபோலத் தமிழ்மொழியில் அன்மொழித்தொகை விகுதி பெறுவதில்லை. பொற்றொடியாள் என்று கூறின், அது தமிழ்மொழியில் அன்மொழித்தொகையன்று. ஆகையால், சிவஞானமுனிவர் மறுப்புப் பொருத்தமாகத் தோன்றவில்லை.

தெய்வச்சிலையார் "இருபெயரொட்டு என்பது இரண்டு பெயர் தொக்கு ஒருசொன்னீர்மைப்பட்டு மற்றொருபொருட்குப் பெயராகி வருவது. அது துடியிடை என்பது. துடிபோன்ற இடையினை உடையாளைத் துடியிடை என்பவாகலின் ஆகுபெயராயிற்று. இஃது உவமத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகையன்றோ எனின், ஆகுபெயராவது ஒட்டப்பட்ட பெய

ரோடு ஒற்றுமைப்பட்டு வரும்;[4] அன்மொழித்தொகையாவது அப்பொருளின் வேறுபட்டு வரும். அன்னதாதல் அன்மொழித் தொகை என்றதனானும் விளங்கும். அதனானேயன்றே—'பண்பு தொக வரூஉங் கிளவி யானும்—உம்மை தொக்க பெயர்வயி னானும், வேற்றுமை தொக்க பெயர்வயி னானும்—ஈற்றுநின் றியலு மன்மொழித் தொகையே.' (சொல். 418) என ஓது வாராயிற்று... 'அனைய மரபின' என்றதனான் ஈண்டு ஓதப்பட்டனவற்றுள் அடையடுத்து வருவனவுங் கொள்க. தாழ்குழல் என்றவழி அதனையுடையாட்குப் பெயராகி வருதலின் ஆகு பெயராயிற்று. இது வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையன்றோ வெனின், ஆண்டு எடுத்தோதா

1. बहुव्रीहिसमासः 2. पीताम्बरम् 3. पीताम्बरः 4. Cf. शक्यसम्बन्धो लक्षणा



மையினானும், பொருள் ஒற்றுமைப்படுதலானும் ஆகா தென்க" என்றனர். துடியிடை, தாழ்குழல் போலுள்ள தொடர்களில் சினையாகிய இடை, குழல் முதலியவற்றின் ஆகுபெயர்ப்பொருள் அவற்றின் முதலாகவே வருமாதலின் தெய்வச்சிலையார் கூற்றுப் பொருந்தும்.

சேனாவரையர் 'ஆகுபெயர் எழுவாய்வேற்றுமை மயக்கமாதலான் ஈண்டு (இவ்வியலிற்) கூறினாரென்றூரால் உரையாசிரியரெனின்' என்று கூறி உரையாசிரியரை மறுத்தனர். இச்சூத்திரத்தின்கண்ணும் பின்னருள்ள மூன்று சூத்திரங்களின்கண்ணும் இ. நம.—இல் அவ்வாக்கியங்கள் காணப்படவில்லை. இவ்விய லிறுதிச் சூத்திரத்தின்கண் நச்சினார்க்கினியர் 'இவ்வாகு பெயர்கள்

எழுவாய் வேற்றுமை மயக்கமென்று உணர்க' என்று கூறினர். அவர் உரையாசிரியர் மதம்பற்றியே அவ்வாறு கூறியிருக்கலாம். ஆயினும் உரையாசிரியரை மறுத்த சேனாவரையரை மறுத்து இவ்வாறு அவர் கூறியிருப்பின் சிறக்கும்.

115. அவைதாம்,

தத்தம் பொருள்வயிற் றம்மோடு சிவணலு
மொப்பில் வழியாற் பிறிதுபொருள் சுட்டலு
மப்பண் பினவே நுவலுங் காலை
வேற்றுமை மருங்கிற் போற்றல் வேண்டும்.

**அவதாரிகை.**—முன்னர்ச் சூத்திரத்திற் கூறப்பட்ட ஆறு பெயர்க்கிளவி எத்துணை வகைத்து என்பது இதனாற் கூறப்படு கின்றது. இங்கு உரையாசிரியரும், நச்சினார்க்கினியரும், 'அவை தாம்... நுவலுங்காலை' என்பதனை ஒரு சூத்திரமாகவும் 'வேற் றுமை மருங்கிற் போற்றல் வேண்டும்' என்பதனை மற்றொரு சூத் திரமாகவுங்கொண்டு முற்பகுதிக்கு 'அவ்வாறு பெயர்கள் முதற் கண் ஆங்காலம் அம்முதற்கேயன்றி அம்முதலொடு தொடர்ந்த பொருண்மேல் நிற்றலும், முதற்கு எவ்வியைபுமில்லாதனமேல் நிற்றலும் என இரண்டிலக்கணம் உடைய' என்றும், 'வேற்றுமை ...வேண்டும்' என்பதற்கு 'வேற்றுமையொடு தொடர்ந்த மருங் கினைப் போற்றி யறிக' என்றும் பொருளுரைத்தனர்.

சே.—முழுவதையும் ஒரு சூத்திரமாகக்கொண்டு 'அவை தாம்... நுவலுங்காலை' என்பதற்கு உரையாசிரியர் கூறிய பொருளையே உரைத்து, 'வேற்றுமை... வேண்டும்' என்பதற்கு 'வேறுபாடுபோற்றி உணரப்படும்' என்று பொருளுரைத்து, 'அங்ஙனம் பிரிப்பின், தம்மொடு சிவணலும் பிறிது பொருள் சுட்டலுமாகிய இவற்றது வேறுபாட்டின்கண்ணென்பது இனிது பெறப்படாமையானும், எழுத்தோத்தினுள் 'புள்ளியிறுதியும்...' (எழுத். 156) என்னுஞ் சூத்திரத்து இங்கிகர்ப்பாதுகாவலைப் பிரியாது ஒன்றாகவே யுரைத்தலானும், அவர்க்கது கருத்தன்றென்க' என்ற சொற்றொடரால் உரையாசிரியர் இரண்டு சூத்திரமாகக் கொண்டதை மறுத்தனர்.

தே.—முழுவதையுமொரு சூத்திரமாகக்கொண்டு 'மேற் சொல்லப்பட்ட ஆகுபெயர்தாம் தத்தம்பொருள்வயிற் சிவணலும், தம்மொடு சிவணலும் பொருத்தமில்லாத நெறிக்கண் சுட்டலும், பிறிதின் கிழமைப் பொருளைச் சுட்டலுமாகிய அவ்வியல்பினை யுடைய; அவ்வாறு சொல்லுங்காலத்து வேற்றுமைப்பொருட்கண் பாதுகாத்தல்வேண்டும்' என்று கூறினர்.

முற்சூத்திரம் ஆகுபெயரி னிலக்கணத்தைக் கூறியதாதலின், 'அவைதாம்... நுவலுங்காலை' என்பது ஆகுபெயரின் பாகுபாட்டைப் பற்றிக் கூறவேண்டுதலால் அதனைத் தனிச் சூத்திரமாக உரையாசிரியர் நச்சினார்க்கினியர் இருவரும் கொண்டது பொருந்தும். ஆனல் 'வேற்றுமை மருங்கில்...' என்னுமிடத்து வேற்றுமை என்பதற்கு வேற்றுமையுருபு அல்லது வேற்றுமைப் பொருள் என்று அவ்விருவரும் கொள்ளுவது இவ்விடத்திற்குப் பொருந்ாது.

சேனாவரையர் கொள்கைப்படி ஆகுபெயர் இருவகைய என்றே ஆகும். 'அப்பண்பினவே' என்பதை அவர் 'வேற்றுமை' என்பதற்கு விசேஷணமாகக் கொள்ளினும் சூத்திரப் போக்கை நோக்குமிடத்து அது முற்றுச்சொல்லேயாம். அவ்வாறுயின் 'அப்பண்பினவே', 'போற்றல் வேண்டும்' என்ற இரண்டு முற்றுச் சொற்களை நோக்கின் ஆசிரியர்க்கு ஆகுபெயர் இரண்டு வகைக்கு மேற்படினும் படலாம் என்பது கருத்தாகும் எனத் தோன்றுகின்றது. அற்றேல் ஒரு சூத்திரமாக அவர் கொள்ளுவது பொருந்தாது.



தெய்வச்சிலையார் 'தத்தம் பொருள்வயிற் றம்மொடு சிவணலும், ஒப்பில்வழியாற் பிறிதுபொருள் சுட்டலும்' என்பதைத் தத்தம் பொருள்வயிற் சிவணலும், தம்மொடு சிவணலும், ஒப்பில் வழியாற் சுட்டலும், பிறிது பொருள் சுட்டலும் என்பதாகப் பொருள் கொள்ளுவது சூத்திரப் போக்குக்குப் பொருந்தவில்லை; மேலும், 'வேற்றுமை' என்ற சொல்லுக்கு 'வேற்றுமைப் பொருள்' என்று பொருள்கொண்டு முழுவதையும் ஒரு சூத்திரமாகக் கூறுதலின் வாக்கியபேதம் என்ற குற்றமும் வரும்.

இச்சூத்திரத்துக்குப் பின்வருமாறு பொருள் கூறலாமென்பது என் கருத்து.—அஃதாவது:—'அவைதாம்...தவலுங்காலை' என்பது தனிச்சூத்திரமாய் நின்று 'முற்சூத்திரத்தாற் கூறப்பட்ட ஆகுபெயர் விடாதவாகுபெயர்[1], விட்டவாகு பெயர்[2] என இருவகைத்து' என்று உணர்த்துகின்றது என்பது. 'வேற்றுமை மருங்கிற் போற்றல் வேண்டும்' என்பது தனிச்சூத்திரமாய் நின்று

விட்டும் விடாத வாகுபெயரை[3] உணர்த்துகின்றது என்பதுமே யாம். 'வேற்றுமை' என்பதற்குச் சேனாவரையர் கூறியவாறு வேறுபாடு என்பதே பொருள்.

116. அளவு நிறையு மவற்றொடு கொள்வழி
யுளவென மொழிப வுணர்ந்திசி னோரே.

**அவதாரிகை.**—இச்சூத்திரம் விட்டும் விடாத இலக்கணையின் வகையை உபலக்ஷணமுறையான் கூறுகின்றது எனின் பொருந்தும்.

இச்சூத்திரவுரையில், சேனாவரையரும், நச்சினார்க்கினியரும் எண்ணுப்பெயர் எண்ணப்படும் பொருளை யுணர்த்தும்வழி ஆகு பெயரன்று என்று கூறியுள்ளனர். சிவஞானமுனிவர் அதனை மறுத்து ஆகுபெயராகக் கொண்டு 'உரையாசிரியர்க்கும் இவற்றையாகுபெயரென்றலே கருத்து' என்று கூறினர். சேனாவரையர் கூறியுள்ளது வடமொழிக்குப் பொருந்துமே யன்றித் தமிழ்மொழிக்குப் பொருந்தாதென்று தோன்றுகின்றது.

வேற்றுமை மயங்கியல் முற்றும்.

---

1. விடாதவாகுபெயர் = अजहल्लक्षणा 2. விட்டவாகுபெயர் = जहल्लक्षणा 3. விட்டும் விடாதவாகுபெயர் = जहदजहल्लक्षणा.

# 4. விளிமரபு.

118. விளியெனப் படுப கொள்ளும் பெயரொடு
தெளியத் தோன்று மியற்கைய வென்ப.

மற்றவேற்றுமைகளின் பொருள்களை ஆங்காங்குக் கூறியவாறு கண்டு விளிவேற்றுமையின் பொருளை எற்றுக்கு ஆசிரியர் கூற வில்லை எனின், விளி என்ற சொல்லின் ஆற்றலானே அது பெறப்

படும். இதனைச் சேனாவரையர் 'விளிவேற்றுமை எதிர்முகமாக்கு தற் பொருட்டாதல் பெயரானே விளங்குதலிற் கூறாராயினர்' என்றனர்.

பி-ம். இ. நம.—' தன்மைய என்றான், விளி பெயரொடு கொள்ளும் என்பதூஉம், கொள்ளுங்கால் ஏற்கும் என்பதூஉம், பெயரொடுகொள்ளும் என்பதூஉம் சொல்லப்பட்டதாம்'. இங்கு இறுதியிலுள்ள 'பெயரொடுகொள்ளும் என்பதூஉம்' என்றது பொருந்தவில்லை.

120. அவைதாம்
இஉ ஐஓ வென்னு மிறுதி
யப்பா லென்கே யுயர்திணை மருங்கின்
மெய்ப்பொருள் சுட்டிய விளிகோள் பெயரே.

சேனாவரையர் 'அஃறிணைப்பெயர் ஆகுபெயராய் உயர்திணைக் கண் வந்தழியும்' என்றார். நச்சினார்க்கினியர் ஆகுபெயராய் என்பதற்குப் பிரதியாக அன்மொழியாய் என்று கூறினர், அவர் மதத்தில் அன்மொழி ஆகுபெயரன்மையின்.

பா-ம். சே. தா.—'அஃறிணைப்பெயராயும்'. சே. சை.— 'அஃறிணைப்பெயர் ஆகுபெயராய்'. பின் பாடமே பொருந்தும்.

125. அளபெடை மிகூஉ மிகர விறுபெய
ரியற்கைய வாகுஞ் செயற்கைய வென்ப.

பொருள். உ.—அளபெடை இகரம் ஈறாயின் இயல்பாயே

விளியேற்கும் எ-று. இனிச் 'செயற்கைய' என்பதனால், இரண்டு
16



மூன்று மாத்திரைபெற எழுதுவாரும், ஐந்துமாத்திரைபெற எழுதுவாரும் என இருதிறத்தர் ஆசிரியர் என உணர்க.

சே. ந.—அளபெடை தன்னியல்பு மாத்திரையின்மிக்கு நான்கும் ஐந்தும் மாத்திரைபெற்றுநிற்கும் இகர வீற்றுப்பெயர் இ ஈ யாகாது இயல்பாய் விளியேற்குஞ் செயற்கையை யுடைய வாம் எ-று.

தே.—அளபெடைமிக்க இகர வீற்றுப்பெயர் இயற்கைய வாகிய செயற்கையுடைய.

அளபெடை கொண்டபெயர் விளியில் இயல்பாயிருக்கும் என்ற கருத்து உரைகாரர் நால்வருக்கும் ஒன்றாயினும், 'அள பெடை மிகூஉம்' என்பதற்கு உரையாசிரியரும் தெய்வச்சிலை யாரும் 'அளபெடையைக்கொள்ளும்' என்றும், சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் 'அளபெடைதன்னியல்பு மாத்திரையின் மிக்கு நான்கும் ஐந்தும் மாத்திரை பெற்று நிற்கும்' என்றும் பொருள் கூறினர். உரையாசிரியர் தெய்வச்சிலையார் இவர்கள் கூறிய பொருளைக் கொள்ளின் இயற்கையவாகும் என்பதன் பொருள் மிகப்பொருந்தும். சூத்திரப்போக்குக்கும் இதுவே ஏற்கும். இவ்வாறே 135, 141, 149-ம் சூத்திரங்களிலுங் கொள்க.

அவ்வாறன்றிச் சேனாவரையர் நச்சினார்க்கினியர் இருவருங் கூறும் பொருளில் இரண்டு குற்றங்களுள :—(1) இயல்பிலேயே ஓர் அளபெடைபெற்ற 'தொழீஇ'[1] முதலிய இகரவீற்றுச்சொற்

கள் எவ்வாறு விளிபெறும் என்பது கூறப்படவில்லை. (2) அள பெடையின் இயல்புமாத்திரை மூன்றெனக் கருதி ஆஅ, ஈஇ அவ்விருவரும் முதலியவற்றை ஓர் ஒலியெழுத்தாகக்கொண்டனர். ஆனால் "மூவள பிசைத்த லோரெழுத் தின்றே." (எழுத். 5), "நீட்டம் வேண்டி னவ்வள புடைய, கூட்டி யெழூஉத லென்மனார் புலவர்." (எழுத். 6), "குறியதன் முன்னரு மோரெழுத்து மொழிக்கு மறியத் தோன்று மகரங் கிளவி." (எழுத். 226), "குற்றெழுத் திம்பரு மோரெழுத்து மொழிக்கு, நிற்றல் வேண்டு முகரக் கிளவி" (எழுத். 267), "ஏயெ னிறுதிக் கெகரம்

1. இளம்பூரணம் முதலியவற்றிலுள்ள 'தோழீஇ' என்பது 'தோழீஇ' என்று இருத்தல்வேண்டும் என்பதைக் கலித்தொகை,103-வது கலியின் கீழ் பிரமஸ்ரீ அனந்தராமையர் அவர்கள் எழுதிய குறிப்பைக் காண்க.



வருமே," (எழுத். 277), "வேற்றுமைக் கண்ணு மதனோ ரற்றே, யொகரம் வருத லாவயி னான." (எழுத் 292) முதலிய சூத்திரங் களை நோக்குமிடத்து ஆஅ, ஈஇ முதலியவற்றின் இறுதியிலுள்ள அ, இ இவற்றையே அளபெடையாக ஆசிரியர் கொண்டனர் என்று தோன்றுவதால் அளபெடைக்கு இயல்பு மாத்திரை மூன் றென்பது ஆசிரியர் கொள்கைக்கு மாறுபட்டது.

129. ஏனைப் புள்ளி யீறுவிளி கொள்ளா.

இச்சூத்திரவுரையிற் சேனாவரையர் 'ஏனைப்புள்ளி சிறு பான்மை விளியேற்றலுங் கொள்க' என்பதற்குக் கொடுத்துள்ள உதாரணத்துள் 'விளங்குமணிக் கொடும்பூணாய்' என்று பதிக்கப் பட்டுள்ளதை 'விளங்குமணிக் கொடும்பூ ணாஅய்' என்று திருத் திப்படிக்க.

153. அம்ம வென்னு மசைச்சொ னீட்ட
மம்முறைப் பெயரொடு சிவணா தாயினும்
விளியொடு கொள்ப தெளியு மோரே.

பி-ம். ந.—'அம்மவென்று கூறப்படும் முறைப்பொருட் கிளவியினது.' இங்கு, 'கூறப்படும் முறைப்பொருட்கிளவி' என் பதற்குப் பிரதியாக கூறப்படு முறைப்பொருட்கிளவி என்றிருத்தல் வேண்டும்.

விளிமரபு முற்றும்.

---

## 5. பெயரியல்.

**இயைபு.**—இவ்வியலுக்கும் முன்னருள்ள இயல்களுக்கு முள்ள இயைபைத் தெய்வச்சிலையார் கிளவியாக்கத்துத் தொடக் கத்திற் கூறினர். அது மிகப்பொருந்தும்.

155. எல்லாச் சொல்லும் பொருள்குறித் தனவே[1].

'உயர்திணை யென்மனார் மக்கட் சுட்டே...' என்ற சூத்திரம் சொல்லின் வகையை உணர்த்திற்று. இச்சூத்திரம் அதன் இலக்கணத்தைக் கூறிற்று.

### 156. பொருண்மை தெரிதலுஞ் சொன்மை தெரிதலுஞ் சொல்லி னாகு மென்மனார் புலவர்.

இச்சூத்திரத்துக்கு நால்வரும் ஒருவகையாகவே பொருள் கொண்டனர். அஃதாவது ஒரு சொல்லால் **தனவடிவமேனும் மற்றொருபொருளேனுங்** குறிக்கப்படவேண்டும். நீயென்கிளவி, தஞ்சக்கிளவி என்னுமிடங்களில் 'என்' என்ற சொல் விரிந்தும், தொக்கும் நிற்றலின், நீ, தஞ்சம் என்ற சொற்கள் பொருளைக் குறியாது அவ்வச் சொல்வடிவங்களையே குறித்தல் காண்க[2].

சேனாவரையத்தில் 'சொல்லென்னுஞ் சொல்லும் பெயரென்னும் பெயரும் அறியப்படுதற்கட் சொன்மை தெரிதலாம், ஏனைச் சொல்லும் ஏனைப்பெயரு மறியப்படுதற்கட் பொருண்மை தெரிதலாம்' என்ற வாக்கியம் உளது. அதற்குப் பொருள் பின்வருமாறு:—'எல்லாச்சொல்லும் பொருள்குறித்தனவே' என்னுஞ் சூத்திரத்திற் **சொல்** என்பதனால் உணர்த்தப்படுபவை இராமன், தகப்பன், தாய் முதலிய பெயர்ச்சொற்களும்; செய்தான், வந்

1. Cf. अर्थः पदम् (சு. ய. ப்ராதி.) 2. வடமொழியில் 'इतिशब्दः पदार्थविपर्यासकृत्' என்ற நியாயம் உள்ளது. அதற்குப் பொருள்:—'இதி

என்ற சொல் இதற்குமுன் வரும் சொல்லின் பொருளை மாற்றிவிடும்' என்பதே. அஃதாவது रामः (இராமன்) என்றால், அஃது அப்பெயர்கொண்ட ஒரு மனிதனைக் குறிக்கும். राम इति என்றால் रामः என்பது ஈரெழுத்தாலான சொல்லின் வடிவத்தைக் குறிக்கும்.



தான், போனார், நின்றது முதலிய வினைச்சொற்களும்; ஏ, மற்று முதலிய இடைச்சொற்களும்; சால, நனி முதலிய உரிச்சொற்களுமாம். ஆகவே சொல் என்பது தன்னைக் குறிக்கும்போது சொன்மை குறித்ததாம். இராமன் முதலிய பிறவற்றைக் குறிக்கும்போது பொருண்மை குறித்ததாம், இங்ஙனமே 'ஈறுபெயர்க் காகு மியற்கைய வென்ப' (சொல். 69) என்னுஞ் சூத்திரத்துப் பெயர் என்பது பொருண்மை குறித்தது காண்க.

157. தெரிபுவேறு நிலையலுங் குறிப்பிற் றோன்றலு
மிருபாற் றென்ப பொருண்மை நிலையே.

இச்சூத்திரத்திற்குப் பதவுரை கூறுமிடத்து நான்கு உரைகாரர்களும் ஒருவகையாகவே கூறினர். கருத்துப்பொருள் கூறுமிடத்து, 'குறிப்பிற்றோன்றல்' என்பதற்குச் சேனாவரையர் ஸந்தர்ப்பத்தினாலும், லக்ஷணா விருத்தியாலும், வ்யஞ்சனாவிருத்தியாலும் தோன்றுதல் என்று பொருள் கொண்டதாகத் தோன்றுகின்றது. நச்சினார்க்கினியரோ சேனாவரையர் கூறுகின்ற ஏனையவற்றை யுடன்பட்டுச் செய்யுளில்வரும் வ்யஞ்சனாவிருத்திமாத்திரம் இச்சூத்திரத்துக்கு விஷயமன்றென மறுக்கின்றார். அம்மறுப்பில் அவர் கூறியுள்ள காரணம் முழுதும் பொருந்துமாவென்பது ஆராயத்தக்கது.

இச்சூத்திரம் எற்றுக்கு? ஆகுபெயர் உணர்த்திய சூத்திரப் பொருளுள் அடங்காதோவெனின், அற்றன்று. அங்குத் 'தெங்கு தின்றான்' முதலிய தொடர்மொழிகளில் தெங்கு என்பதற்கு ஆற்றலானுள்ள தென்னைமரமென்ற பொருளைக் கொள்ளின், அவ் வாக்கியத்திற்குப் பொருள் பொருந்தாமையின், குறிப்பால், அங்குத் தெங்கு என்பது சினையைக் குறித்தல் வேண்டும் என்பதை அச்சூத்திரம் உணர்த்தியது. தெங்கு போன்ற **தனிமொழிக்கு**, ஆற்றலால் ஒருபொருளும், குறிப்பால் மற்றொருபொருளும் இருக்கலாம் என்பதை இச்சூத்திரம் உணர்த்திற்றென்க.

**161. இருதிணைப் பிரிந்த வைம்பாற் கிளவிக்கு**
**முரியவை யுரிய பெயர்வயி னான.**

**பொருள்:—சே.—** இருதிணைப்பிரிந்த ஐம்பாற்கிளவியாதற்குப் பெயருள் உரியன உரியவாம்.



ந.—ஒருபாற்பெயரிடத்து முடிபாக வந்த வினைகள் இருதிணையினின்றும் பிரிந்த ஐம்பாற் பொருட்கும் தனித்தனி கூறாமல் தானே சென்று உணர்த்தற்கு உரியன உரியவாம்.

தே.—இருதிணையினின்றும் பிரிந்த ஐம்பாற்சொற்கும் பெயர்வயின் உரியவை உரியவாம்.

சேனாவரையர், தெய்வச்சிலையார் இவ்விருவர் கொள்கையும் ஒன்றே.

இ. நம.—இல் உள்ள உரை சேனாவரையத்தில் முற்பகுதியி லுள்ளவாறே காணப்படுகின்றது. ஆனால், சேனாவரையரது மறுப்

புரையை நன்கு நோக்குமிடத்து 'நஞ்சுண்டான் சாம் என்பது ஒருபாற்குரிய சொல்லாயினும், நஞ்சுண்டாள் சாம், நஞ்சுண்டார் சாவர், நஞ்சுண்டது சாம், நஞ்சுண்டன சாம் என ஏனைப்பாற்கு முரித்தாம் அச்சொல்லென இப்பொருண்மை யுணர்த்துகின்றது இச்சூத்திரம்' என்பதற் கேற்பவே இளம்பூரணத்தில் உரை இருக்கவேண்டு மென்பது பெறப்படும். அவ்வாறாயின் உரையாசிரியர் மதமும் நச்சினார்க்கினியர் மதமும் ஒன்றேயாகும்.

நச்சினார்க்கினியர் கூறிய உரையிற்கண்ட **வினைகள்** என்னும் பதம் சூத்திரத்தில் இல்லை; அவர் வருவித்துக் கொண்டனர். **கிளவி** என்பதற்குப் **பொருள்** என்ற பொருள் உரைத்தனர். ஸந்தர்ப்பத்தை நோக்கின் வினைகளைப்பற்றி இங்குக் கூறவேண்டுவ தின்று.

முற்சூத்திரத்திற் பெயர் உயர்திணைக்கும், அஃறிணைக்கும், அவ்விருதிணைக்கும் உரிய என்றும், கிளவியாக்கம் 5-வது சூத்திரம் முதல் 9-வது சூத்திரம் முடிய னஃகானொற்று முதலாயின பாலைத் தெரிவிக்குங் கிளவிகள் என்றும், 11-வது சூத்திரத்தில் "வினையிற் றோன்றும் பாலறி கிளவியும்—பெயரிற் றோன்றும் பாலறி கிளவியும்—மயங்கல் கூடா" என்றும் கூறியிருத்தலால், வினையிற்போலப் பெயரிலும் அக்கிளவிகள் நியதியாய்ப் பாலை உணர்த்துமா வென்ற ஐயமெழ, அவ்வாறு பெயரில் நியதி இன்று என்பதற்கே இச்சூத்திரம் ஆசிரியராற் கூறப்பட்டதென்க.

ஆனால், 'ஆசிரியர் வினைச்சொல்லை ஈற்றான் அடங்குமென்று கருதி ஈறுபற்றி ஓதிப் பெயர்ச்சொல்லை ஈற்றான் அடங்காது பல்

வேறுவகையவாய் வரு மென்று கருதிச் சொல்லாகத் தனித்தனியே எடுத்தோதினாராதலின்' சேனாவரையர் இச்சூத்திரத்திற்குக் கொள்ளும்பொருள் அச்சூத்திரங்களாலேயே ஊகிக்கப்பெறுவதால், அப்பொருள் கொள்ளாது வேறுபொருளை நச்சினார்க்கினியர் கூறுகின்றார். அவ்வாறு ஊகிக்கப்பெறுமாயினும் அவ்விஷயத்தைத் தெளிவாய் ஆசிரியர் கூறுவது குற்றமாகாமையாலும், நச்சினார்க்கினியர் கூறும் பொருள் இவ்விடத்துக்குப் பொருந்தாமையாலும் சேனாவரையர் உரைத்த பொருளே ஏற்றதாமென்பது என்கருத்து.

'ஒருபாற் கிளவி யேனைப்பாற் கண்ணும்—வருவன தானே வழக்கென மொழிப' (பொருள். 28) என்னுஞ் சூத்திரத்திற்குச் சேனாவரையர்போலப் பொதுவாகவே நச்சினார்க்கினியரும் பொருள் கூறவேண்டும். அதனாற் பெறப்படும் பொருள் 'ஒத்த கிழவனுங் கிழத்தியும்' என்ற களவியற் சூத்திரத்திற்' 'பன்மை கூறு வழுவை அமைத்தல்' என்று நச்சினார்க்கினியர் கூறினும், 'நஞ்சுண்டான் சாம் என்பது ஒருபாற்குரிய சொல்லாயினும், நஞ்சுண்டாள் சாம், நஞ்சுண்டார் சாவர், நஞ்சுண்டது சாம், நஞ்சுண்டன சாம் என ஏனைப்பாற்கு முரித்தாம் அச்சொல்' என்பதையுங் கொள்ளுவதற்குத் தடை என்னை?

162. அவ்வழி,
அவனிவ னுவனென வரூஉம் பெயரு
மவளிவ ளுவளென வரூஉம் பெயரு
மவரிவ ருவரென வரூஉம் பெயரும்

யான்யாம் நாமென வரூஉம் பெயரும்
யாவன் யாவள் யாவ ரென்னு
மாவயின் மூன்றே டப்பதி னைந்தும்
பாலறி வந்த வுயர்திணைப் பெயரே.

இச்சூத்திரவுரையில் யாமென்பது படர்க்கையுளப்பாட்டுத் தன்மைப்பெயர் என்றும், நாமென்பது முன்னிலையுளப்பாட்டுத் தன்மைப்பெயர் என்றும் நச்சினார்க்கினியர் கூறுவது நோக்கத் தக்கது. இவ்வாறு ஆசிரியர் தொல்காப்பியனாராலும், உரையா



சிரியர், சேனாவரையர் இவ்விருவராலும் கூறப்பட்டதாகத் தெரியவில்லை. நச்சினார்க்கினியர் காலத்தில் இவ்வாறு வழங்கிற்றுப் போலும்.

163. ஆண்மை யடுத்த மகனென் கிளவியும்
பெண்மை யடுத்த மகளென் கிளவியும்
பெண்மை யடுத்த விகர விறுதியு
நம்மூர்ந்து வரூஉ மிகரவை காரமு
முறைமை சுட்டா மகனு மகளு
மாந்தர் மக்க ளென்னும் பெயரு
மாடூஉ மகடூஉ வாயிரு பெயருஞ்
சுட்டுமுத லாகிய வன்னு மானு
மவைமுத லாகிய பெண்டென் கிளவியு
மொப்பொடு வரூஉங் கிளவியொடு தொகைஇ
யப்பதி னைந்து மவற்றோ ரன்ன.

இச்சூத்திரவுரையில் அவை முதலாகிய பெண்டென்கிளவி என்பதற்கு உதாரணமாக, உரையாசிரியர் அப்பெண்டு இப்பெண்டு உப்பெண்டு இவற்றைக் கூறினர். சேனாவரையர் 'பெண்டென் கிளவி இக்காலத்து வீழ்ந்தனபோலும்' என்றார். நச்சினார்க்கினியர் உரையாசிரியர் கூறிய உதாரணங்களையே கூறி "அப்பெண்டென்னுஞ் சுட்டு, 'கடிசொல்லில்லை' (சொல். 452) என்பதனாற் பெண்டென நின்றது" என்றார். இதனால் தொல்காப்பியர் காலத்தில் 'பெண்டு' என்பது சுட்டோடுதான் வழங்கிற்றென்பது அவர் கொள்கையாதல் பெறப்படும்.

பெண்டென் கிளவி என்பதற்குப் பாடாந்தரமாகப் பெண்டன்கிளவி என்று ஓதுவாருமுளர் என்று சேனாவரையர் கூறியுள்ளார். நச்சினார்க்கினியர் "ஊரார் பெண்டென மொழிப', 'என்னை நின்—பெண்டெனப் பிறர் கூறும் பழிமாறப் பெறுகற்பின்' எனச் சான்றோர் கூறலிற் பெண்டென்பதே பாடம்" என்றார். இம்மறுப்பு ஏற்றதாகத் தோன்றவில்லை.

தெய்வச்சிலையார் பெண்டென்கிளவி என்பதற்கு அத்தன்மையள், அத்தன்மையாள், அன்னாள், அனையாள் என்பவற்றை உதாரணமாகக் கூறினர். ஆதலின் அதற்கு அள், ஆள், என்பனவே பொருளைக் கொண்டனர் என்பது வெளிப்படை.



சேனாவரையரின் பாடாந்தரத்தாற் கூறும் பொருளும் தெய்வச்சிலையார் பொருளும் ஒன்றாகலாம்.

இச்சூத்திரத்திலுள்ள 'சுட்டு முதலாகிய அன்னும் ஆனும்' என்பதனால் அவன், இவன், உவன் என்பன அடங்குமாதலான்

முற்சூத்திரத்தில் அவை வேண்டா எனின், அற்றன்று; முற்சூத்திரத்தில் ஆசிரியர் ஸர்வநாம சப்தங்களையும்[1], இச்சூத்திரத்தில் அன்னன், அனையான் போன்ற ஏனைய பெயர்களையும் உணர்த்தினர். ஆதலின் ஆண்டு அவன், இவன், உவன் என்பன வேண்டுமென்பது அமையும்.

164. எல்லாரு மென்னும் பெயர்நிலைக் கிளவியு
மெல்லீரு மென்னும் பெயர்நிலைக் கிளவியும்
பெண்மை யடுத்த மகனென் கிளவியு
மன்ன வியல வென்மனார் புலவர்.

இச்சூத்திரவுரையிற் சேனாவரையர் 'மாறோகத்தார் இக்காலத்தும் பெண்மகனென்று வழங்குப' என்றார். கூத்தர் தம்முலாவிற் பெண்சக்ரவர்த்தி யென்று கூறியிருப்பதும், மலையாளத்தில் இப்போதும் பெண்ணரசு என்று வழங்குவதும் இங்கு ஒப்பிடத்தக்கன. நச்சினார்க்கினியர் 'பெண்மகனென்பது அத்தன்மையாரை அக்காலம் அவ்வாறே வழங்கினாராயிற்று' என்றார். ஆதலால் நச்சினார்க்கினியர் காலத்தில் அவ்வழக்கு இறந்துவிட்டது போலும்.

165. நிலப்பெயர் குடிப்பெயர் குழுவின் பெயரே
வினைப்பெய ருடைப்பெயர் பண்புகொள் பெயரே
பல்லோர்க் குறித்த முறைநிலைப் பெயரே
பல்லோர்க் குறித்த சினைநிலைப் பெயரே
பல்லோர்க் குறித்த திணைநிலைப் பெயரே
கூடிவரு வழக்கி னாடியற் பெயரே
யின்றிவ ரென்னு மெண்ணியற் பெயரோ

டன்றி யனைத்து மவற்றியல் பினவே.

1. ஸர்வநாமசப்தங்கள் (Pronouns) என்பன தமிழில் சுட்டுப் பெயர், வினாப்பெயர், தன்மைப்பெயர், முன்னிலைப்பெயர்களாம்.





இச்சூத்திரவுரையில் **உரையாசிரியர், சேனாவரையர்,** இவ்விருவரும் 'பார்ப்பார், அரசர், வணிகர், வேளாளர்' என்பனவற்றைப் பல்லோர்க்குறித்த திணைநிலைப்பெயருக்கும் **நச்சினார்க்கினியர்** அவற்றைக் குடிப்பெயருக்கும் உதாரணமாகக் கூறினர்.

கூடிவரு வழக்கி னாடியற்பெயர் என்பதற்கு **உரையாசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர்** மூவரும் 'இளந்துணை மகாஅர் தம்மிற்கூடி விளையாடல் குறித்த பொழுதைக்குத் தாமே படைத்திட்டுக்கொண்ட பெயர்' என்றும், **தெய்வச்சிலையார்** 'கூடியியலும் வழக்கின் வழங்கும் இயற்பெயர்' என்றும் பொருள் கூறி, முறையே பட்டிபுத்திரர், சாத்தன்மார் என்ற உதாரணங்களைக் காட்டினர்.

குழுவின் பெயருக்கு உதாரணமாக நச்சினார்க்கினியர் **வணிகக் கிராமத்தார்** என்பதைக் கூறினர். சாஸனங்களில் **மணிக்கிராமத்தார்** என்று வணிகர் குழுவுக்குக் காணப்படும் வழக்கு இதனுடன் ஒப்பத்தக்கது.

173. நிகழூஉ நின்ற பலர்வரை கிளவியி
னுயர்திணை யொருமை தோன்றலு முரித்தே
யன்ன மரபின் வினைவயி னான.

இங்கு 'நிகழூஉநின்ற பலர்வரை கிளவி' யென்றது செய்யு மென்னு முற்றுச்சொல்லைக் குறிக்கின்றது என்பது 'பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மை—யவ்வயின் மூன்று நிகழுங் காலத்து —செய்யு மென்னுங் கிளவியொடு கொள்ளா' (சொல். 227) என் னுஞ் சூத்திரத்தால் இனிது விளங்கும்.

முன் சூத்திரத்தில் (சொல். 172) விரவுப்பெயர் ஆண்பால், பெண்பால், ஒன்றன்பால், பலவின்பால் இவற்றைக் குறிப்பதென் பது அதையடுத்த வினையின் விகுதியால் அறியப்படுமென்பதும், இச்சூத்திரத்தில் அவ்விரவுப்பெயர் செய்யுமென் முற்றின் வினைப் பகுதியால் இன்ன திணை யென்பது அறியப்படும் என்பதும் உணர்த்தப்பட்டன.

பா-ம்.—இ. ந.—பால்வரைகிளவி. சே. தே:—பலர்வரை கிளவி. 'பல்லோர் படர்க்கை...' (சொல். 227) என்னுஞ் சூத் திரத்தை நோக்குமிடத்துப் பின்பாடமே தக்கதாகும்.



174. இயற்பெயர் சினைப்பெயர் சினைமுதற் பெயரே
முறைப்பெயர்க் கிளவி தாமே தானே
யெல்லா நீயிர் நீயெனக் கிளந்து
சொல்லிய வல்ல பிறவு மாஅங்
கன்னவை தோன்றி னவற்றொடுங் கொளவே.

இச்சூத்திரவுரையில் 'பிறவுமென்றதனன், மக, குழவிபோல்வன கொள்க. இவற்றை உயர்திணைப் பெயரென்றாரால் உரையாசிரியர் எனின் அவை விரவுப் பெயரேயாம், அதனன் அது போலியுரை யென்க' என்று சேனவரையர் கூறுகின்றனர். இ. நம.—இல் " அன்ன பிறவும் என்பதனல் மக, குழவி என்பனவுங் கொள்க. 'குழவியு மகவு மாயிரண் டல்லன—கிழவ வல்ல மக்கட் கண்ணே' (மரபியல். 23.) என்று உயர்திணைக்கும் எய்துவித்தார்" என்ற வாக்கியந்தான் உளது. இவ்வாறே உரையாசிரியர் கூறியிருப்பின், சேனவரையரின் மறுப்புப் பொருந்தாது. சேனவரையத்திற் கண்டவாறே உரையாசிரியர் கூறியிருப்பின், இளம்பூரணத்திற்கண்ட 'அன்ன பிறவும்...எய்துவித்தார்' என்ற பாடம் மாறுபாடாக வந்திருத்தல்வேண்டும்.

சேனவரையர் **நிமித்தம்** என்ற சொல்லை வடமொழியிலுள்ள பிரவிருத்தி நிமித்தம்[1] என்பதின் பொருளிற் கூறினர். ஆதலின் **பெருங்காலன்** முதலிய விரவுப்பெயர்களில் நிமித்தம் ஒன்றுதலால் அவை பலபொருளொருசொல்லல்ல என்றனர்.

182. பன்மை சுட்டிய வெல்லாப் பெயரு
மொன்றே பலவே யொருவ ரென்னு
மென்றிப் பாற்கு மோரன் னவ்வே.

இச்சூத்திரவுரையிற் சேனவரையர் இயைபின்மை நீக்கலும்[2] பிறிதினியைபு நீக்கலு[3]மென விசேடித்தல் இருவகைத்து...

---

1. பெருங்காலன் என்பதற்குப் பெருங்காலை யுடைத்தா யிருக்குந் தன்மை என்பதே பிரவிருத்தி நிமித்தம் (प्रवृत्तिनिमित्तम्). ஆதலால் இச் சொல் உயர்திணையைக் குறிப்பினும் அஃறிணையைக் குறிப்பினும் இதன் நிமித்தம் ஒன்றே.

2. இயைபின்மை நீக்கல் = अयोगव्यवच्छेदः
3. பிறிதினியைபு நீக்கல் = अन्ययोगव्यवच्छेदः



பன்மை சுட்டிய பெயரென்பது வெண்குடைப் பெருவிறல் என்பதுபோல ஒருமை யியைபு நீக்காது பன்மை சுட்டுதலோடு இயைபின்மைமாத்திரை நீக்கிப் பன்மை சுட்டுமென்பது பட்டு நின்றது என்று கூறினர். இவ்வாறே நச்சினார்க்கினியரும் கொண்டனர். இவ்விருவரையும் நன்னூல் விருத்தியுரைகாரர் 'ஒன்றே யிருதிணைத் தன்பா லேற்கும்' (நன்-284) என்னுஞ் சூத்திரவுரையில் மறுத்துப் பன்மைசுட்டிய பெய ரென்றது பலபாலையுஞ் சுட்டி நிற்றலிற் பிறிதினியைபு நீக்கிய விசேடணம் என்று கூறியுள்ளார். ஆனால், தொல்காப்பியத்தில் 'பெண்மை யியற்பெய ராண்மை யியற்பெயர்—பன்மை யியற்பெய ரொருமை யியற்பெயரென்—றந்நான் கென்ப வியற்பெயர் நிலையே' (சொல். 176) முதலிய மூன்று சூத்திரங்களை நோக்குமிடத்து ஆண்மையியற்பெயர், பெண்மையியற்பெயர், பன்மையியற்பெயர், ஒருமையியற்பெயர் என்பனவற்றிற்கு, ஆண்மையைக்குறிக்க வுரிமையுள்ள இயற்பெயர், பெண்மையைக் குறிக்க வுரிமையுள்ள இயற்பெயர், பன்மையைக் குறிக்க வுரிமையுள்ள இயற்பெயர், ஒருமையைக் குறிக்க வுரிமையுள்ள இயற்பெயர் என்று சேனாவரையர்போற் பொருள்கொள்வது எளிதாயிருக்குமென்று தோன்றுகின்றது. அவ்வாறாயின் அவரது கூற்றில் யாதொரு குற்றமுமில்லை. ஆண்மையியற்பெயர், பெண்மையியற்பெயர், ஒருமையியற்பெயர் இம்மூன்றுக்கும் அவ்வாறு பொருள்கொண்டு பன்மையியற்

பெயருக்கு மாத்திரம் பலபாலையுஞ் சுட்டிநிற்கும் இயற்பெயர் என்று மாறுபட்டுப் பொருள்கொள்வதில் பெரும் பயனின்று. பன்மை என்னுஞ் சொல்லுக்கு இயற்கைப்பொருளை விட்டு வேறுபொருளைக் கற்பிப்பதிற் கௌரவமும் உண்டு. அன்றியும், எவ்விடத்தும் விசேடணம் பிறிதினியைபை நீக்குவதன்றி, இயைபின்மையை நீக்காதென்று நாட்டக்கூடுமாயின் அவ்விருத்தியுரைகாரர் கூறுமாறே ஒருவாறு கூறலாம். ஆனால், அவரே 'செஞ்ஞாயிறு' முதலியவற்றில் தன்னியைபின்மைநீக்கலைக் கொண்டுள்ளனர். ஆதலின் சேனாவரையர் கூற்று ஆசிரியர் தொல்காப்பியனார் சூத்திரப் போக்குக்கு இனிது பொருந்தும்.

**பி-ம்.** நச்சினார்க்கினியத்தில் இச்சூத்திரவுரையிறுதியிலுள்ள 'எனவே விசேடித்தல் இருவகையாயின ... சேனாவரையர்க்குங் கருத்தாயிற்று.' என்ற சொற்றொடர் நன்னூல் விருத்தியுரை



படித்த மாணவனால் ஏட்டிற் சேர்க்கப்பட்டிருத்தல் வேண்டுமென்று தோன்றுகின்றது. இச்சொற்றொடர் பொருளமைதிக்குப் பொருந்தாது. இச்சொற்றொடரிற் 'பலபால்களையும்' என்றவிடத்துப் 'பன்மைப்பாலை' என்றிருப்பின் அப்போது பொருளமைதிக்குப் பொருந்தும்.

187. **தன்னு ளுறுத்த பன்மைக் கல்ல**
**துயர்திணை மருங்கி னொக்க மில்லை.**

இச்சூத்திரவுரையிற் சேனாவரையர் "எல்லாப் பார்ப்பாரும்,

எல்லாச் சான்றோரும் எனப் படர்க்கைக்கண் வருதலும் கோடற் குத் 'தன்னுளு றுத்த பன்மைக் காங்கால்—உயர்திணை மருங்கி னல்லதாகா' தென மொழிமாற்றியுரைத்தாரால் உரையாசிரிய ரெனின்...அது போலியுரை யென்க" என்றார். இ. நம.—உரை யில் சேனாவரையர் கொடுத்துள்ள பொருளே காண்கின்றது. சேனா வரையர் மறுப்பை நோக்கின், 'தன்னு ளுறுத்த பன்மைக் காங் கால்—உயர் திணை மருங்கி னல்ல தாகாது' என்றே இளம்பூரணத் தில் இருத்தல்வேண்டுமெனத் தோற்றுகின்றது.

பெயரியல் முற்றும்.

---

# 6. வினையியல்.

198. வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது
நினையுங் காலைக் காலமொடு தோன்றும்.

உரைகாரர் நால்வரும் இச்சூத்திரம் வினையது பொதுவிலக் கணங் கூறுகின்றது என்றனர். பொருளின்புடைபெயர்ச்சியைக் கூறுதல் வினைக்குச் சிறப்பிலக்கணமாயிருக்க, ஆசிரியர் இச்சூத் திரப் பொருளை வினையிலக்கணமாகக் கூறுவரோ? 'வினை' என்ற குறியானே அதனிலக்கணம் பெறப்படுதலின் அதனை இங்குக் கூறாது, வினையென்பது வேற்றுமையுருபை ஏற்காது காலத்தை வெளிப்படையானும் குறிப்பானுங் காட்டும் என்று அதன் தன்

மையைக் கூறின ரென்க. இவ்வாறே 'இடையெனப் படுவ...' (சொல். 249), 'உரிச்சொற் கிளவி...' (சொல். 297) என்ற சூத்திரங்களும் முறையே இடைச்சொல், உரிச்சொல் இவற்றின் இலக்கணத்தைக் கூறவில்லை யென்பது ஆங்காங்குக் காட்டப்படும். 'பொருண்மை சுட்டல்...' (சொல். 66), 'கூறிய முறையின்...' (சொல். 69), 'பெயர்நிலைக் கிளவி...' (சொல். 70) என்ற சூத்திரங்களாற் பெயரது இலக்கணம் கூறப்பட்டது என்ற உரைகாரர்களது கொள்கை நேரிதன்று என்றும் ஆங்கே காட்டப்பட்டது.

இச்சூத்திரவுரையில் நச்சினார்க்கினியர் 'வினையென்றது முதனிலையை. இஃது ஆகுபெயராய்த் தன்னாற் பிறக்கின்ற சொல்லை யுணர்த்திற்று' என்று கூறினர். இங்கு **முதனிலை** என்பதற்குப் **பகுதி** என்று பொருள்கொண்டு அவ்வாறு கூறியதாகத்தோன்றுகின்றது. உண், தின் முதலிய முதனிலைகள் வினையாயின், உண்டான் தின்றான் என்னுமிடத்து உண், தின் என்பனவற்றின் பொருள் மாறுபடாமையால் உண்டான், தின்றான் என்பன ஆகுபெயராய் வினையாகக் கூறப்படுகின்றன என்று கொள்வது நேர்மையன்று. 'வினையே செய்வது செயப்படு பொருளே... ஆயெட் டென்ப தொழின்முதனிலையே' (சொல். 112) என்னுஞ்



சூத்திரக்குறிப்பில் வினை என்பதற்கு கிருதி என்று பொருள் கூறப்பட்டது. இங்கு ஆகுபெயரால் அக்கிருதியை யுணர்த்

துஞ் சொல் என்பதே வினைக்குப் பொருளாகும். அவ்வாறு கொள்ளின் உண் தின் என்பன எவ்வாறு வினையோ, அவ்வாறே உண்டான் தின்றான் என்பனவும் வினையாகும்.

200. இறப்பி னிகழ்வி னெதிர்வி னென்று
வம்முக் காலமுங் குறிப்போடுங் கொள்ளு
மெய்ந்நிலை யுடைய தோன்ற லாறே.

இச்சூத்திரத்திற் காலம், இறப்பு நிகழ்வு எதிர்வு என மூன்று வகைப்படும் என்றும், வினை, தெரிநிலை குறிப்பு என இரு வகைப்படும் என்றும் கூறப்படுவதால், வாக்கியபேதம் என்ற குற்றம் வாராதோ எனின், காலம் இறப்பு நிகழ்வு எதிர்வு என்று மூவகைப்படும் என்பது இங்கு விதிக்கப்படவில்லை யென்க.

" இறப்பே நிகழ்வே யெதிர தென்னுந்
திறத்தியன் மருங்கிற் றெரிந்தன ருள்ளப்
பொருணிகழ் வுரைப்பது கால மாகும்" (செய்யு. 202)

என்னுமிடத்து இறப்பு, நிகழ்வு, எதிர்வு என இம்மூன்றுவகைப் பட்டது காலம் என்று விதிப்பர். அம்மூவகையையும் இங்குப் புரோவதித்தார் என்று கொள்ளவேண்டும். அவ்வாறாயின் இச் சூத்திரம், தெரிநிலை குறிப்பு என வினை இரண்டு வகைப்படு மென்று விதிக்கின்றதாகும்.

201. குறிப்பினும் வினையினு நெறிப்படத் தோன்றிக்
காலமொடு வரூஉம் வினைச்சொ லெல்லா
முயர்திணைக் குரிமையு மஃறிணைக் குரிமையு
மாயிரு திணைக்கு மோரன்ன வுரிமையு
மம்மு வுருபின தோன்ற லாறே.

இச்சூத்திரவுரையிற் 'காலமொடு வரூஉம்' என்னும் அடைமொழிக்குப் பயன் சேனாவரையர் 'முன் ஈறுபற்றி உணர்த்தப்படும் வினைச்சொற்களை, இஃதிறந்தகாலத்திற்குரித்து, இது நிகழ்காலத்திற் குரித்து, இஃதெதிர்காலத்திற் குரித்து என வழக்குநோக்கி, உணர்ந்துகொள்க வென்பது விளக்கிய, காலமொடு வரூஉமென்றார்' என்றனர். ஆசிரியர் காலவெழுத்தைக்



கூறாமையின் வழக்குநோக்கிக் காலம் அறியவேண்டு மென்பது தானே புலப்படுகின்றது. ஆதலால் 'காலமொடு வரூஉம்' என்பது அதற்கு ஞாபகம் என்று கொள்வது அவசியமா? நச்சினார்க்கினியர் 'குறிப்பிற்குங் காலம் உண்டென்பது வலியுறுத்தற்கு, காலமொடு வருமெனப் பின்னுங் கூறினார்' என்றார்.

**202.** **அவைதாம்,**
**அம்மா மெம்மே மென்னுங் கிளவியு**
**மும்மொடு வரூஉங் கடதற வென்னு**
**மந்நாற் கிளவியோ டாயெண் கிளவியும்**
**பன்மை யுரைக்குந் தன்மைச் சொல்லே.**

'அவைதாம்' என்பதற்கு மூவகை வினைச்சொல் என்பது பொருளாதலின் அம், ஆம் முதலிய எட்டனையும் ஈற்றிற்

கொண்ட வினைச்சொற்கள் போல, 203, 205, 206, 216, 217—ஆவது சூத்திரங்களிற் கூறப்பட்ட விகுதிகளை ஈற்றிற் கொண்ட சொற்களும் அதனுள் அடங்கவேண்டும். ஆதலின் 203 முதலிய சூத்திரங்களில் **'அவைதாம்'** என்பதை பொட்டிப் பொருள் கொள்ளல் வேண்டும். ஆகலான் 'அவைதாம்' என்பதைப் பிரித்து **அதிகாரசூத்திரம்**[1] என்னலாம்.

**பா-ம்.—தே.—**சூத்திரத்தில் 'அவைதாம்' என்பது இல்லை. **சே. தா.—**'ஏனையெழுத்தின்முன் **ஙகாரமும்** ழகாரமுமொழித்து'. **சே. சை.—**'ஏனையெழுத்தின்முன் **ரகாரமும்** ழகாரமுமொழித்து'. முன்பாடமே நச்சினார்க்கினியருக்கு உடன்பாடு என்பது அவரது உதாரணங்களிலிருந்து நன்கு விளங்கும்.

**இ.நம.—**இல் கண்ட **'அம், ஆம் என்பன முன்னின்றாரை யுளப்படுக்கும், தமராயவழிப் படர்க்கையாரையும் உளப்படுக்கும்; எம், ஏம் என்பன படர்க்கையாரை உளப்படுக்கும்; உம்மோடு வருஉங் கடதற அவ்விருவரையும் ஒருங்கு உளப்படுத்தலும் தனித்து உளப்படுத்தலும் உரிய'** என்ற சொற்றொடர் சேனாவரையத்தி லுள்ளவாறே இருத்தலின், சேனாவரையத்தி

1. அதிகாரசூத்திரம் (अधिकारसूत्रम्) என்பது தான் ஒன்றனையும் விதிக்காது, பல சூத்திரங்களுக்கு முன் படிக்கப்பட்டு, அவற்றிற்குப் பொருள் கொள்ளும்போது தானும் அவற்றுடன் சேர்ந்து பொருள் கொள்ளப் படுவதாகும்.,



லிருந்து இளம்பூரணவேட்டில் இங்குச் சேர்க்கப்பட்டிருத்தல் வேண்டும். ஏனெனில், இச்சூத்திரவுரையினிறுதியில் உரையா

சிரியரே "இவை தன்னொடு முன்னின்றானையும் உளப்படுக்கும், படர்க்கையானையும் உளப்படுக்கும், அவ்விருவரையும் உளப் படுக்குமென்பது, 'அவற்றுள், பன்மை யுரைக்குந் தன்மைக் கிளவி' (சொல். வினை, 12) என்னுஞ் சூத்திரத்துட் சொல்லு தும்" என்று கூறினர்.

203. கடதற வென்னு
மந்நான் கூர்ந்த குன்றிய லுகரமோ
டென்னே னல்லென வரூஉ மேழுந்
தன்வினை யுரைக்குந் தன்மைச் சொல்லே.

சேனாவரையத்தில் 'குற்றுகரம், காலவெழுத்துப் பெறுங் கால்' என்னுமிடத்து, குற்றுகரம் என்பதற்கு குற்றுகரவீற்றை யுடைய உயிர்மெய் என்பதும், காலவெழுத்துப் பெறுங்கால் என் பதற்கு காலவெழுத்தாந் தன்மையைப் பெறுங்கால் என்பதும் பொருளாகும்.

'குற்றுகரநான்கும் எதிர்காலம்பற்றி வரும்' என்று சேனா வரையரும் 'பெரும்பான்மையும் எதிர்காலத்துஞ் சிறுபான்மை ஏனைக்காலத்தும் வரும்' என்று நச்சினார்க்கினியருங் கூறுகின் றனர். உரையாசிரியர் இவை இன்னகாலத்தில் வருமென்று கூறிற்றிலர்.

206. அர் ஆர் ப என வரூஉ மூன்றும்
பல்லோர் மருங்கிற் படர்க்கைச் சொல்லே.

இச்சூத்திரவுரையில் நச்சினார்க்கினியர் 'ஒழிப, தவிர்ப என மறையும் வரும்' என்று கூறினர். ஒழிப, தவிர்ப என்ற இரண்டிலும், ஒழி, தவிர் என்ற வினைப்பகுதிகள் எதிர்மறைப்பொருளைக் காட்டினும், ஒழிப, தவிர்ப என்பன விதியுருவமே யன்றி மறை யாகா.

208. பன்மையு மொருமையும் பாலறி வந்த
வந்நா லைந்து மூன்றுதலை யிட்ட
முன்னுறக் கிளந்த வுயர்திணை யவ்வே.

இச்சூத்திரவுரையில் சேனாவரையர் 'ஈண்டுக் கூறிய படர்க்கை வினையே கிளவியாக்கத்துட் கூறப்பட்டன, அவை வேறல்ல





வென்பார், முன்னுறக்கிளந்த வென்றார்' என்று கூறினர். கிளவியாக்கத்துள் னஃகானொற்று முதலியன பெயர், வினை இவ்விரண்டினும் பால் விளக்கும் ஈறென்பது, சூத்திரப்போக்கை யூன்றி நோக்குமிடத்து விளங்கும். தெய்வச்சிலையாரும் இவ்வாறே பொருள் கூறியுள்ளமை காண்க. ஈண்டோ அன், ஆன் படர்க்கை யாண்பாலையும், அள், ஆள் படர்க்கைப் பெண்பாலையும், அர், ஆர் படர்க்கைப் பலர்பாலையும், 'இர், ஈர், மின்...' (சொல். 224) என்ற சூத்திரத்தில் இர், ஈர் பல்லோர் முன்னிலையையும், பலவற்று முன்னிலையையும் உணர்த்து மென்றதனால் அகரம் முதலியவற்றோடு சேர்ந்த னகரவொற்று முதலியன பாலோடு இடமுணர்த்தலையுங் கூறிவிட்டு, 'ர்' 'பலர் பாலைக்குறிக்கின்றது என்பதை' 'பாலறி மரபி னம்மூ வீற்றும்...' (சொல். 211) 'ரஃகானொற்றும்...' (சொல். 7) என்ற சூத்திரங்களால் ஆசிரியர் கூறி

யிருத்தலின் அர், ஆர் இவற்றிலுள்ள அ, ஆ படர்க்கையையும், இர், ஈர் இவற்றிலுள்ள இ, ஈ முன்னிலையையும் குறிக்குமென உய்த்துணர வைத்தாரென்னலாம். இக்கருத்துத் தோன்றவே 'னஃகா னொற்றே யாடூஉ வறிசொல்' (சொல். 5) 'ளஃகா னொற்றே மகடூஉ வறிசொல்' (சொல். 6) என்ற கிளவியாக்கத்துச் சூத்திரங்களிலும் 'அன், ஆன், அள் ஆளென்னு நான்கு—மொருவர் மருங்கிற் படர்க்கைச் சொல்லே' (சொல். 205) என்ற வினையியற் சூத்திரத்திலும் ஆசிரியர் கூறியிருத்தல் காண்க. 'ஆடூஉ வறி சொல்' என்று பாலைக்கூறினும், இடம் பெறப்படாதென்பது 'இர், ஈர் மின்னென வரூஉ மூன்றும்—பல்லோர் மருங்கினும் பலவற்று மருங்கினுஞ்—சொல்லோ ரனைய வென்மனார் புலவர்' (சொல். 224) என்றவிடத்து முன்னிலைப் பன்மைகள் பல்லோரையும் பலவற்றையுங் காட்டு மென்று கூறுதலின் வலியுறுதல் காண்க.

209. அவற்றுள்,

பன்மை யுரைக்குந் தன்மைக் கிளவி
யெண்ணியன் மருங்கிற் றிரிபவை யுளவே.

**பொருள்:** உ.—பன்மைத் தன்மைச்சொற்கள் ஆராயுமிடத்து அவை திரிபுடைய எ-று. யாதோ திரிபு எனின், அம் ஆம் என்னும் இரண்டும் தன்னொடு முன்னின்றானை உளப்படுக்கும்.



எம் ஏம் என்பன இரண்டும் தன்னொடு படர்க்கையானை உளப் படுக்கும். உம்மொடு வரூஉம் கடதறக்கள் முன்னின்றானையும் படர்க்கையானையும் உளப்படுக்கும் என்பது.

சே. ந.—கூறப்பட்ட இருபத்து மூன்றுசொற்களுள், பன்மையுணர்த்துந் தன்மைச்சொல் எண்ணியலும்வழி அஃறிணையையுளப்படுத்துத் திரிவன வுள எ-று.

தே.—மேற்சொல்லப்பட்டவற்றுள், உளப்பாட்டுப்பன்மைச் சொல் எண் இயலும்வழித் திரிபவை உண்டு எ-று. உ-ம். எண்ணென்பது இரண்டு மூன்று என்பன. 'யாம் இருவேம்' எனற்பாலது 'யாம் இருவர்' என்றும் வரும். இன்னும் எண்ணியன் மருங்கின் என்பதற்கு எண்ணப்பட்ட மருங்கின் எனப் பொருளுரைக்க, உளப்பாட்டுத்தன்மைக்கு ஓதிய எட்டீற்றினும் திரிபவை உள என்றுமாம். வருவோம், உண்போம் என ஓகாரம் பெற்று வருவன ஏகாரத்திரிபு என்று கொள்க.

இச்சூத்திரத்தைத் 'தன்மைச் சொல்லே யஃறிணைக் கிளவி யென்—றெண்ணுவழி மருங்கின் விரவுதல் வரையார்' (சொல். 43) என்னுஞ் சூத்திரத்தோடு சேர்த்து நோக்குமிடத்தும், முற்சூத்திரத்துள்ள உயர்திணையவ்வே என்ற சொல்லை நோக்குமிடத்தும் சேனாவரையர், நச்சினார்க்கினியர் இவ்விருவருங் கொண்ட பொருளே பொருந்துமென்பது விளங்கும். இதைப் பற்றி அச்சூத்திரக் குறிப்பிற் காண்க.

> 210. யாஅ ரென்னும் வினாவின் கிளவி
> யத்திணை மருங்கின் முப்பாற்கு முரித்தே.

பி-ம்.—சே. தா.—'பல்லோர் படர்க்கை யுணர்த்தும் மாரீற்றின்'. இங்கு 'மாரீற்றின்' என்பது 'ஆரீற்றின்' என்றிருத்தல் வேண்டும்.

> 211. பாலறி மரபி னம்மு வீற்று

மாவோ வாகுஞ் செய்யு ளுள்ளே.

இச்சூத்திரத்தால் கோண்மார் என்னுமிடத்து 'ஆ' ஓவாக மாறுதோ எனின்,—'ஆன், ஆள், ஆர் என்னுமிடத்து ன், ள், ர் முறையே ஆண்பாலையும், பெண்பாலையும், பலர்பாலையும் குறிக்



கின்றன என்பது 'னஃகா னொற்றே யாடூஉ வறிசொல்', 'ளஃகா னொற்றே மகடூஉ வறிசொல்' 'ரஃகா னொற்றும்...பலரறி சொல்லே' என்ற சூத்திரங்களால் பெறப்படுதலின், பாலைக்குறிக்கும் எழுத்து ஆகாத 'ஆ' 'ஓ' வாகின்றது. மார் என்பதிலுள்ள ரகரவொற்றோ அவ்வாறு பாலைக்குறியாது, மார் என்பதே பலர் பாலைக் குறிக்கின்றதென்பது ஆங்கே 'மாரைக் கிளவியும்...பலரறி சொல்' என்பதனால் கூறப்பட்டமையின், அது மாறாவதின்று.

உரையாசிரியர் 'ஆவோ வாகுஞ் செய்யு ளுள்ளே' என்ற வாக்கியத்திற்குச் 'செய்யுளுள் எங்கும் ஆ ஓவாக எ-று.' என்று பொருள் கூறுகின்றார்[1].

213. அதுச்சொல் வேற்றுமை யுடைமை யானுங்
கண்ணென் வேற்றுமை நிலத்தி னானு
மொப்பி னானும் பண்பி னானுமென்
றப்பாற் காலங் குறிப்பொடு தோன்றும்.

இச்சூத்திரவுரையில் உரையாசிரியர் உடையன், நிலத்தன் என்று உதாரணங் கூறினர். அவ்வாறே சேனாவரையரும், நச்சினார்க்கினியரும் தெய்வச்சிலையாரும் கச்சினன், இல்லத்தன் என்ற உதாரணங் கூறினர். பின்னர்க் கொடுத்த உதாரணங்

கள் சூத்திரப்போக்குக்குப் பொருந்தும். உடையன் என்பதைச் சேனாவரையரும், நச்சினார்க்கினியரும் மேற் சூத்திரத்திற் கண்ட 'அன்ன பிறவும்' என்பதனாற் கொண்டனர்.

சேனாவரையத்திலுள்ள 'ஆயின், இஃதிரண்டாம் வேற்றுமைப் பொருளாமெனின், ஆண்டுடைமை உருபுநோக்கிய சொல்லாய் வருவதல்லது இரண்டாம் வேற்றுமைப்பொருளெனப் படாது. என்னை? அது செயப்படுபொருண்மைத்தாகலின். 'அதனான் உடைமை ஆறாவதன் பொருளெனவே படுமென்பது' என்பதன் கருத்து:—கச்சினன் என்ற சொல் கச்சினையுடையன்

---

1. இங்கு 'सर्वं वाक्यं सावधारणम् असति बाधके, என்ற நியாயத்தை மனத்திற் கொண்டனர். இதன் பொருள்:—பாதகமில்லாவிடின் எல்லாவாக்கியமும் தேற்றப்பொருளைக் குறிக்கும் என்பதாம். சில விடங்களில் 'ஆ' ஓவாகாமையைக் கண்டு 'ஆவாகக்கொள்ளாத விடத்தாயின் ஓவாகத் திரிவது, அல்லாக்கால் வேண்டா என்பது' என்று உரையாசிரியர் கூறியிருத்தலைக் காண்க.



என்று, பொருள்படுவதால் உடையன் என்பதற்குக் கச்சினை என்பது செயப்படுபொருளாகையால் 'அதுச் சொல்வேற்றுமை யுடைமையானும்' என்ற சூத்திரத்திற் கூறுதல் எங்ஙனமெனின், கச்சினன் என்ற சொல் கச்சு என்பதனோடு அன்விகுதி சேர்ந்து உண்டாதலானும், அன்னின் பொருளுக்குக் கச்சு என்பது உடைமைப்பொருளானமையினானும் அவ்வாறு கூறினர் என்க.

214. அன்மையி[1] னின்மையி[2] னுண்மையின்[3] வன்மையி
னன்ன பிறவுங் குறிப்பொடு கொள்ளு
மென்ன கிளவியுங் குறிப்பே காலம்.

இச்சூத்திரவுரையிற் சேனாவரையர் 'அன்மையும் உண்மையும் பண்பிற்கு மொத்தலிற் பண்பெனப் படா' என்றார். அதற்குப் பொருள்:—'இராமன் கோவிந்தனல்லன், இராமன் உளன்' என்பனபோல, 'கருமை வெண்மை யன்று, கருமை உண்டு' என்ற வழக்கும் உள. இவ்வுதாரணங்களால் அன்மை உண்மை இவ்விரண்டும் பொருளில்[4] இருப்பதுபோலக் குணத்திலும் இருக்கின்றன என்பது பெறப்படும்; பொருள் குணங்களோடு கூடியிருப்பதுபோலக் குணங்கள் குணங்களோடு கூடியிரா[5] என்பது தருக்கநூலமாக நிறுவப்பட்ட கொள்கையாதலின் அன்மை உண்மை யென்பன குணங்களாகா என்பது.

'அதனாற் பொருட்கட்கிடந்து, தனக்கோர் குணமின்றித் தொழிலின் வேறாய குணத்தின் அன்மை முதலாயின வேறெனப்படும்' என்று சேனாவரையர் கூறியிருக்கும் வாக்கியத்தின் பொருள்:—குணங்களோ பொருள்களில் இருப்பன; அக்குணங்கட்கு வேறே குணங்கள் கிடையா; அன்றியும், அவை தொழிலின் வேறானவை; இவ்வாறுள்ள குணங்களைக் காட்டிலும் அன்மை முதலாயின வேறெனப்படும் என்பது.

அன்னபிறவும் என்றதனுன் உரையாசிரியரும் சேனாவரையரும் நல்லன், தீயன் இவற்றைக் கொண்டனர்; இவ்வாறு

---

1. அன்மை = अन्योन्याभाव: 2. இன்மை = अत्यन्ताभाव:

3. உண்மை = सत्ता 4. தருக்கநூலார் பொருள் என்பதைத் திரவியம் என்பர்.

5. இதற்குக் காரணம் குணத்திற்குக் குணமின்மையின் என்றார். குணத்திற்குக் குணமின்மையின் = गुणे गुणानङ्गीकारात्.



கொண்டதற்குக் காரணம் நன்மை, தீமை முதலியன தருக்கநூல்களிற் கூறியிருக்கும் 24 குணங்களின்[1] வேறாகையாற்போலும்.

நச்சினார்க்கினியர் "அன்மையாவது 'எப்பொருளுமல்லனிறைவன்' என்றாற் பண்பை யுணர்த்தியும், அவைதாம் இவனல்லனென்றாற் குறிப்பை யுணர்த்தியும் நிற்கும்" என்றார். இங்குப் பண்பு என்பதற்குச் சேனாவரையர் கூறியவாறு **குணம்** என்பது பொருளன்று; **இயற்கை** என்பது பொருளாம். அவ்வாறாயின் நல்லன், தீயன் முதலிய உதாரணங்கள் முற்சூத்திரத்திற்கே பொருந்தும். இங்குக் கூறியதற்குக் காரணந்தோன்றிற்றில.

பா-ம்.—சே. தா.—'உளதேனின், அது பண்பாயடங்கும்.' சே. சை.—'ஊறெனின்[2] அது பண்பாயடங்கும்'. பின்னர்க்கூறிய பாடமே பொருத்தமானது: எவ்வாறெனின், வன்மை யென்பது ஆற்றலையும், ஊற்றின்வன்மையையும் காட்டும். ஆற்றலென்பது குணத்துக்கும் உண்மையால், வன்மை யென்பது அப்பொருளை யுணர்த்துமிடத்துப் பண்பெனப்படாது; ஊற்றினை யுணர்த்துமிடத்துப் பண்பு எனப்படுமென்று பொருள் படுதலாலென்க.

உரையாசிரியர் இச்சூத்திரத்தையும் முற்சூத்திரத்தையும் ஒரு சூத்திர மாக்கினர். தோன்றும், கொள்ளும் என்ற இருவினை இருத்தலின் சேனாவரையர் நச்சினார்க்கினியர் தெய்வச்சிலையார் இம்மூவரும் இரண்டு சூத்திரங்களாகக் கொண்டனர்.

215. பன்மையு மொருமையும் பாலறி வந்த

வன்ன மரபிற் குறிப்போடு வரூஉங்
காலக் கிளவி யுயர்திணை மருங்கின்
மேலைக் கிளவியோடு வேறுபா டிலவே.

பி-ம்.—இ. நம.—இல் "'அன்ன மரபின்' என்றதனான், ஈண்டு உயர்திணைக்கு ஓதிய பொருள்பற்றி அஃறிணை வினைக்குறிப்புத் தோன்றும் என்று கொள்க. வரலாறு: 'வடாது வேங்கடம் தெனாது குமரி' என்புழி வடாது தெனாது என்பன; இது

1. 24 குணங்களாவன:—ரூபம், இரசம், கந்தம், ஸ்பரிசம், சங்கியை, பரிமிதி, பிருதக்த்வம், சம்யோகம், விபாகம், பரத்துவம், அபரத்துவம், புத்தி, சுகம், துக்கம், இச்சை, துவேஷம், யத்நம், குருத்துவம், திரவத்துவம், சிநேகம், ஸம்ஸ்காரம், தருமம், அதருமம், சப்தம்.

2. ஊறு = स्पर्श:



வினைக்குறிப்புப் பெயர். பிறவும் அன்ன" என்ற சொற்றொடர் இச்சூத்திரவுரையின் இறுதியிலுள்ளது. 'இன்றில வுடைய வென்னுங் கிளவியும்...' (சொல். 220) என்னுஞ் சூத்திரத்தில் அஃறிணை வினைக்குறிப்பு எப்பொருளில் வருமென்பது தெளிவாய்க் கூறப்பட்டமையின் இச்சொற்றொடர் இங்குப் பொருந்தவில்லை. அச்சூத்திரவுரையி னிறுதியில் 'பன்மைப்பாலும் ஒருமைப்பாலும் தோன்றிநிற்கும் இலக்கணமுடைய வினைக்குறிப்புச் சொற்கள் மேற்கூறப்பட்ட அஃறிணை வினைச்சொற்கு ஈறாய் நின்று பாலுணர்த்தும் எழுத்துக்களின் உள்ளனவே தமக்கும் ஈறாவன, பிறிதில என்றவாறு' என்பதற்குமேல் ஒன்றுங் காணப்படாமையின், இச்சொற்றொடர் இங்குத் தவறி எழுதியிருத்தல்வேண்டும் எனத் தோற்றுகின்றது.

216. அஆவ என வரூஉ மிறுதி

யப்பான் மூன்றே பலவற்றுப் படர்க்கை.

சே. தா.—'ஙகார ழகரமொழித்து'. சே. சை.—'ரகார ழகார மொழித்து'. முன்னர்க்கூறிய பாடமே நச்சினார்க்கினியருக்கு உடன்பாடென்பது அவரது உதாரணங்களால் விளங்கும்.

217. ஒன்றன் படர்க்கை தறட வூர்ந்த
குன்றிய லுகரத் திறுதி யாகும்.

பி-ம்.—சே. ந.—' தறட வூர்ந்த '. இ. நம.—' தடற வூர்ந்த.' 'ஒன்றறி கிளவி தறட வூர்ந்த—குன்றிய லுகரத் திறுதி யாகும்' (சொல். 8) என்னுஞ் சூத்திரத்தையும், இச்சூத்திரவுரையில் உரையாசிரியர் கூறிய உதாரணங்களின் முறையையும் நோக்குங்கால் இ. நம.—இல் 'தறட வூர்ந்த' என்ற பாடமே உரையாசிரியர் கொண்டனர் என்பது என் கருத்து.

220. இன்றில வுடைய வென்னுங் கிளவியு
மன்றுடைத் தல்ல வென்னுங் கிளவியும்
பண்புகோள் கிளவியு முளவென் கிளவியும்
பண்பி னாகிய சினைமுதற் கிளவியு
மொப்பொடு வரூஉங் கிளவியொடு தொகைஇ
யப்பாற் பத்துங் குறிப்பொடு கொள்ளும்.



இச்சூத்திரவுரையிற் சேனாவரையத்திற் 'இளங்கோ,தியவழியுஞ் சூத்திரஞ் சுருங்குமாகலா னென்பது' என்ற வாக்கியம்

உளது. அங்கு உம்மை இல்லாவிடின் நலம்.

220, 221-வது சூத்திரங்களைச் சேனாவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார் இம்மூவரும் இரண்டு சூத்திரங்களாகக் கொண்டனர்; உரையாசிரியர் 213, 214-வது சூத்திரங்களை ஒரே சூத்திரமாக்கியதுபோல, இவ்விரு சூத்திரங்களையும் ஒன்றாக்கினர்.

223. அவற்றுள, முன்னிலைக் கிளவி
இஐ ஆயென வரூஉ மூன்று
மொப்பத் தோன்று மொருவர்க்கு மொன்றற்கும்.

இச்சூத்திரவுரையில் உரையாசிரியர் 'உண்டி, தின்றி என இறந்த காலத்திற்கே பொருத்தமுடைத்தாய் இகரம் வரும்' என்றார். சேனாவரையரும், நச்சினார்க்கினியரும் 'இகரம் தடறவூர்ந்து எதிர்காலம்பற்றி வரும்' என்றனர்.

உரையாசிரியர் 'ஒருகாலத்திற்கே யேற்கும் இகரம் முற்கூறினமையின் உண், தின், கிட, நட, வா, போ என்னுந்தொடக்கத்தன கொள்க' என்றார். சேனாவரையரும், தெய்வச்சிலையாரும் அவற்றை, 'செய்யா யென்னு முன்னிலை வினைச்சொற்—செய் யென் கிளவி யாகிட னுடைத்தே' (சொல். 450) என்னுஞ் சூத்திரத்தாற் கொண்டார்.

பா-ம்.—இ. சே. தை.—'ஒருவர்க்கும்'. சே. தா. ந.—'ஒருவற்கும்'. ஒருவரென்பது ஆண் பெண் என்ற இரண்டையுங்காட்டவேண்டுமாதலால், முன்னர்க்கூறிய பாடமே பொருத்தமானது.

224. இர்ஈர் மின்னென வரூஉ மூன்றும்
பல்லோர் மருங்கினும் பலவற்று மருங்கினும்
சொல்லோ ரனைய வென்மனார் புலவர்.

இச்சூத்திரவுரையில் நச்சினார்க்கினியத்தில் 'நடத்துவிப்பி, வருவிப்பி, நடப்பிப்பி எனவும் வரு'மென்று கூறி 'இவற்றை இருமடியேவ லென்பாரும் உளர். இவற்றை இருகாலேவுதல் கூறியதுகூறலா மாதலின் இவை இழிவழக்கென மறுக்க' என்ற சொற்றொடர் உளது. இங்கு நச்சினார்க்கினியர் நன்னூ



லார்மதத்தைக் குறித்து மறுக்கின்றாரென்று தோன்றுகின்றது[1]. ஆனால் அவர் வருவிப்பி, நடப்பிப்பி என்பனவற்றை ஈரேவலாகக் கொண்டாரல்லது நடத்துவிப்பி என்பதையும் ஈரேவலாகக் கொண்டதாகத் தெரியவில்லை. நடத்துவிப்பி என்பதை வீரசோழிய வாசிரியர் கூறுமாறு காரிதக்காரிதக்காரித தாது[2] என்றேனும் மூவேவல் என்றேனுங் கூறவேண்டும். 'இவற்றை இருகாலேவுதல் கூறியதுகூறல்' என்று நச்சினார்க்கினியர் கூறுவது எவ்வாறு பொருந்தும்? ஓர் அரசன் அமைச்சனை நோக்கிப் 'பணியாளனால் சிற்பியை வருவிப்பி' என்றால் அஃது இழிவழக்காகுமா? செய்யுள் வழக்கில் பெரும்பான்மை இவ்வாறு காணப்படாதது நச்சினார்க்கினியர் இங்ஙனம் கூறியதற்குக் காரணமாகலாம்.

213, 214-வது சூத்திரங்களில் உயர்திணைவினைக்குறிப்பும், 220-வது சூத்திரத்தில் அஃறிணைவினைக்குறிப்புங் கூறியவாறு இச்சூத்திரத்தின்பின் முன்னிலை வினைக்குறிப்பை ஆசிரியர் ஏன் கூறாராயினர் எனின், முன்னிலை விரவுத்திணையாதலின், விரவுத்திணையுள் உயர்திணை, அஃறிணை இரண்டு மடங்குதலின் தனியே கூறாராயினரென்க. தன்மைக்கும் இஃதொக்கும்.

பா-ம்.—சே. தா.—'கிளந்தோதலாஞ் சுருக்கத்தனவகையானும்'. சே. சை.—' கிளந்தோதலாஞ் சுருக்கத்தனவன்மையானும்'. பின்பாடம் பொருந்தும். எவ்வாறெனில், அஃறிணைவினைக்குறிப்பு அன்மைப்பொருளினும், இன்மைப் பொருளினும், உண்மைப்பொருளினும் வருமென்று கூறுவதினும், அன்று, அல்ல, இன்று, இல, உள என்ற அப்பொருள் படும் வினைக்குறிப்பின் உருவங்களையே கூறுவது மாணக்கர்க்கு எளிதில் விளங்குமாதலாற் சுருக்கமாகும்.

---

1. செய்யென் வினைவழி விப்பி தனிவரின்
   செய்வியென் னேவ லினையி னீரேவல். (நன். 138.)

என்னுஞ் சூத்திரத்தைக் கவனிக்க.

2. ஆட்டாற்று நீற்றுதி தாதக் கிளையடற் காரிதமென்
   றோட்டா வறிக வுரையின் படியொப்பில் விப்பிபின்பு
   மூட்டா வறிகா ரிதக்கா ரிதமுன்பிற் றுதவின்கட்
   காட்டா வறியவை காரிதக் காரிதக் காரிதமே.

(வீரசோ., தாதுப். 6.)





226. அவற்றுள்,
முன்னிலை தன்மை யாயீ ரிடத்தொடு
மன்னா தாகும் வியங்கோட் கிளவி.

பொருள். உ.—முன்னிலை, தன்மை இரண்டிடத்துஞ் செல்வனவாகிய வியங்கோள்வினைச்சொல் சிறுவரவின எ-று.

சே.—மேல் 'எஞ்சிய கிளவி' எனப்பட்ட ஏழனுள் வியங்

கோட்கிளவி, முன்னிலையும் தன்மையுமாகிய இரண்டிடத்தோடு நிலைபெறுதாம்.

ந.—மேல் 'எஞ்சிய கிளவி' யென்னப்பட்ட ஏழனுள் ஏவற் பொருண்மையை முடித்தலை உணர்த்துஞ் சொல், முன்னிலையுந் தன்மையுமாகிய அவ்விரண்டிடத்துப்பொருளொடும், அஃறிணைக் கட் பெரும்பான்மையும் நிலைபெறாது; உயர்திணைக்கட் பெரும் பான்மையும் நிலைபெறும் எ-று.

தே.—மேற் சொல்லப்பட்டவற்றுள் வியங்கோட்சொல் முன்னிலையும் தன்மையுமாகிய இடத்து நிலைபெறா.

உரையாசிரியர், சேனாவரையர், தெய்வச்சிலையார் இம்மூவருங் கூறியபொருள் சூத்திரப்போக்குக்கு ஒத்திருக்கின்றது. நச்சினார்க்கினியர் கூறிய பொருள் அவ்வாறில்லை. 'முன்னிலை தன்மை யாயீ ரிடத்தொடு மன்னுதாகும்' என்பதற்கு 'அஃறிணைக்கட் பெரும்பான்மையும் நிலைபெறாது; உயர்திணைக்கட் பெரும்பான் மையும் நிலைபெறும்' என்ற பொருள் கொள்ளுமாறு எங்ஙனம்?

227. பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மை
யவ்வயின் மூன்று நிகழுங் காலத்துச்
செய்யு மென்னுங் கிளவியொடு கொள்ளா.

பி-ம். இ. நம.—இல் இச்சூத்திரவுரையின் இறுதியிலுள்ள 'அவை வருமாறு: இன்மைசெப்பல்...அவை செய்ம்மன என வரும்' என்பது பொதுச்சூத்திரமாகிய 'எஞ்சிய கிளவி...' (சொல். 225) என்ற சூத்திரவுரையினிறுதியில் இருத்தல்வேண்டும்.

228. செய்து செய்யூச் செய்பு செய்தெனச்

பா-ம்.—சே. தா.—'தூஉய் ஆய்'. சே. சை.—'தூஉய் தாஅய்'. ஆய் முன்னரே எடுக்கப்பட்டிருத்தலாற் பின்னருள்ள பாடமே குற்றமற்றது.

232. ஏனை யெச்சம் வினைமுத லானு
மானவந் தியையும் வினைநிலை யானுந்
தாமியன் மருங்கின் முடியு மென்ப.

சேனாவரையத்தில் 'வினைமுதலென்பது பெயர்க்கும் வினைக்கும் பொதுவாகலானும் வினையுமெனல் வேண்டுமென்பது' என்றவிடத்து 'வினைமுதலென்பது பெயர்க்கும் வினைக்கும் பொது' என்பதின் பொருள், பெயர்ச்சொல்லுக்கு வினைமுதலாகி வருவது[1] வினைச்சொல்லுக்கு வினைமுதலாகி வருவது என இரண்டுக்கும் வினைமுதல் பொது என்பது.

233. பன்முறை யானும் வினையெஞ்சு கிளவி
சொன்முறை முடியா தடுக்குந வரினு
முன்னது முடிய முடியுமன் பொருளே.

பா-ம்.—சே. தா.—'ஓம்பா வீகை மாவே ரேவலி...' சே.சை.—ஓம்பா வீகை மாவே ளெவ்வி...'. பின் பாடமே பொருந்தும்.

234. நிலனும் பொருளுங் காலமுங் கருவியும்
வினைமுதற் கிளவியும் வினையு முளப்பட
வவ்வறு பொருட்கு மோரன்ன வுரிமைய
செய்யுஞ் செய்த வென்னுஞ் சொல்லே.

பொருள்:—உ.—சொல்லப்பட்ட ஆறு சொல்லொடுமுடியும் அவ்விரண்டெச்சம் என்பது.

சே.—செய்யும், செய்த என்னுஞ் சொற்கள், தொழின் முதனிலை யெட்டனுள் இன்னதற்கு இது பயனாக என்னும் இரண்டொழித்து, ஏனை யாறுபொருட்கும் ஒத்த வுரிமைய.

ந:—செய்யும், செய்த என்னுஞ் சொற்கள் இன்னதற்கு இது பயன் என்னும் இரண்டொழித்து நிலப்பொருளும், செயப்

1. ஆ பல என்னுமிடத்துப் பல வென்னும் பெயர்ச்சொல்லுக்கு ஆ வினைமுதலாயிருப்பது காண்க.



படுபொருளும், காலப்பொருளும், கருவிப்பொருளும், வினைமுதற் பொருளுமென்ற ஐந்துடனே வினைப்பொருளுங் கூடச் சொல்லப்பட்ட அவ்வறுவகைப் பொருட்கும் ஒத்த உரிமையினை யுடையவாம்.

தே.—நிலப்பெயரும், பொருட்பெயரும், காலப்பெயரும், கருவிப்பெயரும், வினைமுதற்பெயரும், வினைப்பெயருமாகிய அவ்வாறு பெயர்க்கும் ஒத்த உரிமைய, செய்யும் செய்த என்னுஞ் சொற்கள் எ-று.

சேனாவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார் இம் மூவர்மதமும் ஒன்று. உரையாசிரியர் மதம் வேறு. உரை

யாசிரியர் மதத்தைச் சேனாவரையர் 'நிலம் முதலாயினவற்றைப் பெயரெச்சப்பொரு ளென்னாது முடிக்குஞ் சொல்லெனின், அவ் வறு பொருட்கு மென்னாது அவ்வறு பெயர்க்கு மென்றோதுவார். ஓதவே, 'பெயரெஞ்சு கிளவி பெயரொடு முடிமே' (சொல். 433) என்னுஞ் சூத்திரம் வேண்டாவாம் என்று மறுத்தனர். இம் மறுப்பிற் கூறியவாறு அவ்வறு பெயர்க்கும் என்று ஆசிரியர் சூத் திரித்திருப்பின், நிலன், பொருள், காலம், கருவி, வினைமுதல், வினை இச்சொற்களுக்கு மாத்திரம் செய்யும், செய்த இவ்விரண்டும் ஒத்த வுரிமைய என்றாகுமே யன்றி அப்பொருளைக்கொண்ட சொற் களுக்கும் அவை ஒத்த வுரிமைய என்றாகா. 'பெயரெஞ்சு கிளவி பெயரொடு முடிமே' (சொல். 433) என்ற சூத்திரத்தால் பெயரெச்சம் பெயரைக்கொண்டு முடியும் என்று கூறப்பட்டமை யானும், அப்பெயர் நிலன்முதலாயினவற்றுள் ஒன்றாகவே இருக்க நிகழுமாதலானும், இச்சூத்திரம் எற்றுக்கு எனின், வினையெச் சத்துள் சில தன்வினைமுதலின் வினை கொண்டும், சில தன்வினை முதலின் வினையானும் பிறவினைமுதலின் வினையானும் முடியுமாறு போல, பெயரெச்சம் தன்வினைமுதலையே கொண்டு முடியுமோ வென்ற ஐயம் நிகழ, அவ்வாறன்றி வினைமுதல்போல, செயப்படு பொருள் முதலாயினவற்றொடும் முடிவு பெறலாம் என்று இச் சூத்திரம் உணர்த்துகின்றது என்னலாம்.

இச்சூத்திரத்தில் பொருள், வினை இவற்றிற்கு முறையே செயப்படுபொருள், செயல் என்பன பொருளாகும்.

235. அவற்றுளே வருவழிச்[1] செய்யுமென் கிளவி
முதற்கண் வரைந்த மூவீற்று முரித்தே.

இச்சூத்திரவுரையில் முற்றுச்சொல்லிற்கும் எச்சத்திற்கும் வேற்றுமை கூறுமிடத்துச் சேனாவரையர் 'பிறிதோர்சொல்லோடியையாது தாமே தொடராதற்கேற்கும் வினைச்சொல் முற்றும்' என்றார். இதனை நச்சினார்க்கினியர் பின்வருஞ் சொற்றொடரால் மறுத்தனர்:—"பெயர்பற்றி நில்லாது தாமேயுந் தொடர்ப் பொருளுணர்த்தி முற்றிநிற்கு மெனச் சேனாவரையர் கூறினாராலெனின், சாத்தற்குச் சோறிடுக என ஒருவன் ஏவியவழி, அவ் வேவப்பட்டான் அவற்கு அதனை ஈத்துவந்து உண்டான் என்றவழி, யான் கூறிய சாத்தனுண்டானென வினைமுதற் றொடர்ப் பொருள் அவன் மனத்தின்கண் உணர்த்திநிற்பதல்லது, நன்மக்கள் குழீஇயவழி ஒருவன் வந்துநின்று உண்டான் என்றவழி, அவ்வினைமுதற் றொடர்ப்பொருளுணர்த்தாது பால்மாத்திரம் உணர்த்தி நிற்கு மென்பது கருதி 'எத்திறத் தானும் பெயர்முடிபினவே (சொல். 429) என்றாராகலின் அது பொருத்தமின்றென்க". சேனாவரையர் பிறிதோர் சொல்லோடியையாது என்றாரல்லது பெயர்பற்றி நில்லாது என்று கூறவில்லை. மேலும் 'வழங்கியன் மருங்கிற் குன்றுவ குன்றும்' (சொல். 113) என்னுஞ் சூத்திரவுரையிற் 'குன்றத்தகுவனவாவன செயப்படுபொருளும் ஏற்பதும் பயனுமாம்' என்று அவரே கூறினமையின், வினைமுதலோடு தான் வினைமுற்று, தொடராதற் கேற்கும் என்பதே அவரது கொள்கை என்பதில் ஐயமில்லை.

236. பெயரெஞ்சு கிளவியும் வினையெஞ்சு கிளவியு
மெதிர்மறுத்து மொழியினும் பொருணிலை திரியா.

இச்சூத்திரவுரையில் 'முற்றுச் சொற்களை யெல்லாம் ஈறு பற்றி ஓதினாராகலின் எதிர்மறையும் ஆண்டேயடங்கும்' என்றார் உரையாசிரியர். 'விதிவினைக்கும் எதிர்மறைவினைக்கும் பொதுவாக ஈறுபற்றி ஓதியதல்லது விதிப்பொருளவாகிய வாய்பாடுபற்றி ஓதாமையின், ஆண்டுக் கட்டுரையில்லை யென்க' என்றார் சேனாவரையர். 'இனிச்செய்யு[1] மென்னும் முற்றிற்கும் உண்ணா

1. பா-ம். தே.—செய்யும் கிளவி.



ளவள், உண்ணாதது என வரும் மறை ஒன்றெனமுடித்தலாற் கொள்க' என்றார் நச்சினார்க்கினியர். உரையாசிரியர், சேனாவரையர் இவ்விருவருங் கூறிய காரணத்தாலே நச்சினார்க்கினியர் கூறுவதும் அடங்குங்கால், அதனை அவர் ஒன்றெனமுடித்தலாற் கொண்டதற்குக் காரணம் நன்கு புலப்படவில்லை.

238. அவற்றுள்,
செய்யு மென்னும் பெயரெஞ்சு கிளவிக்கு
மெய்யொடுங் கெடுமே யீற்றுமிசை யுகர
மவ்விட னறித லென்மனார் புலவர்.

பெயரெஞ்சு கிளவிக்கு மெய்யொடுங்கெடுமே என்னுமிடத்து உரையாசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் மூவரும் பெயரெஞ்சுகிளவிக்கு என்றும், தெய்வச்சிலையார் பெயரெஞ்சு கிளவிக்கும் என்றும் பிரித்தனர். நால்வரும் செய்யும் என்னும்

முற்றுவினையையும் ஈண்டுக் கொள்வதால், தெய்வச்சிலையார் கூற்றுச் சிறக்கும்.

239. செய்தே னெச்சத் திறந்த கால
மெய்திட னுடைத்தே வாராக் காலம்.

இச்சூத்திரவுரையில் **வாராக்காலம்** என்பதற்கு உரையாசிரியர் **நிகழ்காலமும், எதிர்காலமும்** என்றும், **சேனாவரையர் தெய்வச்சிலையார்** இருவரும் **எதிர்காலம்** என்றும் பொருள் கொண்டனர். நச்சினார்க்கினியர் **எதிர்காலம்** என்று பொருள் கொண்டு, உபலக்கணத்தால் நிகழ்காலத்தையும் அது குறிக்கின்றது என்றார். 'வாராக் காலத்து நிகழுங் காலத்தும்...' (சொல். 241) என்னுஞ் சூத்திரத்தை நோக்குமிடத்து, **வாராக்காலம்** என்பதற்குச் சேனாவரையர் தெய்வச்சிலையார் இவ்விருவர் கூறியது ஆசிரியர் தொல்காப்பியரது கருத்தென்பது பெறப்படும்.

242. மிக்கதன் மருங்கின் வினைச்சொற் சுட்டி
யப்பண்பு குறித்த வினைமுதற் கிளவி
செய்வ தில்வழி நிகழுங் காலத்து
மெய்பெறத் தோன்றும் பொருட்டா கும்மே.



இச்சூத்திரத்தில் '**செய்வதில்வழி**' என்பதற்கு உரையாசிரியர் **செய்கைமுடியாதநிலைமைக்கண்** என்றும், சேனாவரையரும், நச்சினார்க்கினியரும், தெய்வச்சிலையாரும் **சுட்டிச் சொல்லப்படுவதோர் வினைமுதலில்லாதவிடத்து** என்றும்

பொருள்கொண்டனர். சேனவரையர் 'செய்வது என்பது செய்கையை யென்பாரு முளர்' என்று பக்ஷாந்தரமாகவுங் கூறினர். 'செய்வது' என்னுஞ் சொல்லை வினைமுதல் என்னும் பொருளில் 'வினையே செய்வது செயப்படு பொருளே...' (சொல். 112) என்னுஞ் சூத்திரத்தில் ஆசிரியர் கூறினமையின், உரையாசிரியரை யொழிந்த ஏனையோர்கொண்ட பொருள் ஆசிரியர்க்கு உடன்பாடெனலாம்.

வினையியல் முற்றும்.

---

## 7. இடையியல்.

249. [1]இடையெனப் படுப பெயரொடும் வினையொடு
நடைபெற் றியலுந் தமக்கியல் பிலவே.

இடைச்சொல் என்று குறியிட்டதன் காரணம்:—சேனவரையர் 'மொழிக்கு முன்னும் பின்னும் வருமாயினும் பெரும்பான்மையும் இடைவருதலின் இடைச்சொல்லாயிற்று' என்றார். நச்சினார்க்கினியரும் அவ்வாறே கூறினர். ஆனல் இடைச்சொற்களை ஆராயுமிடத்து, பெரும்பான்மையும் அவை மொழிக்கு

இடையில் வருகின்றனவா என்ற ஐயம் எழுகின்றது. இடைச் சொற்களாவன : சாரியைகள், அன், ஆன் முதலிய வினைவிகுதி கள், ஐ, ஒடு, கு முதலிய வேற்றுமை யுருபுகள், அசைநிலைக் கிளவிகள், இசைநிறைக்கிளவிகள், தத்தங்குறிப்பாற் பொருள் செய்யுங்கிளவிகள், ஒப்பில்வழியாற் பொருள் செய்யுங் கிளவிகள் என்ற இவையேயாம். இவற்றுள் வினைவிகுதிகளும் வேற்றுமை யுருபுகளும் எப்பொழுதும் மொழியின் இறுதியிலும், அசை நிலைக்கிளவி இசைநிறைக்கிளவி என்ற இவ்விரண்டும் தனிமொழி போன்று மொழிக்கு முதலிலும் அல்லது இறுதியிலும், சாரியை கள் பெரும்பாலும் மொழிக்கு இடையிலும், தத்தங்குறிப்பாற் பொருள் செய்யுங் கிளவிகளும், ஒப்பில்வழியாற் பொருள் செய்யுங் கிளவிகளும் தனிமொழிபோன்று வாக்கியத்தினிடை யிலும் வருமாதலானும், சாரியைகளின் எண் மற்றெல்லாவற் றின் எண்ணினும் மிகுதியாயில்லாமையானும், இடைச்சொற்கள் யாவும் பெரும்பான்மையும் மொழிக்கு இடையில் வாரா. அங் ஙனமாயின், இடைச்சொல் என்பதன் பொருள் என்னையெனின், இடைச்சொல் என்பதேயாம். அஃதாவது பெயரினிடத்தும் வினை யினிடத்தும் அகத்தேனும் புறத்தேனும் தோன்றுவதென்பது. பெயர், வினை என்ற குறியானே அவற்றிற்கு இலக்கணங் கூறியது போலவே, இடைச்சொல் என்ற குறியானே இதற்கும் இலக் கணங்கூறினர் என்பதே ஏற்புடைத்து.

---

1. Cf. उपसर्गा विंशतिरर्थवाचकाः सहेतराभ्याम् (नामाख्याताभ्याम्) (ரு. ப்ரா. 12, 6.)

பெயரோடும் வினையோடு நடைபெற்றியலுந் தமக்கியல் பில என்பதன் பொருள்:—சேனாவரையர் 'ஈண்டுப் பெயரும் வினையு முணர்த்தும் பொருளைச் சார்ந்து நின்று அவற்றை வெளிப்படுப் பதல்லது, [1]தமக்கெனப் பொருளுடையவல்ல' என்று கூறுகின் றார். நச்சினார்க்கினியரும் அவ்வாறே கூறுகின்றனர். அஃதாவது இரண்டாம் வேற்றுமைப் பொருள்முதல், ஏழாம் வேற்றுமைப் பொருள்வரையில் ஆறுவேற்றுமைப் பொருள்களும் முடியப் பெறுந் தகுதி மரம் முதலிய பெயர்களுள்ளே இருத்தலால், 'மரத்தை' என்னுமிடத்து 'ஐ' யுருபு, மரம் செயப்படுபொருளே யன்றிக் கருவி முதலியன அன்று என்பதைக் காட்டும்; அவ் வாறே விகுதிகளும் பகுதிப்பொருளையே காட்டும் என்பது. அது வேற்றுமை யுருபுகளின் விஷயத்து ஒருவாறு பொருந் தினும் விகுதி விஷயத்தைக்குறித்து ஆராய்வோமாயின், பொருந்தாமை காணலாம்; தீமையன் என்னுமிடத்து, தீமை என்ற சொல் பண்பைக் குறிக்கும்; அன் என்பது பண்பியைக் குறிக்கும். தீமை என்பதிலேயே பண்பியைக்குறிக்கத் தகுதி இருக்கின்றது என்று கூறுவது பொருத்தமின்று. அம்முறையே நடந்தான் என்னுமிடத்தும் நட என்பது தொழிலையும், ஆன் என்பது அத்தொழிலைச் செய்பவனையுங் குறித்தலால், நட என்ற

---

1. இடைச்சொல்லெல்லாம் த்யோதகமே, வாசகம் அல்ல என் பது அவர் கருத்து. ஒவ்வொரு தாதுவுக்கும் எப்பொருளுமுண்டு என்ப தும், அவற்றின்முன் உபசருக்கம் வந்தால் அஃது அத்தாது எப்பொருளில் வந்துள்ளது என்பதைக் குறிக்கின்றதேயன்றி அதற்கு அது பொருளன்று என்பதும் வடமொழிவியாகரணத்தின் சித்தாந்தம். 'उपसर्गाणां द्योतकत्वमेव न तु वाचकत्वम्' என்பது காண்க. உதாரணமாக, गच्छति என்பதற்கு எல்லா வினைப்பொருளுமுண்டு. अवगच्छति என்னுமிடத்து अव என்ற

உபசருக்கம், இங்கு ஜ்ஞாதி என்பதற்கு அறிகிறேன் என்பது பொருள் என்பதைக் காட்டுகின்றது. அவ்வாறே வேற்றுமையுருபுகளும் த்யோதகமென்பது, சுவார்த்தம், திரவியம், இலிங்கம், சங்கியை, காரகம் இவ்வைந்தும் பிராதிபதிகனுக்குப் பொருள் என்ற கொள்கைகொண்ட சில வடமொழி இலக்கணவாசிரியர்களின் சித்தாந்தம். அதனை மனத்தில் வைத்துக்கொண்டுதான் சேனாவரையர் இங்கு இவ்வாறு கூறுகின்றனர். ஆனால் வடமொழியிலக்கணவாசிரியருள் பெரும்பான்மையோர் வேற்றுமையுருபுகளும், காலங்காட்டுவனவும் வாசகங்களே என்று கொண்டுள்ளார். உபசருக்கமும் வாசகமென்றே கொண்டனர் ப்ராதிசாக்கியநூலார். அவற்றைச் சொல்லாக ஒரு இலக்கணவாசிரியரொருவருங் கொண்டிலர்; ஆனால் தருக்கநூலார் சொல்லாகக் கொண்டனர்.

20



பகுதியே செய்பவனையுங் காட்டத் தகுதியுடைத்து என்பது பொருத்தமின்று. தினையன், நடந்தான் முதலிய இடங்களிற் போலவே மரத்தை முதலிய இடங்களிலும் மரம் என்பது மரமாகிய பொருளைக் குறிக்கும். ஐ முதலியன செயப்படுபொருள் கருவி முதலியவற்றில் ஒன்றும் என்பதைக் குறிக்கும் என்று கூறுவதே சால்புடைத்து. பெயர், வினை இவற்றின் புறத்தில் வரும் அந்தில், தஞ்சம் என்பனவற்றிற்குத் தனியே பொருளுள வென்பது வெளிப்படை.

இச்சூத்திரம் இடைச்சொல்லின் இலக்கணங் கூறுவதன்று: 'தமக்கியல்பிலவே' என்பதற்கு உரைகாரர்கள் கூறிய பொருளும்

பொருத்தமின்று: எனின், இச்சூத்திரத்தின் பொருள்தான் யாது என்ற ஐயந்தோன்றலாம். அதற்கு விடை :—'இடைச்சொற் கிளவியும்...' (சொல். 159) என்ற சூத்திரம் இடைச்சொல் என்பது வெளிப்படையாயும் குறிப்பாயும் பெயரொடும் வினையொடுஞ் சார்ந்துவரு மென்பதை உணர்த்த, இச்சூத்திரம் மரம், காளை, நட, போ, வேறு முதலிய பெயர்வினைகளைப்போல் இடைச்சொல் தனித்து நின்று பொருள் விளக்காது என்று உணர்த்துகின்றது என்னலாம். ஈண்டுப் பெயரொடும் வினையொடும் நடைபெற்றியலும் என்பது அநுவதிக்கப்பட்டதென்க.

'இடைச்சொற் கிளவியு முரிச்சொற் கிளவியு—மவற்றுவழி மருங்கிற் றோன்று மென்ப' (சொல். 159) என்ற சூத்திரத்தால் இடைச்சொல், உரிச்சொல் இரண்டும் பெயர், வினை இவற்றைச் சார்ந்துவரு மென்பது கூறப்பட்டமையின், அவற்றுள் ஒன்றற் கொன்று வேற்றுமை யாதெனின், இடைச்சொல் பெயர்வினைகளிடத்துச் சார்ந்த சொல்லாய் அப்பிரதானமாயிருக்குமென்றும், உரிச்சொல் அவற்றின் பகுதியாய்ப் பிரதானமாயிருக்குமென்றும் அறிக. உரிச்சொல்லைப்பற்றி விரிவாய் உரியியலிற் கூறப்படும்.

250. அவைதாம்,
புணரிய னிலையிடைப் பொருணிலைக் குதநவும்
வினைசெயன் மருங்கிற் காலமோடு வருநவும்
வேற்றுமைப் பொருள்வயி னுருபா குநவு
மசைநிலைக் கிளவி யாகி வருநவு



மிசைநிறைக் கிளவி யாகி வருநவுந்
தத்தங் குறிப்பிற் பொருள்செய் குநவு

மொப்பில் வழியாற் பொருள்செய் குநவுமென்
றப்பண் பினவே நவலுங் காலே.

வினைசெயன் மருங்கிற் காலமோடு வருநவும் என்பதற்கு உதாரணம் 'அன், ஆன்—அம், ஆம் என்னுந்தொடக்கத்தன' என்றார் உரையாசிரியர். "வினைச்சொல்லை முடிக்கு மிடத்துக் காலப்பொருளவாய் வருவனவும்" என்றும், "வினைச்சொல் ஒருசொல்லாயினும் முதனிலையும் இறுதிநிலையும் இடைச்சொல்லு மாகப் பிரித்துச் செய்கைசெய்து காட்டப்படுதலின் 'வினை செயன் மருங்கின்' என்றார். அவற்றுள் ஒருசாரன பாலுணர்த் தாமையானும், எல்லாங் காலமுணர்த்துதலானும் 'காலமொடு வருநவும்' என்றார்" என்றும் கூறினர் சேனாவரையர்.

'முதனிலை நின்று காரியத்தினைத் தோற்றுவிக்குமிடத்துக் காலங்காட்டும் இடைச்சொற்களோடே பாலும் இடமுங் காட் டும் இடைச்சொற்களால் வருவனவும்' என்றும், 'உண்டான் என்புழி உண்ணென்னும் முதனிலை காலங்காட்டுகின்ற டகரத் தினையும், பாலும் இடமுங்காட்டும் ஆனினையும் விரித்துநின்ற வாறு காண்க' என்றும் கூறினர் நச்சினார்க்கினியர். தெய்வச்சிலை யாரது கொள்கையும் இதுவேயாம்.

உரையாசிரியர் மதப்படி அன், ஆன், அள், ஆள் முதலிய வினைவிகுதிகளே இடைச்சொல் லாகும்[1]. சேனாவரையர் கொள்கையும் அவ்வாறே யென்பது 'டதற வென்பன எதிர்காலத் திற்குரிய எழுத்தன்மையால், பாலுணர்த்தும் இடைச்சொற்கு உறுப்பாய் வந்தன வெனவே படும்' (சொல். 202, சே.) என்ற வாக்கியத்தாலும், 'ஆகாரம் காலவெழுத்துப் பெறாது, உண்ணு,

தின்ற என வரும்' (சொல். 216 சே.) என்ற வாக்கியத்தாலும், 'அவற்றுள் ஒருசாரன பாலுணர்த்தாமையானும்[2], எல்லாங் கால முணர்த்துதலானும்' என்று இச்சூத்திரவுரையிற் கூறப்பட்ட வாக்கியத்தானும் விளங்குகின்றது. இவ்விருவரது கொள்கையை ஊன்றிநோக்கின் அன், ஆன் முதலிய வினைவிகுதிகள் கால

1. Cf. தொல். எழுத். குற். 76 இ.
2. Cf. முன்னிலை வியங்கோள் வினையெஞ்சு கிளவி (சொல். 222).



வெழுத்தை முன்னர்ப் பெற்றுவருமேயன்றித் தனியே வாரா வென்பதும், இவர்கள் காலத்தில் காலவெழுத்துக்கள் இடைச் சொல்லாகக் கருதப்படவில்லை என்பதும், அன், ஆன் முதலியனவே இடைச்சொல்லாகக் கருதப்பட்டன என்பதும் பெறப்படும். மேலும் 'காலமொடு' என்னுமிடத்து உடனிகழ்ச்சியையுணர்த்தும் ஒடு என்னு முருபு இவர்கள் கூற்றிற்குப் பொருந்தும்.

நச்சினார்க்கினியர் தெய்வச்சிலையார் கொள்கையை நோக்கின் 'காலமொடு வருநவும்' என்பதற்கு—காலங்காட்டும் இடைச் சொற்களோடே (பாலும் இடமுங் காட்டும் இடைச்சொற்களாய்) வருவனவும் என்று பொருள்கொள்ளவேண்டி யிருக்கும். 'வருநவும்' என்பதற்கு அவைதாம் என்பது எழுவாயாகையால் அவ்வாறு பொருள் கொள்ளுவது பொருந்துமா? ஆயினும் இவ் விருவரும் அவ்வாறு கூறுவதற்குக் காரணம் அவர்கள் காலத்தில் காலவெழுத்துக்கள் தனிமையாய் இடைச்சொல்லாக வழங்கப் பட்டன வாதல்வேண்டும்.

'அம்முடிபுணர்த்தாமைக்குக்காரணம்' 'புணரியனிலையிடை யுணரத் தோன்று' (எழுத். குற். 76) என்புழிச் சொல்லப்பட்டது' எனச் சேனாவரையர் கூறினர். அங்கு அவரே கூறினரோ? அன்றி 'மெய்யொருங்கியலும்' என்றதனான் உண்டான் என்புழிச் செய்கையும், காலமும் பாலும் தோற்றிநிற்குமாறு பிரித்துப்புணர்க்கப்படாமை கொள்க' என்று உரையாசிரியர் கூறியதைக் குறித்தனரோ? முன்னர்க்கூறியதாயின் சேனாவரையர் எழுத்ததிகாரத்துக்கும் உரை எழுதினர் என்பது பெறப்படும்.

பி-ம்.—சேனாவரையத்தில் 'வினைச்சொல் ஒரு சொல்லாயினும், முதனிலையும் இறுதிநிலையும் இடைச்சொல்லுமாகப் பிரித்துச் செய்கை செய்து காட்டப்படுதலின்' என்னுமிடத்து '**முதனிலையும் இறுதிநிலையும் இடைச்சொல்லுமாக**' என்பதற்குப் பிரதியாக '**முதனிலையும் இறுதிநிலையுமாக**' என்றேனும் '**முதனிலையும் இடைச்சொல்லுமாக**' என்றேனும் இருத்தல்வேண்டும்.

**வேற்றுமைப் பொருள்வயி னுருபாகுந.**—இதன் உரைகூறுமிடத்துச் சேனாவரையர் 'அனையையாகன் மாறே' (புறநா. 4) என்றவிடத்து மாறு மூன்றும்வேற்றுமைக்கண் வந்ததென்று



கூறினர். புறநானூற்றுரையாசிரியர் 'அத்தன்மையை யாதலால்' என்று அதற்குப் பொருள் கூறினர். நச்சினார்க்கினியர் 'மாறென்

னும் இடைச்சொல் வினையை அடுத்துக் காரணப்பொருள் உணர்த்தி நிற்றலின் மூன்றும்வேற்றுமைப்பொருள் உணர்த்தி நின்ற தல்லாமை உணர்க' என்று சேனவரையரை மறுத்தனர்.

மூன்றும் வேற்றுமைப்பொருள் கூறுமிடத்து 'இன்னா னேது...' (சொல். 74) என்ற வாக்கியத்தால் காரணப்பொருளும் மூன்றும் வேற்றுமைப் பொருளாமென்று கூறியதனுனும், ஆகல் என்ற தொழிற் பெயரையடுத்துக் காரணப்பொருளேக்கொண்டே மாறு வந்திருத்தலானும் நச்சினர்க்கினியர் மறுப்புப் பொருந்துமா?

அவ்வாறே 'இயல்புளிக் கோலோச்சு மன்னவன்' (குறள். 545) என்னுமிடத்து உளி என்பது மூன்றும்வேற்றுமைப்பொருளில் வந்தது என்றுர் சேனவரையர். பரிமேலழகரும் 'உளியென்பது மூன்றுவதன் பொருள்படவேதோரிடைச்சொல்' எனவே கூறினர். நச்சினர்க்கினியர் 'இயல்புளிக் கோலோச்சு மன்னவன்' என்புழி முறைமையிலே செங்கோல் நடாத்தும் என ஏழனுருபு விரிதலானும், உளியென்பது மூன்றனுருபின் பொருள்படவந்த தன்று' என்று மறுத்தனர். ஏழனுருபு விரிந்ததாகக் கொள்ளினும், உளி என்பதை இடைச்சொல் லென்றே கொள்ளக் குறையென்?

சேனவரையத்தில் 'சார்ந்த மொழியை வேறுபடுத்து நிற்றலின் அசைநிலைச்சொல்லாயின வென்பாருமுளர்' என்ற வாக்கியம் உளது. இங்கு வேறுபடுத்து நிற்றலின் என்பதன் பொருள் 'இடைச்சொல் லெல்லாம் வேற்றுமைச் சொல்லே' (சொல். 455) என்னுஞ் சூத்திரவுரையால் நன்கு விளங்கும்.

ஒப்பில்வழியாற் பொருள் செய்குந. 'ஒக்கு மென்னுஞ் சொல் லன்றே ஒப்புமை யுணர்த்துவது; அச்சொல் ஆண்டு இன்மை யான் ஒப்புமை தோன்றுமையான் ஒப்பில்வழியாலென்றுர்'

என்று சேனாவரையர் கூறினர். இதன் உட்கருத்தை நச்சினார்க்கினியர் "நாடக வழக்கினுன் உய்த்துணரினன்றி உலகியல் வழக்கினுற் காட்டப்படுவதோர் ஒப்பின்றி நின்ற ஒப்புமைப் பொருண்மை உணர்த்திவரும் உவமவுருபுகளும்" என்று விரித்துக்கூறியுள்ளார். 'ஒக்குமென்னுஞ் சொல்லை ஒப்பென்று சொன்பாருமுளர்' என்று பகஷாந்தரமும் கூறினர் சேனாவரையர்."



ஒப்பில் வழியாற் பொருள் செய்குநவும் என்பது குறிப்பினுல் வருதலின்றிப் பொருத்தமில்லாத விடத்துப் பொருள் உணர்த்துவனவும்' என்று முன்னரும், 'ஒப்பில்வழி என்பதனை ஒருசொல்லோடு பொருத்தமின்றித் தனிவந்தழி எனவும் பொருள் உரைப்பினு மமையும்' என்று பின்னரும் இச்சூத்திரவுரையிற் கூறி 'கொன்முனையிரவூர்போல' முதலிய விடங்களில் கொன் என்பது ஒப்பில் வழியாற் பொருள்செய்தது என்று 'அச்சம் பயமிலி...' (சொல். 254) என்ற சூத்திரத்துரையிற் கூறினர் தெய்வச்சிலையார்.

253. விழைவே கால மொழியிசைக் கிளவியென்
றம்மூன் றென்ப தில்லைச் சொல்லே.

இச்சூத்திர வுரையினிறுதியில் இ. நம.—இல். 'யாதானும் ஒரு சொல் ஒழிவுபடவரின் அஃது ஒழியிசை எனப்படும் எ-று.' என்ற வாக்கியம் உளது. 'கழிவே யாக்கம்...' (சொல். 252) என்ற முன் சூத்திரத்தினது உரையினிறுதியில் 'இனி இற்

றென்றனும்...ஒரு சொல்லை ஒழிவுபட வந்தமையின் ஒழியிசை என்பது' என்று உரையாசிரியர் கூறியிருத்தலால் 'யாதானும்...' என்ற வாக்கியம் படித்தோரால் ஏட்டிற் சேர்க்கப்பட்டிருத்தல் வேண்டும்.

255. எச்சஞ் சிறப்பே யைய மெதிர்மறை
முற்றே யெண்ணே தெரிநிலை யாக்கமென்
றப்பா லெட்டே யும்மைச் சொல்லே.

உரையாசிரியர், நச்சினர்க்கினியர் இருவரும் 'நெடியனும் வலியனும் ஆயினன்' என்பதையும், தெய்வச்சிலையார் 'வாழும் வாழ்வு, உண்ணுமூண்' என்பதையும், ஆக்கவும்மைக்கு உதாரணங் காட்டினர். தெய்வச்சிலையார் ஏனையோர்கொள்கையை மறுத்தனர். அன்றியும், செய்யும் என்ற வினைமுற்றிலுள்ள உம்மையையும் முற்றும்மை என்றனர். இஃது ஆராயத்தக்கது.

260. விழைவின் றில்லை தன்னிடத் தியலும்.

இச்சூத்திர வுரையில் உரையாசிரியர் 'விழைவின்றில்லை தன்மையிடத்திற்கே ஆவது...எனவே, மற்றைய விரண்டும் எல்லாவிடத்துக்கும் உரிய என்றவாறும்' என்று கூறினர். நச்சி



னர்க்கினியரும் அவ்வாறே கூறினர். சேனவரையர் 'இடம் வரையறுத்தோதாமையின், விழைவின்றில்லை தன்மைக்கண் வருதலும் மேலே பெறப்பட்டதனைப் பின்னுங்கூறினர், ஏனையிடத்து வாராதென்று நியமித்தற்கென்பது' என்று கூறினர். சேனவரையர் கூறும் பொருள் வடமொழி நூன் முறைக்குப் பொருந்தியது.

263. எற்றென் கிளவி யிறந்த பொருட்டே.

பா-ம்.—இ. நம.—இல் 'இஃது இரக்கப்பொருள் மேற்று என்பது' என்ற வாக்கியம் உளது. இதனைப்பற்றிச் சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் ஒன்றுங் கூறாமையால், இஃது இங்கு வேறொருவராற் சேர்க்கப்பட்டிருத்தல் வேண்டுமென்று தோன்றுகின்றது.

269. எல்லே யிலக்கம்.

பா-ம்.—இ. எல்லே விளக்கம். சே. ந. தே.—எல்லே யிலக்கம். சே. சை.—(கீ. கு.) எல்லே யிரக்கம்.

270. இயற்பெயர் முன்ன ராரைக் கிளவி
பலர்க்குரி யெழுத்தின் வினையொடு முடிமே.

பொருள்: உ.—இது, ஆர் என்னும் இடைச்சொல் பெயர் முன் அல்லது வாரா என்பது.

சே.—இயற்பெயர்முன்னர் வரும் ஆரென்னு மிடைச்சொல் பலரறிசொல்லான் முடியும் எ-று.

ந.—இருதிணைக்கும் இயலும் பெயர்க்கும் அஃறிணை இருபாற்கும் இயலும் பெயர்க்கும் முன்னர் வரும் ஆர் என்னும் இடைச்சொல் ரஃகான் ஒற்றினை ஈறாக வுடைய வினைச்சொல்லான் முடியும்.

தே.—இயற்பெயர் முன்னர் வரும் ஆர் என்னும் இடைச்சொல் ஒருமைப் பொருண்மேல் வரினும் பலர்க்குரித்தாகிய எழுத்தினையுடைய வினையொடு முற்றுப்பெறும் எ-று.

இச்சூத்திரத்துக்கு உரையாசிரியர் கொள்ளும் பொருள்

வேறு; சேனாவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார் இம்
மூவருங்கொள்ளும் பொருள் வேறு. உரையாசிரியர்மதப்படி
இச்சூத்திரத்திற்கு அந்வயம்:—வினையோடு முடியும் பலர்க்குரி



யெழுத்தின் ஆரைக்கிளவி இயற்பெயர் முன்னரே ஆம் என்பது. இதன்பொருள்:—வினையோடு முடியும் அர், ஆர், ப் என்ற பலர்க் குரியெழுத்துக்களுள், ஆர் என்னுங் கிளவி இயற்பெயர் முன்னர் வருமேயன்றிப் பெயரின்முதனிலை முன்னர் வாரா என்பது. அவர், (சொல். 162), அரசர் என்னுமிடத்து அ, அரசு என்ற முதனிலைமுன்னர் அர் என்னுங் கிளவி வருவதுபோல, ஆர் என்னுங் கிளவி வாராது. அரசன் அரசி என்றாற்போன்ற பெயரின்முன்னரே வரும். ஆதலின் வினையோடுமுடியும் பலர்க் குரியெழுத்தின் ஆரைக்கிளவி என்பது உத்தேசியம்; இயற்பெயர் முன்னர் ஆம் என்பது விதேயம். இவ்வாறாயின், ஆரைக் கிளவிகொண்ட பெயரின் முன்னர்ப் பன்மைவிகுதி கொண்ட வினைவருவது எற்றாற் பெற்றாமெனின், 'வினையிற் றோன்றும் பாலறி கிளவியும்—பெயரிற் றோன்றும் பாலறி கிளவியும்—மயங்கல் கூடா தம்மர பினவே (சொல். 11) என்னுஞ் சூத்திரத்தாலென்க.

சேனாவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார் இம்மூவருங் கூறும் உரையின்படி, இயற்பெயர் முன்னர்வரும் ஆர் என்

னும் இடைச்சொல் உத்தேசியமாகும்; பலரறிசொல்லால்முடிதல் விதேயமாகும். இயற்பெயர்முன்னர் ஆர் என்னு மிடைச்சொல் வருமென்று முன்னரே ஆசிரியர் விதித்திருப்பின், இங்கு அதனை உத்தேசியமாகக் கொள்ளலாம். அவ்வாறு சூத்திரத்தில் எங்கும் விதிக்கப்பட்டதாகத் தெரியவில்லை. மேலும், ஆரைக்கிளவி பன்மையைக் குறிக்கும் இடைச்சொல்லாதலின் அதன் முன்னர்ப் பன்மை வினையே வரும் என்பது 'வினையிற்றோன்றும் பாலறி கிளவியும்...'(சொல் 11) என்னுஞ் சூத்திரத்தாற் பெறப்பட்டது; இச்சூத்திரம் வேண்டா. 'ஒருமைப்பெயர் முன்னர் ஒருமை சிதையாமல் ஆரைக்கிளவிவந்து பலரறி சொல்லான் முடிதலின் ஒருவரைக்கூறும் பன்மைக்கிளவியின் வேறுதலறிக' என்று சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் கூறுகின்றனர். அவ்வாறாயின், ஆரைக்கிளவி எதனைக் காட்டுகின்றது? ஒருவரைக்கூறும் பன்மைக்கிளவி 'யாம், நீயிர், இவர்' இவையே, அரசனார் முதலிய வல்ல என்று கொள்வதற்கு யாது பிரமாணம்? 'ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்...' (சொல். 27) என்னுஞ் சூத்திர வுரையில் 'தாம்வந்தார்தொண்டனார்' எனப் பன்மைக்கிளவி இழித்தற்கண்ணும் வந்ததாலெனின்'' என்று சேனாவரையர் கூறு



கின்றார். ஆங்குத் தொண்டனார் என்பது பன்மைக்கிளவியா, ஒருமைக் கிளவியா? உரையாசிரியர் கூறிய பொருள் பொருத்த மாயிருப்பினும், சூத்திரத்தில் முற்றுப்போல்தோன்றும் 'முடிமே' என்ற சொல்லைப் பெயரெச்சமாகவும் இயற்பெயர் என்பதற்குப் 'பொருளுக்கு இயலும்பெயர்' என்பது பொருளாகவுங் கொள்ள வேண்டியுள்ளன.

'மேலும் நம்பியார் வந்தார், நங்கையார் வந்தார் எனச் சிறு

பான்மை உயர்திணைப்பெயர் முன்னர் வருதல் ஒன்றெனமுடித்த லென்பதனாற் கொள்க' என்று கூறுகின்றனர் சேனாவரையர். உரையாசிரியர் கொள்கைப்படி சூத்திரத்தானே அவை பெறப் படுதலின், அவற்றை ஒன்றென முடித்தலாற் கொள்ளவேண்டுவ தின்று.

தே.—'அசைநிலைக் கிளவி...' என்ற மேற்சூத்திரத்தையும் இதனுடன் சேர்த்து ஒருசூத்திரமாக்கினர் தெய்வச்சிலையார். அவ்வாறுகூறின் வாக்கியபேதம் வருமாதலின், அது பொருந் தாது.

272. ஏயுங் குரையு மிசைநிறை யசைநிலை
யாயிரண் டாகு மியற்கைய வென்ப.

இச்சூத்திரவுரையில் 'ஏ—இசைநிறை, குரை—அசைநிலை என நிரனிறையாகக் கொள்க' என்றார் உரையாசிரியர். இதனை 'மற்று (சொல். 262), அந்தில் (சொல். 267) என்பன போலப் பொருள்வகையான் வேறுபடுவனவற்றை இரண்டாமென்ப தல்லது, சொல்வகையான் இரண்டாகியசொல்லை இரண்டா மென்றதனான் ஓர் பயனின்மையின், அவர்க்கது கருத்தன்றென்க' எனச் சேனாவரையர் மறுத்து 'ஏயென்னு மிடைச்சொல்லும் குரையென்னுமிடைச் சொல்லும் இசைநிறையும் அசைநிலையு மென ஓரொன்றிரண்டாம் எ-று.' எனப் பொருள்கூறினர். நச்சினார்க்கினியரும் தெய்வச்சிலையாரும் சேனாவரையர்போலவே கூறினர்.

பா-ம். இ. தே.—'ஏவுங் குரையும்.' சே. ந.—'ஏயுங் குரையும' ஏயு மென்பதே பொருந்தும்.

280. ஆக வாக லென்ப தென்னு
மாவயின் மூன்றும் பிரிவி லசைநிலை.

இச்சூத்திரத்திற்கு உரையாசிரியரும், சேனாவரையரும், தெய்வச்சிலையாரும் ஆக, ஆகல், என்பது என்னும் மூன்றிடைச் சொல்லும் அசைநிலையாங்கால் இரட்டித்து நிற்கும் என்று பொருள் கூறுகின்றனர். நச்சினார்க்கினியர் 'ஆக, ஆகல், என்பது என்று சொல்லப்படுகின்ற அவ்விடத்து மூன்றும் தாஞ் சார்ந்த சொற்களின் பொருள்களைப் பிரிதலின்றி யுணர்த்தும் அசைநிலையாம்' என்று பொருள் கூறி, 'இவை தாஞ்சார்ந்த சொல்லை அசைத்தே நிற்குமென்றலிற் பிரிவிலசைநிலை என்றார். இங்ஙனம் நில்லாது வழக்கின்கண் ஆக ஆக என அடுக்கிவந்து உடம்படாமையும் ஆதாரமின்மையுமாகிய பொருள் தந்து நிற்குமென்றல் அசைநிலைக்கு ஆகாமையின் அவ்வாறு கூறுதல் பொருளன்மை உணர்க' என்று சேனாவரையரை மறுத்தனர். பிரிவிலசைநிலை என்னுஞ் சொல்லுக்கு நச்சினார்க்கினியர் கூறியுள்ள பொருள் பொருந்துமாவென்பது ஆராயத்தக்கது.

281. ஈரள பிசைக்கு மிறுதியி லுயிரே
யாயிய னிலையுங் காலத் தானு
மளபெடை நிலையுங் காலத் தானு
மளபெடை யின்றித் தான்வருங் காலையு
முளவென மொழிப பொருள்வேறு படுதல்
குறிப்பி னிசையா னெறிப்படத் தோன்றும்.

பொருள். உ.—இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், ஔ என்னும் இடைச்சொல் மூன்றுவகையாற் பொருள்படும் என்பது உணர்த்துதல் நுதலிற்று. வரலாறு:—ஆயியல் நிலையுங்காலத்தால் வருதலாவது, மேற்கூறியமூன்றும்போல் வருதல். ஒன்று உரைக்குங்கால் இரட்டித்து, 'ஔ, ஔ' என வரும். அளபெடை நிலையுங்காலத்தால் வந்து அது பொருள்படுமாறு: 'ஔஉ' என

வரும். யாதானும் ஒரு துன்புறவின்கண் அளபெடையின்றித் தான்வருமாறு: 'ஔ' என ஒரு குறிப்புப்பொருட்கண் வருவது எ-று. இம்மூன்று பொருட்பகுதியும் குறிப்பினுன் வேறுபடுத்து அறிந்துகொள்க.

சே.—இரண்டுமாத்திரையை உடைத்தாய மொழிக்கீருகா தெனப்பட்ட ஔகாரம், பிரிவிலசைநிலையென மேற்கூறப்பட்



டனபோல இரட்டித்துநிற்குமிடத்தும், இரட்டியாது அளபெடையாய் நிற்குமிடத்தும், அளபெடையின்றித் தான்வருமிடத்தும், பொருள்வேறுபடுதலுள; அப்பொருள்வேறுபாடு சொல்வான் குறிப்பிற்குத்தகு மோசை வேறுபாட்டாற் புலப்படும் எ-று.

ந.—இரண்டுமாத்திரையை இசைக்கும் 'உயிர் ஔ வெஞ்சிய விறுதியாகும்' (எழுத். 69) என்றதனுன் மொழிக்கு ஈறுகாதென்ற ஔகாரம் 'கவவோ டியையின் ஔவு மாகும்'' (எழுத். 70) என்ற இயல்பின் கண்ணே கௌ, வௌ என மொழிக்கு ஈறுய்நிற்குங்காலத்துக் கண்ணும், அவை அளபெடுத்து நிற்குங் காலத்தினும் அவை அளபெடாது தானேவந்து நிற்குங்காலத்தினும் பொருள்வேறுபடுதல் உள என்று கூறுவர் ஆசிரியர். அப்பொருள் வேறுபாடுதான் சொல்லுவான் குறிப்பினுன் உளதாம் ஓசைவேறுபாட்டான் வழிப்படப்புலப்படும் எ-று.

தே.—இரண்டு மாத்திரையாகி யொலிக்கும் உயிர்களுள்

இறுதியாகிய ஔகாரமல்லாத உயிர்கள் மேற்கூறியவாறு போல இரட்டித்து வருங்காலத்திலும், அளபெடைபெற்றுவருங் காலத்திலும், தனிவருங்காலத்திலும் பொருள் வேறுபடுதல் உள என்று சொல்லுவர் ஆசிரியர். அவை ஒரு பொருள் உணர்த்தும்வழி, ஓசையானும், குறிப்பானும் பொருள் உணர்த்தும் எ-று. இவர் கொள்கைப்படி ஈரளபிசைக்கும் இறுதியிலுயி ரென்ற தொடர் நெட்டுயிர்களுள் இறுதி எழுத்தாக நிற்கும் ஔகாரமல்லாத மற்றை 'ஆ' முதலிய ஆறு எழுத்துக்களென்று பொருள்படும்.

உரையாசிரியர், சேனாவரையர், இவ்விருவர் மதமும் ஒன்றே. நச்சினார்க்கினியர் மதம் வேறு. தெய்வச்சிலையார் மதம் வேறு. நச்சினார்க்கினியர் கூறும் 'கௌ'வும், 'வௌ'வும் இடைச்சொல்லா? 'கௌ' இடைச்சொல்லாயின் 'ஔகார விறுதிப் பெயர்நிலை முன்னர்...' (எழுத். உயிர். 93) என்னுஞ் சூத்திரத்தில் 'கௌ' என்பதைப் பெயராகக்கொண்டு கௌவுக் கடிது முதலிய உதாரணங்கள் கொடுத்தது எவ்வாறுபொருந்தும்? அளபெடைநிலையும் என்பதற்கும் தான்வரும் என்பதற்கும் எழுவாய், ஈரளபிசைக்கு மிறுதியிலுயிரா? ஆயியனிலையுங்காலத் துள்ள ஈரளபிசைக்கு மிறுதியிலுயிரா? ஆயியனிலையுங்காலத்



துள்ள ஈரளபிசைக்கு மிறுதியிலுயிராயின், சூத்திரப்போக்குக்கு அது பொருந்துமா?

283. எச்ச வும்மையு மெதிர்மறை யும்மையுங்

தத்தமுண் மயங்கு முடனிலை யிலவே.

பொருள். உ.—எச்சவும்மையும் எதிர்மறை யும்மையும் தத்த முள் மயங்கும் உடனிலை யிலவே என்பது தம்முள்மயங்கி உடனிற்குந் தன்மையில எ-று.

சே.—எச்சவும்மைநின்றவழி எஞ்சுபொருட் கிளவியாம் எதிர்மறையும்மைத்தொடர் வந்து தம்முண்மயங்குதலில எ-று. சாத்தனும் வந்தான், கொற்றனும் வாலுரியன் எனின் இயை யாமை கண்டுகொள்க.

ந.—எச்சப்பொருண்மையினையுடைய உம்மையும், அதனை முடிக்கவரும் எதிர்மறைப்பொருண்மையினையுடைய உம்மையும் தொடராய்வந்து தம்முள் மயங்கும்; அங்ஙனம் மயங்கிற்றேனும் தன்வினையொன்றிய முடிபு கொள்ளா எ-று. சாத்தனும் வந்தான், இனிக்கொற்றனும் வரினும் வரும் என்புழிச் சாத்தனுங் கொற் றனும் என்னும் எச்சவும்மைகள் வரினுமென்னும் எதிர்மறை யும்மையோடு தொடர்ந்து நின்று ஒருவினைகொள்ளாது இறப் பும் எதிர்வும்பற்றிவரும் வேறுவினை கொண்டவாறு காண்க.

தெ.—எச்சவும்மையும் எதிர்மறையும்மையும் தத்தமுள் மயங்கும் உடனிலை இல எ-று.

உரையாசிரியர், சேனாவரையர், தெய்வச்சிலையார் இம்மூவர் மதமும் ஒன்றே. உரையாசிரியர் கொடுத்துள்ள உதாரணத்திற் சாத்தனும் வந்தான், கொற்றனும் வரலுமுரியன் என்னுமிடத்து வரலுமுரியன் என்பதற்குப் பிரதியாக வரலுரியன் என்றிருப்பின் நலம்.

நச்சினார்க்கினியர் கூறும்பொருள், இரண்டு எச்சவும்மையும்

ஓர் எதிர்மறையும்மையும் ஒரு தொடரில் வந்தாற்றான் பொருந்தும். சூத்திரப்போக்கை நோக்குமிடத்து அவ்வாறு கொள்ள வேண்டுவது அவசியமின்று. இக்காலத்தில் உலகவழக்கும் 'சாத்தனும் வந்தான், இனிக்கொற்றன் வரினும் வரும்' என்றே உளது.



284. எஞ்சுபொருட் கிளவி செஞ்சொ லாயிற்
பிற்படக் கிளவார் முற்படக் கிளத்தல்.

இச்சூத்திரவுரையில் உரையாசிரியர் எஞ்சுபொருட்கிளவி, செஞ்சொல் என்ற சொற்களுக்கு முறையே எச்சவும்மை செவ்வெண் என்றும், ஏனையோர் எச்சவும்மையாற்றழுவப்படும் எஞ்சுபொருட்கிளவி, உம்மையில்சொல் என்றும் பொருள்கொண்டனர். உரையாசிரியர்கொள்கைப்படி எஞ்சுபொருட்கிளவி என்பதற்கு எஞ்சுபொருட்கிளவியை யீற்றிற்கொண்டசொல் என்பது பொருளாம். உதாரணம் நால்வர்க்கும் ஒன்றேனும், பொருள்கூறும் முறையில் மாறுபட்டனர்.

288. எண்ணே கார மிடையிட்டுக் கொளினு
மெண்ணுக்குறித் தியலு மென்மனார் புலவர்.

இச்சூத்திரத்தில் 'எண்ணே கார மிடையிட்டுக் கொளினும்' என்பதற்கு உரையாசிரியர் 'எண்ணைக்குறிக்கும் மற்றைச் சொல்லின் இடையில் ஏகாரம் வரினும்' என்றும், சேனாவரையரும் தெய்வச்சிலையாரும் 'செவ்வெண்ணினிடையில் ஏகாரம் வரினும்'

என்றும், நச்சினார்க்கினியர் 'எண்ணைக்குறிக்கும் மற்ற சொல்லின் இடையில் ஏகாரமேனும் மற்றை எண்ணைக்குறிக்குஞ் சொல்லேனும் வரினும்' என்றும் பொருளுரைத்தனர். நச்சினார்க்கினியர் ஆங்குள்ள ஏகாரம் என்பதனை உபலக்ஷணமாகக் கொண்டனர்.

289. உம்மை தொக்க வெனாவென் கிளவியு
மாவீ றாகிய வென்றென் கிளவியு
மாயிரு கிளவியு மெண்ணுவழிப் பட்டன.

பொருள். சே.—உம்மை தொக்குநின்ற எனாவென்னுமிடைச்சொல்லும் என்றாவென்னுமிடைச் சொல்லும் இரண்டும் எண்ணுமிடத்து வரும் எ-று. உ-ம். நிலனெனா நீரெனா எனவும், நிலனென்றா நீரென்றா எனவும் வரும். (உம்மைதொக்க எனாவென் கிளவி யெனவே எனாவுமென அச்சொல் உம்மோடு வருதலு முடைத்தென்பதாம். உம்மோடு வந்தவழி அவ்வெண்ணும்மை எண்ணுளடங்கும்.)



ந.—முன்னர் எண்ணும்மை அடுக்கிநின்ற எனா என்னும் இடைச்சொல்லும், முன்னர் எண்ணும்மை அடுக்கிநின்ற ஆகாரத்தை ஈறாகவுடைய என்றா என்னும் இடைச்சொல்லும், அவ்விரண்டுசொல்லும் எண்ணுமிடத்தே சிறந்துவரும் எ-று. உ-ம். 'ஒப்பு முருவும் வெறுப்பு மென்றா' என்னுஞ் சூத்திரம் உம்மை தொக்க என்றா. உம்மை தொக்க எனா வந்தவழிக் காண்க.

தே.—உம்மை தொக்க எனவின் திரிபாகிய எனா என்னுஞ் சொல்லும், ஆவீறாகிய என்றா என்னுஞ் சொல்லும் எண்ணின்

கட்பட்டன என்று. எனவும் என்பது என எனவும், என்றும் என்பது என்று எனவும் வரும்.

சேனவரையர் தெய்வச்சிலையார் இருவரும் தொக்க என்பதற்குத் தொக்குநின்ற என்றும், நச்சினார்க்கினியர் அடுக்கிநின்ற என்றும் பொருளுரைத்தனர். 'உம்மை தொக்க என்பதற்கு நிலனெனவும் என ஈற்றுநின்ற உம்மைதொக்கு நிலனென என்றல் வழக்கமின்மையானும், எனவும் என்றவும் எண்ணிடைச் சொல்லாதல் மேலிற் சூத்திரத்தாற் பெறப்படுதலானும் இதுவே ஆசிரியர் கருத்து' என்ற சொற்றொடரால் நச்சினார்க்கினியர் சேனவரையர்மதத்தை மறுத்தனர்.

290. அவற்றின் வரூஉ மெண்ணி னிறுதியும்
பெயர்க்குறி மரபிற் செவ்வே ணிறுதியு
மேயி னாகிய வெண்ணி னிறுதியும்
யாவயின் வரினுந் தொகையின் றியலா.

இ. ம.—இல் 'சாத்தன் கொற்றன், பூதம் என மூவரும் வந்தார்' என்பது தொடங்கி, 'கண்டுகொள்க' என்பது இறுதியாக இருப்பதனை ஒரே தொடர்ச்சியாகப் படிக்க.

291. உம்மை யெண்ணி னுருபுதொகல் வரையார்.

பொருள்.—'உம்மையெண்ணின்கண் உருபு தொகுதல் வரையப்படாது' என்று சேனவரையரும் நச்சினார்க்கினியரும், 'உம்மையான் எண்ணப்பட்ட பொருளின்கண் வரும் உருபாகிய உம்மை ஓரிடத்துத் தொகுதலும் நீக்கார்' என்று தெய்வச்சிலையாரும் இச்சூத்திரத்திற்குப் பொருள் கூறினர். சந்தருப்பத்தை

நோக்கின் தெய்வச்சிலையார் கூறுவது பொருத்தமாயிருக்கலா மெனத் தோற்றுகின்றது.

இச்சூத்திரம் உருபுதொகையென்று கூறவேண்டுமென விதிக்கின்றதென்றனர் உரையாசிரியர். அவரைச் சேனாவரையர் 'உம்மைத் தொகையாதலின் ஒருசொன்னடைத்தாய் உருபேற்றாலும் பயனிலை கொண்டாலும் நிற்கும்: அத்தொகையிடை உருபின்மை சிற்றறிவினார்க்கும் புலனாம்' என்று மறுத்தனர்.

பா-ம். இ. நம.—இல் இச்சூத்திரத்தினடியில் "'யானையும் தேரும் ஆளும் எறிந்தார்' என்பது, யானையையும் தேரையும் ஆளையும் எறிந்தார் எ-று. உம்மையெண்ணின்கண் உருபு தொக்கவாறாயிற்று" என்ற வாக்கியந்தான் உளது. இவ்வாக்கியத்துக்கு மேல் 'யானை தேர் குதிரை காலாளெறிந்தார் என உம்மையும் உருபும் உடன்றொக்கவழி உம்மைத்தொகையென்னாது உருபுதொகை யென்க' என்ற வாக்கியமும் உரையாசிரியரால் கூறப்பட்டிருத்தல் வேண்டுமென்பது, இதன்மேல், சேனாவரையர் கூறும் மறுப்பாலும், 'உம்மையும் உருபுந் தொக்கவழியும் உருபு தொகையெனப்படுமென வழூவமைத்தது', 'இரண்டு தொக்கனவற்றை என்ன தொகையென்று கோடுமோவெனின்,...அச்சிறப்பு நோக்கி உருபுதொகையென்றே கோடும்' என்ற நச்சினார்க்கினியர் வாக்கியங்களாலும் நன்கு புலப்படும்.

292. உம்முந் தாகு மிடனுமா ருண்டே.

இச்சூத்திரம் எண்ணும்மையைப்பற்றிக் கூறுஞ் சூத்திரத்திற்குப் பின்னரிருப்பினும், ஏற்புழிக்கோடலாற் செய்யுமென் வாய்பாட்டு நிகழ்கால வினைமுற்றினதும்[1] பெயரெச்சத்தினதும் விகுதியாகிய உம்மையைக் கொள்ளல்வேண்டுமென்பது 'வினை செய் மருங்கிற் காலமொடு வந்தது' என்ற உரையாசிரியர் வாக்கியத்தாலும் அவர் கூறும் 'நீர்க்கோழி கூஉப்பெயர்க்குந்து'[2] என்ற உதாரணத்தாலும் விளங்கும்.

முற்றுவினைகொண்ட அவ்வுதாரணத்தைச் சேனாவரையரும் நச்சினார்க்கினியருங் காட்டுதலின் 'இடனுமாருண்டே யென்றது, இத்திரிபு பெயரெச்சத்திற் கேற்ற வழியென்பது கருதிப்போலும்'

1. Cf. தொல். சொல். 227. 2. புறநா. 395, 11.



என்ற சேனாவரையத்துக் காணப்படும் வாக்கியமும், 'இடனுமாருண்டே என்றதனான் இத்திரிபு பெயரெச்சத்திற்கே கொள்க' என்ற நச்சினார்க்கினியத்துக் காணப்படும் வாக்கியமும் நன்னூல்[1] படித்தோரால் சேர்க்கப்பட்டிருத்தல்வேண்டும்.

பி-ம். இ. நம.—இல் 'எட்டுவகைப்பட்ட உம்மையும்' என்னுமிடத்து 'உம்மையும்' என்பது 'உம்மையுள்' என்றிருத்தல் வேண்டும்.

296. கிளந்த வல்ல வேறுபிற தோன்றினுங்
கிளந்தவற் றியலா னுணர்ந்தனர் கொளலே.

பா-ம். இ. சே. ந.—கிளந்த வல்ல வேறுபிற தோன்றினும்.
தே.—கிளந்த வல்ல அன்ன பிறவும்.

இடையியல் முற்றும்.

---

1. Cf. நன். 341.

## 8. உரியியல்.

297. உரிச்சொற் கிளவி விரிக்குங் காலை
யிசையினும் குறிப்பினும் பண்பினுந் தோன்றிப்
பெயரினும் வினையினு மெய்தடு மாறி
யொருசொற் பலபொருட்[1] குரிமை தோன்றினும்
பலசொல் லொருபொருட்[2] குரிமை தோன்றினும்
பயிலா தவற்றைப் பயின்றவை சார்த்தித்
தத்த மரபிற் சென்றுநிலை மருங்கி
னெச்சொல் லாயினும் பொருள்வேறு கிளத்தல்.

பொருள். உ.—உரிச்சொற்கள் தோன்றுமிடத்து இசையும் குறிப்பும் பண்பும்பற்றிப் பெயர்க்கண்ணும் வினைக்கண்ணுஞ் சென்று பொருள்களை விளக்கும் எ-று. மெய் என்பது பொருள்; தடுமாறுதல் என்பது பெயர்பற்றியும் வினைபற்றியும் வரும் வரவினைநோக்கி; அவ்வாறு தடுமாறுங்கால் ஒருசொல் பல் பொருட்கு உரிமைப்பட்டுத் தடுமாறுதலும், பலசொல் ஒரு பொருட்கு உரிமைப்பட்டுத் தடுமாறுதலும் உடைய. அவை

அவ்வாறு தடுமாறித்தோன்றுதல் அவற்றிற்கு இலக்கணம்; அவ்வாறு தோன்றுங்காற் பயிலாத உரிச்சொற்கள் பயின்ற உரிச்சொல்லோடு சார்த்தி உணரப்படும். அவ்வாறு சார்த்திச்சொல்லவே எவ்வகைப்பட்ட சொல்லாயினும் பொருள்விளங்கும்.

சே.—உரிச்சொல்லை விரித்துரைக்குமிடத்து, இசை குறிப்புப் பண்பென்னும் பொருண்மேற் றோன்றி, பெயர்க்கண்ணும் வினைக்கண்ணும் தம்முருபு தடுமாறி, ஒருசொற் பலபொருட்குரித்தாய் வரினும் பலசொல் ஒருபொருட்குரித்தாய்வரினும் கேட்பானாற் பயிலப்படாதசொல்லைப் பயின்றவற்றோடு சார்த்திப் பெயரும் வினையுமாகிய தத்தமக்குரிய நிலைக்களத்தின்கண் யாதானு மொரு சொல்லாயினும் வேறுவேறு பொருளுணர்த்தப்படும் எ-று;

1. अनेकार्थान्येकशब्दानि (யா. கி. 4 அ. 2).
2. एकार्थमनेकशब्दम् (யா. கி. 4 அ. 1).

22



என்றது, இசை குறிப்புப் பண்பென்னும் பொருளவாய்ப் பெயர் வினை போன்றும் அவற்றிற்கு முதனிலையாயுந் தடுமாறி ஒருசொல் ஒரு பொருட் குரித்தாதலே யன்றி, ஒருசொல் பலபொருட்கும் பலசொல் ஒருபொருட்கும் உரியவாய் வருவன உரிச்சொல்லென்

றும், அவை பெயரும் வினையும்போல ஈறுபற்றிப் பொருளுணர்த்தலாகாமையின் வெளிப்படாதவற்றை வெளிப்பட்டவற்றோடு சார்த்தித் தம்மையெடுத்தோதியே அப்பொருளுணர்த்தப்படுமென்றும், உரிச்சொற்குப் பொதுவிலக்கணமும் அவற்றிற்குப் பொருளுணர்த்துமுறைமையு முணர்த்தியவாறு.

ந.—உரிச்சொல்லாகிய சொல்லை விரித்துணர்த்துமிடத்து ஒருசொல் ஒருபொருட்கு உரித்தாய்வாராது பலபொருட்கு உரித்தாய் மயங்கிவரினும், பலசொல் ஒருபொருட்கு உரியவாய் மயங்கிவரினும், இசைப்பொருண்மைக்கண்ணும் மனத்தாற் குறித்துணரும் பொருண்மைக்கண்ணும் பண்புப்பொருண்மைக்கண்ணும் வெளிப்பட்டுப் பெயர்வினைகள்போன்றும் அவற்றிற்கு முதனிலையாயும் தம்முருபு தடுமாறித் தத்தமக்கு உரிய முறைமையாற் சென்றுநிற்கும் நிலைக்களங்களாலே கேட்போனாற் பொருளுணரப்படாத எவ்வகைப்பட்ட சொல்லாயினும் பயிலப்படாத சொல்லைப் பயின்றவற்றோடு சேர்த்திப்பொருளை வேறுவேறுசொல்லுக.

தே.—உரிச்சொல்லென்பது யாதோவெனின் ஒருவாய்பாட்டாற் சொல்லப்படும்பொருட்குத் தானுமுரித்தாகிவருவது. அதனானேயன்றே 'ஒருசொற் பலபொருட் குரிமை தோன்றினும், பலசொ லொருபொருட் குரிமை தோன்றினு' மெனவோதுவாராயிற்று. எழுத்ததிகாரத்துள்[1] இதனைக் குறைச்சொற்கிளவியென்றோதினமையான் வடநூலாசிரியர் தாதுவென்று குறியிட்ட சொற்களே யிவை யென்றுகொள்ளப்படும், அவையுங் குறைச்சொல்லாதலான். அஃதேற் றொழிற்பொருண்மையுணர்த்துவனவெல்லா மிதனுளோதினரோ வெனின் 'வெளிப்படு சொல்லே[2] கிளத்தல் வேண்டா, வெளிப்பட வாரா வுரிச்சொன் மேன' என்றாராகலின், வழக்கின்கட் பயிற்சியில்லாத சொற்களீண்டெடுத்

தோதப்படுகின்றன வென்க. தொழிலாவது வினையும், வினைக்

1. எழுத். குற்று. 76. 2. Cf. यत्र स्वरसंस्कारौ समर्थौ प्रादेशिकेन गुणेनान्वितौ स्यातां संविज्ञातानि तानि (யா. நி. 1 அ. 4).



குறிப்புமாதலின் அவ்விருவகைச் சொற்கும் அங்கமாகி வெளிப்படாதன ஈண்டுக் கூறப்படுகின்றன. உரிச்சொல்லாகிய சொல்லை விரித்துரைக்குங்காலத்துச் சொல்லானும் குறிப்பானும் பண்பானும் புலப்பட உரிச்சொல்லாகிய உருபு பெயரின்கண்ணும் வினையின் கண்ணுந் தடுமாறி ஒரு சொல் பல பொருட்குரித்தாகித் தோன்றினும் பலசொல் ஒருபொருட்கு உரித்தாகித்தோன்றினும் வழக்கின்கட் பயின்று நடவாத சொற்களைப் பயின்ற சொற்களோடு சேர்த்தி, யாதானும் ஒருசொல்லாயினும் பொருள் வேறுபடுத்திக் காட்டுக. (அவை தடுமாறுங்கால், பெயர் வினைகளைச் சார்ந்தும் அவற்றிற்கு அங்கமாகியும் வரும். உறுவளி யென்பது பெயரைச் சார்ந்துவந்தது. உறங்கொண்டான் என்பது வினையைச்சார்ந்து வந்தது. உறுவன் என்றவழிப் பெயர்க் கங்கமாயிற்று. உற்றான் என்றவழி வினைக் கங்கமாயிற்று).

உரைகாரர்கள் நால்வரும் இச்சூத்திரம் உரிச்சொல்லின் இலக்கணத்தை உணர்த்துகின்றது என்றனர். பொருள் கூறுமிடத்து மெய் என்பதற்கு உரையாசிரியர் 'பொருள்' என்றும், ஏனையோர் 'உருவம்' என்றும் கொண்டனர். 'உயிரும் புள்ளியு மிறுதி யாகி...' (எழுத். குற்று. 76) என்ற சூத்திரத்தில் புணர்ச்சியில் உரிச்சொல் எவ்வாறு மாறும் என்பது உணர்த்தப்படவில்லை

என்பதனுல் சேனவரையர் முதலியோர் கூறுவதே பொருந்தும்.

இச்சூத்திரம் உரிச்சொல்லின் இலக்கணங்கூறியதாயின் 'உரிச்சொற்கிளவி—இசையினுங் குறிப்பினும் பண்பினுந் தோன்றும்' என்றே ஆசிரியர் கூறியிருப்பர். ஏனையவற்றைச் சேர்த்திருத்தலால் இச்சூத்திரம் உரிச்சொல்லின் இலக்கணத்தைக்கூறுது அதன் தன்மையைக் கூறிற்று என்றலே பொருந்தும். அவ்வாறாயின் அதன் இலக்கணம் எதனுற்பெறுவது மெனின், பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல் இவற்றின் இலக்கணம் அவ்வக்குறியாற் பெறப்பட்டன என்றதுபோலவே, உரிச்சொல் என்ற தொல்லோர் குறியானே அது பெறப்பட்டதெனல் வேண்டும். உரிச்சொல் என்பதற்குப் பெயரினும், வினையினும் இன்றியமையாதரிய பகுதியை யுணர்த்தும் கிளவி என்பது பொருளாகும். அப்பகுதியைத் தெய்வச்சிலையார் தாது என்பர். அவரது கொள்கையில் வடமொழியிலக்கணவாசிரியரான சாகடாயனரைப் போல்எல்லாப்பெயரும் தாதுவிலிருந்து வந்தன என்று கொள்ளல்



வேண்டும். செயலைக்குறிக்கும் பகுதிகளுக்கே தாது எனப் பெயராதலானும், மழவு குழவு முதலிய சில பெயர்கள் தாதுவிலிருந்து பெறப்பட்டன என்று கொள்ளுவது எளிதன்ருகலானும், எல்லாப் பெயர்களும் தாதுவிலிருந்து பிறந்தன எனக்கொள்ளாது பெரும்பான்மையன தாதுவிலிருந்தும், சிறுபான்மையன அவ்வாறன்றியும் பிறந்தன என்று வடமொழியிலக்கணவாசிரியரான கார்க்கியரைப்போல் கொள்ளுவது பொருத்தமாகும். அவ்வாறு

யின் சில பெயர்களின் பகுதியும் உரிச்சொல் என்னலாமென்பது என் கருத்து. ஆதலின் உரிச்சொல் என்பது பெயர், வினை இவற்றின் பகுதி என்னலாம்.

298. வெளிப்படு சொல்லே கிளத்தல் வேண்டா
வெளிப்பட வாரா வுரிச்சொன்[1] மேன.

எச்சொற்களுக்குப் பொருள் எல்லோருக்கும் இனிது விளங்குமோ, அவை வெளிப்படுசொல்லாகும். எவற்றிற்குப் பொருள் இனிது விளங்காவோ அவை, வெளிப்படாச்சொல்லாகும்.

299. அவைதாம்[2]
உறுதவ நனியென வரூஉ மூன்று
மிகுதி செய்யும் பொருள வென்ப.

ஈண்டு 'அவைதாம்' என்பதனை அதிகார சூத்திரமாகக் கொள்க.

300. உருவுட் காகும் புரையுயர் பாகும்.

இதனை இரண்டு சூத்திரமாக்கினர் தெய்வச்சிலையார். அதுவே பொருத்த முடைத்து.

303. மல்லல் வளனே.

304. ஏபெற் றாகும்.

இவ்விரண்டு சூத்திரங்களும் இளம்பூரணத்திலும், நச்சினார்க்கினியத்திலும் ஒன்றாகக் கொள்ளப்பட்டன. அது பொருந்தாது.

305. உகப்பே யுயர்த லுவப்பே யுவகை.

---

1. Cf. अनवगतसंस्कारान् निगमान् (யா. நி. 4 அ. 3).

2. Cf. उरु तुवि पुरु···इति द्वादश बहुनामानि (யா. நி. 3 அ. 1).

*இதனை இரண்டு சூத்திரமாக்கினர் தெய்வச்சிலையார். அது பொருந்தும்.*

**321. அவற்றுள்**
**தடவென் கிளவி கோட்டமுஞ் செய்யும்.**

**322. கயவென் கிளவி மென்மையு மாகும்[1].**

**323. நளியென் கிளவி செறிவு மாகும்.**

*இம்மூன்று சூத்திரங்களையும் ஒன்றாக்கினர் தெய்வச்சிலையார். அது பொருந்ாது.*

**338. பிணையும் பேணும் பெட்பின் பொருள.**

**பெட்பு** *என்பதற்குப்* **புறந்தருதல்** *என்ற ஒரு பொருளைக் கூறினர்* **உரையாசிரியர். புறந்தருதல், விரும்புதல்** *என்ற இரு பொருளைக் கூறினர்* **சேனாவரையர். புறந்தருதல், விரும்புதல், பெருமை** *என்ற முப்பொருள்களைக் கூறினர்* **நச்சினார்க்கினியர்.**

**342. எய்யா மையே யறியா மையே.**

**சே.**—*அறிதற்பொருட்டாய் எய்தலென்றானும் எய்த்தலென்றானும் சான்றோர்செய்யுட்கண் வாராமையின், எய்யாமை எதிர்மறையன்மை அறிக.*

**ந.**—*அறிதலென்னும் உடம்பாட்டிற்கு மறையாகிய அறியாமையென்னும் உரிச்சொல்லான் எய்யாமையே உணர்த்தவே, அவ்வெய்யாமை மறைச்சொல்லென்பதூஉம், அதற்கு எய்த்தல் என்னும் உடம்பாட்டுச்சொல் உளதென்பதூஉம் பெற்றாம்... 'எய்த்து நீர்ச்சிலம்பின் குறைமேகலை' யென்புழி எய்த்தென்பது*

அறிந்து என்னும் பொருளுணர்த்திற்று.

345. தெவுக்கொளற் பொருட்டே.

இளம்பூரணத்தில் இச்சூத்திரம் 'நன்றுபெரிதாகும்', 'தாவே வலியும் வருத்தமு மாகும்' என்ற சூத்திரங்களின் இடையிலுள் ளது. சேனாவரையத்திலும், நச்சினார்க்கினியத்திலும், தெய்வச் சிலையாருரையிலும் 'தாவே வலியும் வருத்தமு மாகும்' 'தெவ்வுப் பகையாகும்' என்ற சூத்திரங்களினிடையிலுள்ளது.

1. பா-ம். இ. ந. தே.—செய்யும்.



353. விழுமஞ் சீர்மையுஞ் சிறப்பு மிடும்பையும்.

பா-ம். இ.—விழுமஞ் சீர்மையுஞ் மிடும்பையுஞ் செய்யும்.
தே.—விழுமம்-சீர்மையுஞ் சிறப்பும் இடும்பையுஞ் செய்யும்.

360. இலம்பா டொற்க மாயிரண்டும் வறுமை.

இதற்கு உதாரணமாக 'இலம்படுபுலவர்' என்பதை நால்வருங் காட்டினர். இலம்படுபுலவர் என்பதற்கு 'இலமென் கிளவிக்குப் படவரு காலை, நிலையலு முரித்தே செய்யு ளான' (எழுத். புள்ளி. 21) என்னுஞ் சூத்திரவுரையில் இலத்தாற் பற்றப்படும் புலவர் என்று பொருள்கொண்டனர் உரையாசிரியர். அக் கொள்கையை நச்சினார்க்கினியர் அச்சூத்திரவுரையிலும் இச்சூத் திரவுரையிலும் மறுத்து இல்லாமை யுண்டாகின்ற புலவர் என்று பொருள் கொடுத்தனர்.

389. மெய்பெறக் கிளந்த வுரிச்சொ லெல்லா
முன்னும் பின்னும் வருபவை நாடி
யொத்த மொழியாற் புணர்த்தன ருணர்த்த
றத்த மரபிற் றேன்றுமன் பொருளே.

இச்சூத்திரவுரையின் இறுதியில் நச்சினார்க்கினியத்தில் "இங்ஙனம் கூறவே 'முன்னும் பின்னும் மொழியடுத்து வருதலும்' (சொல். 251) என இடைச்சொற்கு ஓதியவிதி இதற்குங் கூறினாராயிற்று" என்ற சொற்றொடர் உள்ளது. இஃது இங்குப் பொருந்தாமையால் ஏட்டில் தவறிவந்திருத்தல் வேண்டும்.

390. கூறிய கிளவிப் பொருணிலை யல்ல
வேறுபிற தோன்றினு மவற்றொடுங் கொளலே.

பா-ம்.—இ. ந.—*அல்லது...அவற்றொடு*... தே.—*அல்லது ...அவற்றொடும்*...

394. மொழிப்பொருட் காரணம் விழிப்பத் தோன்ற.

**பொருள்:** உ.—*மொழிப்பொருள்கள் என்பன அச்சொல் லப்பட்ட பொருள்கள் அப்பொருட்கட்டே என்றவாறும்.*

சே.—உறு, தவ முதலாயின சொற்கு மிகுதிமுதலாயின பொருளாதல் வரலாற்று முறைமையாற் கொள்வதல்லது, அவை அப்பொருளாவதற்குக் காரணம் விளங்கத்தோன்ற எ-று.



ந.—நால்வகைச்சொல்லுக்கும் பொருளை அறிவித்து நின்ற தோர் காரணம் உண்டாந்தன்மை நுண்ணுணர்வில்லாதோர்க்கு

மாபென்று கொள்வதல்லது விளங்கத்தோன்று எ-று.

நச்சினர்க்கினியர் **உரிச்சொல்லுக்கு** என்று கூருது **நால் வகைச்சொல்லுக்கும்** என்று ஏன் கூறினர் என்பது **ஆராயத் தக்கது.**

**தே.**—இச்சொற்குப் பொருள் இதுவென நியமித்தற்குக் காரணம் விளங்கத்தோன்று. இவருடைய உரையும் நச்சினர்க் கினியருரையைப் போன்றதே.

395. **எழுத்துப்பிரிந் திசைத்த லிவணியல் பின்றே**[1].

**பொருள்:** உ.—எழுத்துக்கள் பிரிந்திசைக்கப்படா.

**சே.ந.**—முதனிலையும் இறுதிநிலையுமாக எழுத்துக்கள் பிரிந்து வேறுவேறு பொருளுணர்த்தல் உரிச்சொல்லிடத் தியைபுடைத் தன்று எ-று.

**தே.**—ஒரு சொற்கு அங்கமாகிய எழுத்துப் பிரிந்துநின்று பொருள்பட ஒலித்தல் இத்தமிழகத்தில் இல்லை.

**உரையாசிரியர்** கருத்துத் தெளிவாய்ப் புலப்படவில்லை. **சேன வரையரும், நச்சினர்க்கினியரும்** கூறும் பொருள் வேறு. **தெய் வச்சிலையார்** கூறும் பொருள் வேறு. இவ்வியல் உரியியலாயிருக்க எழுத்து என்பதற்கு எல்லாச் சொல்லுக்கு மங்கமாகிய எழுத்து என்றும், இவண் என்பதற்கு இத்தமிழகம் என்றுந் தெய்வச்சிலை யார் கொள்ளுவது பொருத்தமின்று. சேனவரையர் கருத்து யாதெனின், பெயர் வினை இவற்றிற்குப பகுதியாகிய உரிச் சொல்லை எழுத்தெழுத்தாகப் பிரித்துப் பொருள்கொள்ள இய லாது என்பது. இதுவே பொருத்தமுடைத்து.

இவ்வியலில் உரிச்சொற்களிற் பலவற்றை ஆசிரியர் தொழில் பண்புமுதலிய விகுதிகளோடு சேர்த்துக் கூறியிருப்பினும் அவற் றின் பகுதியே கொள்ளல்வேண்டும்.

**உரியியல் முற்றும்.**

1. இச்சூத்திரத்தால், உரிச்சொல் என்பதும் ஆங்கிலத்தில் (Root) ரூட் என்பதும் ஒத்தபொருளுடையன என்பது பெறப்படும்.

## ௯. எச்சவியல்.

397. இயற்சொற் றிரிசொற் றிசைச்சொல் வடசொலென்
றனைத்தே செய்யு ளீட்டச் சொல்லே.

இச்சூத்திரத்திற்கு உரையாசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார் இவர்கள் நால்வரும் ஒருவகையாகவே பொருள் கொண்டனர்.

இங்கு, 'திரிசொல் என்பது செய்யுளின்ப நோக்கி அவ்வியற் சொற்களை அவ்வாய்பாடு திரித்து வேறுவாய்பாட்டவாக்குஞ் செய்யுளுடைய சொல்' என்று உரையாசிரியரும், 399-வது சூத்திரவுரையில் 'திரித்துக்கொண்டது இயற்கைச்சொல்லான் இன்பம் பெறச் செய்யுளீட்டலாகாமையானன்றே; அதனாற் றிரிசொல்லெனவே செய்யுட் குரித்தாதலும் பெற்றாம்' என்று சேனாவரையரும் திரிசொல்லுக்குக் கூறும் இலக்கணம் கவனிக்கத்தக்கது.

திசைச்சொல்லுள்ளும் வடசொல்லுள்ளும் செய்யுட்குரித்தாய்வருவது பெயர்ச்சொல்லே என்றார் சேனாவரையர். 'திசைச் சொல்லும் வடசொல்லும் பெரும்பான்மை பெயர்ப்பெயராயுஞ் சிறுபான்மை தொழிற்பெயராயும் வருதலன்றி ஏனையவாய் வாரா'

என்றும், 'பிறபாடைச்சொற்கள் ஈட்டுதற்கு உரியவன்றிச் சிறுபான்மை வருமாயின், அவை செப்பு, குளிரு, சிக்கு, அந்தோ என்றாற்போல்வன பிறவுமாம்' என்றுங் கூறினர் நச்சினார்க்கினியர். 'திரிசொல்லுந் திசைச்சொல்லும் பெரும்பான்மை பெயரும், சிறுபான்மை வினையுமாகி வரும்' என்றார் தெய்வச்சிலையார்.

398. அவற்றுள்,
இயற்சொற் றாமே
செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்
தம்பொருள் வழாமை யிசைக்குஞ் சொல்லே.

இச்சூத்திரத்தின் பொருளைக் கூறுமிடத்துச் சேனாவரையரும், நச்சினார்க்கினியரும் தம்பொருள் என்பதற்குமுன் கொடுந்



தமிழ்நிலத்தும் என்ற சொல்லை வருவித்துக்கொண்டனர். உரையாசிரியரும், தெய்வச்சிலையாரும் அவ்வாறு அச்சொல்லை வருவித்துக்கொள்ளாவிடினும் அவர்க்கும் அதுவே கருத்தென்பது அவர்கள் உரையினின்றும் விளங்குகின்றது.

இச்சூத்திரவுரையில் 'செந்தமிழ்நிலமாவது—வையையாற்றின் வடக்கு, மருதயாற்றின் தெற்கு, கருவூரின் கிழக்கு, மருவூரின் மேற்கு' என்று உரையாசிரியரும் சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் ஒருபடியாகச் செந்தமிழ்நிலத்தின் எல்லையைக் கூறினர். தெய்வச்சிலையாரோ 'செந்தமிழ் நாடாவது வையை

யாற்றின் வடக்கும், மருதயாற்றின் தெற்கும், கருவூரின் கிழக்கும், மருவூரின் மேற்கும் என்ப. இவ்வாறு உரைத்தற்கு ஓர் இலக்கணங் காணாமையானும், வையையாற்றின் தெற்காகிய கொற்கையும், கருவூரின் மேற்காகிய கொடுங்கோளூரும், மருதயாற்றின் வடக்காகிய காஞ்சியும் தமிழ்திரிநிலமாதல்வேண்டுமாதலானும், அஃது உரையன்று என்பார் உரைக்குமாறு—'வடவேங்கடந்தென்குமரி' (எழுத். பாயிரம்) என்றமையானும், இதனுள் தமிழ்கூறும் நல்லுலகமென விசேடித்தமையானும், கிழக்கும் மேற்கும் எல்லைகூறாது தெற்கெல்லைகூறியவதனாற் குமரியின் தெற்காகிய நாடுகளை யொழித்து வேங்கடமலையின் தெற்கும், குமரியின் வடக்கும், குண கடலின் மேற்கும், குடகடலின் கிழக்குமாகிய நிலம் செந்தமிழ்நில மென்றுரைப்ப' என்று கூறினர்.

சேனாவரையர் இங்கு 'நீரென்பது ஆரியச்சிதைவாயினும் அப்பொருட்கு அதுவே இயற்சொல்லாய்ச் செந்தமிழ்நிலத்தும் கொடுந்தமிழ்நிலத்தும் வழங்கப்படுதலான் இயற்சொல்லாயிற்று' என்று கூறினர். ஆனால் ஆரியத்திலுள்ள 'நீர்' என்பது தமிழ் மொழியினின்றும் வந்த சொல்லென்பது மொழிநூல்வல்லோரின் துணிபு.

பா-ம்:—உ: வழாஅமை யிசைக்கும். சே. ந.—வழாமை யிசைக்கும். தெ.—வழாம லிசைக்கும்.

399. ஒருபொருள் குறித்த வேறுசொல் லாகியும்
வேறுபொருள் குறித்த ஒருசொல் லாகியு
மிருபாற் றென்ப திரிசொற் கிளவி.

23

இச்சூத்திரவுரையிற் சேனாவரையர் 'விலங்கல், விண்டு என்பன முழுவதுந் திரிந்தன. முழுவதுந் திரிந்தனவற்றைக்[1] கட்டிய வழக்கென்பாருமுளர்' என்று கூறுகின்றனர்.

சேனாவரையத்திற் கூறப்பட்ட 'கிள்ளை, மஞ்ஞை யென்பன ஒரு சொல் ஒருபொருட்குரித்தாகிய திரிசொல்லாதலின் இருபாற்றென்றல் நிரம்பாதெனின்' என்ற ஆசங்கைக்கு மூலம், ஒருசொல்லே ஒரு பொருள் குறித்த வேறு கிளவியாயும் வேறு பொருள்குறித்த வொரு சொல்லாயும் இருப்பினே அது திரிசொல்லாகும் என்று சூத்திரத்திற்குப் பொருள் என்ற கருத்துப் பற்றி. அவ்வாசங்கைக்கு விடை திரிசொலென்பது ஒருபொருள் குறித்த வேறுகிளவியாகவேனும் வேறுபொருள் குறித்த வொரு சொல்லாகவேனும் இருக்குமென்பதே.

இச்சூத்திரவுரையில் தெய்வச்சிலையார் 'அஃதேல் உரிச்சொல்லோடிதனிடை வேறுபாடு என்னையெனின், உரிச்சொல் குறைச்சொல்லாகி வரும், திரிசொல் முழுச்சொல்லாகி வருமென்க' என்று கூறியது கவனித்தற்குரியது.

400. செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்துந்
தங்குறிப் பினவே திசைச்சொற் கிளவி.

செந்தமிழ்சேர்ந்த பன்னிரு நிலத்தும் என்பதற்கு உரையாசிரியர் 'செந்தமிழ்நாட்டை அடையும் புடையுங் கிடந்த பன்னிருநிலத்தும்' என்றும், சேனாவரையர் 'செந்தமிழ்நிலத்தைச் சேர்ந்த பன்னிரண்டு நிலத்தும்' என்றும், நச்சினார்க்கினியர் செந்தமிழ்நாட்டைச் சூழ்ந்த பன்னிரண்டு நிலத்தும் பன்னிரண்டையும் புறஞ்சூழ்ந்த பன்னிரண்டு நிலத்தும்' என்றும், தெய்வச்

சிலையார் 'செந்தமிழ்நாட்டைச் சேர்ந்த பன்னிரு நிலத்தும்' என்றும் பொருள் கூறினர்.

உரையாசிரியரும், சேனாவரையரும் கூறின பன்னிரண்டு நாடுகளுள் பதினொன்று ஒளிநாடு, தென்பாண்டிநாடு, குட்டநாடு, குடநாடு, பன்றிநாடு, கற்காநாடு, சீதநாடு, பூழிநாடு, மலைநாடு, அருவாநாடு, அருவாவடதலை என்பன; பன்னிரண்டாவதை உரை

---

1. முழுவதும் திரிதல் = இயற்சொல்லினின்று முற்றும் மாறுபடுதல்.



யாசிரியர் **பொதுங்கர் நாடு** என்றும், சேனாவரையர் **பொங்கர் நாடு** என்றும் கூறுகின்றனர். ஒருகால் **பொதுங்கர்** என்பதில் '**து**' என்பது விடுபட்டுப் **பொங்கர்** என்று எழுதப்பட்டிருக்கலாம். தெய்வச்சிலையார்மதப்படி செந்தமிழ் நிலத்தின் எல்லை வேறாதலின் அவர்கூறும் பன்னிரண்டு நாடு 'பழந்தீபம், கொல்லம், கூபகம், சிங்களம், கன்னடம், வடுகம், கலிங்கம், தெலிங்கம், கொங்கணம், துளுவம், குடகம், குன்றகம்' என்பன. உரையாசிரியர், சேனாவரையர் கூறியவாறு பொங்கர்நாடு முதலிய பன்னிரண்டையும், தெய்வச்சிலையார் கூறியவாறு பழந்தீபம் முதலிய பன்னிரண்டையும் நச்சினார்க்கினியர் கூறினர். தெய்வச்சிலையார் கூறிய 'பழந்தீபம், கூபகம், கன்னடம், வடுகம், தெலிங்கம், துளுவம், குன்றகம்' என்பதற்குப் பிரதியாக முறையே 'பழந்தீவு, கூபம், கருநடம், வடுகு, தெலுங்கு, துளுவு, கூடம்' என்று நச்சினார்க்கினியர் கூறினர்.

401. வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே.

இச்சூத்திரத்திற்கு நால்வரும் பொருள் ஒருவகையாகக்கொண்டனர். 'எழுத்தொடு' என்பதற்கு முன் உரையாசிரியர் 'இருதிறத்தார்க்கும் பொதுவாய' என்பதனையும், சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் 'இருசார்மொழிக்கும் பொதுவாகிய' என்பதனையும், தெய்வச்சிலையார் 'தமிழ்மொழிக்குரிய' என்பதனையும் வருவித்துக்கொண்டனர்.

இச்சூத்திரவுரையிற் சேனாவரையர் 'வடசொல்லாவது வடசொல்லோடொக்குந் தமிழ்ச்சொல்லென்றாரால் உரையாசிரியரெனின்' என்று கூறி 'அற்றன்று; ஒக்குமென்று சொல்லப்படுவன ஒருபுடையானொப்புமையும் வேற்றுமையுமுடைமையான், இரண்டாதல்வேண்டும். இவை எழுத்தானும் பொருளானும் வேறுபாடின்மையாகிய ஒருசொல்லிலக்கண முடைமையான் இரண்டுசொல்லெனப்படா; அதனான் ஒத்தல் யாண்டையது? ஒருசொல்லேயாமென்பது'[1] என்று அவரை மறுத்தனர். இச்

1. ஆரியச்சொற்போலுஞ் சொல் என்னாது ஆரியத்தோடு அபின்னமான சொல் என்று உரையாசிரியர் கூறியிருத்தல்வேண்டும் என்பது சேனாவரையர் கருத்து.

சூத்திரவுரையில் உரையாசிரியர் அவ்வாறு கூறவில்லை. 'இயற் சொற் றிரிசொல்..' (சொல், 397) என்ற சூத்திரவுரையில் 'வடசொல் என்பது ஆரியச்சொற்போலுஞ் சொல்' என்று கூறியுள்ளார். ஆயினும் அவருடைய கருத்து, சேனாவரையர் கருதியவாறே என்பது இச்சூத்திரவுரையிலுள்ள 'குங்குமம் என்றவிடத்து இருசார்க்கும் பொது எழுத்தினான் வருதலுடைமையும் ஆரியத்தானும் தமிழானும் ஒருபொருட்கே பெயராகி வழங்கி வருதலுடைமையும் அறிக' என்ற சொற்றொடரால் அறியப்படுகின்றது.

இளம்பூரணத்தில், 'உலகம், நற்குணம்' என்பனவும், நச்சினார்க்கினியத்திற் 'காரியம், உற்பவம்' என்பனவும் இச்சூத்திரத்துக்கு உதாரணங்களாகக் காட்டப்பட்டன. அவை மேல் வருஞ் சூத்திரத்துக்குத்தான் உதாரணமாகும். அதனால் இளம்பூரணத்தில் 'உலகம், நற்குணம்' என்ற இரண்டும் பின்னர் ஏட்டிற் சேர்க்கப்பட்டனவோ, அல்லது **சற்குணம்** என்பது **நற்குணம்** என்று எழுத்துத்தவற்றால் மாறுபட்டு எழுதப்பட்டதோ, தெரிந்திலது. அவற்றைச் சேனாவரையர் மறுக்காமையின் இவ்வையம் வலியுறுகின்றது.

நச்சினார்க்கினியத்தில் 'வடவெழுத்தொரீஇ' என்பதற்கு 'உரப்பியும் எடுத்தும் கனைத்துங் கூறும் வடவெழுத்துக்களின் நீங்கி' என்று பொருள் கொடுக்கப்பட்டுளது. உரப்பொடு கூடிய எழுத்துக்கள் கவர்க்கம் முதல் பவர்க்கம் முடிய ஐவர்க்கங்களிலுமுள்ள இரண்டாம் எழுத்துக்கள்; எடுப்பொடுகூடிய எழுத்துக்கள் அவ்வைவர்க்கங்களிலும் மூன்றாம் எழுத்துக்கள்; கனைப்பொடு கூடிய எழுத்துக்கள் அவற்றில் நான்காம் எழுத்துக்கள்; ஶ, ஷ, ஸ, ஹ இவற்றை மறந்துவிட்டனர் போலும்.

வட்டம் முதலிய பாகதச்சொற்களை இச்சூத்திரத்திற்கு உதாரணமாகக் காட்டினர் தெய்வச்சிலையார். அவற்றை மேல் வருஞ்சூத்திரத்திற்கு உதாரணமாக்கினர் சேனாவரையரும் நச்சினார்க்கினியரும். உரையாசிரியர் அவற்றைப்பற்றி இரண்டு சூத்

இச்சூத்திரத்தில், 'வடசொல்' என்பதனால் இலக்கண விலக்கியங்களில் வழங்கும் ஸம்ஸ்கிருதச் சொல்லை மாத்திரங் குறித்



தனரா, அவற்றோடு வடநாட்டிற் பேச்சில்வழங்கும் பாகதச் சொல்லையுங் குறித்தனரா ஆசிரியர் என்பது ஆராயத்தக்கது.

**405. அவற்றுள்,**
**நிரனிறை தானே**
**வினையினும் பெயரினு நினையத் தோன்றிச்**
**சொல்வேறு நிலைஇப் பொருள்வேறு நிலையல்.**

பொருள். உ.—இச் சொல்லப்பட்டவற்றுள் நிரனிறை யென்று சொல்லப்படுவதியாதோவெனின், வினையினானும் பெயரினானும் ஆராயத்தோன்றிச் சொல் வேறுவேறு நிற்பப் பொருள் வேறுவேறு நின்று உணரப்படும் எ-று.

சே. ந.—அந்நான்கனுள் நிரனிறையாவது வினையானும் பெயரானும் ஆராயத்தோன்றிச் சொல்வேறு நிற்பப் பொருள்

வேறு நிற்றலாம் எ-று. தொடர்மொழிப்பொருள் முடிக்குஞ் சொற்கண்ணதாகலான் முடிக்குஞ்சொல்லைப் பொருளென்றார்.

வினையினும் பெயரினுமென்றதனான், வினைச்சொல்லான் வருவதூஉம், பெயர்ச்சொல்லான் வருவதூஉம், அவ்விருசொல்லான் வருவதூஉமென நிரனிறை மூன்றாம்.

**தெ.**—மேற்சொல்லப்பட்டவற்றுள் நிரனிறையாவது வினையானும் பெயரானும் ஆராயப் புலப்படுஞ்சொற்களைச் சேர நிறுத்தி அவற்றிற்கு முடிபாகவருஞ் சொற்களைச் சேர நிறுத்துதல் எ-று.

உரைகாரர்கள் நால்வருங் கூறுவதை நோக்குமிடத்து, இச் சூத்திரத்தின் கருத்து, ஒரு செய்யுளில் (1) பலவினைகள் ஒருங்கு வந்து அவற்றைத் தழுவும் பெயர்களும் ஒருங்குவரினும் (2) பல பெயர்கள் ஒருங்கு வந்து, அவற்றைத் தழுவும் பல பெயர்கள் ஒருங்கு வரினும் (3) பல பெயரும் வினையும் ஒருங்கு வந்து அவை தழுவும் பெயர்வினைகள் ஒருங்குவரினும் அவற்றை அம்முறையே ஒன்றோடொன்று பொற்றியைய அந்துவயித்தல்வேண்டும் என்பதே. இவற்றுள் மூன்றாவதற்கு 'மாசு போகவுங் காய்பசி நீங்கவுங்-கடிபுனன் மூழ்கி யடிசில்கை தொட்டு' என்பது உதாரணமாகும். இதனைச் சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் வினைநிரனிறையென்று கொண்டனர். தெய்வச்சிலையார் 'வினையும்



வினையுமாக வருவன உளவேல், வந்தவழிக் கண்டு கொள்க' என்றார். உரையாசிரியர் அதைப்பற்றி ஒன்றுங்கூறவில்லை.

**406. சுண்ணந் தானே**

பட்டாங் கமைந்த வீரடி யெண்சீ
ரோட்டுவழி யறிந்து துணித்தன ரியற்றல்.

உரையாசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் இம்மூவரும் 'சுரையாழ வம்மி மிதப்ப...' என்பதனை மாத்திரம் இச்சூத்திரத்திற்கு உதாரணமாகக் கொடுத்தனர். தெய்வச்சிலையார் அதனோடு 'தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட பைங்கூந்தல்— வெண்கோழி முட்டை யுடைத்தன்ன மாமேனி—அஞ்சனத் தன்ன பசலை தணிவேமே—வங்கத்துச் சென்றார் வரின்' என்பதனையும் உதாரணமாகக் காட்டினர். மேலும் 'சுரையாழ வம்மி மிதப்ப...' என்பது 'நாற்சீர்க்கண்ணே துணித்து ஓட்டியது' என்றும், 'தெங்கங்காய்...' என்பதனுள் 'எண்சீருள் ஓட்டிவந்தது' என்றும் கூறினர். இதனை நோக்குமிடத்துச் சூத்திரத்திலுள்ள 'ஈரடி யெண்சீர்' என்பதற்கு ஈரடிக்குரிய எண்சீரென்பது பொருளென்றும் ஓட்டுதல் எண்சீருக்குள் இருத்தல்வேண்டுமேயன்றி ஈரடிகொண்ட எண்சீருக்குள் இருத்தல்வேண்டுமென்ற நியதியில்லையென்றும் தெய்வச்சிலையார் கருதினரென்று தோன்றுகின்றது.

408. பொருடெரி மருங்கி
னீற்றடி யிறுசீ ரெருத்துவயிற் றிரிபுந்
தோற்றமும் வரையா ரடிமறி யான.

பொருள். உ.—அடிமறிப்பொருள்கோள் ஆராயுமிடத்து ஈற்றடியின் இறுதிச்சீர் எருத்தத்துச்சீராய்[1] கிடந்தும் வரையப்படாது எ-று.

சே.—பொருளாராயுங்கால், அடிமறிச்செய்யுட்கண் ஈற்றடியது இறுதிச்சீர் எருத்தடியிற் சென்றுதிரிதலும் வரையார் எ-று.

ந.—அவ்வடிமறிச் செய்யுளிடத்துப் பொருண் முடிவை ஆராயுமிடத்து அப்பொருண் முடிவினையுடைய அடியில் முடிக்கின்ற சீர்க்கு முதற்சீரிடத்துப்பொருளே தன்பொருளாய் இறுஞ்சீர்

ஏனையடிகள்போல நேராய்முடியாது மீண்டுசென்று முன்னின்ற

1. எருத்தச்சீரென்பது இறுதிச்சீருக்கடுத்த சீர் ஆகும்.



தோர் சொல்லோடே பொருண்முடியுந் தோற்றரவு நீக்கார் ஆசிரியர் எ-று.

தே.:—பொருள் ஆராயும்வழி ஈற்றடிக்கண்வரும் இறுதிச் சீர் ஈற்றயலடிக்கண் திரிந்து பொருள்படும் நிலைமையும் நீக்கார் எ-று.

சூத்திரத்திலுள்ள ஈற்றடியிறுசீ ரெருத்துவயின் என்பதற்கு உரையாசிரியர் ஈற்றடியின் இறுதிச்சீர் எருத்தச்சீராய்வரின் என்றும், சேனாவரையரும் தெய்வச்சிலையாரும் ஈற்றடியது இறுதிச்சீர் எருத்தடியிற்சென்று என்றும், நச்சினார்க்கினியர் ஈற்றடியெருத்துப் பொருளே தன்பொருளாய்க்கொண்ட இறுதிச்சீர்என்றும் பொருள் கொண்டமை கவனிக்கத்தக்கது. இச்சூத்திரம் 'அடிமறிச்செய்தி யடிநிலை திரிந்து-சீர்நிலை திரியாது தடுமாறும்மே' (சொல். 407) என்ற முற்சூத்திரத்தில் உணர்த்தப்பட்ட அடிமறியின் வேறுவகையைக் கூறுதலின் சேனாவரையர், தெய்வச்சிலையார் இருவருங்கூறும் பொருளே சிறந்தது. ஆகவே 'யானஞ்சுவலென நின்றாங்கு நிற்பவும் பொருள் செல்லுமாகலின் இவ்வாறு திரிதல் பொருந்தாமையின் அவர்க்கது கருத்தன்றென்க' என்று சேனாவரையர் உரையாசிரியரை மறுப்பது பொருந்தும்.

நச்சினார்க்கினியர் 'கூறாய் தோழி யாம்வாழு மாறே' என்னு

மிடத்து மாறு என்னும் இடைச்சொல் தனக்கோர் பொருளின்றி வாழும்படியை யென எருத்துச்சீரின் பொருளையே உணர்த்திற்று என்றார். மாறு என்பது 'அணையை யாகன் மாறே' (புறநா. 20, 20), 'நீதுஞ்சாய் மாறே' (புறநா. 22, 38), 'நீ அருளன் மாறே' (புறநா. 92, 6) முதலிய இடங்களில் ஏதுப்பொருளில் வருதலின் அதற்குப் பொருளில்லையென்று கூறுவது எவ்வாறு பொருந்தும்?

410. தநநு எஎனு மவைமுத லாகிய
கிளைநுதற் பெயரும் பிரிப்பப் பிரியா.

இதற்கு உரைகாரர் நால்வரும் ஒருவகையாகவே பொருள் கூறினர்.

சேனாவரையர் 'வெற்பன், பொருப்பன் என்னுந் தொடக்கத்து ஒட்டுப்பெயர் வெற்பு + அன், பொருப்பு + அன் எனப்பிரித்தவழியும், வெற்பு பொருப்பு என்னும் முதனிலை தம்பொருள் இனிது விளக்கும். தமன், எமன் என்பனவற்றைத் தம் + அன்,



எம் + அன் எனப்பிரிக்கலுறின் தம், எம் என்பன முதனிலையாய்ப் பொருளுணர்த்துவனவாதல் வேண்டும்; அவை பொருளுணர்த்தாமையான், தமன், எமன் என வழங்கியாங்குக் கொள்வதல்லது பிரிக்கப்படாமையின், அவ்வாறு கூறினாரென்பது. பிறவுமன்ன. அஃதேல் தாம், யாம் என்பனவற்றிற்கு முதனிலையாகப் பிரிக்கவே அவையுந் தம்பொருளுணர்த்து மெனின், தமன், எமன் என்பன தன்கிளை, என்கிளை எனவும், தங்கிளை எங்கிளை எனவும், முதனிலைவகையான் ஒருமைக்கும் பன்மைக்கும் பொதுவாதலுடைய. ஒருமையுணர்த்துங்கால் தாம், யாம் என்பன பொருந்தாமையின்

தான், யான் என்பனவே முதனிலையெனல்வேண்டும். வேண்டவே இவ்வாறு பிரிப்பின் தமன், எமன் என ஓரோன் றிரண்டுசொல் லாதல் வேண்டுதலான் எழுத்தானும் பொருளானும் வேறுபா டின்மையின் ஒரு சொல்லெனவேபடும்; இரண்டுசொல்லென்றல் நிரம்பாமையின் அவ்வாறு பிரித்தலும் பொருத்தமின்றென்பது" என்று இச்சூத்திரவுரையிற் கூறினர். இங்கு, 'தமன் எமன் என ஒரோன்றிரண்டுசொல்லாதல் வேண்டுதலான்' என்று அவர் கூறினமையால், தமன் எமன் இரண்டும் தன் + அன், தம் + அன் என்றும், என் + அன், எம் + அன் என்றும் பிரித்தல்வேண்டு மென்பது அவர் கருத்தாகும்.

நச்சினார்க்கினியர், 'சேனாவரையர் தங்கிளை, நங்கிளை, நுங்கிளை, எங்கிளை என்பனவற்றை ஒருமைக்கும் பன்மைக்கும் பொதுவாய் நிற்குமென்றாராலெனின்' என்று கூறி, "ஆசிரியர் 'தாமென் கிளவி பன்மைக் குரித்தே' (சொல். 184) எனக் கூறிப்போந்தாராதலின் ஈண்டும் அதற்கேற்பத் தம்முடையகிளை எம்முடையகிளை எனப் பன்மை யுணர்த்துதலன்றி ஒருமையுணர்த்தாமை உணர்க" என்று சொற்றொடராற் சேனாவரையரை மறுக்கின்றனர். சேனாவரையர் தங்கிளை முதலியன ஒருமைக்கும் பன்மைக்கும் பொதுவென்று இச்சூத்திரவுரையிற் கூறவில்லை. தமன் முதலியன தன்கிளை, தங்கிளை முதலியவற்றைக் குறிக்குமென்றே கூறியுள்ளார்.

நச்சினார்க்கினியத்தில் 'ஈண்டு இவை வெற்பன் பொருப்பன்போலத் தம், நம், நும், எம் என்பன பிரிந்து நின்று பொருளுணர்த்திப் பின் வருகின்ற அன், அள், அர் என்பன பொருளுணர்த்தாது இடைச்சொல்லாயேநிற்றலிற் பிரிப்பப் பிரியா என்றார்' என்ற வாக்கியம் உள்ளது. வெற்பன் பொருப்பன்

என்பனவற்றில் அன் இடைச்சொல் என்பதில் ஐயமில்லாமை யின் இச்சொற்றொடரின்கருத்து விளங்கவில்லை.

இச்சூத்திரத்திற்குச் சேனாவரையர் தமன், நமன் முதலிய வற்றை உதாரணமாகக் கூறுது, தம்பி, தங்கை, தந்தை முதலிய வற்றை உதாரணமாகக் கூறுதல் மிகவும் ஏற்புடைத்தாகும்; ஏனெனில் தம்பி, தங்கை என்னுமிடத்து, பி, கை இவை சுவற் றைக்குறிப்பன என்பதைக் கூறுவது ஆசிரியர் தொல்காப்பியனார் காலத்தே இயலாததாயிற்று என்னலாம்.

411. இசைநிறை யசைநிலை பொருளொடு புணர்தலென்
றவைமூன் றென்ப வொருசொல் லடுக்கே.

தெய்வச்சிலையார் உரைகொண்ட சொல்லதிகாரப்பதிப்பில் இச்சூத்திரம் 'இசைப்படு பொருளே நான்குவரம் பாகும்' (சொல். 423) என்ற சூத்திரத்துக்குமுன் காணப்படுகின்றது. 'இசைப்படு பொருளே...' (சொல். 423) 'விரைசொல் லடுக்கே...' (சொல். 424), 'கண்டீ ரென்று....' (சொல். 425), 'கேட்டை யென்று...' (சொல். 426) என்ற நான்கு சூத்திரங் களும் அடுக்கைப்பற்றி உணர்த்துதலின், தெய்வச்சிலையார் கொண்ட முறையே தக்கதாகும்.

412. வேற்றுமைத் தொகையே யுவமத் தொகையே
வினையின் றொகையே பண்பின் றொகையே
யும்மைத் தொகையே யன்மொழித் தொகையென்
றவ்வா றென்ப தொகைமொழி நிலையே.

வேற்றுமைத்தொகைமுதலியவற்றின் பொருள் :—

உ.—வேற்றுமையுருபுதொக்குநின்ற தொகை. (அடுத்த சூத்திரவுரையின்கண் உள்ளது.)

சே.—வேற்றுமைப்பொருளையுடைய தொகை யென்றானும் வேற்றுமைப்பொருடொக்க தொகை யென்றானும் விரியும்.

ந.—வேற்றுமையுருபுகள் தொக்க தொகை.

தெ.—வேற்றுமைப்பொருள் குறித்த தொகை. தொகைச்சொல்லாவது இரண்டு விட்டிசைத்து நில்லாது ஒட்டிநிற்பது. இஃது ஒட்டுப்பெயர் என்னுங் குறியும் பெறும்.

24



**உரையாசிரியர், நச்சினார்க்கினியர்** இருவர்மதமும் ஒன்றே. **சேனாவரையர்கொள்கை** இரண்டனுள் ஒன்றனைக் கூறினர் **தெய்வச்சிலையார்.**

**சேனாவரையர்,** 'வேற்றுமையுருபும் உவமவுருபும் உம்மையும் வினைச்சொல்லீறும் பண்புச்சொல்லீறும் தொகுதலிற்றொகையாயின வென்பாரும், அவ்வப்பொருண்மேல் இரண்டும் பலவுமாகிய சொற்கள் பிளவுபடாது ஒற்றுமைப்படத் தம்முளியைதலிற் றொகையாயினவென்பாரு மென இருதிறத்தர் ஆசிரியர்' என்று கூறி, '(1) செய்தான் பொருள், இருந்தான் மாடத்து என உருபுதொக்கு ஒரு சொன்னீர்மைப் படாதனவுந் தொகையாவான் சேறலின் அவற்றை நீக்குதற்கும், (2) வேழக்கரும்பு, கேழற்பன்றி என்புழித் தொக்கனவில்லையெனினும் தொகையென வேண்டப்படுமாகலான் அவற்றைத் தழுவுதற்கும், (3)

உருபு முதலாயின தொகுதலிற் றொகையென்பார்க்கும் ஒட்டி ஒருசொன்னீர்மைப்படுதலுந் தொகையிலக்கணமெனல்வேண்டும்' என்றற்குமாகப் பின்னர்க் கூறிய இலக்கணத்தைக் கொள்ள வேண்டி முதலிற்கூறிய இலக்கணத்தை மூன்றுகாரணங்களால் மறுக்கின்றனர். மேலும், "'உருபு தொகவருதலும்' (சொல். 104) எனவும், 'வேற்றுமை தொக்க பெயர் வயினானும்' (சொல், 418) எனவும், 'உம்மை தொக்க பெயர்வயி னானும்' எனவும், 'உவமை தொக்க பெயர்வயி னானும்' எனவும் ஓதலால் அவை ஆண்டுத் தொக்கனவெனப்படு மன்றோ வெனின்" என்று ஆசங்கித்து "அற்றன்று 'அதுவென் வேற்றுமை யுயர்திணைத் தொகைவயின்' (சொல். 94) என்புழி அதுவெனுருபுநின்று கெட்டதாயின் நின்றகாலத்துத் திணைவழுவாம்; அத்திணைவழு அமைவுடைத் தெனின் விரிக்கின்றுழி நான்காமுருபு தொடராது அது தன் னையே விரிப்பினும் அமைவுடைத்து; அதனான் முறைப்பொரு டோன்ற நம்பிமகன் என இரண்டுசொற்றொக்கனவென்பதே ஆசி ரியர்கருத்தெனல் வேண்டும். அல்லதூஉம் வினைத்தொகை, பண் புத்தொகை, அன்மொழித்தொகை யென்பனவற்றின்கண் வினை யும் பண்பும் அன்மொழியுந் தொக்கு நில்லாமையானும், அஃதே கருத்தாதலறிக" என்று கூறுகின்றனர்.

இங்கு வேற்றுமையுருபும், உவமவுருபும், உம்மையும் வினைச் சொல்லீறும், பண்புச்சொல்லீறும் தொகுதலிற் றொகையாயின

என்று சொல்லுவோர் யாவர் எனத் தெரியவில்லை. உரையாசிரியர் வேற்றுமையுருபுதொக்குநின்ற தொகை வேற்றுமைத்தொகை என்றே கூறுதலானும், 'பெயருந் தொழிலும் பிரிந்தொருங் கிசைப்ப...' (எழுத். புண. 30) என்னுஞ் சூத்திரவுரையில் 'பெயரும் பெயருமாய்க் கூடியுமிசைப்ப என்று கூறுதலானும், வேற்றுமையுருபு முதலியன தொக்கு ஒருசொன்னீர்மைப்பட்டதே தொகை என்பது அவரது கருத்தாகும். சேனாவரையர் கூறும் இரண்டாங்காரணத்தை, 'கேழற்பன்றி, வேழக்கரும்பு என்பனவற்றிற்குத் தொக்கன இன்மையிற் றொகைச்சொல்லாமாறு என்னையெனின், அவற்றிற்கும்ஒன்றையொன்றுவிசேடித்து நிற்கின்ற தன்மையை உணர்த்துதற்கு வரும் 'ஆகிய' என்னும் வாசகந் தொக்குநின்றதென்றே கோடும். அன்றி...குன்றலுந்தொகையாமென்று உணர்க' என்ற சொற்றொடரால் நச்சினார்க்கினியர் மறுத்தனர். 'அதுவென் வேற்றுமை...' (சொல். 94) என்ற சூத்திரத்தைப்பற்றிச் சேனாவரையர் கூறியதை 'அதுவெனுருபு நின்றுலல்லது கெடுதலின்மையின் அது நின்று கெட்டதென்னும் பொருள்தரல் ஆண்டுக் கூறிப்போந்தாம் என்ற சொற்றொடரால் நச்சினார்க்கினியர் மறுத்தனர். ஆனால் அச்சூத்திரத்தில் **உயர் திணைத்தொகைவயின்** என்பதற்கு **உயர்திணையோடு சம்பந்தப் பட்டவிடத்தில்** என்பதே உரையாசிரியர்கூறும் பொருளென்று அச்சூத்திரக்குறிப்பில் எழுதப்பட்டது. அப்பொருளைக்கொள்ளின் சேனாவரையர் எழுப்பும் ஆசங்கைக்கும் நச்சினார்க்கினியர் கூறும் மறுப்புக்கும் இடனில்லை.

தெய்வச்சிலையார், சேனாவரையர்கூறிய முதற்கொள்கையாகிய 'வேற்றுமைப்பொருளையுடைய தொகை' என்பதனை வேற்றுமைத்தொகை என்பதற்குப் பொருளாகக் கொண்டனர். இவ்வாறு கூறும்போது (வடமொழியில்) சமாசன் என்பதின் ஒரு பொருளாகிய கூட்டிச் சொல்லப்படுதல் என்பதை மனத்தில்

வைத்துக்கொண்டனர்போலும். ஆனால், 'பண்புதொகவரூஉம்...' (சொல். 418) என்னுஞ் சூத்திரவுரையில் 'அல்லாத மொழி தொகுதலின், அன்மொழித் தொகையாயிற்று' என்று அவரே கூறுதலின் உரையாசிரியர்மதமும் அவருக்குச் சம்மதமென்றே தோன்றுகின்றது. சேனாவரையர் தாம்கூறிய முதற்கொள்கையிற் சிறிது குறைபாட்டைக் கருதி வேற்றுமைப்பொருடொக்க



தொகை என்று கூறினர்போலும். வேற்றுமையுருபு இருந்தே வேற்றுமைப்பொருள் வரவேண்டுதலின் உரையாசிரியர் நச்சினார்க்கினியர் கூறியமுறைப்படி வேற்றுமையுருபு தொக்கதொகை என்று பொருள் கொள்ளுவதே சாலும்.

413. அவற்றுள்,
வேற்றுமைத் தொகையே வேற்றுமை யியல.

இச்சூத்திரவுரையில் இரண்டாம் வேற்றுமைத் தொகைக்கு, 'நிலங்கடந்தான்' என்பதை உதாரணமாக உரையாசிரியரும், சேனாவரையரும், தெய்வச்சிலையாரும் கூறினர். தெய்வச்சிலையார் 'நிலத்தைக்கடந்தான், வாளால்வெட்டினான், கொலைக்கு உடம்பட்டான், வரையினின்றும் பாய்ந்தான், குன்றத்துக்கண் இருந்தான் என்றவழி இறுதிநின்ற சொல் தொழிலுணர்த்தாது அது செய்தார்க்குப் பெயராகிவந்துழி நிலங்கடந்தான், வாள்வெட்டினான், கொலையுடம்பட்டான், வரைபாய்ந்தான், குன்றத்திருந்தான் என இரண்டு பெயரும் ஒட்டி ஒருசொல்லாகி வரும்' என்றுங்கூறினர். இவ்வாறுகொள்ளின் 'பெயரினாகிய தொகையுமா

ருளவே...' (சொல். 67) என்னுஞ் சூத்திரவுரையில் 'நிலங்கடந்தான், மாக்கொணர்ந்தான் எனப் பெயரொடு வினைவந்து தொக்க வினையினாகிய தொகையுமுள வென்பதாம்' என்று சேனாவரையர் கூறும் வாக்கியம் பொருந்துமா?

எழுத்ததிகாரத்தி லுள்ள 'பெயருந் தொழிலும் பிரிந்தொருங் கிசைப்ப—வேற்றுமை யுருபு நிலைபெறு வழியுந்-தோற்றம் வேண்டாத் தொகுதிக் கண்ணும்...' [1](எழுத். புண. 30) என்னுஞ் சூத்திரத்திற் பெயருந் தொழிலும் ஒருங்கிசைப்ப, வேற்றுமையுருபின் தோற்றம் வேண்டாத் தொகுதிக்கண் என்றவிடத்துத் தொகுதி என்பதற்கு 'வினையின் தொகுதி காலத் தியலும்' (சொல். 415) என்றவிடத்திற்போலத் தொகை என்று பொருள்

1. அச்சூத்திரத்திற் சேனாவரையர் 'பிரிந்து இசைப்ப வேற்றுமை யுருபு நிலைபெறுவழியும், ஒருங்கிசைப்பத் தோற்றம் வேண்டாத் தொகுதிக்கண்ணும்' என்று முறைப்படுத்திப் பொருள்கொண்டனர். உரையாசிரியர் அவ்வாறு கொள்ளாது 'பிரிந்திசைப்ப வேற்றுமையுருபு நிலைபெறு வழியும் தோற்றம்வேண்டாத்தொகுதிக்கண்ணும், ஒருங்கிசைப்ப வேற்றுமையுருபு நிலைபெறு வழியும் தோற்றம்வேண்டாத் தொகுதிக்கண்ணும்' என்று பொருள் கொண்டது காண்க.



கொண்டு அவ்வாறு சேனாவரையர் கூறினர் என்பது 'எல்லாத் தொகையும் ஒருசொன் னடைய' (சொல். 420) என்னுஞ் சூத்திரவடியிற்கண்ட அவரது உரையினின்று நன்கு விளங்குகின்றது.

414. உவமத் தொகையே யுவம வியல.

இச்சூத்திரவுரையில் உரையாசிரியர் ‘துடியை ஒக்கும் நடு, துடிநடு என்று இரண்டனுருபுபற்றிவருமாகலின், உவமத்தொகை என்றது என்னையெனின்’ என்று ஆசங்கித்து, ‘துடிநடு என்புழி, உவமவுருபும் வேற்றுமையுருபும் என இரண்டும் தொக்கவேனும், துடிபோலும் நடு எனத் தொகைக்கு உவமப்பொருளே சிறப் புடைத்தாகலின் அது தொகையென்பது’ என்று அதற்கு விடை யளித்தனர்.

சேனாவரையர் ‘புலிப்பாய்த் துளையொக்கும் பாய்த்துள்... என விரிதலின் அவையெல்லாம் வேற்றுமைத்தொகை யெனப் படும்; அதனான் உவமத்தொகையென ஒன்றில்லை யெனின்,’ என்று ஆசங்கித்து, ‘அற்றன்று, சொல்லுவார்க்கு அது கருத்தாயின் வேற்றுமைத்தொகையுமாம். அக்கருத்தானன்றிப் புலியன்ன பாய்த்துள், பொன்மானும் மேனி என வேற்றுமையோடு இயை பில்லா உவமவுருபு தொடர்ப்பொருட்கட்டொக்கவழி உவமத் தொகையாவதல்லது வேற்றுமைத் தொகையாமா றில்லையென்க’ என்று அதற்கு விடைகூறினர்.

அவ்வாறே ‘மழையன்ன வண்கை யென்றவழி இரண்டா முருபு விரியாமலும் தானின்று உவமிக்கப்படும் பொருளைக் காட் டுதலின் இவ்வாறு வருஞ் சொற்களை நோக்கி உவமத்தொகை யென்றார்’ என்பர் தெய்வச்சிலையார்.

நச்சினார்க்கினியர், ‘இங்ஙனம் வேற்றுமையுருபும் உவமவுரு

பும் விரித்துழி வேற்றுமைத்தொகையென்று கோடுமோ? உவமத் தொகையென்று கோடுமோ? எனின்' என ஆசங்கித்து, 'ஆசிரியர் தாம் மேற்கூறும் உவமவுருபுகளிற் சில இரண்டாவதற்கு முடிபாமென்பது உணர்த்துதற்கு உவமவுருபிற்கெல்லாம் பொதுவாய் வழக்குவாசகமாய் நிற்கும் ஒப்பென்னும் உருபினைக் 'காப்பினொப்பின்' (சொல். 72) என எடுத்தோதினாதலின் அவ்விரண்டாவது அவ்வுவமவுருபுகளான் முடிந்துநின்றுழி உவமத்



தொடர்மொழி ஒப்புமைப்பொருளே தந்து நிற்றலின் உவமத் தொகையென்று கோடும்' என்று விடையிறுத்தனர்.

நச்சினார்க்கினியர் இச்சூத்திரவுரையிறுதியில் 'சேனாவரையர் இவற்றை (அன்ன, மானும், நோக்கு முதலியன) உவமவுருபன்றென்றும் உவமவுருபுகளை இரண்டாவது கொண்டுமுடியாதென்றும் கூறினாராலெனின், அவர் ஆசிரியர்கருத்துஞ் சான்றோர் செய்யுள் வழக்கமும் உணராமற் கூறினாரென்பது இக்கூறியவாற்றான் உணர்க' என்றார். இவ்வாறு சேனாவரையர் கூறியதாக இச்சூத்திரத்தின்கண் அவர் எழுதிய உரையிலிருந்து தெரியவில்லை. 'மழையை யொக்கும் வண்கை' என்று கூறுமவர் 'உவமவுருபுகளை இரண்டாவது கொண்டுமுடியாது' என்றார் என்று கூறுவது எவ்வாறு பொருந்தும்?

415. வினையின் றொகுதி காலத் தியலும்.

பொருள். உ.—வினைச்சொல் தொகுங்கால், காலந்தோன்றத் தொகும் எ-று.

சே.—வினைத்தொகை காலத்தின்க ணிகழும் எ-று.

ந.—வினைச்சொல்லினது ஈறுய்த் தொக்குநிற்கும் எழுத்துக்கள் காலத்தின்கண்ணே தொக்குநிற்கும் எ-று.

தே.—வினையின் தொகுதி காலச்சொல்லோடே நடக்கும்.

'காலத்தியலும்' என்றதற்குக் 'காலச்சொல்லோடே நடக்கும்' என்று தெய்வச்சிலையார் கூறும் பொருள் தெளிவாயுள்ளது.

'வேற்றுமைத் தொகையே வேற்றுமை யியல' (சொல் 413) 'உவமத் தொகையே உவம வியல' (சொல். 414) என்ற சூத்திரங்களில் 'வேற்றுமைத்தொகையே', 'உவமத்தொகையே' என்ற சொற்கள்போல் இங்கும் காலத்தொகையே என்று சொல்லாது வினையின்றொகுதி என்று சொன்னதற்குக் காரணம் யாதெனின் காலவெழுத்தோடு பெயரெச்சவிகுதியும் தொகுதலாலென்க.

உரையாசிரியர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார் இவர்கள் மதம், கொன்றயானை, கொல்லாநின்றயானை, கொல்லும் யானை என்ற இவை கொல்யானை என்று தொகும் என்பது.

சேனாவரையர் அவ்வாறு கூறாது கொல் என்ற தாதுவும் யானையும் சேர்ந்து கொல்யானை என்றாகிக் காலத்தையுணர்த்து



மென்றும், 'அவ்வினை விரிந்துநின்றவழித் தோன்றாது தொக்கவழித் தொகையாற்றலாற் காலந்தோன்று' மென்றும் கூறுகின்றனர். இங்குத் தொக்கவழி என்பதற்குச் சேர்ந்துவரும்வழி என்பது பொருளாம். இவ்வாறு கொள்ளுவதற்குப் பிரமாணம் 'செய்யுஞ் செய்த வென்னுங் கிளவியின்-மெய்யொருங் கியலுந் தொழிற்றொகு மொழியும்...புணரிய னிலையிடையுணரத் தோன்றா' (எழுத். 482) என்ற சூத்திரத்திலுள்ள 'செய்யும்...புணரிய

னிலையிடை யுணரத் தோன்றா' என்ற வாக்கியம் என்றும், அவ் வாக்கியத்தால் பெயரெச்சம் நின்று தொகுதல் ஆசிரியர்க்குக் கருத்தன்று என்றும் கூறுகின்றனர். அச்சூத்திரத்தால் வினைத் தொகையிற் பெயரெச்சமும் பெயரும் புணரும்போது, உலகத்தில் வழங்குமாறு கொள்ளவேண்டுமே யன்றி, புணரியல்விதிகளைக்கொள்ளக்கூடாது என்பது பெறப்படும் என்பதே உரையாசிரியர் கருத்து. அஃதே சிறந்தது எனத் தோற்றுகின்றது. அன்றியும், கொல் என்னும் தாது யானை என்ற பெயரோடு எவ்வாறு அந்துவயிக்கும்? வடமொழியில் 'தேவார்த்தம்'[1] 'கும்பகார:'[2] முதலிய சொற்களை நித்திய சமாசனுகக் கொண்டதுபோல, இங்கும் கொல்யானை முதலியவற்றைச் சேனவரையர் நித்தியசமாசனுகக் கொண்டனர்போலும். அன்றியும், இச்சூத்திரத்தில் வினை என்பது தாதுவென்றும்,அது தொழின்மாத்திரம் உணர்த்துகின்றதென்றும், அப்போது அது தொழிற்பெயர் என்பது ஆசிரியர் கருத்தென்றும் அவர் கூறுவது பொருந்துமா? நட, கொல் முதலிய தாதுக்களைப் பெயர் என்று கொள்ளுவதற்குச் சேனவரையர் கூறும் காரணமாவது:—'முதலிற் கூறுஞ் சினையறி கிளவியும்...இருபெய ரொட்டும்' (சொல். 114) என்ற சூத்திரத்தில் இருபெயரொட்டு அன்மொழித்தொகையே குறித்தலாலும், அவ்வன்மொழித்தொகைக்குள் வினைத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை ஒன்றுதலானும் என்பதாம். வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகையை ஆசிரியர் கூறாமையானும் இருபெயரொட்டு அன்மொழித்தொகையைக் குறிக்கவில்லையென்ற தெய்வச்சிலையார் கொள்கை வலியுறுதலானும் சேனவரையர் கூறியவாறு கொள்ளவேண்டா.

---

1. देवार्थम्    2. कुम्भकार:

இச்சூத்திரவுரையில் தெய்வச்சிலையார் மிகத் தெளிவாய்க் கூறியிருப்பதைக் காண்க. அஃதாவது—'வினைச்சொல்லாவது தொழிலுங் காலமும் பாலும் உணர்த்தலின், பாலுணர்த்துஞ் சொல் முற்றுச்சொல்லாகி நின்று தொகைநிலையாகாமையானும், பால்காட்டாத வினையெச்சம் பெயரெச்சம் என்னும் இரண்டனுள்ளும், வினையெச்சம் முற்றுவினைச்சொல்லோடல்லது முடியாமையானும் ஈண்டுத் தோகுவதும் விரிவதும் பெயரெச்சம் என்று கோள்க. அது தோகுங்காலத்துக் காலப்போருளை யுணர்த்துஞ் சோல்லே தோகுவதும் விரிவதும் என்று கொள்க. தொழிலும் பொருளும் விட்டிசைத்து நில்லாது ஒற்றுமைப்பட்டதனை வினைத்தொகை யென்றார்' என்பது.

416. வண்ணத்தின் வடிவி னளவிற் சுவையினென்
றன்ன பிறவு மதன்குண நுதலி
யின்ன திதுவென வரூஉ மியற்கை
யென்ன கிளவியும் பண்பின் றொகையே.

போருள். உ.—பண்பு தொகுமிடத்து இந் நான்கும்பற்றித் தொகும் என்பது கருத்து.

சே.—வண்ணம் வடிவு அளவு சுவை என்பனவும் அவை போல்வன பிறவுமாகிய குணத்தை நுதலிப் பின் றேக்கவழிக் குணச்சோற் குணமுடையதனை யுணர்த்தலான் இன்னதிது வென ஒன்றனை ஒன்று விசேடித்து இருசொல்லும் ஒரு பொருண்மேல் வருமியல்பை யுடைய எல்லாத் தொகைச்சொல்லும் பண்புத் தொகையாம் எ-று.

ந.—ஒருபொருட்குப் பொதுமை உள்வழி இப்படியிருப் பது இப்பொருளென்று அதனை விசேடித்துக் கூறும்படியாகப் பின்வருகின்ற அப்பொருளின் குணத்தைத் தான் கருதி அப் பொருட் குணமாகிய வண்ணத்தின்கண்ணும் வடிவின்கண்ணும் அளவின்கண்ணுஞ் சுவையின்கண்ணும் வரும் இயல்பாகிய கிளவி யும் அவைபோல்வன பிறவுமென்று சொல்லப்பட்டு வருங் கிளவி யும் எத்தன்மையவாகிய சொற்களும் பண்புச்சொல் தொக்க தொகையாம் எ-று.

தே.—வண்ணம், வடிவு, அளவு, சுவை யென்பன வற்றி னும் அத்தன்மைய பிறவு மாகி ஒருபொருளினது குணத்தைக்



கருதி இன்னது இது என ஒன்றையொன்று விசேடித்து வரும் இயல்பினையுடைய எல்லாச் சொல்லும் பண்புத் தொகையாம் எ-று.

சேனாவரையர், 'இயற்கையென்றது, தொக்குழிப் பண் புடையதனைக் குறித்தல் அத் தொகைச்சொல்ல தியல்பென் பதல்லது காரணங் கூறப்படாதென்றவாறு' என்றும், 'பண்புத் தொகையும் வினைத்தொகை போலப் பிரிக்கப்படாதாம்' என்றுங் கூறினமையின் சூத்திரத்திற்குப் பொருள் கூறுமிடத்து ,'பின் னேரக்கவழிக் குணச்சொற் குணமுடையதனை யுணர்த்தலான்' என வருவித்துக் கொண்டனர். நச்சினார்க்கினியர் சூத்திரப்

போக்கின்படி அந்நுவயங்கொள்ளாது 'இன்னது இது என அதன் குணம் நுதலி வண்ணத்தின் வடிவின் அளவிற் சுவையின் வரூஉம் இயற்கைக் கிளவியும் அன்ன பிறவு மென்று வரூஉங் கிளவியும் என்ன கிளவியும் பண்பின்தொகை' என்று அந்நுவயங் கூறுகின்றனர். இவ்வாறு கூறின் 'இன்னது இது என அதன் குணம் நுதலி' என்பதற்குப் பொருள் நேரிதாகவில்லாததோடு, பண்புச்சொற்களே பண்புத்தொகை என்று பெறப்படும். அது பொருந்தாது.

உரையாசிரியர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார் இவர்கள் மதத்தில், **கருங்குதிரை** என்பதற்குத் தொகைவிரி **கரியது குதிரை** என்பதே. சேனாவரையர் 'பண்புத் தொகையும் வினைத் தொகைபோலப் பிரிக்கப்படாதாம்' என்று கூறுகின்றனர். இவ்வாறு கூறுவது 'இன்னது இது' என்று சூத்திரித்த ஆசிரியர் தொல்காப்பியனாருக்குச் சம்மதமின்று என நச்சினார்க்கினியர் சேனாவரையரை மறுக்கின்றனர். மேலும், '...உயர்திணை யஃறிணை யாயிரு மருங்கி-னைம்பா லறியும் பண்புதொகு மொழியும்...' (எழுத். 182) என்னுமிடத்து, **ஐம்பாலறியும்** என்ற சொல் **பண்பு** என்ற சொல்லை விசேடித்தலின்[1] சேனாவரையர் மதம் எவ்வாறு பொருந்தும் ?

இச்சூத்திர வுரையில் **தெய்வச்சிலையார்** 'வேற்றுமைத் தொகை, உவமத்தொகை, வினைத்தொகை, பண்புத்தொகை என்பன தம்முள் ஒருபுடை ஒப்புமையுடையவாதலிற் பாணினியார்

---

1. விசேடிப்பது=விசேஷணம். விசேடிக்கப்படுவது=விசேஷ்யம்.

25

தற்புருடசமாசம் என்று குறியிட்டார்' என்று கூறியிருத்தலைக் காண்க.

பா-ம்.—இ. சே. ந.—'சுவையினேன்று' தே.—'சுவையின்'.

பி-ம்—இ. நம.—இல் 225-வது பக்கத்தில் 'ஒழிந்த வினைத்தொகையும்' என்பதற்குமேல் 'பண்புத்தொகையும்' என்பதைச் சேர்த்தல் வேண்டும். 'சகரக்கிளவி, அகரமுதல...என இவையுங் கொள்க' என்னுமிடத்து அகரமுதல என்பது அகரமுதல் என்றிருப்பின் நலம்.

சே.—'முதனிலையாவது, கரியன் செய்யன்...முதனிலையாய்...' என்னுமிடத்து முதனிலையாவது என்பதற்குப் பிரதியாகத் தனிநிலையாவது என்றிருத்தல்வேண்டும். இதற்குக் காரணம் 'அச்சொல் தனிநிலையாய் உண், தின்...என்பனபோலப் பொருளுணர்த்தாமையின்' என்ற வாக்கியத்தை நோக்கின் நன்கு விளங்கும்.

417. இருபெயர் பலபெய ரளவின் பெயரே
யெண்ணியற் பெயரே நிறைப்பெயர்க் கிளவி
யெண்ணின் பெயரோ டவ்வறு கிளவியுங்
கண்ணிய நிலைத்தே யும்மைத் தொகையே.

இச்சூத்திரத்திலுள்ள இருபெயர், பலபெயர் என்ற சொற்களுக்கு உரையாசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் மூவரும் இரண்டு பெயர், பலபெயர் என்று பொருள்கொண்டனர். அவ்வாறாயின் பல பெயருக்குள் இருபெயரும் அடங்குதலின் இருபெயர் என்ற சொல் சூத்திரத்தில் எற்றுக்கு என்று ஆசங்கித்து

உரையாசிரியர் 'இரண்டனையும் பன்மையென்றவேண்டான் இவ்வாசிரியன் என்பது' என்றும், சேனாவரையர் 'வேற்றுமைத் தொகை முதலாயின பலசொல்லாற்றொகுதல் சிறுபான்மை; அதனான் உம்மைத்தொகை இருசொல்லானும் பல சொல்லானும் ஒப்பத்தொகு மென்பது அறிவித்தற்கு இருபெயர் பலபெயரென்றார்' என்றும், நச்சினார்க்கினியர் 'இரண்டாகிய பல பெயரினும், இரண்டிறந்த பலபெயரினுந் தொகுமென்பதற்கு இருபெயர் பலபெயர் என்றார்' என்றுங் கூறினர். தெய்வச்சிலையாரோ இருபெயர் என்பதற்குப் பொருட்பெயரும் தொழிற்பெயரும் என்றும், பலபெயர் என்பதற்குப் பன்மைக்குறித்தபெயர் என்றும்



பொருள்கூறி, இருபெயருக்கு உதாரணமாகக் கபிலபரணர், ஆடல்பாடல் என்றும், பலபெயருக்கு உதாரணமாகப் பார்ப்பார் சான்றோர் என்றுங் கூறினர்.

418. பண்புதொக வரூஉங் கிளவி யானு
மும்மை தொக்க பெயர்வயி னானும்
வேற்றுமை தொக்க பெயர்வயி னானு
மீற்றுநின் றியலு மன்மொழித் தொகையே.

இச்சூத்திரத்திற்குப் பொருள் உரைகாரர் நால்வரும் ஒருபடியாகவே கொண்டனர்.

சூத்திரத்தில் வேற்றுமைத்தொகையை முற்கூறாது பண்புத்தொகையை முற்கூறியதனால் 'ஒழிந்து நின்ற உவமத்தொகையும் வினைத்தொகையும் பற்றிப் பிறக்கும் அன்மொழித்தொகை என்பது' கொள்ளப்படுகின்றது என்பது உரையாசிரியர் மதம். சேனா

வரையர் 'பண்புத்தொகைநிலைக்களத்துப்பிறத்தல் பெரும்பான்மையாகலின், முறையிற்கூறாது அதனை முற்கூறினர்; வேற்றுமைத் தொகைநிலைக்களத்துப்பிறத்தலின் உம்மைத்தொகைநிலைக்களத்துப்பிறத்தல் சிறுபான்மையாயினும், ஒருபயனோக்கி அதனை அதன்முன் வைத்தார். யாதோ பயனெனின், சிறுபான்மை உவமத்தொகைநிலைக்களத்தும் வினைத்தொகைநிலைக்களத்தும் அன்மொழித்தொகை பிறக்குமென்ப துணர்த்துத லென்க' என்றார். நச்சினார்க்கினியர் சேனாவரையர் மதத்தைக் கைப்பற்றினர்.

தெய்வச்சிலையார் இச்சூத்திரவுரையில் 'துடியிடை எனவும் தாழ்குழல் எனவும் உவமத்தொகைப்புறத்தும், வினைத்தொகைப் புறத்தும் அன்மொழித்தொகை வருமாலெனின், துடி என்பதூஉம் தாழ் என்பதூஉம் இடை, குழல் என்பவற்றிற்கு அடையாகிவரினல்லது, அவற்றை யுடையாட்குப் பெயராகுங்கால், இறுதிநின்ற பெயர்ப்பொருண்மை வந்து ஏனைய வாராமையின் ஆகுபெயரெனினல்லது அன்மொழித்தொகை யாகாதெனக் கொள்க. அதனானேயன்றே இருபெயரொட்டும்[1] என ஆகுபெயர்க்

(1) தாழ்குழல் என்பது இருபெயராலாகிய தொகையல்லாமையின் அதனை இருபெயரொட்டு என்று கூறுதல் பொருந்துமோ வெனின், இருபெயரொட்டு என்ற குறி பிரதானமாய்த் துடியிடை போன்ற சொற்களுக் கென்றும், தாழ்குழல் முதலியவற்றிற்கு அப்பிரதானமாய் வந்ததென்றும் கூறல் வேண்டும்.



கண் எடுத்தோதுவாராயினர் என உணர்க' என்றும், 'முதலிற் கூறுஞ் சினையறி கிளவியும்...' (சொல். 114) என்ற சூத்திரத்தின்

உரையில் 'இருபெயரொட்டு என்பது இரண்டுபெயர் தொக்கு ஒருசொன்னீர்மைப்பட்டு மற்றொருபொருள் தருபெயராகி வருவது. அது துடியிடை என்பது; துடிபோன்ற இடையினை யுடையாளைத் துடியிடை என்பவாகலின் ஆகுபெயராயிற்று. இஃது உவமத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை யன்றோ வெனின், ஆகுபெயராவது ஒட்டுப்பட்ட பெயரோடு ஒற்று மைப்பட்டுவரும், [1]அன்மொழித்தொகையாவது அப்பொருளின் வேறுபட்டுவரும். அன்னதாதல் அன்மொழி என்றதனுலும் விளங்கும்' என்றுங் கூறினர். ஆசிரியர் இச்சூத்திரத்தில் உவமை தொக்க பெயர்வயி னானும், வினை தொக்க பெயர்வயி னானும் என்று கூறாமையின் தெய்வச்சிலையார் கூறுவதே ஆசிரியர் மத மென்பது நன்கு பெறப்படும்.

உதாரணத்தில் வெள்ளாடை என்பதைச் சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் 'வெள்ளாடையுடுத்தாள்' என விரிக்கின்ற னர். உரையாசிரியர் 'அன்மொழியாயக்காலும் வெளியது ஆடை என்றே விரியும், பிறிதில்லை' என்று கூறுகின்றனர். அதன்கருத்து வெளிய தாடை யுடையாள் என்று விரித்தல்வேண்டுமே யன்றி வெளிய ஆடை உடையாள் என்று விரித்தல்கூடாது என்பதே.

419. அவைதாம்,

[2] முன்மொழி நிலையலும்[3] பின்மொழி நிலையலு[4]
மிருமொழி மேலு மொருங்குட னிலையலு[5]
மம்மொழி நிலையா தன்மொழி நிலையலு[6]
மந்நான் கென்ப பொருணிலை மரபே.

உரையாசிரியர் முன்மொழிப்பொருளுணர நின்றதற்கு வேங் கைப்பூ என்பதனையும், இருமொழிப்பொருளுணர நின்றதற்கு

1. இடை என்பது ஒருவரின் அங்கம்; ஆடை என்பது வேறுபட்ட பொருள்.

2. தொல்காப்பியத்தில் முன் என்பதற்கு இடமுன்னே பொருள்.

3. முன்மொழி நிலையல் = उत्तरपदार्थप्रधान:
4. பின்மொழி நிலையல் = पूर्वपदार्थप्रधान:
5. இருமொழிமேலு மொருங்குடனிலையல் = उभयपदार्थप्रधान:
6. அன்மொழி நிலையல் = अन्यपदार्थप्रधान:



உவாப்பதினான்கு என்பதனையும் அன்மொழிப்பொருள்பட நின்றதற்கு **வெள்ளாடை** முதலியவற்றையுங் காட்டினர். பின்மொழிப் பொருளுணர நின்றதற்கோ **வேங்கைப்பூ** என்பதனையே காட்டி, அது காலவகை நோக்கி அவ்வாறாயிற்று என்றார். **சேனாவரையர்** 'வேற்றுமைத்தொகை முதலா னான்குதொகையும் முன்மொழிப் பொருள; வேற்றுமைத்தொகையும் பண்புத்தொகையுஞ் சிறுபான்மை பின்மொழிப்பொருளவுமாம்; உம்மைத்தொகை இருமொழிப்பொருட்டு' என்று கூறி அவற்றிற்கு வேங்கைப்பூ, அடைகடல், உவாப்பதினான்கு என்பவற்றை உதாரணமாகக் கூறினர். **நச்சினார்க்கினியர்** வேற்றுமைத்தொகையிற் பின்மொழி நிலையலுக்கு **ஆரமாலை** என்பதனையும், உவமத்தொகையிற் பின்மொழி நிலையலுக்குப் **பெண்ணணங்கு** என்பதனையும், பண்புத்தொகையிற் பின்மொழிநிலையலுக்கு **அடைகடல்** என்பதனையும் உதாரணமாகக் கூறினர்.

420. **எல்லாத் தொகையு மொருசொன் னடைய.**

**பொருள்.** உ.—அறுவகைத் தொகைச்சொல்லும் எழுவாய் வேற்றுமை யியல்பாம் என்று ஈண்டு எய்துவித்தார் என்பது.

சே.—அறுவகைத் தொகைச்சொல்லும் ஒரு சொல்லாய் நடத்தலையுடைய என்று.

ந.—இருமொழித்தொடரின்கண்ணும் பன்மொழித்தொடரின்கண்ணுந் தொக்குநிற்கும் எல்லாத்தொகைச்சொற்களும், ஒரு சொல் நின்று தன்னை முடிக்குஞ்சொற்களோடு முடியுமாறு போலத் தாமும் தம்மைமுடிக்குஞ் சொற்களோடு முடிதலையுடைய எ-று.

தே.—அறுவகைத் தொகைச்சொல்லும் ஒருசொல் நடைய எ-று.

**சேனாவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார்** இம் மூவரது பொருளும் ஒன்றே. உரையாசிரியர்கூறியபொருளைச் சேனாவரையர் 'பெயரினாகிய தொகையுமாருளவே' (சொல். 67) என்ற சூத்திரத்தின் உரையில் மறுத்துள்ளார்.

நிலங்கடந்தான் என்பதைச் **சேனாவரையர்** தொகையாகக் கொண்டதற்குக் காரணம் 'பெயருந் தொழிலும் பிரிந்தொருங் கிசைப்ப.........தோற்றம் வேண்டாத் தொகுதிக் கண்ணும்...'



(எழுத். 132) என்ற சூத்திரத்தில் **தொகுதி** என்பதற்குச் சமாசன் என்று பொருள் கொண்டதேயாம். தொகுதி என்ற சொல்லைச் சமாசன் என்றபொருளைத் தவிர வேறுபொருள்களிலும் ஆசிரியர் வழங்கியிருத்தலானும்[1] பெயரும் வினையும் தொகும் என்பதை ஆசிரியர் சூத்திரத்திற் கூறாமையானும் 'பெயரினாகிய தொகையுமா ருளவே...' (சொல். 67) என்ற சூத்திரத்தில் **உம்மைக்குப் பொருளாக** அதனைச் சந்தருப்பத்திற்கு விரோதமாகச் சேனா வரையர் கொள்ளவேண்டியிருத்தலானும், **உரையாசிரியரும் தெய்வச்சிலையாரும்** கொண்டவாறே கொள்ளுதல் நலம்.

இச்சூத்திரவுரையில் நச்சினார்க்கினியர் சேனவரையர் மதத்தைக் கைப்பற்றி, நிலங்கடந்தான், குன்றத்திருந்தான் என்பனவற்றைத் தொகையாகக் கொண்டனர். 'பெயருந் தொழிலும்......' (எழுத். 132) என்ற சூத்திரத்தின் பொருளைக் கூறுமிடத்துப் பெயருந் தொழிலும் பிரிந்திசைத்தவழியுந் தொகையாதல் ஆசிரியர்க்குக் கருத்தாயிற்று' என்றார். அந்நுவயத்தில் உரையாசிரியர் மதத்தையும், தொகுதி என்ற சொல்லின் பொருளிற் சேனவரையர் மதத்தையும் கைப்பற்றிப் **பிரிந்திசைத்தவழியுந் தொகையாகும்** என்று கூறுவது எவ்வாறு பொருந்தும்?

பா-ம்.—சே. சை.—'தொகையல் தொடர்மொழி'. சே. தா.—'தொகையது தொடர்மொழி'. முன் பாடமே பொருந்தும்.

421. ²உயர்திணை மருங்கி னும்மைத் தொகையே
பலர்சொன் னடைத்தென மொழிமனார் புலவர்.

கபிலனும் பரணனும் என்பது தொகும்போது கபிலபரணன் என்று தொகுமா? கபிலபரணர் என்று தொகுமா? என்ற ஐயத்தை இச்சூத்திரம் நீக்கிற்று.

422. வாரா மரபின வரக்கூ றுதலு
மென்ன மரபின வெனக்கூ றுதலு
மன்னவை யெல்லா மவற்றவற் றியல்பா
னின்ன வென்னுங் குறிப்புரை யாகும்.

---

1. இனைத்தென வறிந்த சினைமுதற் கிளவிக்கு
வினைப்படு தொகுதியி னும்மை வேண்டும் (சொல். 33).

2. जातिरप्राणिनाम् (அஷ். 2, 4, 6.)



இச்சூத்திரவுரையில் உரையாசிரியர் 'நிலம் வல்லென்றது'

என்று கூறினதைச் சேனவரையர் 'சொலற்பொருளவன்மையின் அவை கர்ட்டல் அவர் கருத்தன்றென்க' என்று கூறி மறுத்தனர்.

பி-ம்.—இ. நம.—இல் 'நிலம் வல்லென்றது' என்பதற்கு மேல் 'நீர் தண்ணென்றது' என்றிருத்தல் வேண்டு மென்பது சேனவரையத்தால் அறியப்படுகின்றது.

423. இசைபடு பொருளே நான்குவரம் பாகும்.
424. விரைசொல் லடுக்கே மூன்றுவரம் பாகும்.

பா-ம்.—இ. சே. தா.—இசைபடுபொருளே. சே. சை. ந. தே.—இசைப்படுபொருளே.

பி-ம்.—இ. நம.—இல் 'அவ்விரண்டெண்ணின் நான்காகப்படும் அசைநிலை' என்னுமிடத்து அவ்விரண்டெண்ணின் நான்காகப்படும் என்பதற்குப் பிரதியாக அவ்விரண்டெண்ணினு லடுக்கப்படும் என்றிருத்தல்வேண்டும்.

சேனவரையர், "முன்னர்க்கூறப்படும் அசைநிலை அடுக்கிவரு மென்பது அதிகாரத்தாற் கோடற்பொருட்டு, 'இசைநிறை யசைநிலை' என்னுஞ் சூத்திரத்தின்பின் வையாது இச்சூத்திர மிரண்டணையும் ஈண்டு வைத்தார்" என்று கூறுவது பொருத்தமாகத் தோன்றவில்லை.

தெய்வச்சிலையார், இவ்விரண்டுசூத்திரங்களுக்குமுன் 'இசை நிறை யசைநிலை...' என்னுஞ் சூத்திரத்தை வைத்தது மிகப் பொருத்தமாயுள்ளது.

425. கண்டீ ரென்ற கொண்டீ ரென்ற

சென்ற தென்று போயிற் றென்று
வன்றி யனைத்தும் வினவொடு சிவணி
நின்றவழி யசைக்குங் கிளவி யென்ப.

பொருள். உ.—வினைச்சொற்கள் இங்ஙனம் வினவொடு பட்டு நின்றவழியாயக்கால் அசைச்சொல்லாய் நிற்கும் என்பது கருத்து.



சே. ந.—கண்டீரெனவும், கொண்டீரெனவும், சென்றதென வும், போயிற்றெனவும் வரும் வினைச்சொன்னான்கும், வினவொடு பொருந்திநின்றவழி அசைநிலையடுக்காம் எ-று.

தே.—கண்டீர் என்பது முதலாக ஓதப்பட்ட சொற்கள் வினப்பொருள் உணர்த்துஞ் சொல்லொடு கூடிநின்றவழி அப் பொருளினை யிசைக்குஞ் சொல்லாம் எ-று. எனவே அச்சொற் களோடு கூடாதவழி அசைநிலையா மென்றவாறும்.

உரையாசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் இம்மூவர் கூறும் பொருள் ஒன்றே. தெய்வச்சிலையார் கூறுவது வேறு. சூத்திரத்தில் அசைக்கும் என்பதற்குப் பிரதியாக இசைக்கும் என்பது அவரது பாடமாதலின் அவ்வாறு கூறினரெனினும், 'கேட்டை யென்று...' (சொல். 426) என்ற மேற்சூத்திரத்தில் 'முன்னுறக் கிளந்த வியல்பா கும்மே' என்பதற்கு அசைநிலையாகு மென்று அவரே பொருள்கூறுதலின் உரையாசிரியர் முதலியோ ரின் கொள்கையே தக்கது. அவ்வாறாயின் தெய்வச்சிலையார் காட்டிய 'படையிடுவான் மற்கண்டீர் காமன்—மடையடும் பாலொடு கோட்டம்புகின்' என்ற உதாரணத்தில் கண்டீர் என்பது

அசைநிலை யென்பது எற்றாற் பெறப்படுமெனின், 'செய்யுண் மருங் கினும் வழக்கியன் மருங்கினும்...' (சொல். 463) என்ற புறன டைச் சூத்திரத்தாலெனக.

பா-ம். இ.ந. தே.—'இசைக்கும்'. சே. 'அசைக்கும்'. உரை யாசிரியரும், நச்சினார்க்கினியரும் அவர்களது உரையில் இசைக் கும் என்பதற்கு அசைநிலையாய் நிற்கும் என்று பொருள் கொள் ளுதலின், அசைக்கும் என்ற பாடமே அவர்களது நோக்கமாயிருக் கலாம்.

426. கேட்டை யென்றா நின்றை யென்றா
காத்தை யென்றா கண்டை யென்றா
வன்றி யனைத்து முன்னிலை யல்வழி
முன்னுறக் கிளந்த வியல்பா கும்மே.

ஈண்டு 'முன்னிலையல்வழி' என்பதற்கு முன்னைய நான்கும் போல வினாவொடுபடாது வாளாதே நின்றுழி என்று உரையாசிரி யரும், முன்னிலையல்லாக்கால் என்று ஏனையோரும் பொருளு ரைத்தனர். 'சேனாவரையர் 'வினாவொடு சிவணல் இவற்றிற்



கொன்றுனெய்தாமையின் விலக்கவேண்டா; அதனான் அவர்க்கது கருத்தன்றென்க' என்று உரையாசிரியரை மறுத்தனர்.

427. இறப்பி னிகழ்வி னெதிர்வி னென்றச்
சிறப்புடை மரபி னம்முக் காலமுந்
தன்மை முன்னிலை படர்க்கை யென்னு
மம்மு விடத்தான் வினையினுங் குறிப்பினு
மெய்ம்மை யானு மீரிரண் டாகு

மவ்வா றேன்ப முற்றியன் மொழியே.

பொருள். உ.—இறந்தகாலம் எதிர்காலம் நிகழ்காலம் என்னும் மூன்று காலமும் உடையவாய்த் தன்மை முன்னிலை படர்க்கை யென்னும் மூன்றிடத்தும் வினையும் வினைக்குறிப்பும் பற்றி, அம்மூன்றிடங்கடோறும் வினையும் வினைக்குறிப்பும் என இரண்டாம்: அவ்வாறுகூற்றச் சொற்களை முற்றுச்சொல் என்று கூறுப ஆசிரியர் எ-று.

சே.—முற்றுச்சொல்லாவது, இறப்பு நிகழ்வு எதிர்வென்னும் மூன்று காலமும், தன்மை முன்னிலை படர்க்கை யென்னும் மூன்றிடத்தும், உயர்திணையும் அஃறிணையும் இருதிணைப் பொதுவுமாகிய பொருடோறும், வினையானுங் குறிப்பானும் இவ்விரண்டாய் வரும் அவ்வறுவகைச்சொல்லாமென்று சொல்லுவர் ஆசிரியர் எ-று.

ந.—தன்மை முன்னிலை படர்க்கை யென்று சொல்லப்பட்ட அம்மூன்றிடத்தினகண்ணும் வரும் உயர்திணை அஃறிணை விரவுத்திணை யென்னும் மூவகைப்பொருடோறும், தெரிநிலைவினையானுங் குறிப்புவினையானும் இவ்விரண்டாய் வருமென்று யான் முற்கூறிய அவ்வாறுவகைச் சொல்லை இறப்பு ஒன்றுனும் நிகழுஞ் சிறப்புடை மரபானும், நிகழ்வு ஒன்றுனும் நிகழுஞ்சிறப்புடைமரபானும், எதிர்வு ஒன்றுனும் நிகழுஞ் சிறப்புடை மரபானும் அம்முக்காலத்தும் நிகழுஞ் சிறப்புடை மரபானும் இயலும் முற்றுச் சொல்லென்று பெயர் கூறுவர் ஆசிரியர் எ-று.

தே.—இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என வினைச்சொற்குச் சிறப்புடைத்தாகிய மூன்று காலத்தானும், தன்மை முன்னிலை படர்க்கை என்னும் மூன்றிடத்தானும், தொழிலானும்,

குறிப்பானும், பொருளானும் முற்று இயலும் மொழிவகை நிலைமையான் இருபத்து நான்கு எ-று. (அவையாவன:—தன்மைக் கண் எட்டும், முன்னிலைக்கண் எட்டும், படர்க்கைக்கண் எட்டும் ஆம். ஒருமையும் பன்மையும் எனத் தமிழ்நடை இருவகைப்படு தலின் தன்மைக்கண் வரும் எட்டும், ஒருமை உணர்த்துவன நான்கும் பன்மை உணர்த்துவன நான்கும் என இருவகைப்படும்.)

சூத்திரத்தில் மெய்ம்மை என்பது வினையையும் வினைக் குறிப்பையும் குறிக்கின்றது என்று உரையாசிரியரும், உயர்திணை, அஃறிணை, விரவுத்திணை, இம்மூன்றனையுங் குறிக்கின்றது என்று சேனாவரையரும், நச்சினார்க்கினியரும், ஒருமை பன்மை இவற்றைக் குறிக்கின்றது என்று தெய்வச்சிலையாரும் கூறினர்.

'ஈரிரண்டாகுமவ்வாறு' என்பதற்கு இருபத்துநான்கு என்று தெய்வச்சிலையார் கொள்ளும் பொருள் பொருத்தமுடைத்து. மேலும் 'பிரிநிலை வினையே...யாயீ ரைந்து...' (சொல். 430) என்ற சூத்திரம் எஞ்சுபொருட்கிளவி பத்துவகைப்படும் எனத் தொகுத்துக் கூறியவாறு, இச்சூத்திரம் முற்றுவினை இருபத்துநான்கு வகைப்படும் எனத் தொகுத்துக்கூறிற்று என்னலாம்.

இச்சூத்திரத்தாற் பயன் யாது என்று வினவி 'அச்சொற்கு முன்பு முடிபு கூறி, ஈண்டுக் குறியிட்டான் என்பது பயன்' என்று

கூறினர் உரையாசிரியர். சேனவரையர் "குறியீடு கருத்தாயின், 'அவ்வாறென்ப முற்றியன் மொழியே' என்னுது அவ்வாறு முற்றியன் மொழியெனல் வேண்டுமாகலான், அது போலியுரை யென்க. முற்றியன் மொழியென்ப என மொழிமாற்றவே குறியீடாமெனின், குறியீடு ஆட்சிப்பொருட்டாகலின், அக்குறியான் அதனையாளாமையான், மொழிமாற்றி யிடர்ப்படுவ தென்னையோவென்பது. அல்லதூஉம், முற்றியன் மொழியெனக் குறியிட்டாராயின், இவை பெயரெஞ்சு கிளவியெனவும், இவை வினையெஞ்சு கிளவியெனவுங் குறியிடல் வேண்டும்; அவ்வாறு குறியிடாமையானும் அது கருத்தன்றாம்" என்று உரையாசிரியர் கொள்கையை மறுத்து 'அதனன் வினைச்சொல்லுள் இருவகையெச்சமொழித்து ஒழிந்த சொன் முற்றிநிற்குமென்றாம், அவை இனைத்துப் பாகுபடுமென்றாம், உணர்த்தல் இச்சூத்திரத்திற்குக் கருத்தாகக் கொள்க' என்றனர்.



நச்சினார்க்கினியர் "அம்மாம்' என்னுஞ் சூத்திரம் முதலாகப் 'பல்லோர் படர்க்கை' என்னுஞ் சூத்திர மிறுதியாக மூவகையிடமும் ' மூவகைப்பொருளும் இருவகைவினையும் எடுத்தோதியவற்றை ஈண்டும் ஓதியது அநுவாதமாயிற்று. ஆண்டு ஓதாது எஞ்சிநின்ற காலமுங் குறியீடும் ஈண்டு ஓதியது இலக்கணமாயிற்று. முன்னர்க் 'குறிப்பினும் வினையினும்...' என்னுஞ் சூத்திரத்தில் 'காலமொடு வரூஉம் வினைச்சொல் லெல்லாம்...' என்றது மூவகை வினைக்கும் பொதுவாய் நின்று ஒரோவோர் முற்றுவினையும் முக்காலமும் பெற்றே வருமென்னும் ஐயம் நிகழ்த்திற்றதனை

ஓரோவோர் காலம்பெற்று வருவனவும் முக்காலம்பெற்று வருவனவுமாய் நிற்கும் முற்றென ஐயம் அகற்றினர் இச்சூத்திரத்தான்'' என்றார்.

சேனாவரையர், இங்கு, 'வினைச்சொல்லுள் இருவகை யெச்சமொழித்து ஒழிந்த சொன் முற்றிநிற்குமென்றாம், அவை இனைத்துப்பாகுபடுமென்றாம் உணர்த்தல் இச்சூத்திரத்திற்குக் கருத்தாகக் கொள்க' என்றாரேனும், முன்பு "முற்றிநிற்றல் முற்றுச்சொற்கிலக்கணமாதல் 'முற்றியன் மொழியே' என்பதனாற் பெற்றாம்'' என்று கூறினமையான், 'அவை இனைத்துப் பாகுபடும் என்று உணர்த்தல் இச்சூத்திரத்தில் விதேயமாகும் என்பதே' அவர் கருத்தாகும்.

நச்சினார்க்கினியர் 'காலமுங் குறியிடும் ஈண்டு ஓதியது இலக்கணமாயிற்று' என்று கூறி, ஓரோவோர் காலம் பெற்று வருவனவும் முக்காலமும் பெற்று வருவனவுமாய் நிற்கும் முற்றென ஐயம் அகற்றினர் இச்சூத்திரத்தான்' என்று கூறுவது முன்னுக்குப் பின் முரணுகின்றது. ஐயம் எதனால் அகற்றப்பட்டது? இது இனைத்துப்பாகுபடும் என்றதனால் அன்றோ? ஆதலின் இனைத்துப் பாகுபடும் என்று கூறுவதே இச்சூத்திரத்திற்குப் பயன் என்று அவர் கூறல்வேண்டும்.

பா-ம். சே. தா.—ந. தே.—'ஈரிரண்டாகும்'. இ. சே. சை.—'இவ்விரண்டாகும்'. முன் பாடமே பொருத்தமுடைத்து.

பி-ம். சே. தா.—'பண்புமாகிய' என்பது 'பண்பியுமாகிய' என்றிருத்தல் வேண்டும்.

இச்சூத்திரத்தையும் இதற்கடுத்த இரண்டு சூத்திரங்களையும் தெய்வச்சிலையார் வினையியலின் இறுதியில் கூறினர். எச்சவியலிற் கூறுவதே பொருந்தும்.

428. எவ்வயின் வினையு மவ்விய னிலையும்.

பொருள். உ.—மேற்கூறப்பட்ட முற்றுச் சொல்லேயன்றிப் பெயரெச்சமும் (வினையெச்சமும்) மூன்று காலமும் மூன்றிடமும் உடையவாய் வினையும் வினைக்குறிப்பும் பற்றிவரும் என்பான் 'எவ்வயின் வினையும் அவ்விய னிலையும்' என்றான் என்பது. (மற்று, 'வினையெனப்படுவது...' (வினை. 1) என்புழி எல்லா வினைச்சொல்லும் மூன்று காலத்திற்கும் உரிய எனப்பட்டது. இனி 'எஞ்சியகிளவி யிடத்தொடு சிவணி யைம்பாற்கு முரிய' (வினை. 26) என்புழி எவ்விடத்திற்கும் உரிமையுங் கூறப்பட்டது. பிறவெனின், மேல் அங்ஙனங் கூறினரேனும், அது விலக்குப் பட்டது ஈண்டுப் போதந்து முற்றுச் சொல்லே விதந்து மூன்றிடத்திற்கும் உரிய என்றமையான், அது நோக்கி யீண்டு இது கூறினர் என்பது).

சே.—மூவிடத்தாற் பொருடோறும் இவ்விரண்டா மென மேற்சொல்லப்பட்ட கட்டளையுட் பட்டடங்காது பிறண்டு வரும் வினையும் முற்றியல்பாய் நிலையும் எ-று.

ந.—மூன்றிடத்துவரும் வினையெச்சமும் பெயரெச்சமும் அம்முற்றியல்பிலே நிற்கும் எ-று. (இருவகை எச்சத்திற்கும் 'கால மொடு வரூஉம் வினைச்சொ லெல்லாம்...' (சொல். 201) என்ற பொதுவிதியான் முக்காலமும் ஒன்றற்கு வருமோ என்னும் ஐயம் நிகழ்ந்ததனை இச்சூத்திரத்தான் அகற்றினர். முற்றி லக்கணங் கூறுதற்கு இடையே இச்சூத்திரத்தான் எச்ச இலக் கணத்தைக் கூறினர், பருந்து விழுக்காடாக மாட்டேறிற் றென்று கருதி.)

தே.—தொழிலும் காலமும் இடமும் பாலும் உணரவரும் வினைச்சொலன்றி, மூன்றிடத்திற்கும் பொதுவாகிவரும் வினைச் சொல்லும் முற்றும் நிலைமையைப் பெறும் எ-று. அவையாவன வியங்கோள், இன்மைசெப்பல், வேறென்கிளவி, செய்ம்மன, பெயரெச்சமல்லாத செய்யும் என்னுஞ் சொல்.



தேனுவரையர் தெய்வச்சிலையார் இவ்விருவரது உரை யும் ஒன்றே. அஃதே பொருத்தமுடைத்து.

'வினையெனப் படுவது...' (வினை. 1) 'எஞ்சிய கிளவி... (வினை. 26) என்ற சூத்திரங்களால் கூறப்பட்ட எல்லா வினை களுக்கு முரிமை 'இறப்பி னிகழ்வின்...' (சொல். 427) என்ற சூத்திரத்தால் விலக்கப்பட்டது என்று உரையாசிரியர் கூறுகின் றார். அச்சூத்திரம் (சொல். 427) முற்றுச்சொல் என்ற குறி யிடுவதற்கு வந்தது என்று அவரே கூறுதலின், அது பொருந் தாது.

சேனாவரையத்தில் இனி ஒருரை:—மேலைச்சூத்திரத்தாற் கூறப்பட்ட பொருண்மேலும் வரும் எல்லா வினையும் முற்றுச்சொல்லாய் நிற்கும் எ-று. ஈண்டு வினையென்றது வினைச் சொல்லை யாக்கு முதனிலையை. எல்லா வினையும் முற்றுச் சொல் லா மெனவே, எச்சமாதல் ஒருதலை யன்றென்பதாம். ஆகவே, வினைச்சொலாதற்குச் சிறந்தன முற்றுச்சொல்லே யென்ப தாம்:—என்றுளது. இதனை நச்சினார்க்கினியர் 'அம்முதனிலை படுத்தலோசையாற் பெயர்த்தன்மைப்பட நிற்குமாறும் எடுத்த லோசையான் முன்னிலை யேவலொருமை வினைமுற்றாய் நிற்குமா றும் 'இர் ஈர் மின்...' (சொல். 224) என்னுஞ் சூத்திரத்துட் கூறினும்' என்று மறுத்தனர். ஈண்டு 'எச்சமாதல் ஒரு தலை யன்று' என்பது பெறப்படும் என்று கூறுவதால் பெரும் பயனின் மையானும், வியங்கோள் முதலியன முற்றுச்சொல்லா அல்லவா என்ற ஐயத்தை நீக்கவேண்டுவது அவசியமாதலானும் இவ்வுரை சேனாவரையரால் எழுதப்பட்டதன்று. ஆயினும் இவ்வுரையை நச்சினார்க்கினியர் மறுத்தலால் அவர் காலத்துக்கு முன்பே ஏட்டிற் படிப்போராற் சேர்க்கப்பட்டிருத்தல்வேண்டு மென்பது என்கருத்து.

"இருவகை எச்சத்திற்கும் 'காலமொடு வரூஉம் வினைச் சொலெல்லாம்' என்ற பொதுவிதியான் முக்காலமும் ஒன்றற்கு வருமோ என்னும் ஐயம் நிகழ்ந்ததனை இச்சூத்திரத்தான் அகற்றி னார்" என்ற நச்சினார்க்கினியர் கொள்கையும் பொருத்தமாகத் தோன்றவில்லை.

பா-ம். இ. நம.—இல் 'மேற்கூறப்பட்ட முற்றுச்சொல்லே யன்றிப் பெயரேச்சமும்' என்பதற்குமேல் 'வினையெச்சமும்'

என்ற சொல் இருத்தல் வேண்டுமென்பதற்கு 'இது மூற்றுச் சொல்லொழித்து ஒழிந்த பெயரெச்ச வினையெச்சங்கட்கு ஆவ தோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று' என்ற உரையாசிரி யர் வாக்கியமே தக்க சான்றும்.

429. அவைதாம்
தத்தங் கிளவி யடுக்குந வரினு
மெத்திறத் தானும் பெயர்முடி பினவே.

இச்சூத்திரத்திற்கு உரைகாரர்கள் நால்வரும் ஒருவகை யாகவே பொருள்கொண்டனர். அடுக்கிவரினும் என்ற உம் மையால் அடுக்காது வரினும் என்பது பெறப்படுகின்றது என்று சேனாவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார் மூவருங் கூறி னர். எத்திறத்தானும் என்பது முற்றுவினை பெயரைப்பின் னடுத்தும் வரும் என்பதனை அறிவிக்கின்றது என்று நால்வருங் கூறினர். சேனாவரையரும், நச்சினார்க்கினியரும் 'என்மனார் புல வர், மூப்பஃதென்ப என வெளிப்பட்டும் வெளிப்படாதும் பெயர் முடிபாம்' என்பதனையும் அறிவிக்கின்றது என்று உணர்த் தினர்.

சேனாவரையர் ''தம்பாற்சொல்லல்லது பிறபாற்சொல்லொடு விராயடுக்கின்மையின், 'தத்தங்கிளவி' என்றார்'' என்கின்றனர். தெய்வச்சிலையார் 'தத்தங்கிளவி என்றதனான் ஒரு காலத்திற் கேற்ற வினையே அடுக்குவது என்று கொள்க' என்றார்.

இச்சூத்திரம் எற்றுக்கு எனின், முற்றுவினை அடுக்கிவரின் ஒன்றனை யொன்று தழுவாது பெயரையே ஒவ்வொன்றுந் தழு வும் என்பதை அறிவித்தற்காகும்.

430. பிரிநிலை வினையே பெயரே யொழியிசை
யெதிர்மறை யும்மை யெனவே சொல்லே

குறிப்பே யிசையே யாயீ ரைந்து
நெறிப்படத் தோன்று மெஞ்சுபொருட் கிளவி.

இச்சூத்திரத்திலுள்ள எஞ்சுபொருட்கிளவி என்பதற்கு உரையாசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் இம்மூவரும் எச்சச்சொல் என்று பொருள்கொண்டனர். சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் 'எஞ்சுபொருட்கிளவி கொண்டல்லது அமை-



யாமையின் எச்சமாயினவும், ஒரு தொடர்க்கு ஒழிபாய் எச்சமாயினவுமென அவை இருவகைப்படும்' என்றனர். அஃதாவது பிரிநிலையெச்சம் வினையெச்சம் முதலிய ஏழுக்கும் அவற்றை முடிக்குஞ் சொல் உண்டென்பதும், சொல்லெச்சம் முதலிய மூன்றுக்கும் அவற்றை முடிக்குஞ் சொல் இல்லை யென்பதும் ஆகும். தெய்வச்சிலையார் அவ்வாறு கூறாது எஞ்சுபொருட்கிளவி என்பதற்கு 'சொல்லாதொழிந்த பொருளை இனிது விளக்குஞ்சொல்' என்றும், நெறிப்படத்தோன்றுதல் என்பதற்கு 'வாக்கியமாகிய தொடர்மொழிக்கண் முன்னும் பின்னும் நின்ற சொல்லை நெறிப்படுத்தற்கு ஆண்டுத்தோன்றுதல்' என்றும் பொருள் கூறுகின்றனர். அன்றியும் பிரிநிலையெச்சம் முதலியவற்றிற்கு அவர் கூறும் பொருள் வருமாறு:—பிரிநிலையெச்சமாவது பல பொருளில் ஒன்று பிரிந்தவழிப் பிரிக்கப்பட்ட பொருண்மையுந் தோன்ற நிற்பது. வினையெச்சமாவது ஒரு வினைச்சொல் எஞ்சி நிற்பது. பெயரெச்சமாவது ஒரு பெயர்ச்சொல் எஞ்சிநிற்பது. (அஃதேல்,

வினையெச்சம் பெயரெச்சம் என்பன வினையியலுள் ஓதப்பட்டன வலவோ எனின், ஆண்டு ஓதப்பட்டன பெயரையும், வினையையும் ஒட்டிநின்றியலும். ஈண்டையுன அன்ன வல்லவாமாறு உதாரணத்தால் விளங்கும்.) **ஒழியிசை யெச்சமாவது** சொல்லப்பட்ட பொருளை யொழியச் சொல்லாதொழிந்து நின்ற பொருளுந் தோன்ற நிற்பது. **எதிர்மறையெச்சமாவது** ஒருபொருளைக் கூறிய வழி, அதனின் மாறுபட்ட பொருண்மையும் அதனானே உணர நிற்பது. **உம்மையெச்சமாவது** உம்மை கொடுக்க வேண்டும்வழி, அஃது எஞ்சிநிற்றல். **என என்னெச்சமாவது** என வென்று சொல்லவேண்டும்வழி, அச்சொல் எஞ்சிநிற்பது. **சொல்லெச்சமாவது** ஒரு சொல்லினான் ஒருபொருளை விதந்தோதியவழி, அவ்விதப்பினானே பிறிதுமொரு பொருளைக் கொள்ளுமாறு நிற்பது. **குறிப்பெச்சமாவது** சொற்படுபொருளின்றிச் சொல்லுவான் குறித்த பொருள் எஞ்சி நிற்பது. **இசையெச்சமாவது** ஒருசொல் தனக்குரிய பொருளன்றிப் பிறிதுமொருபொருளை இசைக்குமாறு வருவது.

**பி-ம்.** இ. நம.—இல் 'பெயரெஞ்சுகிளவியென்றார் இறுதி விளக்காக' என்னுமிடத்து, **'பெயரெஞ்சுகிளவி'** என்பதற்குப் பிரதியாக **'எஞ்சுபொருட்கிளவி'** என்றிருத்தல் வேண்டும்.



**431. அவற்றுள்**
**பிரிநிலை யெச்சம் பிரிநிலை முடிபின.**

உரையாசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் மூவரும் பிரிநிலையெச்சமென்பது ஏகாரமும் ஓகாரமுமாகிய பிரிநிலையெச்சங்கள் எனக்கொண்டு, அவனே, (தானே) கொண்டான், அவனோ (தானோ) கொண்டான் என்ற உதாரணங்களைக் காட்டினர். ஆயினும், உரையாசிரியர் ஏகார ஓகாரங்கள் 'அவன்' என்பதைக்கொண்டு முடிவ தென்றும், சேனாவரையர் 'பிறர் கோண்டிலர்' என்பதைக்கொண்டு முடிவதென்றும், நச்சினார்க்கினியர் 'கோண்டான்' என்பதைக்கொண்டு முடிவதென்றுங் கூறினர்.

சேனாவரையர் 'பிரிநிலையோடு முடிதலாவது, அவனே கொண்டான் என்றவழி அவனே யென்பது கொண்டானெனப் பிரிக்கப்பட்ட பொருளை வினையெனக்கொண்டு முடிதலென்று ரால் உரையாசிரிய ரெனின்' என்று கூறி, 'அற்றன்று, அவனே கொண்டான் என்புழி அவனென்னும் எழுவாய்வேற்றுமை கொண்டானென்னும் பயனிலை கொண்டது; ஏகாரம் பிரிவுணர்த்திற்று, ஆண்டெச்சமும் எச்சத்தை முடிக்குஞ் சொல்லு மின்மையான், அவர்க்கது கருத்தன்றென்க' என்று உரையாசிரியரை மறுத்தனர்.

நச்சினார்க்கினியர் 'அவனென்பது கொண்டானென்பதனோடு முடிய ஏகார ஓகாரங்கள் பிறர் கொண்டிலர் என்பதனோடு முடிந்தன என்றல் பொருத்த முடைத்தெனின், வினையெச்சமும் பெயரெச்சமும் ஒழித்து இடைச்சொல்லான் வரும் எச்சங்கள் பொருள் தருமாறு இடைச்சொல்லோத்தினுட்கூறி, ஈண்டு அவற்றிற்கு முடிபுசொல் கூறுகின்றாராதலிற் கொண்டானென்னுஞ்சொல் வந்து அவ்வெச்சங்களை முடித்தாலல்லது பிறர் கொண்டிலர் என்னும் பொருண்மை முடிபு

தோன்றாதலிற் கொண்டானென்பதே முடிக்குஞ்சொல்லாய் நிற்பப் பிறர் கொண்டிலர் என்னும் பொருண்மை முடியத் தோன் றிற்றென்றலே பொருத்தமுடைத்தென்று கோடும். அன்றியும் மும்மையெச்சத்திற்கு உள்நின்ற பொருண்மைமுடிவு முன்னர்க் கூறி அதனை நீக்கிச் சொன்மைமுடிபு ஈண்டுக் கூறுகின்றதனானும்,



இஃதே ஆசிரியர் கருத்தென்று உணர்க' என்று கூறி, சேனு வரையரை ஒருவாறு மறுக்கின்றனர். இம்மறுப்புப் பொருத்த முடைத்து. ஆயினும், ஏகார ஓகாரங்களைப் பிரிநிலையெச்சங் களாகக் கொள்ளின் சூத்திரத்திலுள்ள 'பிரிநிலை முடிபின' என் பதற்குப் பொருள் ஏற்புடையதாகக்கூற இயலவில்லை.

**தெய்வச்சிலையார்** கூறும் உரை வருமாறு:—'மேற்சொல் லப்பட்டவற்றுள், பிரிநிலையாகிய எச்சம் அதன்கணின்றும் பிரிக்கப்பட்ட பொருளோடு தொடர்ந்து முடிவு பெறும் எ-று. உ-ம். 'இவன் கல்வியுடையன்' என்றவழிச் சொல்லுவான் இவ் அவையத்தாருள் என்று கருதினனாயின், இவ்வவையத்தாருள் என்பது எஞ்சிநின்று பிரிநிலை யெச்சமாயிற்று. இவட்குக் கண் ணழகிது என்றவழி, மற்றுள்ள உறுப்புக்களின் என்பது எஞ்சி நின்றது. இவை பிரிக்கப்பட்ட பொருளொடு தொடர்புபட்டு முற்றுப்பெற்றவெனக் கொள்க' என்பதே. இதுசிறந்து காட்டு கின்றது.

பத்து வகை யெச்சத்திற்கும் தெய்வச்சிலையார் கூறிய பொருள் அவினய நூலுக்கு உரைசெய்த இராசபவித்திரப்பல்லவ தரையன் மதத்தைப்பெரும்பாலும் ஒத்தவை என்பது நன்னூல் 359-வது சூத்திரத்தில் மயிலைநாதர் எழுதிய உரையால் அறியப்

படுகின்றது.

பி-ம். இ. நம.—இல் 'அவனே யெனப் பிரிக்கப்பட்டானையே கொண்டு முடிதல்' என்றுளது. சேனாவரையர் மறுப்பை நோக்கின், அஃது 'அவனே யெனப் பிரிக்கப்பட்ட சுட்டுப்பெயரின் வினையே கொண்டு முடிதல்' என்றிருத்தல் வேண்டுமெனத் தோன்றுகின்றது.

432. வினையெஞ்சு கிளவிக்கு வினையுங் குறிப்பு
நினையத் தோன்றிய முடிபா கும்மே
யாவயிற் குறிப்பே யாக்கமொடு வருமே.

இச்சூத்திரத்திற்குப் பொருள் உரையாசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் இம்மூவரும் வினையெச்சத்திற்குத் தெரிநிலைவினையுங் குறிப்புவினையும் முடிபாம்; ஆண்டைக் குறிப்பு வினை ஆக்கவினையோடுவருமென்று கூறினர்.

தெய்வச்சிலையார் 'வினையெச்சமாகவுடைய சொல்லிற்கு வினையும், வினைக்குறிப்பும் நினையத்தோன்றிய முடிபாகும். ஆண்டு





வினைக்குறிப்பு ஆக்கச்சொல்லோடு அடுத்து வரும்' என்று பொருள் கூறி, 'நினையத்தோன்றும்' என்றதனை, ஆராயத் தோன்று மென்று கொள்க. எனவே, வினையியலுட் கூறிய வினையெச்சம் ஆராய்தல்வேண்டாமையின், 'அஃதன்றென்று கொள்ளப்படும்' என்று கூறி, “அழுக்கா றுடையார்க் கதுசாலு மொன்னார், வழுக்கியுங் கேடீன் பது' என்பதனுள் கேடு பயத்தற்கு அழுக்காறு தானேயமையும், பகைவர் கேடுதருதல் தப்பியும் வரும் எனப் பொருளுரைக்க வேண்டுதலின், வரும் என்பது

எஞ்சிநின்றது...'' என்றார். அவர் மதத்தில் 'அழுக்கா றுடையார்க் கதுசாலு-மொன்னார், வழுக்கியுங் கேடீன் பது' என்ற சொற்றொடரே வினையெச்சமாகும். ஆனால் 'செய்து செய்யூ...' (சொல். 228) என்னுஞ் சூத்திரத்தில் வினையெஞ்சுகிளவி இவை தாம் என்று கூறிய ஆசிரியர் இங்கு அக்குறியீட்டுச்சொல்லை வேறு பொருளில் கூறுவரா? ஒரு குறியீட்டை இரண்டு பொருளில் வழங்குவது நான்முறைக்குத் தவறன்றே? ஆகலின் உரையாசிரியர் முதலியோர் மதமே சிறக்கும். அவ்வாறாயின் வினையெச்சத்திற்கு முடிபு வினையியலுட் கூறப்பட்டமையான் இச்சூத்திரம் எற்றுக்கு எனின், இச்சூத்திரம் பொதுவிதிச்சூத்திரமென்றும், அச்சூத்திரங்கள் நியமவிதிசூத்திரங்களென்றும் சேனாவரையர் கூறியதே அதற்குத் தக்க விடையாகும்.

சூத்திரத்தில் 'ஆகும்', 'வரும்' என்ற இருவினையிருத்தலின் அஃது இருதொடர்ப்படாதோ வெனின், சூத்திரத்திற்கு வினையெச்சம் தெரிநிலைவினையையும், ஆக்கமோடு கூடிய குறிப்பு வினையையும் முடிபாக உடைத்து என்று கருத்துக் கொள்ளின் அவ்வாறாகா தென்க.

பி-ம். இ-நம.—இல் ''மற்று, இச்சூத்திரத்தால் வினையெச்சத்திற்கு முடிபு கூறவேண்டியது என்னை? வினையியலுள் 'முதனிலை மூன்றும் வினைமுதல் முடிபின' (வினை. 31) என்றும், ஒழிந்தனவற்றுக்கு 'ஏனை யெச்சம் வினைமுத லானும்...' (வினை. 33) முடியு மென்றுங் கூறியதே அமையும் பிறவெனின், அதற்கு விடை—ஆண்டு வினைமுதலானும் முடியுமென்புழிப் பெயர் வினை முதலானும் முடியும் என்பதுபட்டது; என்னை? வினைவினை முதலென்றும், பெயர்வினைமுதல் என்றும் பகராது, பொது வகையாற் கூறினாராகலின், இச்சூத்திரம் வேண்டும்; இது கூறாக்

கால், உழுது சாத்தன் எனப் பெயர்வினைமுதலானும் முடிவான் செல்லும் என்பது" என்ற சொற்றொடர் உளது. இது படித்தோரால் ஏட்டிற் சேர்க்கப்பட்டிருத்தல் வேண்டும். ஏனெனின் வினைமுதல்முடிபின என்பதற்கு வினைமுதலின் முடிபை முடிபாக வுடையன என்றேனும், வினைமுதலை முடிபாகவுடையன என்றேனும் பொருள்கொள்ளவேண்டும். முற்கூற்றில் வினைமுதல் என்பதற்குக் கருத்தா என்பது பொருளாகும்; பிற்கூற்றில் ஆகுபெயரால் வினைமுதல்வினை என்பது பொருளாகும். அவ்வாறிருக்க 'வினைமுதல்' என்பது வினைவினைமுதல், பெயர்வினை முதல் என்றிருவகைப்படும் என்று கொள்ளுவது முற்றுந் தவறாகும். உரையாசிரியர் இவ்வாறு கூறார் என்பது திண்ணம்.

433. பெயரெஞ்சு கிளவி பெயரொடு முடிமே.

இச்சூத்திரத்திற்குப் பொருள் உரையாசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் இம்மூவரும் 'பெயரெச்சம் பெயரொடு முடியும்' என ஒருவகையாகவே பொருள் கூறினர். தெய்வச்சிலையார் 'பெயரெச்சமாகவுடைய சொல் பெயரொடு முடிவு பெறும்' என்று பொருள் கூறி, "'உயர்திணை யென்மனார் மக்கட் சுட்டே' என்பதனுள் 'என்மனார் ஆசிரியர்' என வேண்டுதலின் ஆசிரியர் என்னும் பெயர் எஞ்சிநின்றது" என்றுரைத்தனர். அவர் மதத்தில் 'உயர்திணை யென்மனார் மக்கட் சுட்டே' என்ற சொற்றொகுதியே பெயரெஞ்சுகிளவியாகும். இதுவே ஆசிரியர் கருத்தாயின் வினையெஞ்சுகிளவி என்ற குறியீட்டைப்போலவே பெயரெஞ்சுகிளவி என்ற குறியீட்டையும் இருபொருளில் அவர் வழங்காராதலின், உரையாசிரியர் முதலியோர் மதமே சிறந்தது.

பி-ம். இ-நம.—இல் "மற்று, இது கூறவேண்டியதென்னை ?

'நிலனும் பொருளும்...' (வினை. 35) பெயர் கொண்டுமுடிதல் கூறப்பட்டது பிறவெனின், அதற்கு விடை—ஆண்டு வினைமுதற் கிளவியும் வினையும் எனவே, வினைச்சொல்லும் முடியும் என்பது பட்டது: என்றது, வினைமுதற்கிளவி என்றக்கால் வினை வினைமுதலும் வினைமுதலாகலானும், இனி வினையென்றக்கால் வினைப்பெயரேயன்றி வினைச்சொல்லுமாகலானும் இச்சூத்திரம் வேண்டுமென்பது'' என்ற சொற்றொடர் உளது. இது படித்தோரால் ஏட்டிற் சேர்க்கப்பட்டிருத்தல் வேண்டும். ஏனெனில் 'நிலனும் பொருளும்...' (சொல். 234) என்றவிடத்து, வினை



என்பதற்கு **வினைச்சொல்** என்று பொருள்கொள்ளுவது சந்தருப்பத்துக்கு மாறுபாடாக விருக்குமாதலானும், அச்சூத்திரவுரையில் உரையாசிரியரே வினை என்பதற்கு உதாரணமாக ஊண் என்பதனைக் கூறினமையானும், வினைமுதற்கிளவி என்பதனைக் கருத்தா என்ற பொருளிலே ஆண்டு ஆசிரியர் தொல்காப்பியனார் வழங்கினரென்பது வெளிப்படையாதலானும் உரையாசிரியர் இவ்வாறு இங்குக் கூறார் என்பது திண்ணம்.

434. ஒழியிசை யெச்ச மொழியிசை முடிபின.

**பொருள்.** உ.—ஒழியிசையெச்சமாவன மூன்று; அவை மன்னை ஒழியிசையும், தில்லை ஒழியிசையும், ஒகாரவொழியிசையும் என; அவை மூன்றும் **ஒழியிசைப்பொருள் கொண்டு** முடியும் எ-று.

**சே.**—மன்னை யொழியிசையும், தில்லையொழியிசையும்,

ஓகாரவொழியிசையும் ஆகிய ஒழியிசை யெச்சமூன்றும் ஒழியிசையான் முடியும் எ-று.

ந.—மன்னும் தில்லும் ஓகாரமுமாகிய ஒழியிசையெச்சம் மூன்றும் அவ்வொழியிசைப்பொருண்மேல் வருஞ்சொல்லையே தமக்கு முடிபாக உடைய எ-று.

தே.—ஒழிந்த சொல்லை எச்சமாக உடையது அவ்வொழிந்த சொல்லினற் பொருள் முடிவு பெறும் எ-று. (இவர் கல்வியாற் குறைவிலர் என்றவழி, ஒழுக்கத்தாற் குறையுடையர் என்றுதல் பொருளாற் குறையுடையர் என்றுதல் ஒழிந்தபொருண்மை குறித்தவழி அப்பொருள் பட்டவாறும், அதனனே அச்சொல் முற்றுப்பெற்றவாறுங் கண்டு கொள்க.)

உரையாசிரியர், சேனவரையர், நச்சினர்க்கினியர் இம்மூவர் மதமும் ஒன்று: ஆனல், முடிபில் ஒழியிசைப்பொருளைக் கொள்ளும் என்று உரையாசிரியரும், ஒழியிசைச்சொல்லைக் கொள்ளும் என நச்சினர்க்கினியரும் கூறுதலின் ஒழியிசை முடிபில் அவர்கள் ஒருவர்க்கொருவர் மாறுபட்டனர். மன் முதலிய இடைச்சொற்கள் ஒழியிசைப்பொருளைக் குறிக்கும் என்று இடையியலிற் கூறப்பட்டமையான், அவை ஒழியிசை முடிபின என்று கூறுவது எற்றுக்கு? தெய்வச்சிலையாரோ 'இவர் கல்வியாற் குறைவிலர்'



முதலிய சொற்றொடரையே ஒழியிசையெச்சமாகக் கொள்ளுகின்றனர். அஃதே ஏற்புடைத்து.

435. எதிர்மறை யெச்ச மெதிர்மறை முடிபின.

**பொருள்.** உ.—எதிர்மறையெச்சம் என்பன இரண்டு, ஓகார எதிர்மறையும், உம்மையெதிர்மறையும் என; அவை, **அவை தம் எதிர்மறைப்பொருள் கொண்டு** முடியும் எ-று.

சே.—மாறுகொளெச்ச மெனப்பட்ட ஏகாரவெதிர்மறையும், ஓகாரவெதிர்மறையும், உம்மையெதிர்மறையுமாகிய எதிர்மறையெச்ச மூன்றும் **எதிர்மறையான்** முடியும் எ-று.

ந.—மாறுகொளெச்ச மென்ற ஏகாரமும் ஓகாரமும் உம்மையுமாகிய எதிர்மறையெச்சம் மூன்றும் **எதிர்மறைப் பொருளை உணர்த்துஞ்சொல்லை** முடிபாக உடைய எ-று.

தெ.—எதிர்மறைப் பொருண்மையை எச்சமாகவுடையது அவ்வெதிர்மறைப்பொருண் முடிவு பெறும் எ-று. (உ-ம். 'இம்மைப் பிறப்பிற் பிரியல மென்றேனாக்-கண்ணிறை நீர் கொண்டனள்' (குறள். 1312) என்பதனுள் மறுபிறப்புப் பிரிவேம் என நினைத்துக் கண்ணிறை நீர் கொண்டனள் எனப் பொருளுரைக்கவேண்டுதலின், எதிர்மறை, எஞ்சிநின்ற தன் எதிர்மறைப்பொருளொடு முடிந்தவாறு கண்டுகொள்க.)

இங்கும் உரையாசிரியர் முதலிய மூவரின் மதம் ஒன்று, முடிபு வேறு. தெய்வச்சிலையார் மதம் வேறு. 'ஒழியிசை யெச்சம்...' என்ற சூத்திரத்திற்குக் கூறிய காரணமே, இங்கும் தெய்வச்சிலையார் உரை சிறக்கு மென்பதற்குக் காரணமாகும்.

பி-ம். இ. நம.—இல் 'எதிர்மறை யெச்சம் என்பன இரண்டே, ஓகார எதிர்மறையும் உம்மை யெதிர்மறையும் என' என்றுளது. அதற்குப் பிரதியாக 'எதிர்மறை யெச்சம் என்பன மூன்று, ஏகார எதிர்மறையும், ஓகார எதிர்மறையும், உம்மை யெதிர் மறையும் என' என்றிருத்தல் வேண்டும். ஏனெனில் உதாரணத்தில் 'நீயே கொண்டாய் என்றற்கு எதிர்மறுத்தவாறு, யான்

கொண்டிலென் என என்பது' என்ற சொற்றொடரால் ஏகார எதிர்மறையும் கொள்ளப்பட்டமை தெளிவாகின்றது.

436. உம்மை யெச்ச மிருவீற் றானுந்
தன்வினை யொன்றிய முடிபா கும்மே.•



பொருள். உ.—உம்மை யெச்சம் என்பது எச்சவும்மையாயிற்று; 'இருவீற்றானும்' என்றது, தானும், தன்னாற்றழுவப்பட்டதுமான இரண்டனையும் ஆயிற்று ; அவையிரண்டும்' ஒன்றிய வினையே கொண்டு முடியும் எ-று. (சாத்தனும் வந்தான் என்றக்கால், பின்னைக் கொற்றனும் வந்தான் என்றானும், கொற்றனும் வரும் என்பதானும் ஒன்றிய வினையே கொண்டு முடிக என்பது.)

சே.—எஞ்சுபொருட் கிளவியும் அவ்வெஞ்சுபொருட்கிளவியான் முடிவதுமாகிய உம்மையெச்ச வேறுபாடிரண்டன்கண்ணும், தன்வினை, உம்மையொடு தொடர்ந்தசொற்குப் பொருந்திய முடிபாம் எ-று. (சாத்தனும் வந்தான் கொற்றனும் வந்தான் என இரண்டும் ஒருவினை கொண்டவாறு கண்டு கொள்க.)

ந.—ஒன்றற்கொன்று முடிவனவும் முடிப்பனவுமாகிய இரண்டு கூற்றின்கண்ணும் வரும் உம்மையெச்சங்களை முடிக்குந் தன்னுடைய வினைச்சொற்கள் ஒரும்மைக்குப் பொருந்திய வினையே மற்றையும்மைக்கும் முடிபாம் எ-று. (சாத்தனும் வந்தான் கொற்றனும் வந்தான் என எதிரதுதழீஇய உம்மைக்கு முடிபாய வினையே இறந்ததுதழீஇயதற்கும் முடிபாயிற்று.)

தெ.—உம்மையாகிய எச்சம் இரண்டு வேறுபாட்டின் கண்ணும் தன்வினையோடு பொருந்திய முடிபாகும் எ-று. (சாத்தனும் வந்தான், கொற்றனும் வந்தான் எனற்பாலன—சாத்தன்

வந்தான், கொற்றன் வந்தான் என வரின், ஆண்டு உம்மை எஞ்சி நின்றதென்க. இருவீற்றானும் என்ற உம்மையாற் றனிவரினும் என்று கொள்க.)

'உம்மை யெச்சம்' என்பதற்கு **உரையாசிரியரும், நச்சினார்க்கினியரும் எச்சவும்மை** என்றும், சேனாவரையர் **உம்மையோடுகூடிய எஞ்சுபொருட்கிளவி** என்றும், தெய்வச்சிலையார் **உம்மையாகிய எச்சம்** என்றும் பொருள்கொண்டனர்.

சூத்திரத்தில் 'உம்மை யெச்சம்' என்பதனை எழுவாயாகவும், 'தன்வினை யொன்றிய முடிபா கும்மே' என்பதனைப் பயனிலையாகவுங் கொண்டனர் **உரையாசிரியரும் தெய்வச்சிலையாரும்.** 'தன்வினை' என்பதனை எழுவாயாகவும், 'ஒன்றிய முடிபாகும்' என்பதனைப் பயனிலையாகவுங் கொண்டனர் **சேனாவரையரும் நச்சினார்க்கினியரும்.** 'உம்மை யெச்ச மிருவீற் றானும்' என்



பதனைத் தொகைமொழியாகக் கொண்டனர் சேனாவரையர். நச்சினார்க்கினியர், உம்மையெச்சம், இருவீற்றானும் என்ற இரு தனிமொழிகளாகக் கொண்டதன்றி 'உம்மையெச்சம்' என்பதனை 'தன்வினை' என்பதனோடு அந்துவயித்தனர். முன் பின் சூத்திரங்களின் போக்கை நோக்குங்கால் உரையாசிரியர் தெய்வச்சிலையார் இவர்களின் அந்துவயமே சிறந்தது எனத் தோற்றுகின்றது.

'தன்மேற் செஞ்சொல் வரூஉங் காலை...' (சொல். 437) என்ற சூத்திரத்தில் 'தன்' 'செஞ்சொல்' என்ற சொற்களை நோக்கின் இச்சூத்திரவுதாரணங்களில் உம்மை இருவீற்றினும் இருத்தல் வேண்டுமெனத் தோன்றுகின்றது. அப்போது தெய்வச்சிலை

யார் கூறும் உரை பொருந்தாது. சூத்திரத்தின் கருத்து உரையாசிரியர், சேனுவரையர், நச்சினர்க்கினியர் இம்மூவருக்கும் ஒன்றேயாயினும், உரையாசிரியரது அந்நுவயம் சூத்திரப் போக்கை பொட்டியிருத்தலானும், இச்சூத்திரத்தில் உம்மை யெச்சம் உத்தேசியமாக விருத்தல்வேண்டுமாதலானும், அவரது உரையே சிறந்தது என்பது என் கருத்து.

'தன்வினை' என்பதற்குத் தொழிலின்மாத்திரம் தன்னேடு ஒத்தவினை என்று கருதுகின்றனர் உரையாசிரியரும் நச்சினர்க் கினியரும்; தொழிலினும் காலத்திலும் ஒத்தவினை எனக் கொண்டனர் ஏனையோர்.

பா-ம்.—'உம்மையெச்சமிரு வீற்றூனும்' என்பதைச் சேனு வரையர் தொகைமொழியாகக் கொள்ளுதலின், 'உம்மையெச்ச விருவீற்றூனும்' என்பது அவரது பாடம்போலும்.

437. தன்மேற் செஞ்சொல் வருஉங் காலை
நிகழுங் காலமோடு வாராக் காலமு
மிறந்த காலமோடு வாராக் காலமு
மயங்குதல் வரையார் முறைநிலை யான.

இச்சூத்திரத்திற்கு உரையாசிரியர், சேனுவரையர், நச்சினர்க் கினியர் மூவரும் 'எச்சவும்மை மேல் உம்மையில்சொல் வந்தக் கால் நிகழ்காலமும் எதிர்காலமும் மயங்கும், இறந்தகாலமும் எதிர்காலமும் மயங்கப்படும் முறையிலக்கணமாகலான்' என்று பொருள்கொண்டனர். தெய்வச்சிலையார் 'உம்மைப் பொருட்கண்

உம்மை கொடாது செஞ்சொல்லாகி வரின், அவற்றுள் நிகழ் காலத்தொடு எதிர்காலமும், இறந்த காலத்தொடு எதிர்காலமும் மயங்குதல் நீக்கார், முறைபிறழாமல் நிற்கும் வழி' என்று பொருள்கொண்டு 'சாத்தன் வாராநின்றான், கொற்றன் வருவன் போம், சாத்தன் வந்தான், கொற்றன் வருவன் போம்' என்று உதாரணங்காட்டினர்.

'முறைநிலையான' என்றதனான் இறந்ததனோடு நிகழாநின்றதூஉம் மயங்கும், எதிர்வதனோடு இறந்ததுவும் மயங்கும்'' என்று **உரையாசிரியரும்**, 'இவற்றோடு இது மயங்குதல் வரையாரெனவே, இறந்த காலத்தோடு நிகழ்காலமும், நிகழ்காலத்தோடு இறந்தகாலமும் வந்து மயங்குதல் வரையப்படுமென்றவாறாயிற்று என்று **சேனாவரையரும்**, 'முறைநிலை யென்றதனாற் சிறுபான்மை நிகழ்வோடு இறப்பும் மயங்குதல் கொள்க' என நச்சினார்க்கினியருங் கூறுவது காண்க.

438. எனவே னெச்சம் வினையொடு முடிமே.

**பொருள்.** உ.—எனவென நின்ற எச்சம் பெயர்கொண்டு முடியாது வினைகொண்டு முடியும் எ-று.

**சே.**—எனவென்னு மெச்சம் வினைகொண்டு முடியும் எ-று.

**ந.**—முன்னர் 'வினையுங் குறிப்பும் இசையும் பண்பும்' எனக் கூறிய நால்வகையனவாகிய எனவெனெச்சம் தெரிநிலைவினையொடுங் குறிப்புவினையொடும் முடியும்.

**தே.**—எனவென்று சொல்லப்பட்ட எச்சம் வினையொடு முடியும் எ-று. உம்மையாற் பெயரொடும் முடியுமென்று கொள்க.

உரையாசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், இம் மூவர் உரைக்கும் பொருள் ஒன்று. தெய்வச்சிலையார் பொருள் வேறு. உரையாசிரியர் முதலியோர் மதப்படி எனவெனச்சம் என்பதற்கு என என்ற எச்சச்சொல் என்றும், தெய்வச்சிலையார் மதப்படி என என்ற சொல் தொக்குநிற்றலையுடைய சொற்றொடர் என்றும் பொருள் என்பது அவரவர்காட்டும் உதாரணங்களால் விளங்கும். உரையாசிரியர் முதலிய மூவரும் வினையொடு முடிமே என்பதை வினையொடு முடிமே என்று பிரித்தனர். தெய்வச்சிலையார் வினையொடும் முடிமே என்று பிரித்து அவ்வும்



மையாற் பெயரொடும் முடியும் என்று கொண்டு, அதற்கு 'குறிப்பே யிசையே யாயி ரைந்தும்...' (சொல். 430) என்பதை உதாரணமாக்கி, ஆங்கு 'குறிப்பே இசையே என ஈரைந்துமெனப் பொருளுரைக்கவேண்டும்' என்றனர்.

439. எஞ்சிய மூன்றும் மேல்வந்து முடிக்கு
மெஞ்சுபொருட் கிளவி யிலவென மொழிப.

**பொருள். உ.**—எஞ்சிய மூன்றும் என்பன, அவை மூன்றும்; முந்தையவற்றைப் போலத் தம்மை பின்ன வந்து முடிப்பன என்று காட்டப்படும் எச்சச்சொல் இல்லை எ-று. (மூன்றும் மேல் வந்து முடிக்கும் எச்சச்சொல் இல என, ஒன்று உடைத்தென்பதாம். அஃதியாதோ வெனின் சொல்லெச்சம்; அதனை முன்னர்ச் சொல்லுதும்.)

சே.—சொல்லப்பட்டன வொழிந்து நின்ற சொல்லுங் குறிப்பும் இசையுமாகிய எச்ச மூன்றும் மேல் வந்து தம்மை

முடிக்கும் எஞ்சுபொருட் கிளவியையுடையவல்ல வென்று சொல்லுவர் ஆசிரியர் எ-று.

ந.—ஒழிந்த சொல்லெச்சமுங், குறிப்பெச்சமும் இசையெச்சமுமாகிய மூன்றும் ஒழிந்த எச்சங்கள் போலத் தமக்குமேல் வேறாய் வந்து தம்மை முடிக்கும் எஞ்சிய பொருட்கிளவியை உடையவல்ல என்று கூறுவர் ஆசிரியர் எ-று.

தெ.—மேலதிகரிக்கப்பட்ட பத்தினுள்ளும் முடிவு சொல்லாது ஒழிந்த மூன்று சொல்லும் வந்து முடிக்கும் சொற்களை எஞ்சிநிற்றலில எ-று.

இச் சூத்திரத்தாற் பெறப்படுங் கருத்து உரையாசிரியர் கொள்கையில் வேறு; சேனாவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார் இம்மூவர் கொள்கையில் வேறு. சூத்திரத்தில் எஞ்சிய மூன்றும் மேல் வந்து முடிக்கும் எஞ்சு பொருட்கிளவியில என்றிருப்பினும், இரண்டு அவ்வாறு இல என்றும், சொல்லெச்சம் எஞ்சுபொருட் கிளவியுடைத்து என்றும் உரையாசிரியர் கருதினர். இவ்வாறு இவர் கொண்ட கருத்து சூத்திரப்போக்குக்குத் தக்கதெனத் தோன்றவில்லை.

**440. அவைதாம்**

**தத்தங் குறிப்பி னெச்சஞ் செப்பும்.**





பொருள். உ.—இது 'குறிப்பே இசையே' (சொல். எச். 34) என்று கூறப்பட்ட இரண்டெச்சமும் தங்குறிப்பிற் பற்றிய எச்சத்தானே முடிபு கூறப்படும், பிறிதில்லை என்பது. (வரலாறு: 'விண்ணென விசைத்தது' குறிப்பெச்சம்; அது தன் குறிப்பினையே கொண்டு முடிந்தது... இனி இசையெச்சம்,

ஒல்லென வொலித்தது).

சே.—அவ்வெச்ச மூன்றும் சொல்லுவார் குறிப்பான் எஞ்சி நின்ற பொருளை யுணர்த்தும் எ-று.

ந.—சொல்லெச்ச மொழிந்த இருவகை யெச்சங்கள் தம்மைக் கூறுவோர் தம்முடைய குறிப்புக்களாலே தம்முடைய எஞ்சு பொருளைத் தாமே கூறி நிற்கும். எ-று.

தே.—மேற் சொல்லப்பட்ட மூன்று சொல்லும் வந்து முடிக்குஞ் சொல்லையுடைய வல்லவாயினும், தத்தங் குறிப்பினுன் எஞ்சிய பொருண்மையை உணர்த்தும் எ-று.

உரையாசிரியர் நச்சினார்க்கினியர் இருவரும் இச்சூத்திரம் குறிப்பெச்சம் இசையெச்சம் இவ்விரண்டனையும் உணர்த்திற்று என்று கொண்டனர். சேனாவரையர் சொல்லெச்சம், குறிப்பெச்சம், இசையெச்சம் இம்மூன்றனையும் உணர்த்திற்று என்றும், அவற்றுள் சொல்லெச்சத்துக்கும் ஏனையிரண்டெச்சத்துக்கும் வேற்றுமை 'சொல்லெ னெச்சம்...' (சொல். 441) என்ற வருஞ் சூத்திரத்தில் கூறப்பட்டதென்றும் உரைத்தனர். தெய்வச்சிலையார் கூறும் பொருளை நோக்கின் இச்சூத்திரம் சொல்லெச்சம் முதலிய மூன்றன் பொருளை உணர்த்தவில்லை யென்பதும், 'எஞ்சிய மூன்று மேல்வந்து முடிக்கு—மெஞ்சு பொருட் கிளவி யிலவென மொழிப' (சொல். 439) என்ற முற்சூத்திரத்தின் பொருளை விதி முகமாக உணர்த்திற்று என்பதும் விளங்கும்.

உரையாசிரியர் கூறிய பொருளைச் சேனாவரையர் 'வின்

ணென விசைத்தது என்பது குறிப்பெச்ச மென்றும், அது போல என்னுந் தொடக்கத்தன விகாரவகையாற் றொக்கு நின்ற மையான், ஒல்லென வொலித்தது என்பது இசை யெச்ச மென் றும், இவை தத்தஞ் சொல்லான் முடிதலல்லது பிறசொல்லான் முடியாமையின் இவற்றை மேல் வந்து முடிக்கும் எஞ்சுபொருட்



கிளவியில வென்றுரென்றும் உரைத்தாரால் உரையாசிரியரெனின்' என்ற சொற்றொடரால் அநுவதித்து, "அற்றன்று: 'தெரிபு வேறு நிலையலும்...' (சொல். 157) எனச் சொற்பொருட்பாகு பாடுணர்த்தினர்; குறிப்பிற்றோன்றும் பொருளை வெளிப்படுத் தும் எச்சமாதலுடைமையான் எச்சமென்றார்; அதனான் ஆண் டடங்காது. இனி விசைத்தது ஒலித்தது என்பன தஞ்சொல் லெனப்படா; படினும், விண்ணென வீங்கிற்று துண்ணெனத் துளங்கினான் எனவும், ஒல்லென வீழ்ந்தது எனவும் பிறசொல் லானும் முடிதலின் எஞ்சு பொருட்கிளவி யிலவென்றல் பொருந் தாதாம். என்னை? தஞ்சொலல்லாதன எஞ்சு பொருட்கிளவியா மாகலின்... அல்லதூஉம், எனவெனெச்ச மென அடக்காது இசையுங் குறிப்பும் பற்றி வருவனவற்றை வேறோதின், வெள் ளென வெளுத்தது எனப் பண்புபற்றி வருவதனையும் வேறோதல் வேண்டும்; அதனை வேறோதாமையானும் எனவெனெச்ச மென அடக்குதலே கருத்தாகக் கொள்க' என்ற சொற்றொடரால் மறுத் தனர். நச்சினார்க்கினியரும் அவ்வாறே உரையாசிரியரை மறுத் தனர்.

சேனாவரையர் காட்டிய உதாரணத்தையும் அவரது கருத்தையும் நச்சினார்க்கினியர் "இனிச் சேனாவரையர் குறிப்பெச்சத்திற்கு 'இளைதாக முண்மரங் கொல்க...' என்னுங் குறள் வெண்பாவும், இசை யெச்சத்திற்கு 'அகர முதல...' என்னுங் குறள் வெண்பாவுங் காட்டினாராலெனின்" என அநுவதித்து, அவர் காட்டின குறிப்பெச்சஞ் செய்யுளிலக்கணங் கூறுகின்ற செய்யுளியற் 'சொல்லொடுங் குறிப்பொடும்' என்னுஞ் சூத்திரத்தாற் பல சொற்றொடர்ந்ததோர் செய்யுள் முடிந்தக்கால் வரு மென்று கொண்ட குறிப்பெச்சமாகலின் அதனைச் சொல்லிலக்கணத்திற் கூறுகின்ற குறிப்பெச்சத்திற்குக் காட்டினால் ஆண்டைக்குறிப்பெச்சத்திற்கு வேறு பொருள் இன்றாமாகலானும் அவர் இசையெச்சமென்ற 'அகர முதல' என்பதன்கண் அதுபோல என விரிந்த உவமச்சொற் றுணியுமாறு விரியாது இரண்டற்கும் பொதுவாய் வேறுபட வந்தவுவமத்தின்பாற் படுதலல்லது இசையாற் பிறவாமையானும் அவை பொருந்தாமை உணர்க' என்று அதனை மறுத்து, கற்கறிக்க நன்கட்டான், வயிறு மொடு மொடுத்



தது என்றவற்றை முறையே குறிப் பெச்சத்திற்கும், இசையெச்சத்திற்கும் உதாரணமாகக் காட்டினர்.

'பிரிநிலை வினையே..... சொல்லே குறிப்பே யிசையே......

(சொல். 430) என்ற சூத்திரத்தில் சொல்லெச்சத்தை முன்னரும் குறிப்பெச்சம், இசையெச்சம் இவற்றை அதன் பின்னரும் வைத்த ஆசிரியர் ஈண்டுக் குறிப்பெச்சத்தையும், இசையெச்சத்தையும் முற்கூறி, சொல்லெச்சத்தைப் பிற்கூறினர் என்று கொள்வது தகுதியாகாமையானும் 'சொல்லெனெச்சம் ...' (சொல். 441) என்ற சூத்திரத்தின் பின் 'அவையல் கிளவி ...' (சொல். 442), 'ஈதா கொடுவென...' (சொல். 444) முதலிய சூத்திரங்களை வைத்ததற்கு இயைபின்மையானும், 'சொல்லெனெச்சம்...' என்பது சொல்லெச்சத்தையும், 'அவையல் கிளவி...', 'ஈதா கொடுவென...' முதலியன குறிப்பெச்சத்தையும், 'பெயர் நிலைக் கிளவியின்...' (சொல். 449) என்பது இசையெச்சத்தையும் உணர்த்துகின்றன என்ற தெய்வச்சிலையார் கொள்கை ஏற்புடைத்து என்னலாம்.

441. சொல்லெ னெச்ச முன்னும் பின்னுஞ்
சொல்லள வல்ல தெஞ்சுத லின்றே.

**பொருள்.** **உ.**—சொல்லெனெச்சம் முன்னுயினும் பின்னுயினும் சொல்லென்னுஞ் சொற்கொண்டு முடிதலல்லது பிறிதில்லை எ-று. (உ-ம். பசித்தேன் பழஞ்சோறு தா என நின்றான் என்பதாம். மற்றுத் தா என நின்றான் பிறனே யெனின், தா எனச் சொல்லி நின்றான் என்பதாம். முன்னும் என்றது தா எனச் சொல்லி நின்றான் என்று கொணர்ந்து முடிப்பின், அது பின் முடிவுபட நின்றதாம் என்பது.)

**சே.**—சொல்லெச்சம், ஒரு சொற்கு முன்னும் பின்னுஞ் சொன்மாத்திரம் எஞ்சுவதல்லது, தொடரா யெஞ்சுதலின்று எ-று. ('உயர்திணை யென்மனர்' என்புழி ஆசிரியரென்னுஞ் சொல் முன்னும், 'மருந்தெனின் மருந்தே வைப்பெனின்

வைப்பே' (குறள். 71) என்புழி எமக்கென்னுஞ் சொல் பின்னும் எஞ்சி நின்றவாறு கண்டு கொள்க.)

ந.—என்னென்கின்ற எச்சமானது சொல்லென்னும் முதனிலை மாத்திரை தன்னுள்ளேயே எஞ்சி நிற்றலல்லது, செய்யுளியலிற் கூறுஞ் சொல்லெச்சம்போல ஒருசொல் செய்யுட்கு முன்னும் பின்னும் எஞ்சிநிற்றலில்லை எ-று.



தெ.—சொல் என்னும் எச்சம் அச்சொல்லாவதற்கு முன்னும் பின்னும் மற்றொரு சொல் எஞ்சி நிற்றலிலது எ-று. எனவே அச்சொல்லினானே உய்த்துணர்ந்து கொள்ளப் பிறிதொரு பொருள் வரும் என்றவாறாம். ('நெடும்புனலுள் வெல்லு முதலை யடும்புனலி—னீங்கி னதனைப் பிற' (குறள், 495) 'காலாழ் களரி னரியடுங் கண்ணஞ்சா—வேலாண் முகத்த களிறு' (குறள், 500) என்றவழித் தமது நிலத்தில் எளியாரும் வலியராவர், பிறரது நிலத்தில் வலியாரும் எளியராவர் என்னும் பொருண்மை இச்சொற்றானேயுணர்த்தலிற் சொல்லெச்சமாயிற்று.)

உரையாசிரியர் கூற்றில் சூத்திரத்துள்ள 'முன்னும் பின்னும்' என்ற இருசொற்களில் ஒன்றிருந்தாற் போதும். அவர் காட்டிய உதாரணமாகிய 'பசித்தேன் பழஞ்சோறு தா என நின்றான்' என்னுமிடத்து 'தா என நின்றான்' என்பதற்கும் 'தா எனச் சொல்லி நின்றான்' என்பதற்கும் வேறுபாடு சொல்லும் முறையிலேயேயன்றிப் பொருளில் இன்று. சேனாவரையரும் அக்கூற்றுப் பொருத்தமின்மையை 'அவர் முன்னும்பின்னும் என்பதற்குச் சொல்லென்னுஞ் சொல் கொணர்ந்து கூட்டுவதன் முன்னும்

பின்னுமென இடர்ப்பட்டுப் பொருளுரைப்ப' என்ற சொற்றொடரால் விளக்கினர்.

**சேனாவரையர்** கருத்து, 'தொடராய் எஞ்சி நில்லாது ஒரு சொல்லாய் எஞ்சி நிற்கலாம்' என்பது. அஃது 'எஞ்சிய மூன்று மேல்வந்து முடிக்கு-மெஞ்சுபொருட் கிளவி யிலவென மொழிப' (சொல். 439) என்ற சூத்திரக்கருத்துக்கு மாறுபட்டது. அச் சூத்திரத்தில் 'எஞ்சுபொருட்கிளவி' என்பதற்கு 'தொடர்ச் சொல்லாகிய எஞ்சுபொருட்கிளவி' என்று பொருள்கொள் வதற்குச் சான்று யாது மின்று.

**நச்சினார்க்கினியர்** கூற்றில் சூத்திரத்துக்கு அந்நுவயம்:— 'என் எச்சம் சொல்லளவல்லது, சொல் முன்னும் பின்னும் எஞ்சுதலின்று' என்பது. 'சொல்லளவல்லது' என்பதற்கு 'சொல் லென்னும் முதனிலை மாத்திரை தன்னுள்ளேயே எஞ்சி நிற்ற லல்லது' என்பது பொருள். இவ்வாறு கொள்வதில் பல குற்றங்



கள் உள:—பத்துவகை யெச்சங்களுள் அவர் கொள்கைப்படி சொல்லெச்ச மொழிய மற்ற எச்சங்களெல்லாம் முற்சூத்திரங் களால் உணர்த்தப்பட்டமையின், சொல்லெச்சம் என்பது ஈண்டு உணர்த்தப் படல் வேண்டும். அஃது உணர்த்தப்படாது, என் எச்சம் இதனால் உணர்த்தப்படுகின்றது என்பது சூத்திரமுறைக்கு நேரிதன்று; அவர் கூற்றுப்படி 'என் எச்சம்' என்பது உத்தேசியமாகும். அஃது முன்னர்ச்சூத்திரத்தாற் பெறப்படாமை யின் உத்தேசியமாதற்கு இயலாது. 'எனப்படுப' முதலியவற் றுக்கு 'என்று சொல்லப்படுப' என்பது பொருள் என்று கூற ஒரு சூத்திரம் வேண்டின், 'போன்றான்' முதலியவற்றுக்கு 'போல

இருந்தான்' என்பது பொருள் என்று கூறச் சூத்திரங்கள் வேண்டாவோ?

தெய்வச்சிலையார் கூறிய பொருள் சூத்திரப்போக்குக்குப் பொருத்தமானது. பத்துவகை யெச்சங் கூறிய சூத்திரங்களில் குறிப்பெச்சத்துக்கு முன்னர்ச் சொல்லெச்சம் காணப்படுதலின், ஈண்டும் குறிப்பெச்ச முணர்த்துஞ் சூத்திரத்துக்கு முன்னரே சொல்லெச்சத்தை உணர்த்துஞ் சூத்திரம் உளது. மேலும் சொல்லெச்சம், குறிப்பெச்சம், இசையெச்சம் இம்மூன்றிலும் மேல் வந்து முடிக்கும் எஞ்சுபொருட்கிளவி யில. இவரது கூற்றில் சொல்லெச்சத்திற்கும், குறிப்பெச்சத்திற்கும் உள்ள வேறுபாடு என்னையெனின், சொல்லெச்சத்தில், வாக்கியத்துக்கு ஆற்றலாலுள்ள பொருளோடு, வியஞ்சன விருத்தியால் ஏற்படும் பொருளும் சிறந்தது என்றும், குறிப்பெச்சத்தில் ஆற்றலாலுள்ள பொருள் சிறப்புடையதன்று என்றும் கூறல் பொருந்தும். இசையெச்சத்தில் ஆற்றலாற் கொள்ளப்பட்ட பொருளாற் குறிக்கப்படும் மந்திரம், பிதிர் முதலியவை சிறந்தன என்னலாம்.

442. அவையல் கிளவி மறைத்தனர் கிளத்தல்.

பொருள். உ.—(இது 'தகுதியும் வழக்கும்...' (சொல். 17) என்பதனுட் கூறப்படாது ஒழிந்து நின்றதோர் மரபு வழூஉக் காத்தல் நுதலிற்று.) நன்மக்களுட் கூறப்படாத சொல்லைக் கிடந்தவாறே சொல்லற்க; பிறிது வாய்பாட்டான் மறைத்துச் சொல்லுக எ-று.

சே.—அவைக்கணுரைக்கப்படாத சொல்லை அவ்வாய்பாடு மறைத்துப் பிறவாய் பாட்டாற் சொல்லுக எ-று. (இவை 'தகுதி

யும் வழக்கும்...'(சொல். 17,) என்புழித் தகுதியாயடங்கு மெனின், செத்தாரைத்துஞ்சினு ரென்றல் முதலாயினவன்றே தகுதியாவன; ஆண்டுச் செத்தாரென்பது இலக்கணமாகலின் அதனனும் வழங்கப்படும்; தகவு நோக்கிச் சொல்லுங்காற் றுஞ் சினுரென்றுஞ் சொல்லப்படும்; ஈண்டை யவையல் கிளவியாற் கிளத்தல் வழுவாதலின் மறைத்த வாய் பாட்டானே கிளக்கப் படும்; அதனன் ஆண்டடங்கா வென்பது.)

ந.—நன்மக்களிடைக் கூறப்படுவதல்லாத சொல்லினை அவ் வாய்பாடு மறைத்துப் பிறவாய்பாட்டாற் கூறுக எ-று. (தகுதி யாவது செத்தானெனப் பெரும்பான்மை வழங்கப்பட்டன தகுதிநோக்கித் துஞ்சினனெனச் சிறுபான்மை வழங்கப்பட்டு நிற் கும்; அவையல்கிளவியாவது இழிந்தோர் கூறும் இழிசொற்களை நன்மக்களிடை மறைத்துக் கூறப்படும்; இஃது இரண்டற்கும் வேற்றுமையாம்.)

தே.—(இனிக் குறிப்பெச்சம் உணர்த்தற்பாலது) அவைக் களத்து வழங்கமல்லாத சொல்லை மறைத்துப் பிறவாய்பாட்டான் மொழிக எ-று.

உரைகாரர்கள் நால்வர்க்கும் சூத்திரப்பொருள் ஒன்று போல இருப்பினும், ஊன்றி நோக்கின் அவை ஒன்றுக்கொன்று வேறு பட்டன. உரையாசிரியர் கூற்றில் இச்சூத்திரத்தால் உணர்த்தப்பட்ட பொருள் 'தகுதியும் வழக்கும்...' என்ற சூத் திரத்தாலே பெறப்படுதலின், இச்சூத்திரம் வேண்டா. சேனு வரையர் நச்சினர்க்கினியர் இவ்விருவரும் அவைக்குரியகிளவி என்

பதற்கும் தகுதிக்கிளவி என்பதற்கும் பொருளில் வேறுபாடுண்டு என்றனர். ஆனால் 'தகுதியும் வழக்கும்...' (சொல். 17) என்ற சூத்திரத்தின் உரையில் சேனாவரையர் 'தகுதியென்பது 'அப் பொருட் குரிய சொல்லாற் சொல்லுதனீர்மையன்றென்று அது களைந்து தக்கதோர் வாய்பாட்டாற் கூறுதல்' என்று கூறின மையின், ஈண்டுச் செத்தாரென்பது இலக்கணத்தோடு பொருந்தி யது, அவையல்கிளவியாற் கிளத்தல் வழு என்று அவர் கூறுவது எவ்வாறு பொருந்தும்? தகுதிக்கிளவி, அவைக்குரியகிளவி இரண் டிற்கும் நச்சினார்க்கினியர் கூறும் வேற்றுமையும் பொருத்த மாகத் தோன்றவில்லை. அவையல்கிளவியைக் கிளத்தல் வேண்டாவென்பது தகுதிக்கிளவியையே கிளத்தல் வேண்டும்



என்பதனாற் பெறப்படுதலின் சேனாவரையர், நச்சினார்க்கினியர் இவ்விருவரது கூற்றிலும் இச்சூத்திரம் இன்றியமையாததன்று. அன்றியும் 'சொல்லெனெச்சம்...' என்ற சூத்திரத்துக்குப் பின்னர் இச்சூத்திரத்தைக் கூறுவதற்கு இயைபுமின்று. ஆதலின் 'தகுதியும் வழக்கும்...' என்ற சூத்திரத்தால் உரையாசிரியர் முதலிய மூவருங்கொண்ட பொருளை இச்சூத்திரப் பொருளாகக் கொண்ட தெய்வச்சிலையார் கூற்றே சிறக்கும்.

இச்சூத்திரம் வழுவமைதியைக் கூறிற்றென்றார் நச்சினார்க் கினியரும் தெய்வச்சிலையாரும்.

444. ஈதா கொடுவெனக் கிளக்கு மூன்று
மிரவின் கிளவி யாகிட னுடைய.

பா-ம். உ. 'ஆகிட னுடைய'. சே. ந. தே. ஆகிட னுடைத்தே.

444, 445, 446, 447, இந்நான்கு சூத்திரங்களையும் ஒன்றாக்கினர் தெய்வச்சிலையார். வாக்கியபேதம் என்ற குற்றம் வருதலின் அது பொருந்தாது. ஆயினும், இவை குறிப்பெச்சத்தை உணர்த்தின என்பது மிகப்பொருந்தும். அதுவே ஆசிரியர் கருத்தென்பது 448-வது சூத்திரத்திலுள்ள குறிப்பில் என்ற சொல்லாலும் விளங்கும்.

448. கொடுவேன் கிளவி படர்க்கை யாயினுந்
தன்னைப் பிறன்போற் கூறுங் குறிப்பிற்
றன்னிடத் தியலு மேன்மனார் புலவர்.

பொருள். உ.—கொடு என்பது தன்மைக்கேற்றதன்று, படர்க்கைக்கு உரியதோர் சொல்லாயிற்று; உயர்ந்தோன் இழிந்தோனை யிரக்குங்கால், தமனொருவனைக் காட்டி, இவற்குக் கொடு என்பது; ஆண்டுப் படர்க்கை யிடத்திற்கு உரித்தாகக் கூறினான்மன்; ஆயினும், அது தன்மையிடத்தே யியல்பு காட்டப் படர்க்கையிடத்தாற்கு உரித்தாகாது, அவ்விரக்கப்படுபொருளும் அக்கொடு என்ற சொல்லும் என்பது...(உம்மையாற் பிற கிளவியும் படர்க்கையாயினும் தன்னைப் பிறன்போற் கூறுங் குறிப்பிற் றன்னிடத்து இயலும் எ-று. ஆண்டு இரவின்கிளவியல்வழி யென்பது. அங்ஙனஞ் சொல்லுவானோ பெருஞ்சாத்தன்றந்தை, 'சொல்லப்படுவாளோ பெருஞ்சாத்தான்றாய்' என்னும் தன்னைப் பிறன்போல்வானும்; அது தன்னிடத்து இயலும் எ-று.)



சே.—கொடுவென்னுஞ் சொல் முதனிலைவகையாற் படர்க்கையாயினும், தன்னைப் பிறனொருவன் போலக் கூறுங்கருத்து வகையால், தன்னிடத்துச் செல்லும் எ-று.

ந.—இரப்போர் பலருந் தம்மிலொருவனைக் காட்டி இவற்குக் கொடு எனத் தம்மைப் பிறரைப்போலாயினுங் கூறி இரக்குங் கருத்தினாற் கூறப்படுங் கொடு வென்னுஞ் சொல்லும், கூறுகின்றார் பலருந் தம்மைப் பிறரைப் போலாயினுங் கூறுங் கருத்தினாற் கூறப்படும் படர்க்கைச் சொற்களும், இவ்விரண்டுந் தன்மை யிடத்திற்குரியவாய் நடக்கு மென்று கூறுவர் புலவர் எ-று.

தெ.—மேற் சொல்லப் பட்டவற்றுள், கொடு என்னுஞ் சொல் படர்க்கையாயினும், தன்னைப் பிறன்போற் கூறுங் குறிப்பினாற் றன்னிடத்தியலும் என்று சொல்லுவர் புலவர் எ-று.

உரையாசிரியர் கூறிய முதற்பொருளும் தெய்வச்சிலையார் கூறும் பொருளும் ஒன்றே. நச்சினார்க்கினியர், உரையாசிரியர் உம்மைக்குக் கொண்ட பொருளையும் இச்சூத்திரப் பொருளாக உரைத்தனர். அது சூத்திரப்போக்குக்குப் பொருந்துவதாகத் தோன்றவில்லை. சேனாவரையர் உரையாசிரியர் கூறிய முதற் பொருளையே கூறினும், 'தமனொருவனைக் காட்டி இவற்குக் கொடு' என்ற உரையாசிரியர் உதாரணத்தை விலக்கி, 'சாத்தா கொடு' என்ற உதாரணங் காட்டி, உரையாசிரியர் கூற்றை 'ஆண்டுப் படர்க்கைச்சொல் படர்க்கைச்சொல்லோடியைதலான் வழுவின்மையின் அமைக்கல்வேண்டாவாம்; அதனான் அது போலியுரையென்க' என்று மறுத்தனர். இம்மறுப்பை நச்சினார்க்கினியர் "சேனாவரையர் கொடுவென்பது தானே தன்னைப்பிறன்

போற் கூறுங் குறிப்பினையும் உணர்த்து மென்று, அதற்குச் 'சாந்து கொடு' என்பது உதாரணங் காட்டினாராலெனின், கொடு வென்பது கொடுப்பதோர் பொருளை ஏற்றற்குரிய நான்கனுருபு வந்தால் அதனை முடித்தற்கு வந்த சொல்லாதலின் அவற்கு இவற்கு உவற்கு என்னுஞ் சொற்களை அவாய் அவற்றை முடித்தே நிற்றல் வேண்டும்; வேண்டவே அவற்குக் கொடு என் பது 'ஏனையிரண்டும்' (சொல். 30) என்புழிக் கூறியதாம்; எனக் குக் கொடுவென்பது தன்னைப் பிறன்போற் கூறுங் குறிப்பில் லாததாயிற்று; ஆதலால் தன்னைப் பிறன்போற் கூறுங்குறிப்பிற்





றாய் வழுவமைதியும் ஏற்று நிற்பது 'இவற்குக் கொடு' என்னும் உதாரணமேயாயிற்றென்க'' என்ற சொற்றொடரால் மறுத்தனர். இம்மறுப்புப் பொருந்து மென்றே தோன்றுகின்றது.

449. பெயர்நிலைக் கிளவியி னாஅ குநவுந்
[1] திசைநிலைக் கிளவியி னாஅ குநவுந்
தொன்னெறி மொழிவயி னாஅ குநவு
மெய்ந்நிலை மயக்கி னாஅ குநவு
மந்திரப் பொருள்வயி னாஅ குநவு
மன்றி யனைத்துங் கடப்பா டிலவே.

உரையாசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் மூவரும் இச்சூத்திரமும் ஒருசார் வழுவமைக்கின்றது என்று கொண்ட னர். தெய்வச்சிலையார் இஃது இசையெச்ச முணர்த்திற்று என்றார்.

பொருள்.—பெயர்நிலைக்கிளவி தொன்னெறிமொழி மெய்ந்

நிலைமயக்கு மந்திரப்பொருள் இவை இம்முறையில் வருமென்ற நியமம் இல என்பது இச்சூத்திரப்பொருள் என்பதில் எல்லோரும் ஒன்றுபட்டனர். ஆயினும், பெயர்நிலைக்கிளவி முதலாக மந்திரப்பொருள் இறுதியாகவுள்ள ஒவ்வொன்றும் உணர்த்தப்பட்டது யாது என்பதில் ஒருவருக்கொருவர் மாறுபட்டனர். திசைநிலைக்கிளவி என்பதற்குப் பிரதியாக வினைநிலைக்கிளவி என்று கொண்டனர் உரையாசிரியர்.[1]

**பெயர்நிலைக்கிளவி** என்பதற்கு **உரையாசிரியர்** பெயர்ச்சொல் என்று பொருள் கொண்டு, உயர்திணைச்சொல் அஃறிணைப்பெயர் மேல் வழங்கினுமமையும் என்றும், **சேனாவரையர்** அப்பொருளையே கொண்டு ஒருதிணைப்பெயர் ஒருதிணையாய் வரினும் அமையும் என்றும், **நச்சினார்க்கினியர்** அவை 'ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்...' (சொல். 27) என்றதனுள் அடங்குமென மறுத்து, பெயர்நிலைக்கிளவி என்பதற்குத் தத்தம் பொருளுணர்த்தாது பெயர்ந்த நிலைமையையுடைய சொல் என்று பொருள் கொண்டு "ஒள்வாள்-கறையடி யானைக்கல்ல-துறைகழிப் பறியா வேலோனூரே' என்புழி வேலோனென்பது வேலையுடையோனென்னும் பொருள்பெயர்ந்து ஒரு பெயர்த்தன்மையாய் நின்றது'' என்றும்

1. பா-ம். இ. வினைநிலைக் கிளவி.



கூறினர். **தெய்வச்சிலையார்** பெயர்நிலைக்கிளவி என்பதற்குப் பெயர்ச்சொல் என்று பொருள் கூறி, 'வேங்கை என்பது ஒரு மரத்திற்குப் பெயராயினும், புலிக்கும் பெயராயிற்று. அதுவு மன்றிக் கைவேம் என்னும் பொருளும்பட்டது. இவ்வாறு ஒரு

சொல்லினானே பிறிது பொருள் உணரின் அதையுணர்த்தும் ஓசை எஞ்சி நின்ற தென்க' என்று கூறினர்.

திசைநிலைக்கிளவி என்பதற்குச் சேனாவரையர் திசைச் சொல் என்று பொருள் கொண்டு 'புலியான் பூசையான்' என்னு முதாரணங்களைக் காட்டினர். நச்சினார்க்கினியர் 'திசையான் நிலை பெற்ற பெயரான் வருஞ் சொல்' என்று பொருள் கொண்டு தென்னன், வடமன் முதலிய உதாரணங்களைக் காட்டி, 'புலியான் பூசையான் என்பன திசைச்சொற்கண் அடங்குமாறும் உணர்க' என்று சேனாவரையரை மறுத்தனர். தெய்வச்சிலையார் 'திசை நிலைக்கிளவி' என்பதற்குத் திசையில் வழங்கும் செந்தமிழ் நாட்டுச் சொல் என்று பொருள் கூறி, கரை என்பது வரம்பிற்குப் பெயராயினும், கருநாடர் விளித்தற்கண் வழங்குப' என்றார்.

தொன்னெறிமொழி என்பதற்கு இயைபில்லனவற்றை இயைந்தவாறு கூறும் பழைய தொடர் என்று கொண்டு 'ஆற்றுட் செத்த வெருமை ஊர்க்குயவற் கிழுத்தல் கடன்' முதலிய உதாரணங்களை உரையாசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் காட்டினர். தெய்வச்சிலையார் 'குன்றேறுமா' என்றவழி குன்று, ஏறு, ஆ, மா எனவும் படும்; குன்றின்கண் ஏறு நின்ற ஆமா எனவும் படும்; குன்றின்கண் ஏறு மா எனவும் படும் என்றார். இதனால் இவர் சிலேடையைக்குறித்தனர் போலும்.

மெய்ந்நிலைமயக்கு என்பதனை உரையாசிரியர் மங்கல மரபி

னானும் குழூஉவின் வந்த குறிநிலைவழக்கினானும் வழங்கும் சொற்கள் தத்தம் இலக்கணத்தானுஞ் சொல்லப்படுமென்றும், சேனாவரையர் 'பொருண் மயக்காகிய பிசிச் செய்யுட்கட் டிணை முதலாயின திரிந்து வருவன' என்றும், நச்சினார்க்கினியர் ஒருமைப்பொருளாற்கூறவே பன்மைப்பொருள் தோன்றி மயங்கும், மயக்கினான் ஆகுஞ் செய்யுட்கள்' என்றும், தெய்வச்சிலையார் மணிக்காஞ்சி என்பது மணிமேகலை என்ற பொருளில் வருதல் போன்ற லக்ஷிதலக்ஷணையைக் குறிப்பது என்றுங் கொண்டனர்.



**மந்திரப்பொருள்** என்பதற்கு மந்திரமாகவருஞ் சொற்றொடர் என்று நால்வரும் பொருள்கொண்டனர். தெய்வச்சிலையார் குழுவின் வந்த குறிநிலை வழக்கையுங் கொண்டனர்.

**450. செய்யா யென்னு முன்னிலை வினைச்சொற்**
**செய்யென் கிளவி யாகிட னுடைத்தே.**

**பொருள். உ.**—செய்யாய் என நின்ற முன்னிலை (எதிர்மறை) வினைச்சொல் செய்யென்னுஞ் சொல்லும் ஆமிடன் உடைத்து எ-று.

**சே.**—செய்யாய் என்னும் வாய்பாட்டதாகிய முன்னிலை முற்றுச்சொல் ஆயென்னு மீறு கெடச் செய்யென்னுஞ் சொல்லாய் நிற்றலுடைத்து எ-று.

**ந.**—ஒரு தொழில்வினைமேற் செய்யாயென்னும் மறையாகிய முன்னிலை வினைச்சொல் அத்தொழில்வினைச் செய் யென்னும் உடம்பாட்டு முன்னிலைவினைச் சொல்லாம் இடத்தினை யுடைத்து எ-று.

தே.—செய்யாய் என்னும் ஆய்சற்று முன்னிலை வினைச்சொல் செய் என்னும் ஏவல்குறித்த வினைச்சொல்லுமாகி வரும் எ-று. (இன்னும் இச்சூத்திரத்திற்குப் பொருள் செய்யாய் என்னும் வினைச்சொல் செய் எனக் குறைந்து நிற்கவும் பெறும் எ-று.)

**உரையாசிரியர், நச்சினார்க்கினியர்** இருவர் கூறும் பொருளும் ஒன்று ; **சேனாவரையர்** கூறும் பொருள் வேறு ; **தெய்வச்சிலையார்** கூறும் முதற்பொருள் வேறு.

இச்சூத்திரத்தில் 'செய்யாய்' என்பது எதிர்மறைவினைச் சொல் லென்று ஆசிரியர் கருதினராயின் '**முன்னிலை வினைச் சொல்**' என்பதற்குப் பிரதியாக '**எதிர்மறை வினைச்சொல்**' என்று ஓதியிருப்பர் ; அவ்வாறு ஓதாமையின் உரையாசிரியர் இச்சூத்திரத்திற்குக் கூறிய பொருள் பொருந்தாது என்று சேனாவரையர் உரையாசிரியரை மறுத்தனர். இவ்வாறு மறுத்த சேனாவரையரை நச்சினார்க்கினியர் மூன்று காரணங்களால் மறுத்தனர் :— 'உண்ணுயென்பதும் உண்ணென்பதுந் தம்மிற் பொருள் வேறுபாடு உடைமையின் உண்ணுயென்பதன் பொருளை உண்ணென்பது உணர்த்தி ஈறு கெட்டு நிற்குமென்றல் பொருந்தாதாம்' என்பது முதலாவதாம் ; 'இவ் உண், தின், நட, கிட என்பன

வற்றை. முதனிலை யென்றே தாமுங் கூறிப்போந்தாராதலின் (சொல். 415. சே.), இவை முதனிலையாய் நிற்குமிடத்துக் கரு, செய், வெள் என்னும் முதனிலைகள் பண்புமாத்திரையே உணர்த்தி ஈறு கெடுதலும் பொருள் உணர்த்துதலுமின்றி நின்றாற்போல இவையும் வினைமாத்திரையே உணர்த்தி ஈறுகெடுதலும் பொருளுணர்த்துதலுமின்றி நிற்றல் வேண்டும்; இவை அங்ஙனம் நில்லாது, ஆயென்னும் ஈறு கெட்டு முன்னிலை யேவற்பொருண்மையே உணர்த்தி நிற்குமென்றலின் முதனிலையென்றல் பொருந்தாதாம்' என்பது இரண்டாவதாம்; 'உண், தின், நட, கிட முதலியன முன்னிலை உணர்த்தி நிற்குமேல் உண்டான், உண்டேன் என உண்ணென்னும் முதனிலையில் விரிந்து நின்ற ஈற்றான் உணர்த்தும் படர்க்கைக்குந் தன்மைக்கும் வழுவாமாறு காண்க' என்பது மூன்றாவதாம்.

உண் என்பதற்கும் உண்ணாய் என்பதற்கும் பொருள்வேறுபாடுண்டென்ற நச்சினார்க்கினியர் தாம் கூறுவதை நிலைநிறுத்தச் சான்று ஒன்றுங் கூறிற்றிலர். ஆதலின் அவர் மறுப்பிலுள்ள முதற்காரணம் பொருந்தாது. உண், தின் முதலியன முதனிலையாய் நின்று தொழின் மாத்திரையைக் குறிப்பினும், சிலவிடங்களில் உண்ணாய், தின்னாய் என்பன ஈறுகெட்டு உண், தின் என்று மாறும் என்று ஆசிரியர் ஈண்டுக் கூறியிருத்தலின், அவ்விடங்களில் அவை உண்ணாய், தின்னாய் என்பனவற்றின் பொருளோட்பெறும் என்பதில் யாதொரு குற்றமுமில்லை. அவ்விடங்களில் அவை முற்றுவினையேயன்றி முதனிலையல்ல. ஆதலின் அவர் மறுப்பிலுள்ள இரண்டாவது காரணமும் பொருந்தாது. நச்சினார்க்கினியர் கொள்கையைக் கொள்ளின் உண் என்பது முன்னிலை வினைச்சொல்லாய் வருமென்பதை ஆசிரியர் எங்கும் கூறிற்றிலர் ஆவர். உண்டான், உண்டேன் என்பன உண் என்னும் முதனிலையிலிருந்து பெறப்பட்டனவேயன்றி, உண்ணாய் என்

பதின் மாறுபாட்டுருவமான உண் என்பதிலிருந்து பெறப்படவில்லையாதலின், மூன்றுங் காரணமும் பொருத்தமன்ற. இச் சூத்திரம் 'செய்யாய்' என்பது 'செய்' ஆக மாறலாம் என்பதைக்கூறிற்று என்று கொண்டாலன்றி 'முன்னிலை முன்னரீயு மேயு—மந்நிலை மரபின் மெய்யூர்ந்து வருமே' (சொல். 451) என்ற வருஞ் சூத்திரத்திற்கும் இச் சூத்திரத்திற்கும் இயை



பின்றும். வருஞ் சூத்திரத்தின் இறுதியில் "உண்பாயென்பதற்கு மறையாகிய உண்ணு யென்னுஞ் சொல் படுத்தலோசையான் உண்டலைச்செய் யென்னும் பொருள் தந்து நிற்றலிற் 'செய்யென் கிளவி யாகிட னுடைத்து' என்று சூத்திரஞ் செய்ததன் பின்னர்ச் செல்லுதலைச்செய், நிற்றலைச் செய்யென இச்சூத்திரத்தின் முதனிலைகளுஞ் செய்யென்னும் வாசகத்தினையே உணர்த்தி நிற்கு மென்பது கருதிச் 'செய்யென் கிளவி யாகிட னுடைத்து' என்றதன்பின் இதனை வைத்தார்'' என்று நச்சினார்க்கினியர் கூறும் இயைபு நேரிதன்றென்பது நன்கு புலப்படும்.

பி-ம். இ. நம.—இல் 'செய்யாய் எனநின்ற முன்னிலை வினைச் சொல்' என்னுமிடத்து **முன்னிலை வினைச்சொல்** என்பது **முன்னிலை யெதிர்மறை வினைச்சொல்** என்றிருத்தல் வேண்டு மென்பது சேனாவரையர் நச்சினார்க்கினியர் உரைகளால் விளங்கும்.

452. கடிசொல் லில்லைக் காலத்துப் படினே.

**பொருள்.**—உரையாசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் இம்மூவரும் 'இவை தொன்று தொட்டன வல்லன வென்று கடியப்படுஞ் சொல்லில்லை, அவ்வக்காலத்துத் தோன்றி வழங்கப்

படுமாயின் எ-று.' என்று பொருள்கொண்டனர். தெய்வச் சிலையார் 'மேற் சொல்லப்பட்ட இலக்கணத்தான் வந்தில எனக் கடியப்படா; வினைச்சொற்கள் காலத்தொடு பொருந்தின் எ-று.' எனப் பொருளுரைத்து, 'இச் சூத்திரத்திற்குப் பிறவாற்றாற் பொருளுரைப்பவாலெனின், வினைச் சொற்றிரிபு அதிகாரப் பட்டு வருதலானும், காலத்துப்படியே என்றமையானும் பிற வாற்றானுரைப்பது பொருளன்றென்க' என்று தாம் கொண்ட பொருளுக்குக் காரணங் கூறினர். வருஞ்சூத்திரம் வினையைப் பற்றியே கூறுமையின் இச்சூத்திரமும் பொதுவாய் எல்லாச் சொல்லையும் கூறிற்று என உரையாசிரியர் முதலியோர்போலக் கொள்வதே சாலும்.

பி-ம். சே. சை—இல் காணப்படும் 'இனி ஒருசாராருரை :— இன்ன அதுவதிற்குங் காலமாமக் காலத்து, அவை வழுவன்மை எல்லா ஆசிரியர்க்கும் உடம்பாடாகலின் அதனைத் தழுவிக்கொண் டவா றென்க. இவை யிரண்டும் இச்சூத்திரத்துக்குப்பொருளாகக்



கொள்க' என்ற சொற்றொடர் ஏட்டிற் சேர்க்கப்பட்டிருத்தல் வேண்டும்; இதனைக் கூறிய பயன் 'பொருண்மை தெரிதலுஞ் **சொன்மை தெரிதலும்...'** (சொல். 156) என்ற சூத்திரத்தாற் பெறப்படுதலின்.

453. குறைச்சொற் கிளவி குறைக்கும்வழி யறிதல்.

454. குறைத்தன வாயினு நிறைப்பெய ரியல.

இவ்விரண்டு சூத்திரங்களையும் ஒன்றாக்கினர் உரையாசிரியர்.

அது பொருந்தாது, வாங்கியபோதம் என்னுங்குற்றம் வருதலின்.

குறைத்தலுக்கும் தொகுத்தலுக்கும் வேறுபாட்டினை, சேனாவரையர், குறைத்தலாவது, ஒரு சொல்லிற் சிறிது நிற்பச் சிறிது கெடுத்தலாகலின், முழுவதுங் கெடுத்தலாகிய தொகுக்கும் வழித் தொகுத்தலின் வேறுதலறிக' என்றும், தெய்வச்சிலையார் 'ஆண்டு விரிந்து நின்ற சொல் தொகுக்கவேண்டுவழித்தொகுமாறு கூறினார்; ஈண்டு இயற்கையிற் குறைதலிற் குறைச்சொல்லென்றார்' என்றுங் கூறினர். இவற்றுட் சேனாவரையர் கொள்கையே சிறக்கும்.

455. இடைச்சொல் லெல்லாம் வேற்றுமைச் சொல்லே.

**பொருள்.** உ.—முன்னர் வேற்றுமை யோத்தினுள் ஐ, ஒடு, கு, இன், அது, கண் என்னும் உருபுகளையன்றே வேற்றுமைச் சொல்லென்று உணர்த்தியது; இனி அவையன்றி ஒழிந்த இடைச்சொற்களையும் வேற்றுமைச்சொல் என அமையும் எ-று.

சே.—பிறிதோர் சொல்லை வேறுபடுப்பனவும் பிறிதோர் சொல்லான் வேறுபடுக்கப்படுவனவு மெனச் சொல் இருவகைப்படும்; பிறிதோர் சொல்லை வேறுபடுத்தலாவது விசேடித்தல். பிறிதோர் சொல்லான் வேறுபடுக்கப்படுதலாவது விசேடிக்கப்படுதல். இடைச்சொல்லெல்லாம் பிறிதோர் சொல்லை வேறுபடுக்குஞ் சொல்லாம் எ-று.

ந.—முடிக்குஞ் சொல்லை விசேடித்து நிற்குஞ் சொற்களெல்லாம் முடிக்கப்படுஞ் சொற்கும் முடிக்குஞ் சொற்கும் நடுவே வருஞ் சொல்லாய் நிற்கும் எ-று.

தெ.—இடைச்சொற்கள் எல்லாம் வேற்றுமைச் சொல்லாம் எ-று. (என்பது என் சொன்னவாறோவெனின் பெரும் வினை

யும் போலப் பொருளை நேரே காட்டாது, ஐ, ஒடு, கு, இன், அது, கண் என்னும் வேற்றுமையுருபுபோல, வேறுபட்ட பொருளைக்குறித்து நிற்றலின், இடைச்சொல்லும் 'பொருள் வேறுபடுக்குஞ் சொல் எனப்படும்: பொருளுணர்த்துஞ் சொல் லெனப்படா. மன் என்பது கழிவினும் ஆக்கத்தினும் ஒழியிசை யினும் வந்தவழி, தானிடைப்பெற்று நிலைமொழியின் வேறு பட்ட பொருளைக் குறித்துநின்றதல்லது, அப்பொருட்கு வாசக மன்றிநின்றமை கண்டு கொள்க.)

இச்சூத்திரத்திற்கு உரையாசிரியர், சேனாவரையர் இருவர் கூறும் பொருள் ஒன்று; நச்சினார்க்கினியர் கூறும் பொருள் வேறு; தெய்வச்சிலையார் கூறும் பொருள் வேறு. உரையா சிரியர், சேனாவரையர் இவர்களது மதத்தில் இடைச்சொல் என்பது பெயர்ப்பகுதி, வினைப்பகுதி இவற்றால் உணர்த்தப் படும் பொருள் செயல் இவற்றை முறையே செயப்படுபொருள், கருவி முதலியனவாகவும், இன்ன காலத்தில் நிகழ்ந்த தென் றும், தன்மை, முன்னிலை, படர்க்கை யிடமென்றும் வேறு படுத்துவது என்பது. இடைச்சொல் ஒருபோதும் மற்றொன் றால் வேறுபடுக்கப்படாது.' தெய்வச்சிலையார் கூறிய பொருள் அவ்விருவர் பொருட்கு ஒருபுடையான் ஒத்திருப்பினும், இடைச்சொல் துயோதகமே யன்றி, வாசகமல்ல என்பது இச் சூத்திரத்தின் கருத்தாக அவர் கொள்வது பொருத்த மின்று. அவை வாசகமே துயோதகமல்ல என்பது விரிவாய் 'இடை யெனப் படுப...' (சொல். 249) என்ற சூத்திரத்தின் கீழ் உரைக் கப்பட்டது.

நச்சினார்க்கினியர் கொள்கையில் வேற்றுமைச்சொல் என்பது உத்தேசியமாகும்; இடைச்சொல் என்பது விதேயமாகும். இவ்வாறு கொள்ளுவது நேரிதன்று. அன்றியும் அவர் இச்சூத்திரத்துக்குக் கூறிய பொருள் நேரிதன்று என்பது அவரே 'உரிச்சொன் மருங்கினும்...' என்ற அடுத்த சூத்திரத்தின் இறுதியில் 'முன்னிற் சூத்திரத்தாற் கூறிய விசேடித்தல் உரிச்சொற்கும் இடைச்சொற்கும் ஏற்றலின் அவற்றையும் ஈண்டுக் கூறினார்' எனக் கூறினமையால் நன்கு விளங்கும். அன்றியும் அவர் கூறிய பொருள் 'பன்முறை யானும் வினையெஞ்சு கிளவி...' (சொல். 233), 'தத்தங் கிளவி யடுக்குந வரினும்..'(சொல். 429)



முதலிய சூத்திரங்களாற் பெறப்படுமாதலானும் இடைச்சொல் என்பதற்குக் குறியீட்டுப்பொருளைத் தவிர்த்து வேறுபொருள் கொள்ளவேண்டியமையானும், 'உரிச்சொன் மருங்கினும்...' என்ற அடுத்த சூத்திரத்திற்கும் இச்சூத்திரத்திற்கும் நேரான இயைபு இன்மையானும், மருங்கினும் என்ற உம்மைக்கு இச்சூத்திரத்துக்குப் பொருளாய் ஏனையோர் கொள்ளுவதை அவர் கொள்ளுவது நேரின்மையானும் அவரது கொள்கை சிறவாது.

அன்றியும் 'இடைச்சொற்களெல்லாந் தாம் அடைந்த பெயர்வினைகளின் பொருள்களை வேறுபடுத்திநிற்றலின் வேற்றுமைச்சொல்லென்று சொல்லப்படு மென்று பொருள் கூறினாரால் உரையாசிரியரெனின், அவை வேறுபாடுசெய்தல் அவ்வோத்திற்கூறிய சூத்திரங்களின் பொருளால் ஈண்டுப் பெறப்படுதலின்

ஈண்டுக் கூறியதுகூறலாமாகலின் அது பொருந்தாதென்க' என்று உரையாசிரியரை நச்சினார்க்கினியர் மறுத்ததற்கும், "இனிச் சேனாவரையர் இடைச்சொல் லெல்லாம் விசேடித்துநிற்கு மென் றாராயின், 'கொன்னூர் துஞ்சினும்', 'கொன்னேகழிந்தன் றிளமையும்' என்றாற்போல்வன சில இடைச்சொற்கள் விசே டித்தலன்றி எல்லா இடைச்சொற்களும் விசேடித்து நில்லாமை ஆண்டு அவர் காட்டிய உதாரணங்களை நோக்கி உணர்க' என்று சேனாவரையரை அவர் மறுத்ததற்குங் காரணம் விசேடிப்பதெல் லாம் விசேடிக்கப்படுவதற்கு முன்னரே கூறப்படுதல் வேண்டும் என்ற எண்ணமேயாகும். இதனால் **விசேடித்தல்** என்பதன் பொருளை அவர் நன்கறிந்தவர் என்று சொல்லக்கூடவில்லை.

456. உரிச்சொன் மருங்கினு முரியவை யுரிய.

**பொருள்.** உ.—இடைச்சொல் லெல்லாம் வேற்றுமைச் சொல்லாதற்கு எவ்வா றுரியவாயினமன், அவ்வுரிமை உரிச் சொற்கண்ணும் எய்தும் எ-று.

சே.—உரிச்சொல்லிடத்தும் வேறுபடுக்குஞ்சொல்லாதற் கும் உரியன உரியவாம்; எல்லாம் உரியவாகா எ-று.

ந.—உரிச்சொல்லிடத்தும் விசேடிக்குஞ் சொல்லாதற்கு உரியன உரியவாம் எ-று.

தெ.—உரிச்சொல்லிடத்து வேற்றுமை யுருபுபோல அப் பொருள் வேறுபடுத்தற்குரியவை உரியவாம் எ-று. (அது நனி
30

என்பது உறவும் தவவும் போல மிகுதி குறித்து வரினும், உறுவன, தவவன எனப்பொருளுணர வாராது, இடைச்சொற்போலக் குறிப்பினான் மிகுதி புணர்த்தலின், இதுவும் பொருள் வேறுபடுக்குஞ் சொல்லாயினல்லது, பொருளுணரவாராமை கண்டுகொள்க.)

'வேற்றுமைச்சொல்' என்பதின் பொருளில் மாறுபட்டமையால் நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார் இவ்விருவர் கூறிய பொருள்கள் ஏனையோர் கூறிய பொருளினின்று மாறுபட்டன. இச்சூத்திரம் எற்றுக்கு எனின், பெரும்பான்மையும் உரிச்சொற்கள் பெயர்ப்பகுதியாயும், வினைப்பகுதியாயும் வரினும், அவற்றுள் சில பெயர், வினை இவற்றிற்கு விசேஷணமாகவே வருதலன்றிப் பெயர்வினைப் பகுதியாதலில்லை என்பதை உணர்த்தற்கு என்க.

457. வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய.

இச்சூத்திரத்தில் 'உம்மை' முற்சூத்திரங்களிற் கூறப்பட்ட இடைச்சொல்லையும், உரிச்சொல்லையும் தழுவுகின்றமையால், இறந்தது தழீஇய வெச்சவும்மை என்றார் சேனாவரையர். நச்சினார்க்கினியர் உம்மையாற் பெயரெச்சமாகிய சொற்களும் முற்றுச்சொற்களும் பெறப்படு மென்று கூறி 'அவர் நம்முளான் றரும் தத்தனென்பான்' முதலிய விடங்களிற் பெயரெச்சப்படர்க்கை வினைக்குறிப்பு முற்றுக் காணப்படுகின்றன என்றார். என்பான் முதலியன பெயரெச்சப்படர்க்கைவினைக்குறிப்பு என்பது பொருந்துமா என்பது ஆராய்தற்குரியது.

"பின்னுள்ளோர் 'முற்றே யெச்ச மாகலு முரித்தே' எனச் சூத்திரஞ்செய்தார். அவர் கருத்துப்பற்றிச் சேனாவரையரும் முற்றெச்சமா மென்றார்" என்ற நச்சினார்க்கினியர் வாக்கியத்தால் அவரும் சேனாவரையரும் நன்னூலார்க்குப் பிற்பட்டவராயிருக்கலா மென்று தோன்றுகின்றது: 'முற்றே யெச்ச மாகலு முரித்தே'

என்பது 'வினைமுற்றே வினையெச்சமாகலும்...' (நன். 351) என்ற நன்னூற் சூத்திரத்தின் ஒருபகுதியாயினமையின்.

458. உரையிடத் தியலு முடனிலை யறிதல்.

பொருள். உ.—கட்டுரை யுரைக்குமிடத்து நடக்கும் ஒருங்கு நிலையும் எ-று. (ஒன்று உரைக்குமிடத்து இயைபில்லாத இரண்டு சொல் ஒருபொருட்கண் நிற்பச் சொல்லுதலுண்டு. உண்டே



லும் அஃது அமைக எ-று. உ-ம். இந்நாழிக்கு இந்நாழி சிறிது பெரிது.)

சே.—வழக்கிடத்து உடனிற்கற்பாலவல்லனவற்றது உட னிலை போற்றுக எ-று.

ந.—ஓரெச்சவாய்பாடாகக் கூறும் இடத்ததுதானே மற்றோ ரெச்சவாய்பாட்டிற்கும் ஏற்று நடக்கும் கூட்டத்தினை அறிந்து தொடர்மொழிக்கு ஏற்ப வெவ்வேறாகப் பொருளுரைக்க எ-று.

தே.—உரையென்பது தொடர்மொழி. முற்றுச்சொல் எச்சமாகி வருதலும், வினையெச்ச மீறுதிரிதலும், தொடர் மொழிக்கண் முடிக்கும் சொல்லொடு கூடிநின்ற நிலைமையை யறிந்து கொள்க எ-று.

உரையாசிரியரும், சேனாவரையரும் கூறும் பொருள் ஒன்று. நச்சினார்க்கினியரும், தெய்வச்சிலையாரும் கூறும் பொருள் ஒன்று. நச்சினார்க்கினியர், உரையாசிரியர் கூறியபொருளை

‘அது சிறப்பின்கண் வரும் நான்காம் வேற்றுமைப் பொருளாய் அடங்குதலானுஞ் சிறிதென்பது பெருமையை விசேடித்து நிற்றலானும் அதுதான் முன்னர்ப் பெறப்பட்டமையானும் இவ்வெச்ச மயக்கங் கூறாதலே ஆசிரியர் கருத்தென்று உணர்க’ என்ற சொற்றொடரால் மறுத்தனர். ‘வினையெஞ்சு கிளவியும் வேறு பல் குறிய’ என்ற சூத்திரத்தின் பின் இச்சூத்திர மிருத்தலால் நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார் இவ்விருவர் கூறிய பொருள் சிறக்கும்.

459. முன்னத்தி னுணருங் கிளவியு முளவே
யின்ன வென்னுஞ் சொன்முறை யான.

**பொருள்.** உ.—சொல்லின விடத்துச் சொற்கிடந்தவாறே குறிப்பினாற் கொண்டு உணரப்படும் பொருளும் உள; சொற்களதியாண்டாயினும் மற்று இன்னவென்று தன்மை வேறுபாடு சொல்லுதன் முறைக்கண் எ-று.

சே.—சொல்லானன்றிச் சொல்லுவான் குறிப்பாற் பொருளுணரப்படுஞ் சொல்லுமுள, இப்பொருள் இத்தன்மையு வென்று சொல்லுதற்கண் எ-று.

ந.—இத்தன்மைய என்று சொல்லப்படும் வினைக்குறிப்புச்சொற்கள் பொருள்தரும் முறைமையிடத்து, அவற்றுட்சில



நுண்ணுணர்வுடையோர்க்குக் குறிப்பினால் தெரிநிலைப் பொருள் உணரப்படுஞ் சொற்களும் உள அவற்றை உணர்க எ-று.

தே.—சொல்லினானன்றி இத்தன்மைய வென்னுஞ் சொல்லினது தொடர்ச்சிக்கண் மனக்குறிப்பினாற் பொருளுணரப்படும் சொல்லும் உள எ-று.

உரையாசிரியர், சேனுவரையர், தெய்வச்சிலையார் இம்மூவர் கூறும் பொருளும் ஒன்று ; நச்சினர்க்கினியர் கூறும் பொருள் மற்றொன்று. உரையாசிரியர் கூறும்பொருள் குறிப்பிற்றோன் றலினது வேறுபாடாதலின் அஃது இச்சூத்திரப்பொருளன்று என்றார் நச்சினர்க்கினியர். ஊன்றிநோக்குமிடத்து இச்சூத் திரம் வியஞ்சனவிருத்தியாற் பெறும் பொருளைக் கூறுகின்றது எனத் தோன்றுகின்றமையால் உரையாசிரியர் முதலிய மூவர் கொள்கை சிறக்கும்.

460. ஒருபொரு ளிருசொற் பிரிவில வரையார்.

இச்சூத்திரம் மீமிசைச் சொற்கள் வழுவல்ல என்பதை உணர்த்திற்று என்பது சேனுவரையர் தெய்வச்சிலையார் கொள் கையாகும். உரையாசிரியர் 'ஒருபொருண்மேற் கிடந்தஇருசொற் பிரிவின்றி நின்றன வரையப்படாது' என்று பொருள்கூறினர். நச்சினர்க்கினியர், சேனுவரையர் கூறிய பொருளைப் பக்ஷாந்தர மாகக் கூறினர். முதலில் சூத்திரத்தை 'ஒருசொல் இருபொருட் பிரிவில வரையார்' என்று மாற்றி, 'ஒருசொல் ஒருகாற் கூறுதற் கண்ணே இரண்டு பொருளைப் புலப்படுத்தி இரண்டற்கும் பிரிவி லவாய் நிற்றலைச் சிறப்புடையவென்று கூறுவர் ஆசிரியர்' என்று பொருள் கூறினர். இது சூத்திரப்போக்குக்கு மாறுபட்ட தென்பது வெளிப்படை.

461. ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி
பன்மைக் காகு மிடனுமா ருண்டே.

பொருள். உ.—ஒருமை சுட்டி நின்ற பெயர்ச்சொல்லும் பன்மை கொண்டு முடியும் இடனும் உடைத்து எ-று.

சே.—ஒருமைக்குரிய பெயர்ச்சொற் பன்மைக்காகு மிடமு முண்டு எ-று.



ந.—ஒருமை கருதிய பெயராகிய நிலைமையை யுடைய சொல் பன்மைக்குப்பொருந்தி நிற்கும் இடமுமுண்டு எ-று. (எனவே பன்மை சுட்டிய பெயர்ச்சொல் ஒருமைக்குப் பொருந்தி நிற்கும் இடமுமுண்டு என்னும் பொருள் அருத்தாபத்தியாற் றந்தது.)

தே.—ஒருமை குறித்த பெயர்ச் சொல் பன்மைக்காகு மிடனுமுண்டு எ-று.

இச்சூத்திரம் சாத்தியேகவசனத்தின் வழக்கை உணர்த்திற்று என்று கொள்வது சாலும். அருத்தாபத்தியால் நச்சினார்க்கினியர் கொண்டபொருள் பொருத்தமின்று, சூத்திரத்துள்ள உம்மையால் ஒருமைப்பெயர் பெரும்பான்மையும் ஒருமைப் பொருளைக் குறிக்கும் என்று கொள்ளுவதே நேர்மையாதலின்.

எச்சவியல் முற்றும்.

கௌசிககுலதிலகரும், வடமொழியில் பாஷ்பரத்நாவளி முதலிய நூல்களியற்றியவரும், சப்ததந்த்ரஸ்வதந்த்ரருமான சொக்கநாத

சாஸ்திரிகளின் புத்திரரும், ராமபத்ர தீக்ஷிதரின் மைத்துனரும்,
சாப்திகரக்ஷா என்ற உரைநூல் இயற்றியவருமான த்வாத
சாஹயாஜி பாலபதஞ்சலியின் பேரனுக்குப் பேரனும்,
பின்னங்குடி ஸ்வாமிநாத சாஸ்திரிகளின் மூத்த
குமாரனுமான சுப்பிரமணிய சாஸ்திரியால்
எழுதப்பெற்ற தொல்காப்பியச் சொல்
லதிகாரக்குறிப்பு முற்றும்.

மங்களம்.



---

## சில குறியீடுகளின் விளக்கம்.

**அதிவியாப்தி.**—ஒரு பொருளுக்கு இலக்கணங் கூறுங்கால், அவ்விலக்கணம் அப்பொருளில்மட்டுஞ் செல்லாது ஏனைய சில பொருள்களையுங் குறிப்பின் அஃது அதிவியாப்தியாகும். (உ-ம்.) கொம்புடையது மாடு எனின், கொம்புடையதாந்தன்மை யாகிய அவ்விலக்கணம் ஆட்டினும் வருதலின், அஃது அதிவியாப்தி என்ற குற்றம் பெறும்.

**அவ்வியாப்தி.**—ஒரு பொருளுக்கு இலக்கணங் கூறுங்கால்,

அவ்விலக்கணம் அப்பொருளில் சில பகுதியில் இருந்து சில பகுதியி லிராதிருப்பின், அஃது அவ்வியாப்தியாகும். (உ-ம்.) அலைதாடி, குளம்பு, கொம்பு முதலியவற்றை உடைத்தாயிருப்பதும் கருமை நிறமுள்ளதும் மாடு எனின், கருமை நிறமில்லா ஏனைய நிறமுடைய மாடுகளின்பால் அவ்விலக்கணஞ் செல்லாமையின், அஃது அவ்வியாப்தி என்ற குற்றம் பெறும்.

**அன்னியோன்னியாச்சிரயம்.**—ஒருபொருளின் இலக்கணத்தை மற்றொரு பொருளின் தன்மையைக் கொண்டும், பின் பொருளின் இலக்கணத்தை முன் பொருளின் தன்மையைக் கொண்டும் கூறின், அஃது அன்னியோன்னியாச்சிரயமாகும். (உ-ம்.) உருபேற்றல் பெயரிலக்கண மென்றும், உருபு பெயரின் ஈற்றில் வருமென்றும் கூறுதல். உருபேற்றதன் பின்னரே அச்சொல்லுக்குப் பெயர் என்ற குறிவரும். அக்குறிவந்தபின்னரே உருபை அதனீற்றிற் சேர்த்தல் வேண்டும்.

**உத்தேசியம்.**—எதனைப்பற்றி விதிக்கப்படுவதோ அஃது உத்தேசியமாகும். அது வாக்கியத்தில் பெரும்பாலும் எழுவாயாகவே இருக்கும். அஃது இவ்விதியின் முன்னரே அறியப்பட்டிருத்தல் வேண்டும்: ஏனெனில், ஒருபொருளை அறியாதிருக்க அதனைப்பற்றி வேறொன்று கூறின், கேட்போனுக்குப் பொருள் விளங்கா.

**விதேயம்.**—எது விதிக்கப்படுவதோ அது விதேயமாகும்.

**வாக்கியபேதம்.**—விதிகூறுமிடத்து ஒன்றைக்கருதி ஒன்றையே விதிக்கலாமேயன்றி இரண்டு முதலிய பலவற்றைக்கருதிப் பலவற்றை விதித்தல் வாக்கியபேதம் ஆகும். ஆதலின் ஒரு சூத்திரத்தில் ஓர் உத்தேசியமும் ஒரு விதேயமுமே இருத்தல் வேண்டு மென்பது பெறப்படும். சூத்திரங்களை அமைக்கும் போது வாக்கியபேதம் என்ற குற்றம் வாராமலே ஆசிரியர் கவனித்துள்ளார். இவ்வாறு சூத்திரிப்பதின் பயன் யாதெனின், சூத்திரத்தின் பொருள் கேட்போனுக்கு இனிது விளங்கு மென்பதே.

**பிரவிருத்திநிமித்தம்.**—ஒருபொருளின் இன்றியமையாத் தன்மை அதன் பிரவிருத்திநிமித்தமாகும். (உ-ம்.) நரனுக்குப் பிரவிருத்தி நிமித்தம் நரத்துவம் ஆம். நரத்துவம் என்பதற்குப் பொருள் மனிதனுக்கு இன்றியமையாத் தன்மை; அஃதாவது எத்தன்மைகள் உளவேல் நரன் என்று குறித்தற்கு இயலுமோ, அத்தன்மைகளின் கூட்டம் என்பதே. இப்பிரவிருத்திநிமித்தத்தை மனத்தால் முழுவதும் அறிய முடியுமேயன்றிச் சொற்களால் முற்றுஞ் சொல்ல இயலாது.

**அநுவாதம்.**—முற்கூறியதையே ஒருகாரணம் பற்றிப் பின்னுங் கூறுதல் அநுவாதம் ஆகும்.

**புரோவாதம்.**—பின்னர்க் கூறப்போவதை ஒரு காரணம் பற்றி முன்னுரைதல் புரோவாதம் ஆகும்.

**யோகவிபாகம்.**—பொருள்பற்றி ஒரு சூத்திரத்தை இரண்டாக்குவது யோகவிபாகம் ஆகும்.

**ஸங்கதி.**—முன்னுள்ளதற்கும் பின்னுள்ளதற்கும் உள்ள சம்பந்தத்துக்கு இயைபு அல்லது ஸங்கதி என்று பெயர்.

கிருதி.—ஒரு தொழிலைச் செய்வதற்கு அச்செய்வோனிடத்தில் இன்றியமையாத சில பிரயத்தினம் நிகழவேண்டும்; அதற்குக் கிருதி என்று பெயர். இப்பொருளில் வினை என்ற சொல்லை, சொல். 112-ல் ஆசிரியர் ஆண்டனர்.

அதிகாரசூத்திரம்.—தனக்குத் தனியே ஒரு பொருளு மின்றிப் பின் வருஞ்சூத்திரங்களில் ஒவ்வொன்றோடும் சேர்ந்து பொருள் கொள்ளுவது அதிகார சூத்திரமாகும்.



நியமசூத்திரம்.—ஓரிடத்திற் பலகாரியங்கள் நிகழவிருக்க, அவற்றிற் சில நிகழவேண்டும் என விதிக்கும் சூத்திரம் நியம சூத்திரமாம். உ-ம். 'சினைநிலைக் கிளவிக் கையுங் கண்ணும்...' (சொல். 85) என்ற சூத்திரத்தால் சினைநிலைக்கிளவிக்கு ஐயுங் கண்ணும் வர இடமிருப்பினும், முதற்கண் 'அது' உருபு வந்து அதன்பின் சினைநிலைக்கிளவி வரின், ஆங்கு ஐ தான் வரவேண்டும் என்று 'முதற்சினைக் கிளவிக் கதுவென் வேற்றுமை—முதற்கண் வரினே சினைக்கை வருமே' (சொல். 87) என்ற சூத்திரம் விதிக்கின்றது. ஆகலின் பின் சூத்திரம் நியம சூத்திரமாகும்.

வாசகம்.—ஒரு சொல்லுக்கு ஆற்றலால் ஒரு பொருளிருப்பின், அப்பொருளுக்கு அச்சொல் வாசகமாகும்.

துயோதகம்.—ஒரு சொல், தனக்கு ஆற்றலால் ஒரு பொருளு மின்றி, தன்னோடு இயைபுபட்ட சொல்லின் பொருள்விசேடத்தைக் குறிப்பின், அப்பொருள்விசேடத்திற்கு அச்சொல் துயோ

தகமாகும். இடைச்சொற்களெல்லாம் துயோதகமென்பது சேனாவரையர் கொள்கை. தமிழ்மொழியில் துயோதகமான சொற்கள் இல்லை என்பது என் கருத்து.

---

## பொருட் குறிப்பு.

---

அடுக்கு, 199, 206

அடுக்கு—, அடுக்குந, 147,

* ஈண்டுக் குறித்துள்ள எண்கள் பக்க எண்கள்.

பொருட் குறிப்பு

ஆ



இ

## ஏ

ஓ

ஔ



க

கன்றல், 89, 100

### சா

## சீ



## சு



### சி



### சூ

செ



சே



சை



சொ

தா



தி

நு

ப

பல்லோர் படர்க்கை, 146
பல்லோர் மருங்கு, 144

பே



பை



பொ



போ

மி

மு

மே



மோ

## வே

